# மூவேந்தர் யார்?

ஃ

இரா. தேவஆசீர்வாதம்,
முன்னாள் டிப்டி கலெக்டர்



ஃ

இராமதேவன் பதிப்பகம்,
யாகப்பா நகர்,
தஞ்சாவூர் – 7.

முதற்பதிப்பு. சூலை 1977.





படையல் :

தாயகத்தின் தன்மானத்தைக் காக்க
தம் இன்னுயிர் நீத்த
தமிழ்ப் பெருங்குடி மக்களின்
நினைவாக

இரா. தேவஆசிர்வாதம்.



விலை ரூ. 15/-

நூல் கிடைக்குமிடம் :

இரா. தேவஆசிர்வாதம்,
180, யாகப்பா நகர், * தஞ்சாவூர் - 7.

மகாலிங்கம் அச்சகம் தஞ்சாவூர்.

B

சென்னை மாநிலக் கல்லூரி வரலாற்றுத்துறை
தலைமைப் பேராசிரியர்,
டாக்டர். கி. ர. அனுமந்தன், M. A., M. S. (WIS)., Ph. D.
அவர்களின்

# அணிந்துரை.

---

வரலாறு இருவகைப்படும். ஒன்று மனிதன் எழுதப் படிக்கத் தெரிந்தபின் வாழ்ந்த வாழ்க்கையைச் சித்தரிப்பது. மற்றொன்று, மனிதன் கல்வியறிவு பெறுமுன்பேயே கடைப் பிடித்த நாகரிகத்தை விவரிப்பது. முன்னது திட்டவட்டமானது. ஏனெனில் அதற்கு அடிப்படையான, சான்றுகள் எழுதப்பெற்றது. யாவராலும் நன்கு புரிந்து கொள்ளக் கூடியது. ஆனால் பின்னதோவெனின் வரைவதற்கு மிகக் கடினமானது. மிகப் பிற்காலத்தே எழுதப் பெற்ற பண்டைய நூல்களிலிருந்தும், சமுதாயத்தில் தொன்று தொட்டு வழங்கி வருகிற மரபுகளிலிருந்தும், பூமியிலிருந்து தோண்டி எடுக்கப் பெறும் பண்டைக் கால நாகரிகச் சின்னங்களிலிருந்துமே அத்தகைய வரலாற்றை ஒருவாறு எழுதலாம். ஆனால் அதில் எதையும் அறுதியிட்டுக்கூற இயலாது. இன்னின்ன காரணங்களால் முற்காலத்தே இங்ஙனம் தான் நிகழ்ந்திருக்கவேண்டும் என்று தான் அதில் கூறமுடியும். முற்கால மனிதனின் எச்சங்களான எலும்பு, நகம், பல் இவற்றைக் கொண்டு அவனது உருவம் இப்படித்தான் இருந்திருக்க வேண்டுமென அறிவியலார் கணிப்பது போன்றே வரலாற்றுசிரியனும் தனது கற்பனை வளனைப் பயன்படுத்தி சமுதாயத்தில் எஞ்சியுள்ள பண்டைய மக்கட் பண்பாடுகளையும், பழக்க வழக்கங்களையும் கொண்டு, எழுத்தறிவு தோன்றுவதற்கு முன்பே மக்கள் எவ்வாறு வாழ்ந்திருக்க வேண்டுமென்பதைத் தீர்மானிக்கிறான். திரு. தேவ ஆசீர்வாதத்தின் நூலானது பிந்திய வகையைச் சேர்ந்ததொன்றாகும்.

தமிழர் நாகரிகம் மிகப் பழமையானது. 'கல்தோன்றி மண்தோன்ருக் காலத்தே முன்தோன்றிய மூத்த குடி' என போற்றப்படும் தமிழ்ச் சமுதாயம் மிகப் பழங்காலத் திலேயே நல்ல நாகரிக வளம் அடைந்திருந்தது. சேர, சோழ, பாண்டி யர் எனும் மூவேந்தர்கள் அந்நாகரிகத்தைப் பேணி வளர்த் தார்கள். சங்க நூல்களில் அவர்களைப் பற்றிப் பேசப் பட்டுள்ளது. எனினும் சங்க காலத்துக்கு முன்பேயே நாட்டில் அன்னுர் அரசோச்சி வந்தனர் என்பது பல்வேறு சான்றுகளிலிருந்து தெரிகிறது. அப்படியானுல் அவர்கள் யாராக இருக்கக் கூடும்? தமிழ்க் குடிமக்களில் யாரிலிருந்து அவர்கள் தோன்றியிருக்கக் கூடும்? என்ற விஞக்கள் இயல்பாகவே எழுகின்றன. அவ்விஞக்களுக்கு விடை காணுமுகத்தான் எழுந்ததே இவ்வாராய்ச்சி நூலாகும்.

தமிழ் நாட்டில் தொன்று தொட்டு இருந்து வரும் குறிஞ்சி, முல்லே, மருதம், நெய்தல், பாலே என்ற ஐவகை நிலங்களில் மருத நிலமே வேளாண்மைக்கு உகந்தது என்பதும், நிலே பேருன வாழ்க்கைக்கும், அதன் விளேவான அரசு தோற்றத் துக்கும், அதுவே ஏற்றது என்பதும் பலராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட கருத்துக்களாகும். இக்கருத்தையே ஆசிரிய ரும் வலியுறுத்துகிருர். மருதநில மக்களான மள்ளர் (மல்லர்) என்ற குடியினரே ஆதியில் தமிழகத்தில் ஆற்றுப்படுகைகளில் குடியேறி, ஆறுகளுக்குக் கரை கண்டு, நிலத்தைப் பண் படுத்தி, வயல்களாக்கி, நெல், கரும்பு, வாழை, மஞ்சள், பருத்தி முதலிய வாழ்க்கைக்கு இன்றியமையாப் பொருள்களே உற்பத்தி செய்து, ஊர்கள், நகரங்கள் அமைத்து அரசுகளேத் தோற்றுவித்தனர் என்பதும், ஏரையும், போரையும் ஒருங்கே மேற்கொண்ட காரணத்தால் அவர்களிடமிருந்தே மூவேந்தர் கள் தோன்றினர் என்பதும், அம் மரபைச் சேர்ந்த மள்ளர் குடி, இடைக்காலத்தே தெலுங்கர்கள், முகமதியர் போன் ருேரின் வருகையால் நில உடைமையை இழந்து பண்ணே அடிமைகளாய் மாறினர் என்பதும், ஆசிரியரின் திரண்ட கருத்துக்களாகும். இக்கருத்துக்களே அவர் ஏராளமான

அகச்சான்று, புறச்சான்றுகளுடன் நிறுவியுள்ளார். அவரது முயற்சி பெரிதும் பாராட்டத்தக்கதென்பதில் சிறிதும் ஐயமில்லை.

இன்றைய தமிழ்ச் சமுதாயத்தில் தாழ்ந்த நிலையில் இருக்கும் பல்வேறு வகுப்பினரும், மிகப் பழங்காலத்தே உயர்நிலையில் இருந்திருக்க வேண்டும் என்ற கருத்தை, டாக்டர் பட்டத்துக்கென எம்மால் எழுதப்பெற்றுள்ள, "தமிழ் நாட்டில் தீண்டாமை" என்ற ஆராய்ச்சிக் கட்டுரையில் யாம் குறிப்பிட்டுக் காட்டியுள்ளோம். அக்கருத்தையே ஆசிரியர் பல்வேறு மேற்கோள்களைக் கொண்டு நன்கு நிறுவியுள்ளார். சங்க கால மள்ளர்களின் வழிவந்தோரே பள்ளர்கள் என்ற எமது கருத்தை அவர் நன்கு நிலை நாட்டியுள்ளார். மற்றும் ஒருபடி மேலே சென்று, தமிழ் மூவேந்தர்களின் முன்னோர் களும் அவர்களே என்று வாதித்துள்ளார். அவர்கள் நாளடைவில் எங்ஙனம் இழிநிலையடைந்தனர்? சேரிகள் எவ்வாறு தோன்றின? என்ற வினாக்களுக்கு நன்கு விடை கண்டுள்ளார் சேரி வாழ்நர் நாகரிக மற்ற நிலை யிலிருந்த பழங்குடியினர் மற்றும் வெளிநாட்டிலிருந்து வந்தவர்கள் என்றும், பறையர் தமிழரல்லாத ஓர் வகுப்பினம் என்றும் ஆசிரியர் கூறும் கருத்துக்கள் ஆராய்ச்சிக் குரியவை. வெள்ளாளர், கைக்கோளர் பற்றிய ஆசிரியரது கருத்துக்களும் சற்றே விச்சைக்குரியவை. எனினும் சமுதாய வரலாற்றில் இது ஓர் புது முயற்சியென்பதால் பாராட்டப்பட வேண்டியது. இது போன்ற பல சமுதாய வரலாற்று நூல்கள் வெளிவர இந்நூல் ஓர் தூண்டு கோலாயிருக்குமென்பது எனது நம்பிக்கை.

பன்னெடு நாட்களாகத் தாழ்த்தப்பட்ட ஒரு சமுதாயம் தலைநிமிர்ந்து நின்று தன்னம்பிக்கையோடு உலவ, இந்நூல் பெரிதும் துணைபுரியுமென்பதில் ஐயமில்லை. இத்தகைய நூல் கள் பல தோன்றினால்தான், தமிழ்க்குடிமக்களிடையே தாழ்வு மனப்பான்மை அகலும்; வேற்றுமை மாயும்; ஒருமைப் பாடு வளரும்.

''குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான் முந்துறும்'' என்றார் வள்ளுவர்.

பண்டைய தமிழ்க்குடி ஒன்றை உயர்த்த முன் வந்துள்ள ஆசிரியர்க்குத் தெய்வம் துணை நிற்குமென்பது ஒரு தலை. தமிழ் மக்களும் இந்நூலை முழுமனதோடு வரவேற்பர் என நம்புகிறோம்.

சமுதாய வரலாறு எனும் ஓடையில் பூத்த நறுமலரான இந்நூலின் மணம் தமிழ் நாடெங்கும், ஏன் உலகெங்கும் பரவுவதாக; வாழ்க ஆசிரியர்! வெல்க அவரது சீரிய முயற்சி !!

சென்னை,
22—6—77.

அனுமந்தன்.

---

## Muvendar-race

[Letter Correspondence by the author with Dr. K. K. Pillay (Historian) On Muvendar race.]

From : R. DEVA ASIRVATHAM, 180, Yagappa Nagar

Thanjavur, 4-5-1976.

To ; Dr. K. K. PILLAY,
Retired Professor & Head of the
History Department,
Madras University,
Chepauk, Madras-5.

Dear Sir,

I had occasion to go through your work 'தமிழக வரலாறு; மக்களும் பண்பாடும்' at page 399 of which, it is mentioned that a quarrel arose between Devendra kudumbars and Parayars over the use of certain privileges and as a result of the same, the Parayars were conferred certain privileges like the use of white elephant, white parasol, sixteen pillars pandal, eighteen musical instruments etc, I feel the matter has been misreported. According Karivalam Vandanallur temple inscription, the above privileges belonged to Devendra Kudumbars from time immemorial and that Tirumalai Nayakkan just recognised the same after verifying old copper plates and as regards the Parayars, he conferred on them a few privileges like the use of three pillars Pandal, one Kodukku, one marappu etc.

Prof. K. R. Hanumanthan, Head of the History Department, Presidency College Madras, has also mentioned like that in his work 'Untouchability in Tamilagham', a thesis submitted to the Madras University for Ph. D. I hope the facts will be verified again and error if any corrected when reprint of the work is taken up.

I am making a study about the Muvendar race and according to my findings, Devendra kula velalars whom the caste people contemptuously call as pallans and who figure as Mallars in the Sangam literature are the people who produced the Chera, Chola, Pandya Kings, both during the Sangam and the latter period. This is just for your information

With regards.

Yours Sincerely,
(Sd.) R. D. ASIRVATHAM.

E



*K. K. PILLAY*,
M. A., D. Litt.,
D. Phil (Oxon)
Director.

Institute of Traditional Cultures,
University Buildings, Madras-5.
15-5-76.

Sir,

I thank you for your letter of 4-5-76. I am sorry for the delay in replying to your letter. I was out of station for a time.

I am much interested in the question raised by you; viz the conflict between the Devendra Kudumbar and Parayar. My information is based on records in the Tamil Nadu State Archives Egmore. But if more reliable information is available, I shall be happy to look into it. Kindly let me know the Epigraphic report in which the concerned Karivalam Vandanallur temple inscription is published.

I am interested in writing the social history of the Tamils in an objective manner. Therefore any new and authentic piece of information is welcome.

I would also like to know the connection between the Devendra Kula Velalar and the Chera, Chola, Pandyas of the Sangam period.

Thanking you,
Please reply me.
Yours Sincerely,
(Sd.) K. K. PILLAY

To

Thiru. R. DEVA ASIRVATHAM,
Retired Dy Collector,
180, Yagappa Nagar,
Thanjavur.

R. DEVA ASIRVATHAM.
180, Yagappa Nagar.

Thanjavur,
24-5-76

Dear Sir,

Received your letter dated 15-5-76. For Karivalam Vandanallur Culvert, you may please refer to inscription No. 432/1914, published in the South Indian Temple inscriptions Part II. (Tinnevelly District, Sankaranayinar Koil Taluk) Devendra Kudumbars or Devendra Kula Velalars are none-else than Mallars, the people of Marudanilam, who founded the three Tamil Kingdoms-Chera, Chola, Pandyas and after the Kalabhra interugnum, they again came to power. After subjugation by the Vijayanagar rulers, they were persecuted and degraded as Pallars by the composition of a large number of pallu songs. The poligar system was introduced only with a view to depriving these people of their land holdings. Because of their liberality, these people were called as velalars and in latter medieval period as Vellalars. When Various sections drawn from Kurinji, Mullai and Neidal regions, who gained in social status began to style themselves as Vellalars, the original Vellalars assumed the title of Devendra Kulathar, Devendran, Indran, Purandaran all meaning Vendan, the god of Marudanilam. All the Tamil Scholars have deliberately distorted the literature and grammar etc., with the result, historians have not hitherto been able to find out the tribe which ruled over Tamil Nadu during the Sangam and the latter

F

period. Historians are confusing themselves with the words Maran, Tirayan and Vanavan.

All the Tamil kings were from Mallars only. The study about Mallars has been neglected by scholars. This tribe should have been responsible for the Harappa Civilisation. They have offered resistance to Alexander. They had a republican form of Government during Buddha's period and Buddha is said to have breathed his last in the kingdom of the Mallars. In Nepal also, the Mallars were in power till the 17th century AD or so. Whether the Harappa and Adichanallur Civilisations were simultaneous or one preceded the other, is a matter for study by research scholars.

After overthrow by the Nayaks, Devendrakula Velalars were suppressed and oppressed and they being deprived of their holdings, in effect became agricultural serfs. In these days, Parayars were set up to spite them and so the conflict between the two sections.

with kind regards.

Yours Sincerely,

(Sd ) **R. D. Asirvatham.**

To

Dr. K. K. PILLAY,
Institute of Traditional cultures,
University Buildings,
MADRAS-5

## Institute of Traditional cultures

Dr K. K. Pillay
M.A., D. Litt., D. Phil (Oxon)
Director.

Room No. 94 University Buildings,
Madras 600005.
Dated 12—7—1976

No. 190/219/PP/76—1.

Dear Thiru Deva Asirvatham;

I thank you for your interesting letter. I do hope that you would make a detailed research on Devendra Kula Vellalars and Mallars and publish a correct documented treatise embodying your conclusions.

With regards.

Yours Sincerely,
(Sd.) **K. K. PILLAY.**

To

Thiru. R. Deva Asirvatham,
180, Yagappa Nagar,
Thanjavur

# முன்னுரை

தமிழகத்தை இடைக்காலம் வரைச் சேர, சோழ, பாண்டியர் என மூவேந்தர் ஆண்டனர் என்பது யாவரும் அறிந்ததே. இவர் யார்? இவர் மரபினர் தமிழகத்தில் இன்று இருக்கின்றனரா? இதுவரை தமிழக வரலாறு, தமிழர் வரலாறு, தமிழ் வரலாறு, தமிழ் ஆராய்ச்சி, தமிழர் பண்பாடு நாகரிகம், சேரர் வரலாறு, சோழர் வரலாறு, பாண்டியர் வரலாறு எனப் பல நூல்கள் வெளிவந்திருக்கின்றன. இவைகள் சிலவற்றில், மூவேந்தரை முறையே வானவன், திரையன், மாறன் எனவும், நெருப்பு, சூரிய, சந்திர குலம் எனவும் பலவாறு கண்டிருக்கின்றனர். தமிழகத்தில் மூன்று பல்கலைக்கழகங்களும், சேர நாடாகிய கேரளாவில் ஒரு பல்கலைக்கழகமும் இயங்கி வருவதுவும், அவற்றிலிருந்து பலர் வரலாறு, தமிழ் இலக்கியம் இவற்றில் ஏதாவது ஒரு பொருள் பற்றி ஆய்வு செய்து டாக்டர் பட்டம் பெற்று வருவதுவும் கண்கூடு. பல்கலைக்கழகங்களை விடுத்து, தமிழகத்தில் அனேகப் புலவர் கல்லூரிகளும், பெருந்தமிழ்ப் புலவர் பலரும் இருந்து வருவதுவும் நாடறியும். ஆனால் இவரில் ஒருவரேனும், மூவேந்தர் மரபு பற்றி முறையான ஆய்வு மேற்கொள்ள, இதுவரை முன்வராதது வியப்பைத்தருகின்றது.

தமிழ் வேந்தர் கி. பி. 16 ஆம் நூற்றுண்டுவரை தமிழகத்தில் கோலோச்சியிருக்கின்றனர். இம்மன்னர் தனி மனிதர் அல்ல. இவர் ஒரு பழம்பெரும் குடியைச் சேர்ந்தவர். தமிழகத்தில் விசயநகரப் பேரரசோடு நடந்த இடைவிடாத போர்களில் இவரும், பெரும்பாலான இவரது மரபினரும் மடிந்திருப்பர்; போர்களில் ஈடுபடாதவரில் பலரும் மாற்றானுக்கு அடிமைப்பட்டு வாழ்வதைவிட, உயிர் விடுவது மேல் எனக் கருதித் தங்களையும், தங்கள் குடும்பங்களையும் மாய்த்து மண்ணோடு மண்ணாய் மறைந்திருப்பர். எனினும் இம்மரபினர் முற்றிலும் தடமற அழிந்திருப்பர் எனக் கருத முடியாது.

இவரில் ஒரு சாரார் எங்ஙனமாவது எஞ்சி, ஏதோ ஒரு மரபுப் பெயருடன் இன்று நாட்டில் உலவிவர வேண்டும். புதுக்கோட்டைத் தொண்டைமான் யார்? எனில் கள்ளர்; இராமநாதபுரம் சேதுபதியார்? எனில் மறவர் என வழங்குவது நாம் அறிந்ததே. அதே போன்று, மூவேந்தர் யார்? எனில் அவருக்கு ஒரு மரபு கூறவேண்டும். மாறாக அவர் யாரோ? எவரோ? என்று பதிலிறுப்பது, உண்மையை மூடி மறைப்பதாக அமையும். இவர் மரபு திட்டமிட்டு இருட்டடிப்புச் செய்யப் பட்டிருக்கின்றது என்பது மட்டும் உறுதி. வரலாற்றை மறைப்பது முறை கேடானது; விவேக மற்றது. பொய்யை மெய்யாகத் திரித்துக் கூறும் பழக்கம் இடைக்காலத்திலிருந்து நாட்டில் மலிந்து வந்திருக்கின்றது. அன்று 'நெற்றிக் கண்ணைத்திறந்தாலும் குற்றம் குற்றமே' என்று முழக்கமிட்ட புலவர் எங்கே? இன்று 'பொய் ஒன்று தவிர வேறொன்றும் அறியோம் பராபரமே' என்று கூறும் மனோபாவமுள்ள புலவர் குழாம் எங்கே? தமிழகம் அன்னியர் ஆக்கிரமிப்பில் சிக்கியதன் விளைவாக, இங்குள்ள பல்வேறு பிரிவினரும், ஆரியப் பண்பாடு, கலாச்சாரம் இவற்றைப் பெரிதும் தழுவி வந்திருக்கின்றனர். இக்காலத்தில் மனிதரை மனிதர் வஞ்சித்து ஏய்த்துப் பிழைக்கும் பழக்கம் வளர்ந்து வந்திருக்கின்றது. சமீபத்தில் பார்ப்பனர் ஒருவருடன் உரையாடிய போது, அவர் 'உழைத்துப் பிழைக்க ஒரு கோடிப்பேர் இருந்தால், ஏய்த்துப் பிழைக்க ஏழு கோடிப்பேர் இருக்கின்றோம்' எனத் திருவாய் மலர்ந்தார். இவரது கூற்று நாட்டின் இன்றைய நிலவரத்தைப் படம் பிடித்துக் காட்டுவது போல் அமைந்துள்ளது எனலாம். அந்த அளவுக்குத் தமிழகத்தின் நிலை தாழ்ந்திருக்கின்றது என்றால், அதை ஒருவரும் மறுக்க இயலாது. படிக்காதவரைவிடப் படித்தவரில் பெரும்பாலோர் பண்பாட்டில் கீழ்நிலையில் இருக்கின்றனர். இப்போக்கில் மாறுதல் வேண்டும் என்பதைச் சான்றோர் பலரும் விரும்புவர் என்பதில் ஐயம் இரா. பண்டைய நாளில் தமிழர், 'யாதும் ஊரே! யாவருங் கேளிர்'! எனவும் 'தனக் கென்று வாழாப் பிறர்க்கென வாழும் தகைமையாளர்' என வாழ்ந்தனர் எனவும் மேடைகளில்

முழக்கமிட்டு வருவதை நாடறியும். பலரும் நாள்தோ ய வாழ்க்கை வாழ்ந்து காட்டிய பெருங் அவ்வாறு உயர்ந் றை வெளிப்படுத்திஞல், அது ஓரளவிற் குடிமக்களின் வ நலம் பயக்கும் என முடிவு கொண்டு, கேனும் நாட்டி பலகாலம் என்னை ஈடுபடுத்தி வரலானேன். அம்முயற்சியி எவ்வாறு வெற்றிகண்டேன் என்பது பற்றி அதில் நான் ட வரிகளை முன்னுரையாகப் படைக்கலானேன். அடியிற் க

த ழகத்தின் நாகரிகம், பண்பாடு இவற்றிற்கு உறைவிட ய் விளங்கியவர் உழவர். அவர் பண்டைய நாளில் ஏர் தொழிலுடன் போர்த்தொழிலும் ஆற்றி வந்தனர். அதன் க ணமாய் 'ஏரும் போரும் இணைபிரியாது' என்ற தொடர் மொழி நாட்டில் வழக்கில் வந்தது என்பதை அறியலானேன். வள்ளுவன் 'உழுவான் உலகத்தார்க்கு ஆணி', 'சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்', 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்,' மற்றெல்லாம் தொழுதுண்டு பின் செல்பவர்' என்று கூறியிருப்பது, மேலே கண்ட கருத்து முற்றிலும் உண்மை என்பதை வலியுறுத்துகிறது காண்க. ஆகவே, தமிழகத்தை இடைக்காலம் வரை ஆட்சி செய்த தமிழ் மரபினர் உழவராக மட்டுமின்றிப் போர் மறவராகவும் செயல் பட்டனர் என்பது வெள்ளிடைமலை. இந்த இரு தொழில் செய்த மக்கள் யார்? என்ற கேள்வி என்னை ஆட்கொண்டது.

உழவரில் சிறந்தவர் வயல் உழவர் என்பது அனைவரும் அறிந்ததே. இவர் ஆற்ருேரங்களிலும், மற்றும் நீர் நிலைப் பகுதியிலுமே முக்கியமாய் வதிய வேண்டும் என்பதால், தமிழகத்தின் தென்மாவட்டங்களில் ஓடும் காவிரி, அமராவதி பவானி, வைகை, தாம்பிரபரணி முதலிய ஆறுகளின் கரை மருங்குகளில் வயல் உழவில் முக்கியமாய் ஈடுபடுபவர் யார்? என்பது பற்றி அறிய முனைந்தேன். வயல் உழவில் ஈடுபடுபவரில் பெரும்பாலோர் பள்ளர், குடும்பர், காலாடி, பண்ணடி என வழங்கும் மக்கள் பிரிவினர் எனவும், இவர் ஏர்த்தொழில் மட்டுமன்றிப் போர்த்தொழிலும் ஆற்றக் கூடிய வலு உள்ளவராகக் காணப்படுவதும், இவர் தங்களைத்

தேவேந்திர குலத்தார், தேவேந் குல வேளாளர் என
உயர்வாகக் கூறிவருவதுடன், மற்ற பினர் போலன்றித்
தனியாய்க் குருக்கள், நாவிதர், வண் உடையவராய்,
ஊரின் முக்கிய பகுதியாகிய கீழ்புறத் குடியிருந்தும்,
தமக்கென்று தனியாய்ப் பஞ்சாயத்து மைப்புகள்
உடையவராகவும், மற்ற மரபினரிட காணப்படாத
தனித்தன்மை உடையவராய் இவர் இருந்து ருவதையும்
தெரியலானேன். இவர் பராக்கிரம சாலிகள் எ தையும்,
ஒருவரும் இவருடன் நேருக்கு நேர் சண்டையிட்டு வரை
வெற்றி பெறமுடியாது என்பதையும் உணர்த்தப் 'பள் னயும்
இரும்பையும் பதம் பார்த்து அடிக்க வேண்டும்' ன்ற
பழமொழி நாட்டில் நிலவிவருவதுவும் ஈண்டு குறிப்பிடத்
தக்கது. மாவட்டக் குறிப்புகளில், இவர் தாங்கள் தேவேந்திர
னின் வழி வந்தவர் என்றும், மற்ற எல்லா மரபினரையும் விட
உயர்ந்தவர் என்றும் உரிமை பாராட்டி வருவதுவும், இவர்
பற்றி மேலும் ஆராய என்னைத் தூண்டியது. 'ஏழையின் குரல்
அம்பலம் ஏருது' என்பதற்கொப்ப, இவரது ஏழ்மை
காரணமாய், இவரது கூற்றை மாவட்டக் குறிப்பு ஆசிரியர்
ஏற்க மறுத்ததுடன், இவரை வெள்ளாளரின் பண்ணை
அடிமைகள் எனக்கூறி வந்திருப்பதையும், இதே கருத்தையே
பெரும்பாலான தமிழ்ப்புலவரும் வெளியிட்டு வருவதையும்
கண்டு குழப்பத்திற்கு உள்ளானதும் உண்டு. தென்
இந்தியக் குலங்களும் குடிகளும், (Castes and tribes of
Southern India) என்ற விரிவான அரிய நூலைப்படைத்த
எட்கர் தர்ஸ்டன், 1891 ஆம் ஆண்டுக் குடிக்கணக்கெடுப்பு
கண்காணிப்பாளர் H. A. ஸ்டுவர்ட் என்பவர் கூறிய கருத்து
அடிப்படையில், இம்மக்கள் பல்லவ மரபினராய் இருக்கலாம்
என அபிப்பிராயப்பட்டிருப்பது புலப்பட்டது. பல்லவர்
காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு தமிழகத்தின்
வடபகுதியை ஆட்சி செய்தவர். தேவேந்திர குலத்தார்
பல்லவ மரபு எனக்கொள்வதற்கு, இவர் வடமாவட்டங்
களிலேயே பெரும்பான்மையினராய் இருக்க வேண்டும்.
ஆனல் இவர் அங்கு அறவே இன்றித் தென்மாவட்டங்

களிலேயே காணப்படுகின்றனர். இது காரணமாய், இவர் பல்லவ மரபினராக இருப்பதற்கில்லென முடிவு கொண்டேன். அடுத்து தேவேந்திர குலத்தார் மீது இயற்றப்பட்ட பள்ளு நூல்கள் மீது கவனம் செலுத்தலானேன். இந்த நூல்களைப் பள்ளேசல்கள் என்றும் கூறுகின்றனர். தமிழகத்திலுள்ள வேறு ஒரு மரபினரையும் இழிவு படுத்த நூல்கள் புனையப் படாத போது, உழவுத் தொழில் செய்து வரும் சமுதாயத்தை இழித்தும், பழித்தும் நூல்கள் பெருமளவில் தோன்றியது வியப்பை உண்டாக்கியது. பண்டையத் தமிழ் இலக்கியங் களில் உழவர் உயர்குடியினராகக் காட்சி தரும் போது, பள்ளேசல்களில் அவர் கீழ் சாதியாகவும், கொத்தடிமை களாகவும் உழன்று வருவதைக் கண்டேன் இவர் இந்த இழிநிலை எய்யக் காரணம் என்ன? என்பதை ஆராய்ந்ததில், பள்ளேசல்கள் தோன்றியது நாயக்கர், மராட்டியர் தமிழகத்தை ஆட்சி செய்த காலம் எனத் தெரிந்தது. ஆக நாயக்கர், மராட்டியர் தமிழர் அல்ல; அவர் வேற்று நாட்டினர்; தமிழ் வேந்தர் ஆட்சியில் உயர் நிலையில் இருந்த உழவர் சமூகம், இவரது ஆட்சியில் கொத்தடிமை நிலை எய்தினர் என உணரலானேன். இம்மாற்றம் பற்றிச் சிந்தித்ததில், ஒருவேளை இவர் தமிழ் வேந்தர் மரபினர் என்பதால் அன்னியர் ஆட்சியில் அடிமை நிலை எய்தினரா? என்ற ஐயப்பாடு என் உள்ளத்தில் எழுந்தது. மேலும் பள்ளேசல்களில் இம்மரபினர் பள்ளர், பள்ளர் என்ற மள்ளர், தேவப்பள்ளர், தேவேந்திரப்பள்ளர், புரந்தரன் குலம் என்றும், மூவேந்தர் வேண்டுகோளின் மீது இவரது குல முதல்வன் தேவலோகம் சென்று நெற்பயிரைக் கொண்டுவந்து தமிழகத்தில் பயிர் செய்தான் என்றும், குறிப்பு கள [illegible]ாங்கு காணப்படுவதை அறிந்தேன். மள்ளர் யார்? என்பது பற்றி நூ[illegible]கள், சங்க இலக்கியங்கள் இவற்றைத் துருவிப்பார்க்கும் போது, அ[illegible]மவர் மட்டுமின்றிப் போர் மறவராகச் செயல்பட்டதையும், மன்னர் [illegible]? திருமால், முருகன் இவரும் மள்ள! மல்ல! என விளிக்கப் பட்டிருப்பதையும், மள்ளர் மருதநிலத்தலை மக்கள் எனவும், இவர் தெய்வம் வேந்தன் எனவும், வேந்தன், தேவர்

வேந்தன், இந்திரன், தேவேந்திரன், புரந்தரன், கரியவன் என வழங்கியதாகவும் வெளிப்பட்டது. ஆகப் பள்ளர் மருத நிலத் தலைமக்களாகிய மள்ளர் எனவும், அதனுல் இவர் தம்மை இந்திர குலம், தேவேந்திர குலம், தேவேந்திர குல வேளாளர் என வழங்கி வருகின்றனர் எனவும் தெளிவு பெறலானேன். கல்வெட்டுக்களை ஆராய்ந்ததில் இவருக்கு மன்னருக்குரிய விருதுகளும் ஏற்பட்டிருந்தது என்பது வெளிப்பட்டது. ஆக இது பல காரணங்களால், தேவேந்திர குலத்தார் தான் மூவேந்த மரபினர் எனவும், தமிழ் வேந்தர் வீழ்ச்சியுற்றபின் இவர் அடக்கி ஒடுக்கப்பட்டு, பள்ளர், கீழ் சாதி என இழிவு படுத்தப்பட்டனர் என முடிவு கொண்டு, எனது கருத்தை 'பள்ளன் அல்ல, மள்ளன்; ஆம் மன்னன், மூவேந்தர் நீரே! சேரன் நீரே! சோழன் நீரே! பாண்டியன் நீரே! சேரன் செங்குட்டுவன் நீரே! நெடுஞ்செழியன் நீரே! கரிகாலன் நீரே! இராசஇராசசோழனும் நீரே! வாழ்க மூவேந்தர்! வாழிய நற்றமிழர்!! என வரைந்து எனக்குத் தெரிந்த தமிழறிஞர்க்கும் நண்பர்க்கும் தெரிவிக்கலானேன். அவரில் தூத்துக்குடியில் தூய சவேரியார் உயர்நிலைப்பள்ளியில் உதவி ஆசிரியராய்ப் பணியாற்றி வந்த திரு. G. M. வேதநாயகம் B. A B. T. அவர்கள் மட்டும் எனது கருத்தை வரவேற்ருர். எனது கருத்துப்பற்றி நன்கு தெளிவுபெறும் பொருட்டு, தமிழ் அறிஞர், மற்றும் வரலாற்றுப் பேராசிரியர், பத்திரிக்கை ஆசிரியர், கலைஞர், கவிஞர், மடாதிபதிகள் முதலியோருக்கு விளக்கமாய் எழுதினேன். ஏன்? தமிழக அரசுக்கும் இதை வெளிப் படுத்தினேன். ஒரு சில தமிழறிஞரிடம் நேரில் தொடர்பு கொண்டு தெளிவு பெறவும் முயன்றேன். ஆனுல் எதிர் பார்த்தபடி தெளிவு பெற முடியவில்லை; என்னைக் குழப்பி விடவே அவர் பெரிதும் முயன்றனர் என்பது ஈண்டு குறிப்பிடத் தக்கது. நாயக்கர் காலத்தில் தோன்றிய முக்கூடற் பள்ளின் உரையாசிரியரில் ஒருவராகிய பேராசிரியர் டாக்டர். நா. சேதுரகுநாதன் அவர்களுக்கு தமிழக இடைக்கால வரலாற்று நுட்பங்கள் பள்ளு நூல்களில் பொதிந்து கிடப்பதால், அவற்றை ஆய்வு செய்ய நான் விளைவதாகவும், பள்ளு

நூல்கள் கிடைக்கும் இடம் பற்றித் தெரிவிக்கும்படியும் கோரினேன். ஆனால் இப்பேராசிரியர் அவர்கள் நாயக்கருக்கும், பள்ளுநூல்களுக்கும் தொடர்பு இல்லை என்றும், எனது நோக்கு தவறு என்றும், ஆய்வானது சாதியை வளர்க்கும் என்றும் பலவாறு என்னைக் கடிந்து எழுதினார். நான் தமிழர் வரலாறு திரையிடப்பட்டிருக்கின்றதென்றும், அத்திரை நீக்கப்பட்டாலொழிய, நாட்டிலிருந்து சாதி மறையாதென்றும், உண்மையை மூடிமறைப்பது முறை கேடானது என்றும், எனது நிலையை விளக்கிப் பதில் இறுத்தேன். பேராசிரியர் அவர்கள் நான் மேற்கொண்ட கருத்தை ஏற்றுக் கொள்ளுமுகத்தான் என்னுடைய மடலுக்குப் பதில் இறுக்கவில்லை.

நான் மதுரையில் 1973–74 ஆண்டுகளில் நகர்ப்புற வரி உதவி ஆணையராகப் பணியாற்றியபோது, மதுரை வரலாற்றுக் கழகத் தலைவர் திரு. S. முத்துக்கோனார் B. A. L. T. அவர்களுடன் பழக வாய்ப்பு ஏற்பட்டது. அன்னார் ஆரம்பத்தில் எனது முடிவை ஏற்கத் தயங்கினார்; ஆனால் பின்னர் எனது கருத்தை ஏற்றுக் கொள்ளுமுகத்தான், ஆய்வுக்கு உதவக் கூடிய சில நூல்களை அவ்வப்போது வழங்கி உதவி, என்னை உற்சாகப்படுத்தி வந்தார்கள். திருச்சி தமிழ் மூதறிஞர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களுக்கு ‘மூவேந்தர் மரபினர் மறைந்து வாழ்வதாகவும், அவரைப் பொதுமக்களுக்கு அறிமுகப்படுத்தினால் நாட்டில் வேரூன்றியுள்ள சனாதனக் கொள்கை மறைய அது துணைபுரியும் என்றும், அதைக் கருத்திற்கொண்டு தமிழர் வரலாற்றை வெளிப்படுத்தும் முயற்சியில் நான் ஈடுபட்டு வருவதாகவும் தெரிவித்தேன். அப்பெரியார் அவர்கள் ‘தாங்கள் கொண்டுள்ள கருத்து பல ஆண்டுகளாகத் தமிழ் அறிஞர்களிடையே நிலவி வருகிற ஒன்று’ எனவும் ‘தங்களின் பணி தமிழக மக்களுக்குப் பலனளிக்கும் எனவும், தமது கருத்தை நல்கி என்னை ஊக்குவித்தனர். வரலாற்றறிஞர் டாக்டர் K. K. பிள்ளை அவர்களுக்கும் எனது ஆராய்ச்சி பற்றித் தெரிவித்தேன்.

அன்னாரும் எனது ஆராய்ச்சியை வரவேற்றுர்கள். நான் அன்னாருக்கு எழுதிய கடிதங்களும், அவர்கள் இறுத்த பதில் களும் முன்னுல் பிரசுரிக்கப்பட்டிருப்பது காண்க.

ஆய்வு நிமித்தம் தமிழகத்திலுள்ள பல முக்கியமான ஆலயங்களுக்கும், மற்றும் ஊர்களுக்கும் செல்ல நேரிட்டது. நெல்லை மாவட்டம் செங்கோட்டைப் பகுதிவாழ் தேவேந்திர குலத்தார் கிரயம் ஒத்திப் பத்திரங்களில் தங்களைப் பாண்டியர் என்று பதிந்து வருவதை நேரில் பார்வையிட்டேன். பாண்டிய நாட்டிலுள்ள முக்கியமான ஆலயங்களில் பணியாற்றும் குருக்கள் மத்தியில் தேவேந்திர குலத்தார் மூவேந்தர் மரபு என்பது செவிவழிச் செய்தியாக நிலவி வருவதுவும் தெரியவந்தது. மதுரை மீனுட்சி சுந்தரேசுவரர் ஆலயத்தின் குருக்களில் ஒருவரிடம், 'தேவேந்திர குலத்தார் தானே பாண்டியர்'? என வினவ, அதற்கு அவர், 'ஆராய்ந்து பார்த்தால் அப்படித்தான் படுது' என்று பதிலிறுத்தார் சங்கரன் கோயில்குருக்கள் ஒருவர் இந்த உண்மையை ஒப்புக்கொண்ட துடன் 'அவர் வெளிவரக்காலம் வரும்' என மனம் வெதும்பிக் கூறினர். திருநெல்வேலி நெல்லையப்பர் ஆலயத்திலுள்ள குருக்களும் இந்த உண்மையை ஒப்புக்கொண்டனர். இங்குள்ள ஒரு பட்டர் உண்மையை ஏற்றுக்கொண்டதுடன், 'அவர்கள் வரமாட்டார்கள்' என வலிந்து கூறினர். ஏன்? என்று வினவ, தங்களைத் 'தேவேந்திர குலம்', 'தேவேந்திரகுல வேளாளர்' என்று உயர்வாகக் கூறி வருகின்றனர். ஆனுல் 'எங்கள் முன்னேர் தான் இந்த நாட்டை ஆண்டனர்' என்று கூற இதுவரை ஒருவரும் முன்வரவில்லையே, என்று அங்கலாய்த்தார். திருச்செந்தூர் ஆலயத்தில் உள்ள குருக்கள் அனைவருக்கும் இது விபரம் தெரிந்திருப்பதை அறியலானேன். அவரில் ஒரு சிலர் தேவேந்திர குலத்தாரைக் குறிப்பிட்டு, 'படிக்கிறுர்கள்; பட்டம் பெறுகிறுர்கள்; சிலர் உயர் பதவியும் வகிக்கின்றனர்; இன்னும் சிலர் வசதியாகவும் இல் லாமல் இல்லை. ஆனுல் இவரில் ஒருவரும் எங்கள் முன்னேர் தான் தமிழகத்தை ஆண்ட சேர, சோழ, பாண்டியர் என்று கூற இதுவரை முன்வரக்காணுேமே. இவர்கள் ஒழிந்து,

மறைந்து வாழ்கிருர்கள். என்றைக்கு இவர்கள் இந்த உண்மையை வெளிப்படுத்த முன்வருகிருர்களோ, அன்றுதான் இவர்களுக்கு மட்டுமின்றித் தமிழகத்திற்கும் சேமம் பிறக்கும்' என்றனர். பாண்டிய நாட்டிலுள்ள ஆலயக்குருக்கள் மட்டுமின்றி விபரம் தெரிந்த பார்ப்பனருக்கும், மற்றும் பல்வேறு பிரிவினருக்கும் இந்த உண்மை தெரிந்திருக்கின்றது என்பதை எனது சுற்றுப்பயணங்களின்போது அறியலானேன். தென்பாண்டி நாட்டின் மீது பாண்டியர் நீண்டகாலம் ஆட்சி செய்தது கவனத்திற்குரியது.

நான் தமிழக அரசு வருவாய்த்துறை இலாகாவில் பணி -ற்றியவன். இதற்கு முன்பு தமிழில் நூலோ, கட்டுரையோ எதுவு[illegible]திப் பரிட்சயம் இல்லை. ஆதலால் நூலில் குறைபாடுகள் கா[illegible] அறிஞர்கள் குறைகளை எடுத்துக் காட்டினுல், மீண்டு[illegible]ராய்ந்து திருத்திக் கொள்ள முயல்வேன். நான் எழுதியதைத் த[illegible] மன்னர் சரபோசி அரசினர் கல்லூரித் தமிழ் உதவிப் பேராசிரியா திரு. ந. ஆடியபாதம் எம். ஏ. அவர்கள் மனமுவந்து பார்வையிட்டுச் செப்பம் செய்து, அது அச்சேற உதவினர் என்பது ஈண்டு குறிப்பிடத் தக்கது. சில நண்பர்கள் ஆராய்ச்சிக்குப் பயன்பெறும் சில நூல்களை நல்கியும், நான் கோரிய விவரங்களுக்குப் பதில் இறுத்தும் உதவினர். அவர் பெயர்களைக் குறிப்பிடின் விரியும் என அஞ்சி, அவற்றைக் குறிப்பிடவில்லை. இவ்வாராய்ச்சிக்கும், நூல் வெளியீட்டுக்கும் துணை நின்று என்னை ஊக்குவித்த எல்லாப் பெரியோர்க்கும், அன்பர்க்கும், நண்பர்க்கும் நான் என்றும் கடன்பாடுடையேன்.

இந்நூலில் அநேக சான்ருேர்களின் நூல்களிலிருந்து பல மேற்கோள்களை எடுத்தாண்டிருக்கின்றேன். அன்னுர் நூல்களின் துணையின்றி எனது ஆராய்ச்சி முற்றுப் பெற்று, இந்நூல் வெளிவர வாய்ப்பு ஏற்பட்டிருக்காது என்பது திண்ணம் என்பதால், சம்பந்தப்பட்ட நூல்களின் ஆசிரியருக்கும், வெளியீட்டாருக்கும் நான் நன்றி தெரிவிக்கக்கடமைப் பட்டுள்ளேன். வாசகருக்கு ஒரு வேண்டுகோள். இந்நூலைச்

சாதிக் கண்ணேட்டத்துடன் அணுகாமல், வரலாற்றுக் கண்ணேட்டத்துடன் அணுகும்படி கோருகின்றேன். இடைக் காலத்திலிருந்து எத்தரும், பித்தரும் நாட்டின் உண்மை வரலாற்றை மறைத்து, விரும்பத்தகாத சாதி வேறுபாடுகளைத் தோற்றுவித்து, அவற்றை ஊக்குவித்து வந்திருப்பதால், உண்மையைக் கண்டறிய நாட்டில் உள்ள பல்வேறு சாதிகள் எவ்வாறு தோன்றின என்பது பற்றி நூலில் ஆங்காங்கே குறிப்பிட வேண்டியநிலை எழுந்தது. இது தவிர்க்க முடியாதது என்பதையும், ஒருமரபினரையும் புண்படுத்தும் நோக்கத்தோடு எதுவும் எழுதப்படவில்லை என்பதையும் இங்கு குறிப்பிட விரும்புகிறேன்.

இந்நூலுக்கு அணிந்துரை நல்கி உதவும் [illegible] சென்னைப் பல்கலைக் கழக வரலாற்றுத்துறை [illegible]மைப் பேராசிரியர் டாக்டர் K. R. அனுமந்தன் [illegible]களை அணுக, அதற்கு அன்னார் உவகையுடன் [illegible]புக்கொண்டு, நூலுக்கு உயிரூட்டும் முறையில் அ[illegible] [illegible]ழுதி என்னை வாழ்த்தியுள்ளார்கள். பேராசிரியர் அவர்களின் தூய உள்ளமும், அன்பும், பண்பும் என்னை ஆட்கொண்டு விட்டதென்ருல், அது மிகையாகாது. அன்னார் பல்லாண்டு வாழவேண்டு மென்றும், அவர்களைப் போன்று நாட்டில், குறிப்பாகத் தமிழ் நாட்டின் வரலாற்றுத்துறையில், உண்மையை ஒப்புக்கொள்ளவும், அவற்றைத் துணிவுடன் வெளியிடவும், ஆர்வமும், துணிவும் உடையவர் பலர் தோன்ற வேண்டுமென்றும், நீர் மல்கிய கண்களுடன் எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகின்றேன். மேலும் இவ்வாராய்ச்சி முற்றுப் பெறுவதற்குப் பேராசிரியர் அனுமந்தன் அவர்கள் டாக்டர் பட்டத்திற்கென எழுதப்பெற்ற 'தமிழகத்தில் தீண்டாமை' என்ற ஆராய்ச்சிக் கட்டுரை பெரிதும் துணை நின்றது என்பதுவும், ஈண்டு, தனியாய்க் குறிப்பிடத்தக்கது. அதற்கும் அன்னருக்கு நன்றி தெரிவிக்கக் கடமைப் பட்டுள்ளேன்.

இறுதியாக இந்த ஆராய்ச்சி மேற்கொண்டதன் விளைவாகவும், மற்றும் அரசு பணியில் உண்மை, நேர்மை

இவற்றைக் கடைப்பிடித்ததின் காரணமாயும், பல தொல்லை களுக்கு ஆளாகி பிரதமர் இந்திராகாந்தி அம்மையார் பிறப் பித்த அவசர கால சட்டத்தின்கீழ் நெறியற்ற முறையில் கட்டாய ஓய்வு வழங்கப்பட்டேன் என்பதையும் இங்கு குறிப்பிட விழைகிறேன். இக்கட்டாய ஓய்வானது பேரிடியைத் தந்தாலும், அது இவ் ஆராய்ச்சி விரைவில் முற்றுப்பெற்று, இந்நூல் வெளிவப் பெரும் வாய்ப்பாக அமைந்தது.

தமிழகத்தில் அறிஞர் பலர் இருந்தும், வருவாய்த்துறை யில் பணியாற்றிய எனக்குத் தமிழ் வேந்தர் மரபு பற்றிய உண்மையை வெளிப்படுத்தும் பெரும் வாய்ப்பை வழங்கிய எல்லாம் வல்ல இறைவனுக்கும், எனது முன்னோருக்கும் என்றும் கடன்பாடுடையேன் ஆவேன்.

தஞ்சை.
25—6—77.

இரா. தேவ ஆசீர்வாதம்.



# பொருளடக்கம்.

1

# முகவுரை

--*—

தமிழகத்தின் மொத்த மக்கள் தொகை சுமார் 4½ கோடி. இதில் 20 சதவிகிதம் பேர் தெலுங்கு, கன்னடம், மராத்தி, மலையாளம், உருது முதலிய மொழி பேசுவோர். இவர்களைத் தவிர்த்து, தமிழகத்தில் தமிழ் மொழியைத் தாய்மொழியாகக் கொண்டு பெரும்பான்மையினராய்ச் சில குறிப்பிட்ட சமூகங்கள் இருக்கக் காண்கிறோம். இவர்களில் முக்கிய மானவர் பள்ளி [படையாச்சி - வன்னியர்], வேளாளர், பறையர், தேவேந்திர குலத்தார் [பள்ளர்], இடையர், சாணார் [நாடார்], கம்மாளர், கள்ளர், மறவர், செட்டியார், அகம் படியர் முதலியவராவர்.

தமிழ் மொழியைத் தாய் மொழியாகக் கொண்டவர்களில் பள்ளி வகுப்பார் 17 சதவிகிதமும், வேளாளர் 15 சதவிகித மும், பறையர் 14 சதவிகிதமும் இருக்கின்றனர். இவர் களுக்கு அடுத்தபடியாக இருப்பவர் தேவேந்திர குலத்தார். இவர்கள் தொகை 5 சதவிகிதம். இவர்கள் தமிழகத் தின் தென் மாவட்டங்களில் காணப்படுகிறார்கள். பாண்டிய நாட்டில் கன்னியாகுமரி, திருநெல்வேலி, இராமனாதபுரம், மதுரை, புதுக்கோட்டை, சோழ நாட்டில் திருச்சி, தஞ்சாவூர், கொங்கு நாட்டைச் சேர்ந்த கோயம்புத்தூர், சேலம் மாவட் டங்களில் காணப்படுகிறார்கள். தென் ஆற்காடு மாவட்டத்தில் தென் பகுதியில் இவர்கள் மிகவும் சிறுபான்மையினராக இருக்கிறார்கள். தொண்டை மண்டலத்தைச் சேர்ந்த செங்கற்பட்டு, வட ஆற்காடு மாவட்டங்களில் இம் மக்களைக் காண்பது அரிது. இவர்கள் பெரும்பாலும், ஆற்றோரம் மற்றும் ஏரி, குளம் முதலிய நீர்நிலைப் பகுதிகளின் அருகாமையிலேயே காணப்படுகிறார்கள். குறிப்பாக பொருநை (தாம்பிரபரணி), வைகை, காவிரி, அவற்றின் உப நதிகளாகிய அமராவதி, பவானி ஆறுகளின் இருமருங்கிலும் இம் மக்களைக் காணலாம்.

இங்கு இவர்கள் வயல் வேலைகளில் ஈடுபடுகிறார்கள். நெல், கரும்பு, வாழை சாகுபடி செய்வதில் இவர்கள் நன்கு தேர்ச்சி பெற்றவர். இம் மரபுப் பெண்கள் நெல் நாற்று நடுவதிலும், வயல்களில் களை பிடுங்குவதிலும் மற்ற மரபுப் பெண்களை விட நன்கு பழக்கப்பட்டவர்.

இம் மக்கள் செடியூல் வகுப்புப் பட்டியலின் அட்டவணை II-இல் அடியிற்கண்டவாறு குறிப்பிடப்பட்டிருக்கின்றனர்.

| | | | |
|---|---|---|---|
| 1. | பள்ளர் | இணைப்பு | II (1) (4) |
| 2. | தேவேந்திர குலத்தான் | ,, | II (2) (4) |
| 3. | கடைஞன் | ,, | II (2) (22) |
| 4. | காலாடி | ,, | II (2) (23) |
| 5. | குடும்பன் | ,, | II (2) (26) |
| 6. | பண்ணடி | ,, | II (4) |

இவர்களது பிரிவுகளும் குலப் பட்டங்களும், பின் வருமாறு வழங்கப்பட்டு வருகின்றன.

**பாண்டிய நாடு** : அம்மா - ஆத்தா - அஞ்ஞா, அய்யா - கடைஞன்.

**குலப் பட்டம் :** நெல்லை மாவட்டம் - குடும்பன். (செங்கோட்டைத் தாலுகா தவிர்த்து)

நெல்லை மாவட்டம் செங்கோட்டைத் தாலுகா — பாண்டியன்.

**சோழ நாடு** : மூப்பன் – பணிக்கன் – காலாடி - கடைஞன். வாய்க்காரன்

**குலப்பட்டம்** : மூப்பன் - பணிக்கன், காலாடி, வாய்க்காரன்.

**கொங்குநாடு** : கொங்கு, பாண்டியன், சோழியன், கடைஞன்.

**குலப்பட்டம்** : குடும்பன் – பண்ணடி, பட்டக்காரன் - மண்ணடி, பலகன், மூப்பன்.

இந்தப் பிரிவுகளுக்குள் நாட்டுப் பிரிவுகளும் இருக்கின்றன. குறிப்பாக நெல்லை மாவட்டத்தில் அம்மாப்பிரிவில் கொடைவள நாட்டார், சீவந்த வள நாட்டார் என்ற இரு உட்பிரிவுகளும், ஆத்தாப் பிரிவில் வீரவள நாட்டார், பருதிக்கோட்டை வள நாட்டார் என்ற இரு உட் பிரிவுகளும், அஞ்ஞாப் பிரிவில் சிக்கவள நாட்டார், செளுவ வள நாட்டார் என்ற இரு உட் பிரிவுகளும் இருக்கின்றன. இதே பிரகாரம் மற்ற மாவட்டங் களிலும் நாட்டு உட் பிரிவுகள் இருக்கின்றன. அந்தந்த உட் பிரிவுகளுக்குள்தான் இவர்கள் மண உறவு கொள்வர். பொது வாகத் தந்தையின் உடன் பிறந்த அத்தை மகளை முறைப் பெண்ணுகக் கொள்வர். ஆணுக்கும் பெண்ணுக்கும் தக்க வயது வந்தபின்தான் மணம் செய்து கொள்வர். மண மகளுக்குப் பரியம் போடும் பழக்கம் உண்டு. ஊருக்கு ஒரு குறிப்பிட்ட தொகையை ஊர்ப் பணமாகக் கொடுப்பர். அத் தொகை ஊருக்கு ஊர் வேறுபடும். இவர்களுக்கு நன்மை துன்மைச் சடங்குகள் நடத்திவைக்க, தேவேந்திர குலக் குருக்கள், ஞானியார் இருக்கிருர்கள். குருக்கள், ஞானியார் இல்லாவிடின் ஊர்த் தலைவர்களாகிய குடும்பன், மூப்பன் முதலியோர் தலைமையில் அச்சடங்குகள் நடைபெறும். கணவன் இறந்தால் விதவைக்கு மறுமணம் செய்துகொள்ள உரிமை உண்டு. ஆனுல் குழந்தைகள் உடையவர் என்ருல் பொதுவாகப் பெண்கள் மறுமணம் செய்து கொள்வதில்லை. கணவன், மனைவி ஒத்த மனமுடையவராக இல்லையென்ருல் ஒருவருக்கொருவர் மணவிலக்கு செய்துகொள்வதுமுண்டு. ஆண்கள் வசதிக்குத் தக்கபடி இருதாரம் செய்துகொள்வது முண்டு. குழந்தைகள் இல்லாவிடினும் இருதாரம் செய்வ துண்டு. பெரும்பாலான இதர வகுப்புகளுக்குத் தனியாக வண்ணுர், நாவிதர் இல்லாதிருக்கும்போது இம் மக்களுக் கென்று குருக்களைப்போன்று வண்ணுர், நாவிதர் இருக்கிருர் கள். இவர்கள் தேவேந்திர வண்ணுர், தேவேந்திர நாவிதர் என்று வழங்கி வருகின்றனர். தேவேந்திர குலத்தாரின் குடி யிருப்பு ஊர் நத்தத்திலேயே கீழ் பகுதியிலும், சாதி இந்துக் களின் குடியிருப்பு மேற்குப்பகுதியிலும் இருப்பதை எங்கும்

காணலாம். தேவேந்திர குலத்தார் குடியிருப்புக்கும், சாதி இந்துக்களின் குடியிருப்புக்கும் நடுவில் இடைவெளியின்றி இரண்டும் ஒன்றுக்கொன்று அருகாமையிலேயே அமைந்திருக்கின்றன. ஒரு சில ஊர்களில் தேவேந்திர குலத்தாரின் குடியிருப்பு நத்தத்தின் வட பகுதியில் இருக்கும். சாதி இந்துக்களின் குடியிருப்பு இவற்றிற்குத் தெற்கே இருக்கும். பெரும் பண்ணைகள் ஏற்பட்டிருக்கும் இடங்களில் இம் மக்கள் வயல் வெளிகளுக்கு மத்தியிலுள்ள திட்டுகளில் குடியிருக்கிறார்கள். இவற்றைப் பட்சேரி என்பர். பறையர் குடியிருப்பு ஊருக்கு வெளியே ஒதுக்குப்புறமான இடத்தில் இருந்து வருவதைத் தமிழகமெங்கும் பரவலாகக் காணலாம்.

தேவேந்திர குலத்தாரின் உணவுப் பழக்கம் சாதி இந்துக்களின் உணவுப் பழக்கத்தை ஒத்ததே. இவர்கள் நெல் உற்பத்தியில் ஈடுபடுபவராதலால் அரிசி உணவையே பெரும் பாலும் உட்கொள்கிறார்கள். வேளாளர், பள்ளி (படையாச்சி-வன்னியர்), இடையர், கள்ளர், மறவர், அகம்படியார், செட்டியார் முதலிய பல்வேறு சாதி இந்துக்களைப் போன்று இவர்களும் மாட்டிறைச்சியை உட்கொள்வதில்லை. இவர்களில் பெரும்பாலோர் சிவமதத்தையும், ஒரு சிலர் திருமால் மதத்தையும் தழுவியிருக்கின்றனர். இவர்களில் ஒரு சாரார் இடைக்காலத்தில் இசுலாம் மதத்தையும், கிறித்துவ மதத்தையும் தழுவியிருக்கின்றனர் இசுலாம் மதத்தைச் சேர்ந்தவரில் சிலர் இன்னும் குடும்ப ராவுத்தர் என்று பட்டம் மேற்கொண்டிருப்பது இவர்கள் தேவேந்திர குலத்திலிருந்து மதம் மாறினதைக் காட்டுகிறது. தேவேந்திர குலத்திலிருந்து கிறித்துவ நெறியில் மாறினவர்கள், இந்த வகுப்புக்குள்ளேயே கொள்வினை, கொடுப்பினை வைத்துக் கொள்கின்றனர். கிறித்துவர்களில் சாதி வேறுபாடுகள் நடைமுறையில் இருந்து வருவது யாவரும் அறிந்ததே. இவர்கள் உயர் சாதிக் கிறித்துவர், தாழ்த்தப்பட்ட கிறித்துவர் என்று இரு பெரும் பிரிவாக இருந்து வருகின்றனர். தேவேந்திர குலத்தார் மத்தியில் சாத்தான் கோயில் வழிபாடு உண்டு. ஒவ்வொரு

ஊரிலும் காவல் தெய்வத்திற்கும் அம்மனுக்கும் கோயில்கள் எழுப்பி, ஆண்டு தோறும் கோயில் கொடை கொடுத்து வழிபாடு செய்கிருர்கள். ஊர்ப்பொதுக் கோயில்களைத் தவிர, இவர்களுக்குப் பங்காளி வாரியாக, தனித்தனி குலதெய்வம் இருக்கிறது. அதற்கும் இவர்கள் பங்காளி வாரியாக வழிபாடு நடத்தி வருகின்றனர். மதுரை, திருச்சி மாவட்டங்களில் சில பகுதிகளில் இவர்கள் குடியிருப்புகளில் மல்லன் கோயில் கள் இருந்து வருகின்றன. இக்கோயில்களில் இந்த மரபினர் மட்டும் வழிபாடு நடத்துகிருர்கள். திருச்செந்தூர், திருப்பரங்குன்றம், பழனி முதலிய ஊர்களிலுள்ள முருகன் ஆலயங்களுக்கு அருகாமையிலேயே இம் மக்களுக்கென்று தனியாக மடங்கள் இருந்து வருவதைக் காணலாம். இம் மக்கள் வாழும் பகுதியில் உள்ள ஊர்ப் பொதுக்கோயிலுக்கு ஊரிலுள்ள எல்லாப் பிரிவினரும் சேர்ந்து கோயில் கொடை கொடுப்பர். பொதுவாக கோயிற் பூசாரி இம்மரபைச் சேர்ந்த வராகவே இருப்பர். கொடையின் போது அருள் ஏறி ஆடுபவர் இம்மரபினரே. எல்லா வகுப்பினரும் சாதி வேறு பாடின்றி அருள் ஏறி ஆடுபவரின் காலில் விழுந்து வரம் கேட்பதுண்டு. பார்ப்பனரும் இதற்கு விதி விலக்கல்ல. கோயில் முதல் மரியாதை இம்மரபைச் சேர்ந்த குடும்பன், காலாடி ஆகியவர்களுக்கே உண்டு. இப்பழக்கங்கள் பாண்டிய நாட்டில் இன்னும் நடைமுறையில் இருந்து வருவதைப் பரவலாகக் காணலாம். கோயில் விழாக்களில் முக்கிய சடங்குகளில் இவர்கள் பங்கேற்கிருர்கள். நெல் நாற்றுநடவு, கதிர் அறுவடை உற்சவங்களில் இம்மக்கள் கலந்து கொள்கிருர்கள். கோவை மாவட்டம் பேரூர் ஆலயத் தில் இன்னும் நாற்று நடும் உற்சவம் நடைபெற்று வருவதும், அவற்றில் தேவேந்திர குலத்தார் பங்கேற்பதும் அறியத் தக்கது. கோயில்களில் தேரோட்டத்திற்கு இம் மக்களின் தலைவர்களாகிய குடும்பன், காலாடி போன்ருரே கோயிலின் முதல் மரியாதையைப் பெற்று தேரின் வடத்தைத் தொட்டுக் கொடுத்தபின், பொதுமக்கள் தேரை வீதியைச் சுற்றி இழுத்து வருவது யாவரும் அறிந்ததே. இதற்காக தேவேந்திர

குலத்தாரின் தலைவர்களை அவர்கள் இருப்பிடத்திலிருந்து கோயிலுக்கு அழைத்து வர, கோயில் யானை, மேளம், மாலை-மரியாதை, வெண்கொற்றக் குடை, பகற் பந்தம் முதலியவை அனுப்பப்படுவதுண்டு. அநேக இடங்களில் இப் பழக்கம் மறைந்து விட்டாலும், ஒரு சில இடங்களில் அவை இன்னும் நடைமுறையில் இருந்து வருவது கண்கூடு. நெல்லை மாவட்டம் திருச்செந்தூர், திருநெல்வேலிநெல்லையப்பர், சங்கரன்கோவில், கரிவலம்வந்தநல்லூர், இராமநாதபுரம் மாவட்டம் சீவிலிபுத்தூர், மதுரை மாவட்டம் திருப்பரங்குன்றம், மதுரை மீனாட்சியம்மன், மதுரை தெப்பக்குளம் மாரியம்மன், சோழவந்தான், சின்னமனூர், கோயம்புத்தூர் மாவட்டம் பேரூர், அவினாசி முதலிய இடங்களிலுள்ள கோயில்களின் உற்சவங்களில் இம் மக்களுக்கு முதல் மரியாதைகள் வழங்கப் பட்டு வருவதைப் பலரும் அறிவர்.

ஊர்ப் புறங்களில் குளம், ஏரி இவற்றில் மடை வாரியம் பார்ப்பவர் இம் மரபினரே. பொன்னேர், நாள் ஏர் கட்டுவதும், இவர்களே. இதர குலத்தார், தேவேந்திர குலத்தார் பொன்னேர், நாள்ஏர் கட்டின பிறகுதான் ஏர் கட்டுவர். நாட்டுப் பஞ்சாயத்துகளில் இவர்கள் பிரதிநிதிகளும் அங்கம் வகிக்கின்றனர். விவசாயம், நீர் நிலைகள் பாதுகாப்பு, குடி மராமத்து, ஊர்க்காவல், கோயில் கொடைத் திருவிழா, நாட்டுத் தகராறு பற்றிய நாட்டுக் கூட்டங்களில் இம் மரபினர் தலைவர்கள் கலந்து கொள்கிறார்கள். இம் மரபினர்க்கென்று தனியாய் ஊர் மன்றங்களும், நாட்டுப் பஞ்சாயத்துகளும் இருந்து வருகின்றன. இவர்களின் தலைவர்கள் வாரிசு முறைப்படி தொன்றுதொட்டு இருந்து வருகின்றனர். இம் மன்றங்களுக்குக் குடும்பன், மூப்பன், பட்டக்காரன், பலகன் என்ற தலைவர்கள் இருந்து வருகின்றனர். இவர்களுக்கு உதவியாக அக்கசாலை, வாரியன், இளந்தாரி என்ற உதவி யாளர்களும் இருக்கின்றனர். அக்கசாலை என்பவர் பொரு ளாளர், வாரியன் என்பவர் காரியதரிசி, இளந்தாரி என்பவர்

ஓடும் பிள்ளை. இளந்தாரி ஊர்க் கூட்டத்தைக் கூட்ட ஏற்பாடு செய்பவர். ஊரில் இம் மக்களுக்குள் ஏற்படும் பிணக்குகளை இம் மன்றம் ஊர்க் கூட்டம் கூட்டி விசாரித்துத் தீர்க்கும். இவர்கள் தீர்ப்புக்கு இரு சாராரும் கட்டுப்படுவர். இக் கூட்டங்களில் தீர்க்கப்படாத பிணக்குகளை நாட்டுப் பஞ்சாயத்துக் கூட்டத்திற்கு எடுத்துச் சென்று பரிகாரம் தேடுவதுண்டு. இவர்களுக்கென்று தேவேந்திர குல வேளாளர் சங்கம் என்ற ஒரு அமைப்பு இருந்து வருகிறது. இச் சங்கம் நெல்லை மாவட்டத்தில் பல மாநாடுகள் நடத்தியிருக்கின்றது. 1971இல் திருச்சிராப்பள்ளியில் கடைசியாக இது ஒரு மாநில மாநாடு நடத்தியது.

பாண்டிய நாட்டில் இம் மரபினரின் மண விழாவில் மணமக்களை வாழ்த்தும்போது, பாண்டியரோடும் பஞ்ச பாண்டவரோடும் தொடர்புபடுத்திப் பாடுவர். 'பட்டினப் பிரவேசம்' அலங்கரித்த இரதங்களில் நடைபெறும். மணமக்களை மன்னர் மரபினராகவும், பாண்டியராகவும் கொத்துக்கு முத்தளந்தவன் என்றும், காலால் உழப்பியதெல்லாம் செந்நெல் விளையுமென்றும், வெள்ளானை மீது ஏறி 18 சதை மேளம் முழங்கப் பவனி வருவதாகவும், வருணித்து வாழ்த்துவர். இப் பழக்கம் காலப் போக்கில் பொருளாதார சீர் கேட்டினால் மறைந்து வருகிறது. நிலக் கிரையம், ஒத்திப் பத்திரங்களில் இவர்கள் தங்களைத் தேவேந்திர குலம், தேவேந்திர குல வேளாளர், இந்திர குலம் என்றும் பதிகிறார்கள். இம்மரபுப் பெண்கள் வயல்களில் நாற்று நடும்போது பாடுகிற கிராமீய உழத்திப் பாட்டுகளின் இடையிடையே, ' தேவேந்திர குலப் பெண்டுகளா ' என்று விளித்துப் பாடுவதைப் பலரும் அறிவர். குழந்தைகளைத் தாலாட்டும் போது, இம் மரபுப் பெண்கள் மதுரை சொக்கநாதரை உழவனாகவும், மீனாட்சியை உழத்தியாக வருணித்தும், குழந்தைகளின் தாய் மாமனை, ' மாடுகட்டிப் போரடித்தால் மாளாதென்று யானை கட்டிப் போரடித்தான் உன் அம்மான்' என்று ஏற்றியும் பாடுகின்றனர். சோழ நாட்டில் இம் மரபுப் பெண்கள் தாலாட்டும் போது, 'பாண்டியனைக்

குழந்தையின் தாய் மாமன்' என்று ஏற்றிப் பாடுகின்றனர். இறந்தவர்களை இதர மரபினர் பாடை, பல்லக்குக் கட்டி மேள தாளம் ஆடம்பரமின்றி அடக்கம் செய்யும்போது, இவர்கள் தேர் கட்டி, கோயிற் தேர்களைப் போன்று நன்கு அலங்கரித்து, மேள தாளத்துடனும், வாண வேடிக்கை, சிலம்பு மற்றும் களியாட்டங்களுடன், பிரேதத்தைப் படுக்கப் போடாமல், தேரில் உட்காரும் பாவனையில் சாய்வாய்க் கட்டி எடுத்து அடக்கம் செய்கின்றனர். பிரேதத்தின் தலையை தெற்கே வைத்து, முகம் வடக்குப் பார்த்து இருக்கும்படியாகக் குழியில் வைப்பர். வசதிக்குத் தக்கபடி 3 தேர்கள், 5 தேர்கள் கட்டு வதும் உண்டு. ஒரு தேர் கட்டினுல் அதில் 5, 7, 9, 11 முகப்புகள் வைத்துக் கட்டுவதும் உண்டு. இறந்தவர் தலைச்சன் பிறவி என்றுல், பிரேதத்தை எரிப்பதுண்டு. மற்ற வர்களை அடக்கமே செய்கின்றனர்.

இம்மக்கள் சிலம்புப் பயிற்சியில் நன்கு தேர்ச்சி பெற்றவர். இம்மரபினரிடமிருந்தே இதர வகுப்பார் சிலம்புப் பயிற்சி பெற்றதாக செவிவழிச் செய்தி மூலம் அறிகிறோம். ஊர்க் கோயில் கொடை, தேர்த் திருவிழா, மணவிழா மற்றும் முக்கிய விழாக் காலங்களில் இம்மக்கள் சிலம்பம் விளையாடி, தங்களின் திறமையை வெளிப்படுத்துவதுண்டு. இம்மரபினர் மத்தியில் சிலம்பப் பயிற்சி ஆசிரியர் பலர் இருந்து வருவது கண்கூடு.

இம்மக்கள் எல்லா மரபினரோடும் அன்போடு இணைந்து வாழக்கூடியவர்கள். தங்கள் நெற்போர்க் களங்களில் யாசித்து வருகிறவர்களுக்கும், விவசாயத் தொழிலில் உதவுபவர்களுக் கும் தாராளமாய் நெல் மணிகளை உவந்து வழங்கும் பண்புள்ள வர். இவர்கள் சுறுசுறுப்புள்ளவர்கள். சோம்பேறிகளை இவர்கள் மத்தியில் காண்பது அரிது. வயதானவர்கூட வறுமையுற்ற காலத்தில் உடலுழைப்பு மூலம் தங்கள் வாழ்க்கையை நடத்துகின்றனர். இவர்களில் ஒருவரும் எக்காரணத்தை முன்னிட்டும் பிச்சை எடுக்கார். இவர்கள் வீரமும், தன்மானமும் உடையவர்கள். இவர்கள் மத்தியில்

கோழைகளைக் காண்பது அரிது. வீணாக ஒருவருடனும் வம்பு தும்புக்குப் போகார். ஆனால் இவர்கள் தவிர்க்க முடியாதபோது கலகத்தில் இறங்கினால் முன் வைத்த காலைப் பின் வைக்கார். இம்மக்களைப் பற்றி, 'வம்புச் சண்டைக்குப் போகார், வந்த சண்டையை விடார்' என்ற பழமொழி நாட்டில் வழங்கி வருகிறது.

இவர்களைத் தீண்டப்படாத மக்களாக சமுதாயம் கருதி வருவதால், இவர்கள் விவசாயத்தைத் தவிர வேறு ஒரு தொழிலும் மேற்கொள்ள முடியாத நிலையில் இருக்கிறார்கள். அண்மைக் காலம் வரை, பொதுவிடங்கள் இவர்களுக்கு மறுக்கப்பட்டிருக்கின்றன. கல்விக் கூடங்களில் இம்மரபுச் சிறுர்கள் கல்வி கற்க அனுமதிக்கப்படவில்லை. பெரும்பாலான இடங்களில் நிலங்கள் இதர மரபினருக்கும், கோயில், மடங்கள், பெரும் நிலப்பிரபுக்களுக்குச் சொந்தமாய் இருந்து வருவதால், இவர்களில் பெரும்பாலோர் கொத்தடிமை நிலையிலேயே இருந்து வந்தனர். ஆங்கிலேயரிடமிருந்து நாடு விடுதலை பெற்றபின், இம்மக்கள் கல்வியில் சிறிது முன்னேறியிருக்கின்றனர். படித்துப் பட்டம் பெற்றவர்கூடத் தங்கள் மரபை வெளிப்படுத்த வெட்கப்படுகின்றனர். நகரங்களில் குடியிருக்க வீடுகள் மறுக்கப்படுவதால், இவர்களில் அரசு பணிகளை மேற்கொண்டவர் தங்கள் மரபை மறைத்தே வாழ்கின்றனர். தற்காலத்தில் சாதி இந்துக்கள் இவர்களை அரிசன் என்று வழங்கி வருகின்றனர். யாரையும் இழிவாய் ஏச வேண்டுமென்றால் பள், பறை என்ற சொற்களையே குறிப்பாகச் சோழ நாட்டில் பிற வகுப்பார் கையாள்வதைத் தமிழகம் நன்கு அறியும். சாணார் (நாடார்) கூட இம்மக்களை இழிவாய்ப் பேசுவர். சாணார் சமீபகாலம் வரை தீண்டப்படாதவராக நடத்தப்பட்டு வந்ததைத் தமிழகம் நன்கு அறியும். பறையர் கூடத் தங்களை வலங்கைப் பிரிவினர், அதனால் உயர்ந்தவர் என்றும், தேவேந்திர குலத்தார் இடங்கைப் பிரிவினர், அதனால் அவர் தாழ்ந்தவர் என்றும் கூறிவருகின்றனர்.

இம்மக்கள் தேவேந்திரகுலம், இந்திரகுலம், தேவேந்திர குல வேளாளர் என்று கூறிவந்தும் இவர்களைப் பள்ளன்,

அரிசன், தீண்டப்படாதவன், தாழ்த்தப்பட்டவன் என்று சமூகம் தூற்றி வருகிறது. இவர்கள் தொழில் உழவு; அதிலும் வயல் உழவு. தமிழ் இலக்கியங்கள் உழவர்களை உயர்குடி மக்களாகவே உரைத்துள்ளன. 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார், மற்றெல்லாம் தொழுதுண்டு பின் செல்பவர்' – 'உழுவான் உலகத்தார்க்கு ஆணி' – 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்', 'உண்டி முதற்றே உணவின் பிண்டம்' என்றெல்லாம் உழவர் போற்றப்பட்டிருக்கின்றனர். உழவர் என்றால் வேளாளர் என்று கொள்வதே முறை. ஆனால் இம்மக்கள் தங்களைத் தேவேந்திர குல வேளாளர் என்று உரிமை பாராட்டினாலும், பிற சமூகத்தினர் இவர்களைப் பள்ளன், தீண்டப்படாதவன் என்று எள்ளி நகையாடும் காரணம் என்ன ?

பண்டைய நாளில் ஏரும் போரும் இணைபிரியாது என்பர். ஆக அக்காலத்தில் ஏர் உழவனும், போர் மறவனும் ஒரே மரபினர் என்பது தேற்றம். அவ்வாறெனில் அந்த இரு தொழில் செய்த மக்கள் யார்? அம் மக்களுக்கு பண்டைய நியதிப்படி நிலத்தை உழுவவும், போரில் ஈடுபடவும் உடல் வலிமையும், ஆற்றலும் இருந்திருக்க வேண்டும். இன்று வேளாளர், வெள்ளாளர் என்று வழங்குகிறவர்களுக்கு வயல் உழவு தெரியாது. அதோடு போர் ஆற்றல் திறன் அறவே கிடையாது. மறக்குலம் என்று கூறும் மறவருக்கு உழவு தொழில் தெரியாது. ஆக இந்த இரு மரபினரும் பண்டைய நாளில் ஏர்த் தொழிலும், போர்த் தொழிலும் செய்யவில்லை என்பது தேற்றம். மாறாக தேவேந்திர குலத்தார் அந்த இரு தொழிலும் ஆற்றக்கூடிய வலுவுள்ளவராக இன்று காணப்படுகின்றனர். இதைத் தமிழகத்தில் ஒருவரும் மறுப்பதற்கில்லை. ஆக பண்டைய நாளைய உழவர்குடியும், மறக்குலமும் இம் மரபினர்தானா? அப்படியானால் இவர்கள் விசயநகர ஆட்சியில் தமிழரசுகள் கவிழ்ந்தபோது அடக்கப்பட்டு, ஒடுக்கப்பட்டு, தாழ்த்தப்பட்டு நாளடைவில் தீண்டப்படாதவர் நிலையை அடைந்தார்களா?

இக் கேள்விகளுக்கு வரலாற்று ஆராய்ச்சிக் குறிப்புகள், மற்றும் கல்வெட்டுகளின் துணைக்கொண்டு இம் மக்கள் சமுதாயத்தில் எவ்வாறு இடம் பெற்றிருந்தனர் என்பது பற்றி ஆராய்வோம்.



# வரலாற்றுக் குறிப்புகள்.

தேவேந்திர குலத்தாரைப் பற்றி கி. பி. 11 ஆம் நூற்றுண்டு வரை எவ்விதச் செய்தியும் வரலாற்றில் இடம் பெறவில்லை. தமிழ்ச் சங்க இலக்கியங்களின் துணைக்கொண்டு தமிழர் நாகரிகம் - தமிழர் பண்பாடு - தமிழக வரலாறு, தமிழ் ஆராய்ச்சி என்று பல நூற்கள் வெளிவந்திருக்கின்றன. அவை பெரும்பாலானவற்றில் பள்ளர் தமிழகத்தின் கடைசி வகுப்பார் - கடைஞர் - கடைசியர் - வேளாளரின் பண்ணை அடிமைகள், உழவர்கள் என்று பொதுவாக குறிப்பிடப் பட்டிருக்கின்றனர். ஆனல் தமிழ் இலக்கியங்களிலும், நிகண்டு களிலும் பள்ளர் என்ற சமூகம் இருந்ததாகக் குறிப்புகள் இல்லை. ஆதலால் கி. பி. 11-ஆம் நூற்றுண்டுக்குப் பிற்பட்ட சாதனங்களின் துணைக்கொண்டு இம்மக்களைப் பற்றி ஆராய முற்படுவோம். ஒரு மக்களின் வரலாற்றை ஆராயத்துணை புரிவது நாட்டு வரலாறு, இலக்கியம், கல்வெட்டு, செப் பேடுகள், மாவட்டக் குறிப்பு முதலியன. சில வகுப்பாரைப் பற்றி புராணங்கள் தோன்றியிருக்கின்றன. ஆனல் பள்ளர் பற்றி பள்ளுப் பிரபந்தங்கள் பெருமளவில் தோன்றியிருக் கின்றன. எல்லாவற்றிற்கும் முன்னதாக வரலாற்ருசிரியர் இம் மக்களைப் பற்றி குறிப்பிட்டிருப்பதை நோக்குவோம்.

**வரலாற்றில் பள்ளர் :**

ஏற்கனவே குறிப்பிட்டதுபோல் கி. பி. 11 ஆம் நூற் ருண்டு வரை இம் மக்களைப் பற்றி எவ்விதக் குறிப்பும் சரித்திர நூல்களிலோ, இலக்கியங்களிலோ காணும். டாக்டர் K. R. அனுமந்தன் கி. பி. 12 ஆம் நூற்ருண்டில் பள்ளர் என்ற சமூகம் தமிழகத்தில் இருந்ததாக ஊகிக்கின்ருர். அவர் கூறுவதாவது :— இடைக்காலத்தில் பறையர், பள்ளர், சக்கிலியர் வகுப்பாரை வெள்ளாளரும், பிராமண நில உரிமை யாளரும் விவசாயப் பண்ணை அடிமைகளாக வைத்தி ருக்கலாம். கி. பி. 1177 ஆம் ஆண்டைச் சேர்ந்த சோழன் இரண்டாம் ராசாதிராசன் காலத்தியக் கல்வெட்டில்,

' தொழிலாளர்களாய்ப் பணிபுரிபவர்கள் அரசர்களால் கவுரவத் துக்காக வழங்கப்படும் காவிதி, வேள் என்ற பட்டங்கள் பெறுவதற்கு அருகதையுடையவர் அல்ல; குயவர், பறையடிப் போர், நெசவுத்தொழில் செய்வோர், முடிதிருத்துவோர் தலையில் கொண்டை வைத்திருக்கக்கூடாது; நன்மைக்கு பேரிகை கொட்டக்கூடாது. அடிமைகளையும் அவர்கள் வைத்திருக்கக் கூடாது' [1] என்று பொறிக்கப்பட்டிருக்கிறது.

Dr. K. R. Hanumanthan says :-

'It can be presumed that the parayas, pallas and chakkilyas were kept as slaves by Vellalas and Brahmin land lords of the Medieval period in order to extract work from them with minimum expenditure. An inscription of Rajathi Raja II dated A. D. 1177 says that these classes which are engaged as labourers shall not become Vel and Arasu. (titles bestowed by kings on distinguished citizens) Potters and drummess (evidently parayas) weavers barbers shall not keep locks of hair. During their marriages and joyous occasions big drums called perikai shall not be beaten and they shall not keep any slaves.' [1]

2. டாக்டர் K. K. பிள்ளை கி. பி. 14-ஆம் நூற்றாண்டில் பள்ளர் வேளாளரின் அடிமையாயிருந்தனர் என்கிறார். இவர் கூறுவதாவது:- கி.பி.14-ஆம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் பாண்டிய நாட்டை முசுலீம் தாக்கிக் கொள்ளையடித்த காலத் தில் பாண்டிய நாட்டிலிருந்து இலங்கையிலுள்ள யாழ்ப்பாணத் திற்கு குடியேற்றம் ஆரம்பமானது. பிறகு விசய நகர ஆட்சி ஏற்பட்டதும், அவரது காலத்தில் முக்கிய அரசு அலுவல்களில் தங்கள் மரபினரை நியமித்தனர். அதனால் பாண்டிய நாட்டி லுள்ள செல்வாக்குள்ளவர்களும், குறிப்பாக வெள்ளாளரும் யாழ்ப்பாணத்தில் பெருமளவில் குடியேறினர். அவ்வாறு அவர்கள் குடியேறின காலத்தில் அனேகமாய் தொழிலாளர்

1. P. 191 Untouchability in Tamilakam Dr. K. R. Hanumanthan.

களையும், அழைத்துச் சென்றிருக்க வேண்டும். குறிப்பாக நிலச் சுவான்தார்களிடம் பண்ணை அடிமைகளாய் இருந்த பள்ளர் யாழ்ப்பாணத்திற்குச் சென்றனர்.[1]

Dr. K. K. Pillay says :-

'A large scale movement of colonists from Madura to Jaffna occured as a consequence of the attack of the Pandya kingdom by the muslims early in the 14th century A. D. Even after the destruction of the Madura Sultanate by the Vijayanagaram generals, migration of Tamils from the Pandya kingdom to Jaffna continued when the Vijayanagar generals conquered the Tamil kingdoms of the south and recognised the administration of the land-they appointed their own officers for the important administrative posts. These changes were distasteful to the influential section of the native people particularly of the Vellala Caste in the Pandya Country. Consequently many of them gave up their hearths and home in south India and proceeded to settle down in Jaffna. Both the Vaipava-malai and Kailapamalai speak at length about those settlements. The Vaipavamalai gives a list of the colonies founded in Jaffna and the names of the leading members of each colony. The names of the colonists show that they belonged to the Vellala Caste. There is great probability that the Vellala landlords were accompanied by others like artizons and labourers. It is stated in particular that pallars who were attached to the landlord as serfs accompanied them as colonists to Jaffna.'[1]

குறிப்பு : டாக்டர் K. K. பிள்ளை கூறும் வெள்ளாளர் காரைக்காட்டைச் சேர்ந்தவர். இவர் தங்களைக் கங்க குலம் துளுவர் கூட்டம் என்று பலவாறு வழங்கிக் கொள்வர். இவர்

1. Page 139 South India & Ceylon Dr. K. K. Pillay.

பண்டைய வேளாண் மரபைச் சேர்ந்தவரல்ல. இவர் பற்றி வேளாளர் யார்? என்ற நூலில் விளக்கப்படும்.

**கிறித்துவ மறையில் பள்ளர் :**

கி. பி. 17, 18, 19 ஆம் நூற்றுண்டுகளில் ஐரோப்பாவிலிருந்து கிறித்துவ மறையைப் பரப்ப வந்த மத போதகர்கள் பள்ளர் சமுதாயத்தைப் பற்றிச் சில செய்திகள் குறிப்பிட்டுச் சென்றிருக்கின்றனர். அவ்விதச் செய்திகளைக் கீழே காண்போம்.

1. மறைத்திரு. J. C. கோபர்ட் கூறுவதாவது :—

'ஜான் டி பிரிட்டோ காலமாகிய 17 ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் பள்ளர் திரள் திரளாய்க் கிறித்துவ மறைக்கு மாறினர். பின்னர் நாட்டில் பஞ்சம் ஏற்பட, சிலர் கிறித்துவ மறையை விட்டுவிலகி, பழைய மதத்துக்கே சென்றுவிட்டனர். தக்க வாய்ப்பும், வசதியும் கிட்டினுல் இம் மக்கள் நிச்சயமாய் வாழ்க்கைப் பாதையிலும், ஆன்மீகத் துறையிலும் முன்னேறுவர்' [1]

2. கி. பி. 17 ஆம் நூற்றுண்டில் தஞ்சையில் பள்ளர் கிறித்துவ மறைக்கு மாறினது பற்றி ஜே. எஸ். சாண்ட்லெர் குறிப்பிட்டிருப்பதாவது :—

'கி. பி. 1643 இல் கிறித்தவ போதகர் மறைத்திரு டிகாஸ்டே தஞ்சாவூரில் 75 சாதி இந்துக்களையும், 80 பறையர் பள்ளரையும் கிறித்தவ மறையில் சேர்த்தார்.' [2]

3. கி. பி. 17-18 ஆம் நூற்றுண்டுகளில் பள்ளர் கிறித்தவ மறையில் சேர்ந்தது பற்றி J. S. சாண்ட்லெர் மேலும் குறிப்பிடுவதாவது :—

---

1. Page 144 Madurai Catholic Mission by Joseph C. Houpert, S. J.

2. Page 43 Madurai Mission by J. S. Chandler, M. A.,

'கி. பி. 17-18 ஆம் நூற்றுண்டுகளில் கிறித்தவ மதத்தில் பிராமணர், நெசவுத் தொழிலாளர், கொல்லர், உப்பு வணிகர், பள்ளர், பறையர் வகுப்புகள் இடம் பெற்றிருந்தன.' [1]

4. 'மறைத்திரு. ஜார்ஜ் பெடிட்டி என்பவர் கி. பி. 19ஆம் நூற்றுண்டு ஆரம்ப காலத்தில் பள்ளர் கிறித்துவ மறையில் சேர்ந்தது பற்றிக் குறிப்பிடுவதாவது:— கிறித்துவ சபையைத் தழுவியிருக்கும் துட்டத்தனத்துக்குப் பேர் போன மறவர் மற்றும் கள்ளச் சாணுர், பறையர், பள்ளர் இவர்களுக்கு மத போதனைகள் கற்பிக்கப்பட்டு வருகிறது.' [2]

பள்ளர் கி. பி. 18, 19-ஆம் நூற்றுண்டுகளில் அடிமை களாயும் வறுமையிலும், இழிநிலையிலும் வாழ்ந்தது பற்றி சில மேனுட்டு கிறித்தவ மத போதகர்கள் குறிப்பிட்டுச் சென்றி ருப்பதைக் கீழே காண்போம்.

1. கி. பி. 1792க்கும் 1823க்கும் இடைப்பட்ட காலத்தில் இம் மக்களின் இழிநிலை பற்றி கிறித்துவ சமயத் தொண்டு செய்த மேனுட்டு மறைத்திரு. அபேடுபாய் குறிப்பிடுவதாவது:

"தென்னுட்டில் இருக்கும் பறையரைப் போன்றதும், அதைவிட மோசமான நிலையிலும் சில மரபினர் இருக்கின் றனர். எடுத்துக்காட்டாக மதுரையிலும், கன்னியாகுமரிக்கு சமீபமும் பள்ளர் என்ற ஒரு சமூகம் இருக்கிறது. இவர்கள் தாங்கள் பறையரைப் போல் மாட்டிறைச்சி உட்கொள்ளாத தால், அவர்களை விட உயர்ந்தவர் என்கின்றனர். ஆனுல் பறையர் தாங்கள் வலங்கைப் பிரிவினர் என்றும், பள்ளர் இடங்கைப் பிரிவினர் என்றும், அதனுல் தங்களைவிடப் பள்ளர் தாழ்ந்தவர் என்கின்றனர். இந்த இரண்டு தாழ்த்த சாதி களும் எண்ணிக்கையில் சம பலமாக இருக்கும் இடங்களில்

---

1. Page 45 Madurai Mission by J. S. Chandler, M. A.,
2. Page 258 The Tinnevely Mission of the Church. Missionary Society by Rev. George Pettite.

ஓயாத வகுப்புக் கலவரங்களில் ஈடுபடுகின்றனர். இந்த இரு பிரிவினரும் ஒரே சீரான வாழ்க்கையை நடத்துகின்றனர். சமூகத்தில் இருவரும் ஒரே மாதிரி தாழ்ந்த வகுப்பினராகவே கருதப்படுகின்றனர். இவர்கள் மற்ற சமூகத்தாரின் குடியிருப்பு களின் வெளிப் புறத்தில் சற்று தூரமாய் குடியிருக்கிறார்கள். [1]

Rev. Abbe. J. A. Dubois says:-

The pallas consider themselves superior to the paraiahs in as much as they do not eat the flesh of the cow but the paraiahs look on them as altogether their inferior because they are the scum of the left hand faction whilst themselves are the mainstay of the right hand.

These two classes of degraded beings can never agree and whenever they are found in equal number disputes and quarrels amongst them are uninterminable. They lead the same sort of life enjoy an equal sort of public opprobrium and both are obliged to live far apart from all other classes of the inhabitants. [1]

2. கி. பி. 19–ஆம் நூற்றாண்டில் இம் மக்கள் இருந்த நிலை பற்றி ஜான் எஸ் சாண்டலர் குறிப்பிடுவதாவது:– 'கி. பி. 1843-இல் பள்ளர் பெரும்பாலும், விவசாய அடிமை களாய் இருந்தனர். கி பி. 1847 இல் அடிமை ஒழிப்புச் சட்டம் பிறப்பிக்கப் பட்ட பிறகு இவர்கள் நல்ல முன்னேற்றம் அடைந்திருக்கின்றனர். கிறித்துவ மறையில் அதிக எண்ணிக் கையில் சேர்ந்திருக்கின்றனர்.' [2]

---

1. Page 61 Hindu Manners customs and ceremonies Abbe. J. A. Dubois, 1782–1823 Missionary Works in India Chiefly Mysore.

2. Seventy five years in the Madura Mission - John. S. Chandler, M. A.

3. கி. பி. 1850 இல் இம் மக்கள் நிலைபற்றி மறைத்திரு ஜார்ஜ் பெட்டைட்டி குறிப்பிடுவதாவது :-

பள்ளர், பறையர் தனித்தனிப் பிரிவினர் என்றாலும், சமூக நிலையில் இருவரும் ஒரே நிலையிலுள்ளவர். இரு பிரிவினரும் கிறித்துவ மறையில் சேர்ந்திருக்கின்றனர். இவர்கள் ஏற்கனவே விவசாய அடிமைகளாய் இருந்தவர்கள். கிழக்கிந்தியக் கம்பெனியார் அடிமை ஒழிப்புச் சட்டம் பிறப்பித்தும், இவர்களில் பெரும்பாலோர் அடிமைத்தளைகளிலிருந்து தங்களை விடுவித்துக் கொள்ளாமல் பழைய நிலையிலேயே நீடித்து வருகின்றனர். [1]

4. நெல்லை மாவட்டத்தில் கி. பி. 19 ஆம் நூற்றாண்டில் கிறித்துவ மறையைச் சாணார் (நாடார்) மத்தியில் பரப்பிய முனைவர் (Dr.) கால்டுவெல் இம் மக்களைப் பற்றிக் குறிப்பிடுவதாவது :-

நெல் சாகுபடியில் ஈடுபட்டிருக்கும் பறையர், பள்ளர் அடிமைகளைப் போல், நல்ல செழிப்பான காலத்திலும், மரமேறிகள் (சாணார்) வாய்க்கும், கைக்கும் பற்றாத வாழ்க்கை நடத்தி வருகின்றனர். பள்ளர், பறையரைப்போல் அவர்களது வறுமை மிகவும் ஆழமானது. [2]

வெள்ளாளர் சாணாரை எவ்வாறு கீழ்த்தரமாக நடத்தினரோ, அதே போன்று சாணாரும் பள்ளர், பறையரைக் கேவலமாக நடத்தினர். பள்ளர், பறையர் சாணாரத் தெருக்களில் காலணி அணிந்து செல்லக்கூடாது. சாயர்புரம் கிறித்துவ ஆலயத்தில் சாணார் முன் பகுதியிலும், பள்ளர் அவர்களுக்குப் பின் பகுதியிலும் இருந்து வழிபட வேண்டும். பள்ளர், பறையர் வகுப்பைச் சேர்ந்த உபதேசியாரோ, குருக்களோ, சாணார் மத்தியில் பணியாற்றக்கூடாது. சாணார்

1. Page 480. The Tinnevely Mission of the Church Missionary Society by Rev-George Pettitte.

2. Shanars of Tinnevely Dr. R. Coldwell, Page 24, Nadars of South India. Robert L. Hardgrave Jr.

வகுப்பு அல்லது அவரைவிட உயர்ந்த சாதியைச் சேர்ந்த உபதேசியாரும் குருக்களும் II தான் அவர்கள் மத்தியில் பணியாற்றலாம். [1]

நெல்லை மாவட்டம் நாசரேத் ஊரில் கிறித்துவ மறை பிரசார சபையைச் சேர்ந்த (Society for the propogation of the Gospel)மதபோதகர் மறைத்திரு A.F. காயின்மேரர் (A.F. Caen Merer) பள்ளர் வகுப்பைச் சேர்ந்த ஒருவரைப் பள்ளி ஆசிரிய ராக நியமனம் செய்திருந்தார். பள்ளர் வகுப்பைச் சேர்ந்தவர் ஆசிரியர் பணி ஆற்றக்கூடாது என்று சாணார வகுப்பைச் சேர்ந்த சட்டாம் பிள்ளை என்று எல்லோராலும் அழைக்கப் பட்ட அருமைநாயகம் என்பவர் கிளர்ச்சி செய்தார். இவர் அந்த ஆசிரியரை நீக்குவதற்கு சூழ்ச்சியாக, ஒரு பெண்ணின் தற்கொலையில் அந்த ஆசிரியரை ஈடுபடுத்த முயற்சித்தார். ஆனால் அவர் முயற்சி வெற்றிபெறவில்லை. மாறாக அருமை நாயகமே பாதிரியாரின் கோபத்துக்கு ஆளாகி, வேலை நீக்கம் செய்யப்பட்டார். [2]

சாயர்புரத்தில் கி. பி. 1856 இல் பள்ளர் வகுப்பைச் சேர்ந்த மறைத்திரு டேவிட் என்பவர் கிறித்துவப் பாதிரி யாராகப் பணியாற்றி வந்தார். ஒரு சந்தர்ப்பத்தில் இவர் சாணாரை இழப்பசாதி என்று குறிப்பிட்டு விட்டார். 'இழப்ப சாதி' என்ற சொல்லானது சாணார் மத்தியில் பெரும் எதிர்ப்பையும் கொந்தளிப்பையும், பரபரப்பையும் ஏற்படுத்தி யது. சாணார்கள் கொதித்தெழுந்து தங்களை இழப்பசாதி என்று கூறியது தவறு என்று ஆட்சேபித்து, சாயர்புரத்தி லிருந்த மேனாட்டு மதப் பிரசாரகர் மறைத்திரு ஹக்ஸ்ரேபிளிடம் முறையீடு செய்தனா. மறைத்திரு டேவிட் தான் இழப்பசாதி என்று கூறியது சாணாரை இழிவு படுத்தும் நோக்கத்துடன் அல்ல என்றும், கி. பி. 1820 இல் டர்ன் புல் (Turn Bull) என்பவர் நெல்லை மாவட்டம் பற்றி வரைந்த குறிப்பில், சாணார்

1. Page 92 Nadars of South India Robert L. Hard grave Jr.
2. Page 72 Nadars of South India Robert L. Hard grave Jr.

உயர்ந்த சாதிகளுக்கும் தாழ்ந்த சாதிகளுக்கும், இடைப்பட்ட ஒரு சமூகமாக குறிப்பிடப்பட்டிருப்பதைச் சான்று காட்டி, தன்னுடைய பேச்சுக்கு வ ரு ந் து வ தா க வு ம், மறைத்திரு ஹக்ஸ்ரேபிள் மதபோதகருக்குப் பதில் அனுப்பினர். ஆனல் இந்தப் பதில் சாணருக்குத் தி ரு ப் தி அளிக்கவில்லை. மறைத்திரு டேவிட் பிராமணர் சாணரையும் அவர்களுக்குக் கீழ்ப்பட்ட சாதிகளையும், இந்து ஆலயங்களுக்குள் நுழைய அனுமதிக்கிறதில்லை என்றும், மற்ற தாழ்ந்த வகுப்பினரைப் போல் சாணரும் இந்து ஆலயங்களுக்கு வெளியே இருந்து தெய்வத்தைத் தொழுது வருவதையும் சுட்டிக்காட்டி ' இழப்ப சாதி ' என்பது தொழிலிலும், பழக்க வழக்கத்திலும் உயர்ந்த, தாழ்ந்த ஆகிய இரு வகுப்புக்களுக்கும் இடைப்பட்டவர் என்று விளக்கம் கொடுத்தார். அவர் விளக்கம் சாணரால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. அவர்கள் மறைத்திரு டேவிட்டோ அல்லது அவரது மரபினரோ, தங்கள் மத்தியில் உபதேசியாகவோ, மதகுருவாகவோ பணியாற்றக் கூடாதென்று தீர்மானித்தனர். தங்களை விட தாழ்ந்தவர் எவரும் தங்கள் மத்தியில் பணியாற்றக் கூடாதென்றும், தங்கள் சமூகத்தைச் சேர்ந்தவர் அல்லது தங்களை விட உயர்ந்த சமூகத்தினர் மட்டும் தங்கள் மத்தியில் பணி ஆற்றலாம் என்றும் கிளர்ச்சி செய்தனர். [1]

சாணர் தாங்கள் உயர்ந்த சாதி என்று வெளிக்காட்டிக் கொள்ள பள்ளர், பறையரை அடிமைகளாக வாங்கினதாக மறைத்திரு ஞானப்பிரகாசம் கி. பி. 1867 ஜூலை 15 இல் ஆயருக்கு (Bishop) எழுதிய ஒரு கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறர். [2]

---

1. Page 71 Nadars of South India Robert L. Hard grave Jr.

2. Page 187 Nadars of South India Robert L. Hard grave Jr.

**குறிப்பு:** கி. பி. 1847 இல் அடிமை ஒழிப்புச் சட்டம் கிழக்கிந்தியக் கம்பெனியாரால் சென்னை மாகாணத்தில் பிறப்பிக்கப்பட்டு விட்டது. ஆதலால் 1867 இல் சாணர், பள்ளர், பறையரை அடிமைகளாக வாங்கினர் என்பதை ஏற்பதற்கில்லை.

**இராமநாதபுரம் மாவட்டத்தில் பள்ளர்:**

இராமநாதபுரம் பகுதியில் கள்ளர் சமூகம், பள்ளர் சமூகத்துக்கு இழைத்த கொடுமைகள் பற்றி J. H. ஹட்டன் குறிப்பிடுவதாவது :-

1930 டிசம்பர் திங்களில் இராமநாதபுரம் கள்ளர் எட்டு விதமான கட்டுப்பாடுகளைப் பள்ளர் சமூகத்தின் மீது விதித்தனர். அந்தக் கட்டுப்பாடுகளில் முக்கியமானவை தங்கம், வெள்ளி நகைகளைப் பள்ளர் சமூகத்தைச் சேர்ந்த பெண்கள் அணியக்கூடாது. அவர்கள் இடுப்புக்கு மேல் துணிகள் போடக்கூடாது. குடை, செருப்பு உபயோகிக்கக் கூடாது. இக்கட்டுப்பார்டுகளைப் பள்ளர் சமூகத்தினர் மீறினதால், கள்ளர் ஒன்று கூடி, எட்டுவிதக் கட்டுப்பாடுகளை விட இன்னும் சற்றுக் கடுமையான பதினொரு விதமான கட்டுப்பாடுகளைப் பிறப்பித்தனர். இந்தப் பதினொரு விதமான கட்டுப்பாடுகளில், பள்ளர் சமூகத்தைச் சேர்ந்த சிறுர்கள் பள்ளிக்குச் செல்லவோ, கல்வி பயிலவோ கூடாது என்பதும் அடங்கும். இக்கட்டுப்பாடுகளை மீறியதற்காக, பள்ளர் சமூகத்தினரின் குடிசைகளுக்கு தீ வைத்தனர். அவர்கள் களஞ்சியங்களிலுள்ள உணவுப் பண்டங்களைச் சூறையாடி அவர்களுடைய உடைமைகளை அழித்தனர். அவர்களின் கால்நடைகளைக் கவர்ந்து சென்றனர். [1]

1931 இல் இராமநாதபுரம் மாவட்டத்தில் கள்ளர் இந்த மக்களுக்கும் பறையருக்கும் விளைவித்த அநீதிகளையும், கொடுமைகளையும் பற்றி திரு. இலக்குமிரதன், M. A., B. L., குறிப்பிடுவதாவது :-

1. (Page 121 Caste in India) J. H. Hutton.

'*1931* ஆம் ஆண்டில் கள்ளர் செய்த கட்டுப்பாடுகளும் அத்தகையன. ஆ தி த் தி ரா வி ட ர் க ள் (ப றை ய ர்), தேவேந்திர குல வேளாளர் (பள்ளர்) தங்கள் முழங்கால் களுக்குக் கீழும் இடுப்பிற்கு மேலும் ஆடைகளை உடுத்தக் கூடாது. நகைகள் அணியக் கூடாது. நீர் எடுப்பதற்கு மண் பாண்டங்களையும், ஓலைப் பெட்டியையும் உபயோகிக்க வேண்டும். படிப்பதோ, பள்ளிக்குச் செல்வதோ அவர் களுக்கு விலக்கு. குழந்தைகள் அவர்கள் (கள்ளர்) ஆடு, மாடு களை மேய்க்க வேண்டும். பண்ணைகளில் அவர்கள் அடிமை களைப் போல் உழைக்க வேண்டும். காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை வேலை. கூலி ஆண்களுக்கு *4* அணா, பெண் களுக்கு 2 அணா. சொந்தமாகவோ, வாரத்திற்கோ பயிர் செய்யக் கூடாது. எனவே சொந்த நிலங்களை விற்று விட வேண்டும். அவர்களுடைய விசேஷங்களில் மேளதாளங்கள் கூடாது. குதிரைகள், வண்டிகள், பல்லக்குகளும் அவர் களுக்கு விலக்கு. ஓலை வேய்ந்த கூரை வீடுகளில்தான் குடியிருக்க வேண்டும். நாட்டார்கள் பிரேத ஊர்வலங்களில் ஹரிஜனப் பெண்கள் அரை நிர்வாணமாக மாரடித்துக் கொண்டு செல்ல வேண்டும். (அத்தகைய காட்சி ஒன்றைப் பற்றி தெரிந்துகொள்ள வந்திருந்த ஹரிஜன சேவா சங்கத் தலைவரும், ஓய்வு பெற்ற ஹைகோர்ட்டு நீதிபதியுமான பாஷ்யமய்யங்காரும், எம். சி. ராஜாவும் பார்த்தனர்.' [1]

தாழ்த்தப்பட்ட மக்கள் (பள்ளர்) மீது மறவர் நடத்திய தாக்குதல் பற்றி திரு. இலக்குமிரதன், M.A.,B.L., குறிப்பிடுவ தாவது :-

"இராமநாதபுரம் மறவர், கள்ளருக்கும், தீண்டத் தகாதவர்களுக்கும் நடந்த கலகங்களையும் மிருகத்தனமான நடத்தைகளையும் என்னென்று சொல்வது. குடியிருப்புகளுக் குத் தீ வைத்து அவற்றில் சிசுக்களையும் எறியவில்லையா? மறவர் தங்களின் ஆதிக்கத்திற்கு ஆபத்து வந்து விட்ட தென உணர்ச்சி அக்கலகங்களுக்குக் காரண மென்பர்.

---

1. பக்கம் *218* நமது சமூகம் திரு. சோ. இலக்குமிரதன் பாரதி, M.A.,B.L.

அடிமைகள் போல் தங்கள் ஆளுகையிலிருந்த கீழ்ச்சாதி மக்கள் சமூகம் பொருளாதார அரசியல் காரியங்களில் தங்களுடன் சரி நிகர் சமானமாக வாழக் குடி உரிமை பெறுவதா என்று மறவர் பொங்கி எழுந்தனர். அவர்களிடம் செல்வாக்குள்ள முன்னேற்றக் கட்சித் தலைவருக்கு, இப் பிற்போக்கை, தடுத்து ஆள முடியாமல் போய் விட்டது. இதுவும் ஒரு திடீர் நிகழ்ச்சி அல்ல. [1]

**பாளையக்காரர் மத்தியில் பள்ளர் :**

தமிழகத்தை குறிப்பாக தென் தமிழ்நாட்டை, நாயக்கர் கி.பி. 16-ஆம் நூற்றுண்டு முதல் 18-ஆம் நூற்றுண்டு இடைப் பகுதி வரை ஆண்டபோது எழுபத்திரண்டு பகுதிகளாகப் பிரித்து, ஒவ்வொரு பகுதிக்கும் ஒவ்வொரு பாளையப்பட்டு நியமித்திருந்தனர். இவர்களில் பெரும்பாலும், செழிப்பான பகுதியில் இருந்தவர் தெலுங்கர்; தொட்டிய வகுப்பைச் சேர்ந்தவர். வறண்ட பகுதிகளில் மறவர், வன்னியர், பாளையப்பட்டுகளாக இருந்தனர். நாயக்கர் ஆட்சி ஏற்றதும் நிலங்கள் பழைய நில உடைமையாளரிடமிருந்து பிடுங்கப்பட்டு அரசு உடைமையாகி அவைகள் பாளையப்பட்டுகளுக்கும், அவரின் நெருங்கிய உறவினருக்கும், அரசியலில் செல்வாக்குள்ளவருக்கும் பகிர்ந்து கொடுக்கப்பட்டது. இக் காலத்தில் பழைய நில உடைமையாளர் விவசாயத் தொழிலாளராக மாறினர். இந்நிலை ஆங்கிலேயர் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற பின்னும் தொடர்ந்து நீடித்தது. இக்காலத்தில் பள்ளரின் வாழ்க்கை எவ்வாறு இருந்தது என்பது பற்றி நெல்லை மாவட்ட ஆங்கிலேய கலெக்டர் எஸ். ஆர். லுஷிங்டன் சென்னை வருவாயக் கழகத்துக்கு கி. பி. 1800 டிசம்பர் திங்கள் 29-ம் தேதியில் அனுப்பிய அறிக்கையில் குறிப்பிட்டிருப்பதாவது:—

'பாளையக்காரரின் நெருங்கிய உறவினரோ அல்லது அவர்களிடம் விசுவாசமாய்த் தொண்டு செய்து அவரது நல்லெண்ணத்துக்குப் பாத்திரமாய் நடந்தவர்களோ, கிராமத்தில் உயர்

---

1. பக்கம் 218 நமது சமூகம் திரு சோ. இலக்குமிரதன் பாரதி, M.A.B.L.

நிலையில் இருக்கின்றனர். அவர்களது நிலங்கள் ஐரோப்பாவில் வாழும் பண்ணை அடிமைகளையொத்த பள்ளர் என்ற தொழிலாளரிடம் பயிர் செய்ய ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. பாளையக்காரரின் நிலத்தை சாகுபடி செய்பவர் தங்களின் பாகமாக ஒரு சிறிது புஞ்சைத் தானியம் பெற்றனர். தனிப்பட்டவர் நிலத்தில் பாடுபட்டவர், விளை பொருளில் ஒரு குறிப்பிட்ட பாகத்தைப் பெற்றனர். இதனால் இடத்துக்கு இடம் சாகுபடியாளருக்கு நிலச்சுவான்தார் கொடுக்கும் ஊதிய அளவு வித்தியாசப்படுகிறது. இந்தியாவில் ஒரு காலத்திலும், விவசாயத் தொழிலாளர் தங்கள் வாழ்க்கையை நடத்துவதற்குப் போதுமான ஊதியம் பெற்றதில்லை. பண்டைக்காலத்திலும், இத் துர்ப்பாக்கிய நிலை தான் நிலவியிருந்தது. இக்காலத்திலும் அந்நிலையே நீடிக்கிறது. இதன் காரணமாய்த் தான் வறுமையில் உழலும் ஏழை மக்கள் பெரும்பாலோராக இந்த நாட்டில் இருக்கிறார்கள். பாளையக்காரர் நிலத்தில் உழைக்கும் பள்ளரின் நிலையும் அத்தகையதே. மத்திய காலத்தில் ருசியாவில் நிலவியதைப் போன்று, இம் மக்கள் பண்ணைகளுக்கு அடிமைப்படாமல் இருந்தாலும், இவர்களின் கொடிய வறுமையின் காரணமாக, தங்களுடைய உழைப்பை நீண்ட காலத்துக்கு ஈடாக வைத்துப் பண்ணைக்காரரிடம் சிறிது பணம் பெற்று, தங்கள் தேவைகளைப் பூர்த்தி பண்ண வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருக்கின்றனர். இதனால் பண்ணைக்காரர் இவர்களைத் தங்களின் உடைமைகள் போலப் பாவித்து நடத்துகின்றனர். இவர்களிடமிருந்து எந்தவிதமான வேலையும் வாங்கலாம். வேறு பண்ணைக்காரரிடம் இவர்களை ஈடு வைத்துப் பணம் பெறலாம். இவர்களை தினசரி வேலைக்கு வாடகைக்கு விட்டுப் பணம் சம்பாதிக்கலாம், விரும்பும்போது மற்றவரிடம் இவர்களை விற்றும் விடலாம். இவ்விதம் இவர்களை வாங்குகிறவர்களுக்கும், மேலே கண்ட எல்லாவிதமான சுதந்திரமும், உரிமையும் உண்டு என்றாலும், இவர்களின் நிலை ஆப்பிரிக்க நாட்டு அடிமைகளைப் போன்றதல்ல. ஏனெனில் அவர்களைப் போன்று இவர்கள் நிரந்தரமாய் அடிமைகளாய் இருப்பதில்லை. தாங்கள்

ஏற்கனவே பண்ணைக்காரரிடம் பட்ட கடனைத் திருப்பி அடைத்துவிட்டு தங்களின் அடிமைத் தளையிலிருந்து மீட்டுக் கொள்ளலாம். வேலை வாய்ப்புகள் இல்லாமையும், கடுமையான வறுமையுமே இம் மக்களை இந் நிலைக்கு ஆளாக்கியது. இந் நிலை பாளையப்பட்டுகளின் பண்ணைகளிலுள்ள பகுதிகளில் மட்டுமல்ல, இதர பகுதிகளிலும் இந்நிலையே நிலவுகிறது. பசிப் பிணியைப் போக்குவதற்குத் தகுந்த ஊதியம் இல்லாமலிருந்தும், தாங்கள் இந்த அவல நிலையிலிருந்து மீள வேண்டுமென்ற ஒரே குறிக்கோளுடன் தங்களின் அன்றாடத் தேவைகளை மிகவும் சுருக்கிக்கொண்டு தங்களுக்குக் கிடைத்த ஊதியத்தில் ஒரு பகுதியை மீத்து சேமித்து வைத்து நில உடைமையாளர் பணத்திற்கு முடைப்படும்போது தாங்கள் அவரிடம் பெற்றிருந்த தொகையைத் திருப்பி அடைத்துவிட்டு, அவரிடமிருந்து தங்களின் அடிமைத்தளைகளை முறித்துக்கொண்டு விடுதலை பெறுவர். இவ்வாறு விடுதலை பெற்ற மக்கள் சுதந்திரமான சூழ்நிலையில் தங்கள் சக்தி எல்லாவற்றையும், ஒருங்கு திரட்டி தங்களின் நிலையை உயர்த்திக்கொள்ள முடிந்த எல்லாவற்றையும் மேற்கொள்கின்றனர்.[1]

Mr. S. R. Lushington reports:-

The people who were related to the poligar or associated with the poligar either because of loyal service, held a privileged status in the Village. They entrusted the actual Cultivation of land with a caste of workers called Pallars who were the counterparts of serfs in a baronial estate in Europe. The workers who tilled the field belonging to the poligars received as Compensation a quantity of dry grain but those who tilled the field of Sherogars received a fixed share of the harvest. Ability of the employers and preference of the farm workers perhaps accounted for different practices. At no time in India did the field workers receive wages needed to live life above marginal

1. Report to the Board of Revenue made by S. R. Lushington, Collector of Tinnevely on 29th December, 1800.

Page 104 Journal of the Madras University Rise and fall of the poligars of Tamil Nadu.

subsistence. This was the phenomenon of the past and is of the present accounting for the existence of marginal man of India. Equally was the case with the pallars in poligar land. Though they were not tied to the estate, as in Medieval Russia their poverty was so great in magnitude that they were forced to sell the services for long times. In that case it is pointed out the local custom gave their master the right to extract every kind of service from them to mortgage them to another master for the money borrowed to hire them out to others for daily labours and even to transfer them to another person by whom they were held in the same bondage. Yet it cannot be concluded that the status of such a field worker was not different from that of a negro slave, for they were not subject to it compulsorily and were permitted to go free on the fulfilment of the agreed conditions. The want of employment opportunities and presence of appalling poverty accounted for the tragic situation. This was the feature not only in the poligar estates but also in the circar territories too. Despite the scanty means of subsistence, the pallars eager to obtain relief from affliction in bondage, usually contracted their wants to the mere preservation of their lives with an expectation that the accumulation of their savings might enable them to purchase their freedom at a not distant future. This would happen with no difficulty when their master consented to release them on receipt of an amount when he was in distress. On obtaining their freedom from their bondage, these workers usually mobilised all the resources to improve their lot as could be expected of from liberated people. [1]

---

1. Page 9-14 Report to the Board of Revenue made by S R. Lushing ton Collector of Tinnevely on 29th December 1800.

   Page 104 Journal of the Madras University-Rise and fall of the pohgars of Tamil Nadu.

**எதையும் தாங்கும் இதயமுள்ளவர் :**

டாக்டர் கஸ்டப் ஒப்பர்ட் மேனாட்டவர்; சென்னைப் பல்கலைக் கழகத்தில் பணியாற்றியவர். இவர் இந்திய நாட்டின் பழங்குடி மக்களைப் பற்றி ஆய்வு செய்து பாரத நாட்டின் பண்டையக்குடிகள் (The Original inhabitants of India) என்ற ஒரு அரிய நூல் எழுதி வெளியிட்டிருக்கிறார். இவர் இம்மக்களைப் பற்றி குறிப்பிட்டிருப்பதைக் கீழே காண்போம் :–

சென்னை மாகாணத்தின் தென் மாவட்டங்களில் காணப் படும் பள்ளர் சமூகம், ஊக்கமும், சுறுசுறுப்பும் உள்ள கடின உழைப்பாளிகள் மட்டுமல்ல, அவர்கள் மற்றவர்களால் கடுமையாய் வேலையும் வாங்கப்படுகின்றனர். நிலம் படைத்த வர் மேலும் மேலும் கொழுக்கவும், உல்லாச வாழ்க்கை நடத்தவும் இம்மக்கள் சலியாமல் உழைக்கிறார்கள். சமீப காலத்திற்கு முன்பு வரை, இம்மக்கள் கொத்தடிமைகளை விட மேலாக நடத்தப்பட்டதில்லை. நில உடைமையாளர் நிலம் எப்படித் தங்களுக்குச் சொந்தமோ, அதே போன்று இம் மக்களையும் தங்களின் ஒரு உடைமையாகவே பாவித்து, அடிமைகளைப் போல் நடத்தி வந்த காலம் மறைந்து வெகு நாளாகவில்லை. நீண்ட காலத் துன்புறுத்தலுக்கும், சகல விதமான அநீதிகளுக்கும், கொடுமைகளுக்கும், இம்மக்கள் ஆளானது இவர்களது விசனிக்கத்தக்க ஒரு பெரிய துர்ப் பாக்கியமே. இந்த அவலநிலையானது இறுதியில் இவர்களின் மனோதிடம், உடற்கட்டு வளர்ச்சியையும் பெரிதும் பாதித் திருக்குமென்று கூறத் தேவையில்லை. என்றாலும் இம்மக்கள் சகலவிதமான துன்பங்களையும் சகிப்புத்தன்மையுடன் தாங்கி, தங்களின் நிலையைச் சீர் செய்து கொண்டு நல்ல எதிர்கால நோக்குடன், தங்கள் நிலையை உயர்த்திக் கொள்ள வேண்டு மென்ற உணர்வுடன், இவர்கள் தங்கள் வாழ்க்கையைத் தொடங்கியிருப்பது, இம்மக்களின் இயல்பான உயர்ந்த சுபாவத்தை எடுத்துக் காட்டுகிறது. [1]

1. (Page 75 The original inhabitants of India.) Dr. G. Oppert.

Dr. G. Oppert says:-

The Pallars are an industrious hard working and hard worked land labourers found mostly in the Madras Presidency and especially in the southern districts. They toil un-intermiltantly to enrich their master the actual owners of the land soil and they were until very lately not much better than bond slaves. The time is not remote when the owners of the ground even regarded them as their property as helots belonging to the land. Continued bad treatment and exposure to all kinds of hardship have been their sad lot and it is only natural that the condition should have eventually told on their mental and physical development but it speaks on the other hand much for the superiority of their original nature that inspite of all the miseries endured they have been able to retrieve their position under a tender government and now starting again with fair prospect of improvement. [1]

**மக்கள் குடிக்கணக்கு :**

ஆங்கிலேயர் இந்த நாட்டைக் கைப்பற்றுவதற்கு முன்பு மக்கள் எண்ணிக்கை பற்றி அதற்கு முன்புள்ள அரசுகளால் புள்ளி விபரங்கள் சேகரிக்கப்படவில்லை. ஆங்கிலேயர் இந்த நாட்டின் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற பின், முதன் முதலாக 1871-இல் மக்கள் குடிக்கணக்கு எடுக்கப்பட்டது. இந்தக் கணக்கெடுப்பில் சமூகவாரியாகப் புள்ளி விவரம் தயாரிக்க வில்லை. தொழில் வாரியாக சமூகங்களை இணைத்து, தகவல்கள் சேகரித்தனர். 'வன்னியர்' விவசாயத் தொழிலாளர் என்ற தலைப்பில் கள்ளர், படையாச்சி, பள்ளி, நத்தமர், மூப்பன், உடையார், மறவர், வன்னியர், பள்ளர் முதலிய சமூகங்களை ஒருங்கிணைத்து மக்கள் எண்ணிக்கை பற்றிய புள்ளி விவரம் திரட்டப்பட்டது. இக்கணக்கெடுப்பில் மேலே கண்ட சமூகங்களுக்கு தனித்தனிப் புள்ளி விவரங்கள் சேகரிக்கவில்லை. அடுத்து 1881 இல் கணக்கெடுப்பு நடந்தது.

1. Page 75 The original inhabitants of India. Dr. G. Oppert.

இச் சமயம் பள்ளரையும், பள்ளியையும் சேர்த்துப் புள்ளி விவரங்கள் சேகரித்தனர். பின்பு 1891 ஆம் ஆண்டில் கணக்கெடுப்பு நடந்தது. இக் கணக்கெடுப்பில்தான் ஒவ்வொரு வகுப்பாரைப் பற்றியும் தனித்தனியாய்ப் புள்ளி விவரங்கள் எடுத்தனர்.

1891 ஆம் ஆண்டில் தயாரிக்கப்பட்ட குடிக் கணக்கில் இம் மக்கள் பற்றி கண்டிருக்கும் விபரங்களைக் கீழே தருகிறோம் :-

இம்மக்கள் பிரிவுகள் பின் வருமாறு: அய்யா, அம்மா, அஞ்ஞா, ஆத்தா, தேவேந்திரன், கடையன், மங்கல நாட்டான், சோழியன், தொண்டைமான். தேவேந்திரப் பள்ளன் தாங்கள் தேவேந்திரன் வழி வந்தவர் (descended from the king of gods) என்கின்றனர். கடையன் என்பது எல்லோருக்கும் கடைசியானவர். மங்கலநாட்டான், சோழியன், தொண்டைமான் என்பது குடியிருக்கும் பகுதியின் பெயர்கள். இம்மக்களுள் சாதாரணமாய் வழங்கும் பட்டப்பெயர் மூப்பன், குடும்பன் என்பவை. ஆனால் சிலர் மண்ணாடி என்ற பட்டம் மேற்கொண்டிருக்கின்றனர். குடும்பன் என்பது குறும்பன் என்பதன் திரிபாயிருக்கலாம். அதே போன்று மண்ணாடி என்பது பல்லவர் பட்டமாகிய மன்றாடியின் திரிபாயிருக்கலாம். பல்லவர் என்பது குறும்பர் மரபு. ஆதலால் பள்ளர் என்பவர் அநேகமாய் பல்லவர் வழி வந்தவராயிருக்கலாம். செங்கற்பட்டு மாவட்டத்தின் குறிப்பில் (Chengalpat Dt Manual) பள்ளர் அதிக எண்ணிக்கையில் இருப்பதாகக் கண்டிருக்கிறது. ஆனால் மக்கள் குடிக் கணக்கின்படி இம் மாவட்டத்தில் இவர்கள் எண்ணிக்கை 79 தான்.

ஒவ்வொரு பிரிவிலும் உள்ள மக்கள் எண்ணிக்கை பின்வருமாறு :-

| | | | |
|---|---|---|---|
| அய்யா | – 12991 | கடையன் | – 18830 |
| அம்மா | – 105607 | மங்கலநாட்டான் | – 15544 |
| அஞ்ஞா | – 100696 | சோழியன் | – 41015 |
| ஆத்தா | – 32391 | தொண்டைமான் | – 49231 |

| | | |
|---|---|---|
| தேவேந்திரன் - 75780 | பள்ளன் | - 213222 |
| | மூப்பன் | - 129635 |

| | | |
|---|---|---|
| திருநெல்வேலி : | அம்மா | - 53933 |
| | ஆத்தா | - 29193 |
| | அஞ்ஞா | - 57086 |
| மதுரை : | அம்மா | - 48583 |
| | அஞ்ஞா | - 40610 |
| | அய்யா | - 11824 |
| | மங்கலநாட்டான் | - 15215 |
| திருச்சி : | சோழியன் | - 22963 |
| | கடையன் | - 16528 |
| | தேவேந்திரன் | - 27073 |
| | தொண்டைமான் | - 49231 |
| தஞ்சை : | சோழியன் | - 361 |
| | தேவேந்திரன் | - 20162 |
| கோயம்புத்தூர் : | தேவேந்திரன் | - 8371 |
| | சோழியன் | - 18894 |
| சேலம் : | சோழியன் | - 6552 |
| | தேவேந்திரன் | - 18474 — 1 |

1961 ஆம் ஆண்டு குடிக்கணக்கெடுப்பில் திருநெல்வேலி மாவட்டம் கீழக்கோட்டை ஊர் பற்றிய ஆய்வு கைக்குறிப்பில், (Monograph) இம்மக்களைப் பற்றி ஒரு கதை குறிப்பிடப் பட்டிருக்கிறது :-

இங்கு உள்ள மக்கள் ஆத்தாப் பிரிவினர். இவர்கள் பல்லவ மரபினர் என்றும் பல்லவர் பாண்டியராலும், சோழராலும் அடக்கப்பட்டபோது ஒரு பிரிவினர் தென்னாட்டுக்கு ஓடி வந்த தாகவும், இங்குள்ள பள்ளர் அவர்களுக்குப் புகலிடம் கொடுத்த தாகவும், பள்ளரோடு பழக்கம் வைத்துக் கொண்டதால் இவர் களும் பள்ளர், தீண்டாதவர் ஆகப் பாவிக்கப்பட்டதாகக் கூறுவதாகவும் கண்டிருக்கிறது.

1. Volume XIII 1891 Census by H. A. Stuart (Page 247.)

இவர்கள் மத்தியில் ஒரு கிராமியப் பாட்டு வழங்கி வருகிறது:-

"வித்தும், விதையும் கொண்டுவந்தான் வீரநாட்டான்,
கொட்டும், குழவும் கொண்டுவந்தான் குழவுநாட்டான்,
சாலும், சமுத்திரமும் கொண்டுவந்தான் சமுத்திரநாட்டான்,
சுக்கும், செளுவும் கொண்டுவந்தான் சீவந்தி
நாட்டான்." 1

குறிப்பு : இப் பாட்டு ஆத்தாப் பிரிவினர் தங்களை உயர்த்திக்கொள்ளவும், மற்றப் பிரிவினரைத் தாழ்த்தவும் எழுந்தது.]

[This means that the man who brought seedlings was known as Viranattar and the man who was in-charge of irrigation known as Samudranattan and so on. The legend incidentally points out that agriculture is the traditional occupation of all the sects of the pallars except one sect known as Vodia pallars who took to weaving.] [1]

**மாவட்டக் குறிப்புகள் :**

எல்லா மாவட்டக் குறிப்புகளிலும் பொதுவாக பள்ளர் வேளாளரின் விவசாய அடிமைகள் அல்லது தொழிலாளர் என்றும், பள்ளத்தில் வேலை செய்வதால் பள்ளர் என்று பெயர் பெற்றதாகவும் இவர்கள் நஞ்சை சாகுபடியில் தேர்ச்சி பெற்றவர் என்றும், இம்மரபுப் பெண்கள் நெல்நாற்று நடுவதில் திறமைசாலிகள் என்றும், இவர்கள் சமூகத்துக்கென்று ஊர் மன்றங்கள் (பஞ்சாயத்து அமைப்புகள்) இருந்து வருவதாகவும், அவை நல்லமுறையில் செயல்பட்டு வருவதாகவும், இம்மக்கள் தங்களைத் தேவேந்திர குலத்தார், மற்ற சமூகங்களை விடத் தாங்கள் உயர்ந்த வகுப்பினர் என்று கூறுவதாகவும், ஆனால் அது ஏற்றுக்கொள்ளத் தக்கதில்லை என்றும், மற்ற சமூகத்தாரின் இல்லங்களில் இவர்கள் உணவு உண்ணுவதில்லை என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இனி ஒவ்வொரு மாவட்டக் குறிப்பிலும் இவர்கள் எவ்வாறு குறிப்பிடப்பட்டிருக்கிறார்கள் என்பதைக் கீழே காண்போம்.

---

1. Census of India Vol. IX Madras Part VI Village Survey Monograph Kilakkottai Village.

**மதுரை மாவட்டம்:** *1868*-ஆம் ஆண்டில் தயாரித்த குறிப்பில் இம் மக்களைப் பற்றிக் குறிப்பிடப்பட்டிருப்பதாவது:- 'பள்ளர் எண்ணிக்கையில் மிகவும் அதிகமாய் இருக்கிறார்கள் இவர்கள் ஒரு நிந்திக்கப்பட்ட சமூகம். எல்லோராலும் கீழ்த் தரமாக நடத்தப்படுகின்றனர். இவர்கள் நிலை பறையரை விட ஒரு சிறிது மேல் எனலாம். நிலம் படைத்த தமிழரின் புலன்களில் பயிர்த் தொழில் செய்வதே இவரது பிரதான தொழில். இவர்கள் பெயரளவில்தான் சுதந்திரமுடையவர். பொதுவாக இவர்கள் அடிமைகள் போன்று உழன்று தங்களின் பசிப் பிணியைப் போக்குவதற்காக அரை வயிற்று உணவுக் காகவும், தங்களின் நிர்வாணத்தை மறைக்க ஒரு சிறு கொடுக் குக்காகவும், நெற்றி வியர்வை நிலத்தில் விழும்படி அரும்பாடு படுகிறார்கள். வேளாளர் மற்றும் சாதிகளின் மேம்பாட்டுக் காகவே இவர்கள் பெரிதும் உழைக்கின்றனர். இவர்கள் அனேகமாய் எல்லா ஊர்களிலும் காணப்படுகிறார்கள். எல்லா விதப் பழுவானதும், சமூகத்தினரால் கீழ்த்தரமாய்க் கருதப் படும் உடலுழைப்பு வேலைகளையும் செய்கின்றனர். இவர்கள் ஊர் நத்தத்திற்குள் குடியிருக்க அனுமதிக்கப்படுவதில்லை. உயர் வகுப்பார் இவர்களைத் தீண்டுவதில்லை. அவர்களின் குடியிருப்புக்கு வெளியே தனியாய் பறையர் குடியிருப்புக்கு அருகில் குடியிருக்கிறார்கள். [குறிப்பு: இது சரியல்ல-நத்தத் தின் கீழ்புறத்தில் பொதுவாக இவர்கள் குடியிருக்கின்றனர்]. இவர்கள் குடியிருப்பை பட்சேரி, பள்ளச்சேரி என்பர். இவர்கள் பிராமணப் பெண்ணுக்கும், சூத்திரனுக்கும் பிறந்த வர் என்பது ஒரு சிலர் கூற்று. பிறிதொரு சாரார் வேளாள ருக்காகப் பாடுபடத் தேவேந்திரனால் படைக்கப்பட்டவர் என்பர். இவர்கள் தோற்றம் எவ்வாறிருந்தாலும், பண்டைக் காலத்தில் இவர்கள் வேளாளரின் அடிமைகளாகவும், அவர் கள் தட்டுமுட்டுச் சாமான்கள் போல் கருதப்பட்டு நடத்தப் பட்டனர். பாண்டிய நாட்டிற்குள் வேளாளரால் குடியேற்றப் பட்டனர் என்றும் சொல்லப்படுகிறது. [1]

---

1. Madurai Dt. Manual 1868.

**தஞ்சாவூர் மாவட்டம் :**

பள்ளர் தங்களை இந்திரனின் வழிவந்தவர் என்றும் அதற்கு அடையாளமாகத் தங்கள் பெண்கள் கழுத்தில் பூக் கொத்துக்களை அணிவதாகவும் கூறுகின்றனர். இவர்களில் நான்கு பிரிவுகள் இருக்கின்றன. வாய்க்காரன் அல்லது பணிக்கன்,தெற்குத்திப் பள்ளன், குறும்பப் பள்ளன், களத்துப் பள்ளன் என்பது அப் பிரிவுகள். இவர்களுக்கென்று சமூகப் பஞ்சாயத்து இருந்து வருகிறது. அது பலதரப்பட்ட பிணக்கு களையும், விசாரித்துத் தீர்த்து வைக்கிறது. அதன் தீர்ப்புக்கு இம் மக்கள் கட்டுப்படுகின்றனர். இவர்கள் அடுத்த சமூகத் தினரின் வீட்டில் உணவு உண்பதில்லை. [1]

[They say they are of the lineage of Indra and that their brides wear a wreath of flowers in token thereof. They have caste panchayats which are treated with great respect and decide a large variety of disputes. They do not dine with other castes.] [1]

பள்ளரும், பறையரும் தங்கள், தங்கள் சமூகந்தான் உயர்ந்ததென்று வீம்பு பாராட்டிக்கொண்டு தீராத சர்ச்சை களிலும், மோதல்களிலும், ஈடுபட்டிருக்கின்றனர். இவர்கள் பண்டு தொட்டு அடிமைகளாய் நெற்பயிர் சாகுபடிக்காகவே அமர்த்தப்பட்டிருக்கின்றனர். முற்காலத்தில் இம் மக்கள் அடிமைகளாய் நடத்தப்பட்டவர்கள் என்பதற்குச் சின்னமாக இம் மரபுப் பெண்கள் இடுப்புக்கு மேல் துணி அணிவதில்லை. [2]

**திருச்சி மாவட்டம் :**

எல்லாத் தாழ்ந்த சாதிகளையும் போல் பள்ளர் தாங்கள் மற்ற எல்லா வகுப்பினரையும்விட உயர்ந்தவர் என்கின்றனர். தஞ்சை மாவட்டத்திலுள்ள இம் மரபினர் கூறுவது போல் தாங்கள் இந்திரன் வழி வந்தவரென்றும் மற்ற எல்லா சமூகத்

1. Page 90 Tanjore Dt. Gazetteer.
2. Tanjore Dt. Manual 1883

தினரையும் விடத் தாங்கள் உயர்ந்த குலத்தவர் என்றும் கூறுகின்றனர். [1]

[Like others of the lowest castes, pallas pretend to be of the highest descent. As in Tanjore they say they are of the lineage of Indra]. [1]

இவர்களுக்குள் பள்ளக் கூத்தாடி, தேவேந்திர பிச்சைக் காரன், கடையர் அல்லது கொட்டுக்காரர், பள்ளக் குருக்கள், பள்ள நாவிதர், பள்ள வண்ணுர் இருக்கின்றனர். இங்குள்ள பெரும்பான்மையோர், தேவேந்திரர், காலாடி என இரு பிரிவு களாக இருக்கின்றனர். இவர்கள் ஒன்ருய் உணவு உண்பர். ஆனுல் இவர்களுக்குள் கொள்வினை, கொடுப்பினை இல்லை. பள்ளருக்கும், பறையருக்கும் வலங்கை, இடங்கைப் பகைமை யுணர்ச்சி அதிகமாய் இருக்கிறது.

**கோயம்புத்தூர் மாவட்டம் :**

பள்ளன் அவர்களது எசமானஞன பிராமணருக்கும், கவுண்டருக்கும் சதா உழைக்கும் அடிமை. நல்ல உடற் கட்டும், கருத்த மேனியும், குட்டையான தோற்றமுடையவர் ஊன் உணவு எடுக்கிருர்கள். உடையிலும் தோற்றத்திலும் சுத்தமில்லாமல் இருக்கிருர்கள். தங்களுக்குப் பிடித்தமான நஞ்சை நிலத்தில் சுறுசுறுப்பாய் வேலை செய்கின்றனர். இக் காலத்தில் இவர்கள் அடிமையாக நடத்தப்படுவதில்லை. [2]

**சேலம் மாவட்டம் :**

இம் மாவட்டக் குறிப்பில் கண்டிருப்பதாவது :- கொங்கு நாட்டுப் பள்ளர் சேலம், கோயம்புத்தூர், திருச்சிராப்பள்ளி மாவட்டங்களில் 24 நாடுகளாகப் பிரிந்து வாழ்கிருர்கள். சேலம் மாவட்டத்தில் பூவை, பருத்திப்பள்ளி, ஏமூர், சேலம் வடகரை, ராசிபுரம் என்ற நாடுகளில் இருக்கின்றனர். முதல் நான்கிலும் இருப்பவர் குலப்பட்டம் பலகன். ஐந்தாவது

1. Page 129 Trichy Dt. Gazetteer Fr. R. Hemingsway.
2. (Coimbatore Dt. Manual)

நாட்டில் உள்ளவர் பட்டம் பண்ணுடி. ஆருவது நாட்டில் இருப்பவர் பட்டம் மூப்பன். கொங்கு வேளாளர் (கவுண்டர்) தங்களை 24 நாட்டுக்காரர் என்று கூறுவதும், பள்ளர் 24 நாடுகளை உடையவர் என்று கூறுவதும் ஒரே மாதிரியாக இருப்பதால் இவர்கள் கூற்றில் அவர்கள் கூறுவதைப் போன்று சரித்திர தொடர்பு இருக்குமோ என்று கருத வேண்டியிருக்கிறது. [1]

[The pallars of Kongu Country are organised in no less than 24 nadus scattered over Salem, Coimbatore and Trichinopoly districts of which Puvai (1); Paruthipalli (2); Elur (3); Salem (4); Vadakarai (5); and Rasipuram (6); are in Salem district. In the first four the title Palakar is in vogue in the fifth Pannadi and in the last Muppan. It will be observed that the Nadus are identical with those of Nattans and they are probably of similar historical interest.][1]

**செங்கற்பட்டு மாவட்டம் :**

இதில் கண்டிருப்பதாவது:- இம் மாவட்டத்தில் துளுவ வேளாளர் அதிகமாய் இருக்கிருர்கள். இவர்கள் சோழர் காலத்தில் நில உடைமையாளர்களாய் இருந்தனர். பள்ளர் அவர்களின் பண்ணை ஆட்களாய்த் தொழில் செய்தனர். [2] 1891 ஆம் ஆண்டு குடிக்கணக்கின் போது, இங்கு இம் மக்கள் தொகை 79 தான் இருந்தது என்றும், ஆனல் மாவட்டக் குறிப்பில் இம் மக்கள் அதிக எண்ணிக்கையில் இருப்பதாகக் குறிப்பிடப்பட்டிருப்பதாகவும், H.A.ஸ்டுவர்ட் குறிப்பிடுகிருர். [3]

**தஞ்சை மாவட்டம் சிரீபுரம் ஊர் பற்றிய ஆய்வுக் குறிப்பு :**

தஞ்சை மாவட்டத்தில் திருவையாறு சமீபமுள்ள சிரீபுரம் என்ற ஊரின் சமூக பொருளாதார நிலை பற்றி அந்தரபெட் டெய்லி சுமார் 15 ஆண்டுகளுக்கு முன்பு பிரத்தியேகமான

1. Page 189 Salem Dt. Gazetteer 1918, F. J. Richard, ICS
2. Chengelpat Dt. Manual.
3 1891 Census Vol. XIII H. A. Stuart.

ஆய்வு ஒன்று நடத்தினர். அவரின் ஆய்வு முடிவு பின் வருமாறு:-

சிரீபுரம் ஊரில் பார்ப்பனர் குடியிருக்கும் அக்கிரஹாரம் தனியாய் இருக்கிறது; பார்ப்பனரல்லாத சாதி இந்துக்கள் குடியிருப்பு தனியாய் இருக்கிறது.

அரிசனங்களில் பறையர், பள்ளர் என்ற பிரிவினர் இருக்கின்றனர். இவர்கள் குடியிருப்புகள் தனித்தனியாய் அமைந்துள்ளன. [1]

பறையர் எக்காரணத்தை முன்னிட்டும் பள்ளர் குடியிருப்புக்குள் குடி இருப்பதில்லை என்றும், குடி இருக்க அனுமதிக்கப்படுவதில்லை என்றும், பள்ளர் ஒரே மாதிரி ஏகோபித்துக் கூறுகின்றனர். [2]

அரிசனங்களில் இங்கு பெரும்பான்மையாய் இருப்பவர் பள்ளர். இவர்கள் உணவு பழக்க வழக்கத்தாலும் இவர்கள் செய்யும் தொழிலினலும் தோட்டி, சக்கிலியர், பறையரை விட உயர்ந்தவர்களாகக் கருதப்படுகின்றனர். [3]

Mr. Andre Beteille says :-

The Pallas who Constitute the bulk of them (Harijans) are regarded by reason of their occupation and food habits to be less degraded than the parayars, Thotti and Chakkiliars. [3]

பள்ளரில் அனேக அகமணப் பிரிவுகள் இருக்கின்றன. ஆனல் சிரீபுரம் ஊரில் இருப்பவர் எல்லோரும் தேவேந்திரப் பிரிவைச் சேர்ந்தவர். [4]

அக்கிரகாரத்தைப் போல பள்ளர் குடியிருப்பு கட்டுக் கோப்பாய் அமைந்திருக்கிறது. சமூக அமைப்பில் பள்ளர்

---

1. Page 37 Caste Class and Power by Andre Beteille.
2. Page 37 & 38 Caste Class and Power Andre Beteille.
3. Page 92, 98 Caste Class and Power Andre Beteille.
4. Page 92 Caste Class and Power Andre Beteille.

அக்கிரகாரத்தில் நிலவுவதை விட ஒரு ஒன்றுபட்ட ஒருங்கிணைந்த சமூகமாய் செயல்படுகிறார்கள். உண்மையில் அக்கிரகாரத்தில் இந்த அமைப்பு பள்ளர் குடியிருப்பில் நிலவுவதைப் போல் இல்லை எனலாம்.[1]

பார்ப்பனரல்லாதார் இங்கு பெரும்பான்மையாய் இருந்தாலும், பார்ப்பனரை விடப் பலதரப்பட்ட பிரிவுடையவர்களாக இருக்கிறார்கள். இவர்களிடத்தில் 24 பெரும்பிரிவுகள் இருக்கின்றன. சில பிரிவுகளில் உட்பிரிவுகளும் இருக்கின்றன.[2]

பள்ளர் குடியிருப்பில் ஒருவருக்கொருவர் அன்னியோன்னியமாய்ப் பழகுகிறார்கள். ஒரு வீட்டிலிருந்து மற்றோர் வீட்டுக்குத் தாராளமாய் வந்து போகிறார்கள். ஒத்த மனப்பான்மையுடன் பழகுகிறார்கள். அக்கிரகாரத்தில் நிலவுவதைப் போல் வேற்றுமை இல்லை. நன்மை துன்மைகளுக்கு இவர்கள் உறவினர் அடுத்த ஊர்களிலிருந்து வந்து கலந்து கொள்கிறார்கள். வேறு எந்தப் பிரிவினரும் இங்கு வருவதில்லை. பள்ளர் தனித்தன்மையுடன் இயங்கும் ஒரு சமூகமாய் இருக்கிறார்கள். இவர்கள் தெருக்களுக்கு வேற்று நபர்கள் யாராவது வந்தால் அவர்கள் இவர்களுடைய உறவினர் அல்லது இனத்தாராகவே இருப்பர். இங்கு நிலவுவதைப் போன்ற ஒற்றுமையும், கட்டுப்பாடும் சிரீபுரத்தில் இதர வகுப்பார் குடியிருப்புகளில், அக்கிரகாரம் உள்பட நிலவக் காணோம். அக்கிரகாரத்தில் எப்போதும் பார்ப்பனரல்லாதார் வந்து போனவண்ணம் இருக்கின்றனர். பார்ப்பனர் குடியிருப்பு தனித்தியங்கும் தன்மையற்றதாய் அமைந்திருக்கிறது.[3]

Socially also the Pallacheri has a homogeneous and corporate character such as to some extent is present in the agraharam. In fact the social composition of the Paliacheri is even more homogeneous than that of the Brahmin

1. Page 37 Caste Class and Power Andre Beteille.
2. Page 80 Caste Class and Power Andre Beteille.
3. Page 37 Caste Class and Power Andre Beteille.

Street. Within the Cheri people move about freely from one house to another and form the kind of informal group which are common in agraharam. There are numerous occasions on which all the members of the Pallacheri come together as at the time of marriages or during temple festivals whereas the exclusiveness of the agraharam is some what tempered, by the continuous presence in it of non-brahmin servants farm-hands and cart-men the pallas are more or less left to themselves, in their cheri. Almost their only visitors are their caste men from other villages. There seems to be a greater measure of unity and solidarily in the Pallacheri than in any other quarter of the village.[1]

**தஞ்சை மாவட்டத்தில் பள்ளரின் தனித்தன்மை :**

அரிசனங்கள் சேரிகளில் தனியாய் குடியிருக்கிறுர்கள். அக்கிரகாரத்திற்குள் நிலவும் ஒற்றுமைத் தன்மைக்குக் குறையாத தன்மையுடையதாய் சேரிகள் இயங்குகின்றன. பார்ப்பனரல்லாதார் பண்பாட்டாலும் செயற்பாட்டாலும் பார்ப்பனரையும் அரிசனங்களையும் விடப் பலதரப்பட்ட பல்வேறு பிரிவினராய் காட்சியளிக்கின்றனர். மற்ற இரு பிரிவினரை விட இவர்களுடைய ஒட்டுத் தன்மை குறைவாய் இருக்கிறது.

பார்ப்பனரிடம் பல பிரிவுகள் இருக்கின்றன. பார்ப்பனரல்லாதாரிடமும் அவ்விதமே பலவிதப் பிரிவுகள் இருக்கின்றன. ஆனுல் அரிசனங்கள் மத்தியில் பார்ப்பனரை விட உட்பிரிவுகள் குறைந்த அளவிலேயே காணப்படுகின்றன.[2]

Andre Beteille says:-

The Harijans in their turn live in their own streets known as cheris which have a unity no less distinctive than that of Agraharam. The non-Brahmins represent a broader spectrum of cultural variations and appear to be on the whole less cohesive than the two other primary segments.

1. Page 37 Caste class and Power - Andre Beteille
2. Page 159 caste old and New - Andre Beteille.

There are segmentations among Brahmins segmentation among the non-Brahmins who follow a more complex and less clear cut pattern and the Harijans as a unit appear to be less deeply segmented than the Brahmins.[1]

அரிசனங்கள் தனித்து வாழ்வதால் அவர்கள் மத்தியில் பழங்காலத்தில் அமுலில் இருந்த சமூக மன்றங்கள், மற்ற சமூகத்தினர் மத்தியில் இருப்பதை விட பெருமளவில் நிலைத்து நிற்கக் காணலாம். தஞ்சை மாவட்டத்தில் நான் நேரில் சுற்றிப்பார்த்துத் தெரிந்துகொண்ட அளவில் பள்ளர் மத்தியில் பண்டுதொட்டு சமூக மன்றங்கள் செயல்பட்டு வருகின்றன. இம் மன்றங்களின் தலைவர்களாகிய நாட்டாண்மைக்காரர், இன்னும் தங்கள் அதிகாரத்தை சமூகத்தினர் மீது செயல் படுத்துகிறார்கள். இதைப் போன்ற சமூக அமைப்புக்கள் பார்ப்பனரல்லாதாரிடம் ஒரு காலம் நிலவியது. ஆனால் அவற்றை இன்று பார்க்க முடியவில்லை.[2]

[Perhaps because of the physical isolation ot the Harijans traditional caste organisations seem to have survived to a great extent among them than among other castes. At least in those areas of Tanjore district which I came to know directly, the traditional Kuttam of the Pallas and their leaders the Nattanmaikarans still exercise a measure of authority where as similar institutions which oncc existed among some of the Non-Brahmins are now no longer to be found. The existence of these traditional institutions often facilitates the mobilisation of support by Harijan leaders on a caste basis].[2]

**பள்ளு நூல்கள் :**

இம்மக்களைப் பற்றித் தமிழகத்தில் அனேக பள்ளு நூல்கள் தோன்றியிருக்கின்றன. 'நெல்லு வகை எண்ணினாலும் பள்ளு

1. Page 159 Caste Old and ew - Andre Beteille.
2. Page 180 Caste Old and New – Andre Beteille.

வகை எண்ண முடியாது' என்று ஒரு பழமொழி தமிழகத்தில் வழக்கில் இருக்கிறது. இப் பழமொழி பள்ளர் பிரிவைப் பற்றி யன்று; அம்மக்களைப் பற்றி எழுந்த பள்ளு நூல்களின் மிகுதியை உணர்த்தவே எழுந்ததென்பர். முதன் முதலில் கி. பி. 16 ஆம் நூற்றுண்டில் கமலை ஞானப்பிரகாசரால் திருவாரூர் தியாகராசப்பள்ளு பாடப்பட்டதென்பர் ஒரு சாரார்; ஆனால் பிறிதொரு சாரார் பள்ளு நூல்களுக்கெல்லாம் முன்னேடியாக உள்ளது 17 ஆம் நூற்றுண்டில் தோன்றிய முக்கூடல் பள்ளு என்பர். இப் பள்ளு பிரபந்தத்தைப் பின் பற்றியே அநேகமாய் பெரும்பாலான பள்ளு நூல்கள் எழுதப் பட்டிருக்கின்றன என்பர் அதன் உரையாசிரியர்.

பள்ளு நூல்கள் பள்ளன், பள்ளத்தி, உழவன், உழத்தி யாகவும், பண்ணைகளில் கொத்தடிமைகளாய் வேலை செய்வ தாகவும், பள்ளனுக்கு இரு மனைவி உண்டு என்றும், அவர்களில் மூத்தவள் முறைப்பெண் சிவமதம் என்றும், இளையவள் காதல் மனைவி திருமால் மதம் என்றும், பள்ளன் மூத்தவளை உதாசீனப்படுத்தி ஓரவஞ்சகமாய் நடத்துவ தாகவும், இளையவள் மேல் மையல் கொண்டு பண்ணை வேலைகளை ஒழுங்காய் கவனிப்பதில்லை என்றும், பொருமை யின் காரணமாய், மூத்தவள் பண்ணைக்காரனிடம் கோள் கூறுவதாகவும், பண்ணைக்காரன் பள்ளனைத் தொழுவில் கிட்டியில் மாட்டி அடைப்பதாகவும், இரு பள்ளியரும் இது பற்றிச் சண்டை பிடிப்பதாகவும், பின் இருவரும் முறையிட பண்ணைக்காரன் பள்ளனைக் கிட்டியை அவிழ்த்து விடுவிப்ப தாகவும், விடுவிக்கப்பட்டதும் பள்ளன் சுறுசுறுப்பாய்ப் பண்ணை வேலைகளைக் கவனிப்பதாகவும், உழவு வேலை நடக்கும்போது பள்ளனை மாடு முட்டித்தள்ள, அவன் கீழே சேற்றில் விழுவதாகவும், பள்ளியர் இருவரும் புலம்புவ தாகவும், பள்ளர் வயலை உழுவதாகவும், பள்ளத்தியர் தெய்வத்தை வேண்டிய பின் நடுவதாகவும், நடுகை வேளையில் இவர்கள் ஒருவருக்கொருவர் கீழ்த்தரமான சேரி மொழிகளால் கேலியாய் ஏசியும் பேசியும் நடந்து கொள்வ தாகவும், நெற்பயிர் முற்றி கதிர் அறுவடை முடிந்து, பள்ளன்

நெல்லை பங்கீடு செய்யவேண்டியவர்களுக்கெல்லாம் அளந்த பின் மீத நெல்லை பட்டரைகளில் கட்டி, பண்ணைக்காரனிடம் கணக்கு ஒப்பிப்பதாகவும் மூத்த பள்ளி, பள்ளன் தனக்கு ஓர வஞ்சகமாயும், இளையவள் மீது அவன் அதிகம் அன்பு செலுத்துவதாகக் கருதி, அவள் மீது பொறாமை காரணமாக அவளோடு பூசல் கொள்ள, ஒருவருக்கொருவர் வசைச் சொல் பரிமாறிக் கொள்வதாகவும், பிறகு அவர்களாகவே தவறை உணர்ந்து சாந்தமாகி இருவரும் ஒற்றுமைப்பட்டு அமைதியாய் வாழ்க்கை நடத்துவதாகவும் எல்லாப் பள்ளு நூல்களும் கூறு கின்றன. மேலும் பள்ளு நூல்களில் பள்ளர்கள் மழை வேண்டித் தெய்வத்தை வேண்டுவதையும், மேகக் குறிகளை யும், மின்னலையும், காற்று அடிக்கும் திசைகளையும் அறிந்து மழை வரும் நேரத்தைக் கூறும் திறனும், பயிர் நடுமுன்னும், அறுவடை நடக்குமுன்னும் தெய்வத்தை வேண்டுவதையும், இவர்கள் மாட்டுவகை, நெல்லு வகை கூறும் திறனும் பற்றி எல்லாப் பள்ளு நூல்களும் குறிப்பிடுகின்றன. நாட்டு வளம், பள்ளரின் குலப் பெருமை, பண்ணையாரின் பெருமை, மற்றும் பள்ளியர் இருவரும் வெவ்வேறான மதத்தைச் சார்ந்தவராத லால் ஒருவருக்கொருவர் மற்றவர் தெய்வமாகிய சிவன், திருமால் இவர்களைப்பற்றி பழித்தும், அவர்களின் ஒழுக்கக் குறைவு பற்றி மாறி மாறிச் சாடுவதும், பொதுவாக எல்லாப் பள்ளு நூல்களிலும் குறிப்பிடப்படுகின்றன ஏற்கனவே குறிப் பிட்டது போல் ஏகப்பட்ட பள்ளு நூல்கள் பாடப்பட்டிருக் கின்றன. அவைகளில் சில வெளிவந்திருக்கின்றன. சில மறைந்துவிட்டன. இதுவரை வெளிவந்திருக்கும் பள்ளு நூல்களாவன :—

முக்கூடல் பள்ளு (1) திருவாரூர்ப் பள்ளு (2) குருகூர்ப் பள்ளு (3) திருமலைப் பள்ளு (4) சிவசயிலப் பள்ளு (5) வைசியப்பள்ளு (6) வடகரைப் பள்ளு (7) உரிமை நகர்ப் பள்ளு (8) சீர்காழிப் பள்ளு (9) தில்லைப் பள்ளு (10) கண்ணுடை அம்மன் பள்ளு (11) கதிரைமலைப் பள்ளு (12) பருளை விநாயகர் பள்ளு (13) தண்டிகைக் கனகராயன்

பள்ளு (14) சேற்றூர்ப் பள்ளு (15) மாந்தைப் பள்ளு (16) கூடற் பள்ளு (17) திருவிடைமருதூர்ப் பள்ளு (18) தஞ்சைப் பள்ளு (19) தென்காசிப் பள்ளு (20) கொடுமளூர்ப் பள்ளு (21) இராசைப் பள்ளு (22) புதுவைப் பள்ளு (23) முக்கூட்டுப் பள்ளு (24) மன்னூர் மோகனப் பள்ளு (25) செண்பகராமன் பள்ளு (26) வையாபுரிப் பள்ளு (27) திருச்செந்தில் பள்ளு (28) ஈரோட்டுப் பள்ளு (29) செங்கோட்டுப் பள்ளு (30) திருநீலகண்டன் பள்ளு (31) வைத்தியப் பள்ளு (32) சேமூர்ப் பள்ளு (33) முதலியன.

பள்ளுப் பிரபந்தங்கள் பள்ளிச் சிறுர்களுக்கு குற்ருலக் குறவஞ்சியுடன் கல்விக்கூடங்களில் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. பள்ளு நாடகங்களும் எழுதப்பட்டு ஊர்களில் கோயில் விழாக்காலங்களில் நடிக்கப்பட்டு வந்திருப்பதாகத் தெரிகிறது. [1]

திருவாரூரில் ஆண்டுதோறும் ஆவணித் திங்களில் பவித்திரோற்சவம் என்ற திருவிழாவில் உருத்திர கணிகையரைக் கொண்டு பரதநாட்டியத்துடன் பள்ளு நாடகமாக நடிக்கப்பட்டு வந்ததாக திருவாரூர் பள்ளுக்கு உரை செய்த பதிப்பாசிரியர் இ. சோமசுந்தர தேசிகர் கூறுகிருர்.

திரு. மு. அருணுசலம் பள்ளு என்ற சாதியையும் அவர்கள் செய்யும் உழவுத் தொழிலையும் குறித்து இரண்டு வழக்காறுகள் உண்டு என்று அவர் உரை செய்த முக்கூடற்பள்ளில் குறிப்பிட்டிருக்கிருர். அவர் குறிப்பிட்டிருப்பதாவது:—

"கச்சியப்ப முனிவர் பாடியது பேரூர்ப் புராணம். அதில் பள்ளுப் படலம் இருக்கிறது. மற்ற வரலாறு திருவரங்கர் பெரியகோவிலைக் குறிக்கிறது. சுமார் 600 ஆண்டுகளுக்கு முன் திருவரங்கநாதனுக்குத் தொண்டு செய்த பக்தரான வரம்

1. பக்கம் 8 முக்கூடற்பள்ளு சேதுரகுநாதன் உரை.

தரும் பெருமாளரையர் என்பவருடைய சரிதம் இங்கு அரிதற் குரியது. உத்தம பக்தரான இவ்வரையர் ஒரு சமயம் ஸ்ரீரெங்க நாதனுக்கு உரிமை பூண்டொழுகும் பறைச் சேரியில் போய், அங்கு நடைபெற்ற பள்ளுப் பாட்டு, இசை ஆட்டம் இவற்றில் தன் மனத்தைப் பறிகொடுத்து அங்கேயே தங்கிவிட்டார். பள்ளும், பறையும், இசையுங் கேட்டருளி என்று கோயி லொழுகு இதைக் குறிப்பிடுகிறது. அரையர் ஒழுக்கத்தில் இறந்து விட்டாரென்று மற்றைக் கோயிலார் இவரை விலக்கி வைத்தனர்.

திருஊறல் விழாவில் பள்ளு உற்சவம் உண்டு. அரைய ரொருவர் தாளத்துக்கேற்ப பள்ளு நடனமாடிக் கொண்டு வருகிறார். ஆனால் எப்படியோ பள்ளுப் பாட்டுப் பாடும் வழக்கம் மாத்திரம் நின்று விட்டது. பாட்டுக்கேற்ற தாளமும் அபிநயமும் உள்ளன.''[1]

பேரூர் தலபுராணத்தில் பள்ளுப் படலம் பற்றி கண்டிருப்ப தாவது :—

''சுந்தரமூர்த்தி நாயனார் வருமுன்னரே உயர்திணைப் பொருளும், அஃறிணைப் பொருளும் தாமேயென்று வேதங்கள் எடுத்தோதுவதற்கேற்ப முன்பு வேதியராய்த் தம்மைக் காட்டிப் பயனைக் கொடுத்த சிவபெருமான் இழிந்தவராகக் கா[illegible]த் திருவுளம் கொண்டு பள்ளனாகித் திருவிளையாட்டினால் வயலிற் சென்றனர். உமாதேவியாரும் பள்ளியாகி கழனியிலே தொழில் செய்யத் தொடங்கினார். விநாயகக் கடவுளும், முருகக் கடவுளும் பள்ளச் சிறாராய் வயலின் கண் விளையாடி-னர். அரபிரமேந்திரவாதி தேவர்கள் நுகமும், கலப்பையும், மேழியும், கொழுவும், வாரும், கயிறும், கோலும், கடாவும், வித்தும், நாறும் ஆகிய எல்லாமாக வந்தார்கள். சிவகண நாதர்கள் ஏவல் செய்கின்ற பள்ளர்களாகவும், சிவபிரானாகிய பட்டிப்பள்ளர் ஏவல் வழி உழுகின்றவரும், நீர்ப்பாய்ச்சுகின்ற வரும், வரப்பின் அருகு சீவுகின்றவரும், பரம்படிக்கின்றவரும்,

---

1 முக்கூடல் பள்ளு மு. அருணாசலம் உரை.

நாற்று நடுகின்றவரும், விதைக்கின்றவரும் ஆனார்கள். இலக்குமி, சரசுவதி, இந்திராணி முதலானோர் பள்ளிகளாய் உமாதேவியாகிய பச்சைப் பள்ளியோடு நாற்று நட்டார்கள். இங்ஙனம் இவர்கள் கழனியில் தொழில் செய்து கொண்டிருந்த போது ஆலயத்தினுள் சென்ற சுந்தரமூர்த்தி நாயனார் சிவபிரானை அங்கே தரிசிக்கப்பெறாமல் இடபதேவரை வினவினார்.” 1

மேலே கண்ட சம்பவம் பற்றி திரு. C. M. இராமச்சந்திரன் செட்டியார், B. A. B. L, எழுதியதாவது,

“அக்காலத்தில் இரணவிக்கிரமன் தலைக்காட்டில் அரசாண்டான். அமோகவர்ஷன் சாளுக்கிய தேசத்திலும், வரகுணன் மதுரையிலும் ஆண்டார்கள். தேசம் அமைதி பெற்றுக் கல்வியும், சமயப் பிரச்சாரமும் பெருகியிருந்தது. அப்போதுதான் சுந்தரமூர்த்தி சுவாமிகள் கொங்கு நாட்டிற்கு மும்முறை விசயம் செய்து பேரூர்க்கும் வந்தார். அதை அவரே தம் கோயில் திருப்பதிகத்தில் ‘மீ கொங்கிலணி காஞ்சியாய்ப் பேரூர் பெருமானைப் புலியூர்ச்சிற்றம்பலத்தே பெற்றாம் அன்றே’ என்று வியந்துள்ளார். அந்தச் செய்தியைக் குறித்து சரித்திர உண்மைகள் கூறும் பெரியபுராணமும் பேரூர்ப் புராணம் முதலிய தலப்புராணங்களும் கூறுகின்றன. என்சிறு நூலாகிய ‘கொங்கு நாடும் சுந்தரரும்’ என்ற நூலில் நான் இதை விவரமாகக் கூறியுள்ளேன். இக் காலம் கி. பி. 850 ஆகும். அக்காலத்தில் பின்னாளில் ஒதுக்கப்பட்ட வகுப்பார்களாகிய பள்ளர்களும் கோவில் விழாக்களில் கலந்து கொண்டிருப்பார்கள் என்ற கருத்தைப் பள்ளுப் படலத் திருவிளையாடல் என்ற ஐதீகத்திலிருந்து நாம் ஊகிக்க முடியும். இந்த நாளிலும் அத்திருவிழாவைக் கொண்டாடுவதற்காக அமைந்த நாற்று நடவு உற்சவத்தில் அவர்கள் கலந்து கொள்வது போல வேறு தலங்களிலே நாம் பார்க்க முடியாது.

---

1. திருப்பேரூர்ப் புராண வசனச் சுருக்கம் பக்கம் 21.

வகுப்பு உரிமைகள் பல காலங்களில் பலவாறு மாறுபடுதல் இயல்பு என்பதைத் தென்னிந்திய சரித்திர ஆராய்ச்சியினால் நாம் தெரியலாம்.'[1]

சிவபிரான் பள்ளனைதைப் பற்றிப் பேரூர் புராணத்தில் ஒரு செய்யுளும் பாடப்பட்டிருக்கிறது.

''மறையவனரசன் செட்டி தன்ருனத வயங்கு
நூற் சூத்திரன் புவனம்
பறைதரு நல்ல சங்கரன் வேடன் பணிசிவன் விளக்கு
முக்கணக்கன்;
அறைசெயம்பட்டன் அகமது புறத்தே காளி யாட்டாவ
மாரிடையன்
பறையனு முன்னரான நீ யின்று பள்ளனுமை
தெரிந்தென்யான்'' (பள்ளுப்படலம் 35)[2]

**கல்வெட்டுகளில் பள்ளர் :**

1. திருச்சிராப்பள்ளி மாவட்டம் குடுமியாமலை சிகாநாத சுவாமி கோவிலில் உள்ள சுந்தரபாண்டியன் ஆட்சியின் 13 ஆம் ஆண்டிற்குரிய (கி. பி. 1228) கல்வெட்டில் பள்ளர், பறையர், பிராமணர் வெ......... செட்டிகள் என்று கண்டிருக்கிறது.[3]

2. கி. பி. 1339 ஆம் ஆண்டுக்குரிய சரியான ஹிஜி 771 இராமநாதபுரம் மாவட்டம் தேவகோட்டைக்கு ஒன்றரை மைல் தூரத்திலுள்ள கந்தலுதேவி ஜமீன்தாரின் இருப்பிடத்திற்கு முன்பாக உள்ள ஒரு மரத்தின் கீழ் நட்டிருந்த கல்வெட்டில் பாணர், புலையர், பள்ளர், பறையர் மற்றும் உள்ள கீழ் சாதி களும்' என்று குறிப்பிட்டிருக்கிறது.[4]

---

1. பக்கம் 59 திருப்பேரூரின் பண்டைய வரலாறு
2. திருப்பேரூர் புராணம் வசனச் சுருக்கம் பக்கம் XIII
3. பாண்டியன் பெருமாட்சி எம். சோமசுந்தரம், B.A.B.L.,
4. Page 227 South India and Her Mohammadan Invaders S. K. Krishnaswamy Iyengar. I P S 194

3. திருச்சிராப்பள்ளி மாவட்டம் முசிறித் தாலுகா அரசலூர் தாயுமானசாமி கோயிலிலுள்ள கல்வெட்டில் கண்டிருப்பதாவது :-

'சவுமிய வருஷம் ஆவணி மாதம் சூத்திரத் தெருவுக்கும் தண்ணித் துரை வரைக்கும் வாய்க்காலுக்குக் கீழ்புறம் நந்தவனதிடலும் கோவில் பரிசனங்கள் குடியிருக்கிறதற்கு நத்தம் சமுதாயத்தில் பனிரெண்டில் ஒரு பங்கும், பள்ளத் தெருவிலே பன்னிரெண்டில் ஒரு பங்கும், இந்தப்படிக்கு சமுதாயத்தில் பிறிச்சு கோவிலுக்கு நஞ்சை நிலம் உழுகிறதுக்கு பள்ளமாணிக்க மூப்பன் தம்பிருசலிங்கம், பெரியழகன் மகன் சண்முகம், மூத்திவீரன்மகன் கறுப்பன், கறுமனகரத்தான் மகன் யிந்தநூலு பள்ளும்.'[1]

4 புதுக்கோட்டை திருமயம் தாலுகா காரையூர் திருமாங்கனீஸ்வரர் கோயிலில் காணப்படும் கல்வெட்டில் 'பாதுகாவலுக்கு இடையன் நெய்யும், வலையன் முசலும், பள்ளன் கோழியும் ஆக இந்த சுதந்தரம்'[2] என்று கண்டிருக் கிறது. (இக் கல்வெட்டு வாணாதிராயர் குறு நில மன்னரா யிருந்த காலத்தியது.)

5. திருமயம் தாலுகா மேலத்தானையம் மாரியம்மன் கோயிலுக்கு முன்பாக இருக்கும் ஓர் கல் தூணின் நாலு பக்கங் களிலுமுள்ள சாசனம் :-

'வீரசின்னு நாயக்கரவர்கள் பள்ளருக்குச்சில்லா சந்தனங் கட்டளையிட்டபடி பள்ளர், பறையர் இருவகைப் பேருக் கும் வெள்ளானை, வாழை, கரும்பு உண்டில்லையென்று விபகாரம் நடக்குமிடத்தில், பள்ளர் இந்த விருது தங்க ளுக்கே யல்லாமல் பறையருக்கு இல்லையென்று நெய் யிலேக் கைபோடுமிடத்தில் பள்ளருக்கு கை சு ... மல் வெற்றியான படியினாலே இந்தப் படிக்குச் சந்திராதித்த வரைக்கும் வெள்ளானை வாழை கரும்பு ... ன ... துக் கொண்டு சுகமேயிருக்கவும்.'[3]

1. தென்னிந்திய கோயிற்சாசனங்கள் பாகம் II எண் 796 D 2985
2. I. P. S. 843.
3. I. P. S. 929.

(6) திருமயம் தாலுகா தேக்காட்டூர் அகஸ்தீஸ்வரர் கோயிலுள்ள கல்வெட்டில் கண்டிருப்பதாவது:-

"ஷெயூர் பள்ளருக்கும் பறையற்கும்.........
பள்ளற்கு தவிலும் முரசும் செமக்கலமும் நன்மை
தின்மை பருவினைக்குங் கொட்டி போக் கடவராகவும்
பறையர்... ...கா.........கடவ
சந்திராதித்தவரை செல்லவும்"[1]

(7) குளத்தூர் தாலுகா திருவிளான்குடியில் இடிந்து கிடக்கும் சிவன் கோயிலிலுள்ள சாஸனத்தில் பொறிக்கப் பட்டிருப்பதாவது:-

1. "..........கோ.......பன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் குலசேகர தேவர்கு
2. குயாண்டு ஙயஙவது புரட்டாசி இருபத்தொனரு் தியதி நாள்
   (கோனுடான கடலடை)
3. யாதிலங்கை கொண்ட சோழவள நாட்டு உறத்தூர் கூற்றத்து (.........யம்)
4. மசேரிச் சருப்பதிமங்கலத்து ......னுட் ......புறஞ் (சேரியில்) பள்ளற்கும் (பிடா) கைகளில்
5. இருக்கும் பள்ளற்கும் நாங்கள் பிரம .....ன குடுத்த பரிசாவது முன்னுல் இத் தேவற்கு பதினென்ருவது
6. வது நாளிலே கற்றளெரிக்குளமும் பெராம......குளமும் இரங்கலாக உடைக்கயில் இவை "[2]

(8) ஆத்து அகஸ்தீஸ்வரம் கோயில் கல்வெட்டு. விசய நகர் கிருஷ்ண தேவ மகாராசா ஆட்சி காலத்தில் (பரப்ப வருஷம்) பள்ளர் தங்களின் சமூக சதியாலோசனை கூட்ட நடவடிக்கையிலிருந்து அத்தி ஆளப்பிறந்தான் கிராமங்களை விலக்கி வைத்தார்கள் என்று குறிக்கிறது.[3]

---

1. I. P. S. 956.
2. I. P. S. 311.
3. Inscription A. R. E. 300/1912

(9) திருநெல்வேலி மாவட்டம், சங்கரநயினூர் கோவில் தாலுகா கரிவலம் வந்த நல்லூர் [சாசனம் 863 D 3226] தென்னிந்திய கோவில் கல்வெட்டுகள் பாகம் IIல் No 432/1914ல் உள்ள சாசனமாவது:- தேவேந்திர குடும்பன் பாலாத்துப்படி முன் எடுத்த துவாபார யுகத்தில் உக்கிரப் பெருவழுதியும், சோழனும், சேரனும் உலகம் வறுமைப்பட்டு இருக்கிற காலத்தில் தேவேந்திரன் பக்கல் மழை கேட்கப் போனவிடத்தில், பகவானும் மனமகிழ்ந்து இரும் என்ன சேரனும், சோழனும் வணங்கி இருக்கப் பாண்டியன் தேவேந் திரனோடே கூடி இருக்க தேவேந்திரனும் வரிசை செய்தார் போலே கவடு நினைக்க, பாண்டியனும் கோபித்து எழுந்து, தேவ கன்னிகைகள் மக்கள், நாலு குடும்பத்தாரைக் கைப் பிடியாகப் பிடித்துக்கொண்டு, செந்நெல் விதையும், கன்னல் விதையும், கதலி விதையும், பனை விதையும் முதலான பல வித்தும், ஒரு ரிஷபம் ஒரு சாவியும் கொண்டு பூமியில் வந்தான். நால்வரில் முதல்வனுக்கு தேவேந்திர குடும்பப் பட்டமும் கட்டி, மூன்று பேருக்கும் வாரியன், அக்கசாலை (இளந்தாரியன்) என்ற வரிசைப் பட்டமும் கட்டி, ஒரு நாளையில் பன்னீராயிரம் கிணறு வெட்டி வேளாண்மை கண்ட படியினாலே ராஜாவும் மனமகிழ்ந்து வெள்ளை யானையும், வெள்ள வட்டக்குடையும், கெராடியும், பகல்பந்தம், பாவாடை, இரட்டைச் சிலம்பும், இரட்டைக் கொடுக்கும், நன்மைக்குப் பதினாற் பந்தற்காலும், துன்மைக்கு இரண்டுதேரும், பஞ்சவன் விருதும், பதினெட்டு மேளமும் கட்டளையிட்டு நடக்கிற காலத்தில் பறையர் தங்களுக்கு இந்த வரிசை உண்டென்று நடப்பிவித்தார்கள். ஆனபடியினாலே, ஐந்து சாதிக்கும், பிள்ளை என வேந்தலிலிருக்கும் அநுமக்கொடி அடைஞ் சானும் (வாகைக்குளம்) குட்டிக் குடும்பனும், அல்ல கர்த்தா குடும்பனும் கூட்டிக்கொண்டு சமூகம் ஏறி விண்ணப்பித்துக் கொள்ள ஆதிபூர்வ ராஜாக்கள் கொடுத்த பட்டயம் பார்த்துப் பறையர்களுக்கு உண்டான வரிசை நன்மைக்கு மூன்று கால் பந்தலும், இரு சிலம்பும் (ஸ்ரீவில்லிபுத்தூர் கல்வெட்டுபடி ஒரு சிலம்பும் மட்டுமே காணப்படுகிறது). ஒரு கொடுக்கும் ஒத்த

மாராப்பும், ஒரு பந்தமும், கீழ்ப் பாவாடையும், மஞ்சியில் தண்டியக் கொம்பில்லாத வீடும், துன்மைக்குக் கட்டணமும் பட்டையப்படிக்குக் கட்டளையிட்டோம். குடும்பிகளுக்குக் குதிரைக் குடையும் யிட்டு இந்த இரண்டு கோட்டை விதைப் பாடும் கொடுத்து இந்த வரிசைப் பிரகாரம் கட்டளை இடுவித்தோம். இதற்கு அதிகம் பண்ணினவர்கள் கங்கைக் கரையில் பசுவைக் கொன்ற தோஷத்திலே போவார் களாகவும். [1]

(10) சீவிலிபுத்தூர் பறையர்கள் அந்த ஊரிலுள்ள குடும்பர்கள் அனுபவித்த வெள்ளை யானை, வெண் குடை, கொராடி, பகற் பந்தம், பாவாடை இரு சிலம்பு இரு கொடுக்கு 16 கால் பந்தல், துன்மைக்கு மூன்று தேர், 18 மேளம் உபயோகிக்க கோரினதாகவும் அவ்வூர் குடும்பர்கள் ஆட்சேபித்து அரசனிடம் முறையிட, அரசன் பழைய செப்புப் பட்டயம் பார்த்து, பறையர் மூன்று கால் பந்தல், ஒரு கொடுக்கு, மேற்தளமில்லாத வீடு, ஒரு பந்தம் உபயோ கிக்கலாமாறும், துன்மைக்குப் பணம் பெறலாம் என்று குறிப்பிட்டிருக்கிறது. [2]

**குறிப்பு:-** இக் கல்வெட்டு கி. பி. 1665 ஆம் ஆண்டைச் சேர்ந்ததென்று தெரிகிறது.

(11) பாண்டிய நாட்டில் ஒரு ஏரியைக் காத்த பெரு மகனுக்கு நடுகல் நாட்டி அவன் மகனுக்கு உதிரப்பட்டி மானியம் கொடுத்தது பற்றி அடியிற்கண்ட முதுகுடி கல் வெட்டில் கண்டிருப்பதாவது:-

குலசேகர தேவர்க்கு யாண்டு 34 வதுக் கருங்குளத்திர்க்கு ஒரு பழி உண்டான படியாலே இப் பழிக்கு இவ்வூர் குடும்பரில் பெரிய தேவப்பள்ளன் அணை வெட்டிப் போகையாலே இவன்

1. சாசனம் எண் 863 D. 3226 தெ. இ. கோ. கல்வெட்டுகள் பாகம் II எண். 432/1914.
2. A. R. E. 588/1926 Part II Para 19.

மகனுக்கு ஊரார்களிட்ட உதிரப்பட்டி குடுத்த படிதபானவ நிலம் அரை மா அன்ன நிலம் சந்திராத்திவல் மானி போவிப்பார்.........
கா.....................'[1]

இம் மக்களைப் பற்றி மேலே கண்ட கல்வெட்டுக்களைத் தவிர, இன்னும் சில கல்வெட்டுகள் புதுக்கோட்டை இராச்சிய கல்வெட்டு சாசனங்களில் காணப்படுகின்றன. அவைகள் பள்ளருக்கும், பறையருக்கும் ஏற்பட்ட உரிமைகளைப் பற்றி எழுந்த சர்ச்சைகளைப் பற்றியது.



1. கொங்கு திங்கள் இதழ் செப்டம்பர் 1974.

# பள்ளர் யார்?

ஏற்கனவே பள்ளர் சமூகம் பற்றி வரலாற்ருசிரியர், மேனுட்டு சமயப் பிரச்சாரகர், ஆய்வாளர் முதலானவர் வெளி யிட்டிருக்கும் குறிப்புக்களையும், பள்ளேசல்களில் கண்ட குறிப்பு கள், கல்வெட்டுச் சான்றுகள் முதலானவற்றைத் தொகுத்துக் கூறியிருப்பதை வாசகர் அறிவர். ஈண்டு பள்ளர் யார் என்பது பற்றி, நாட்டில் நிலவும் கட்டுக் கதைகள். உள்நாட்டு வெளி நாட்டு அறிஞர், மற்றும் தமிழ்ப் புலவர்கள் வெளியிட்டிருக்கும் கருத்துக்கள் என்னவென்பதைக் கீழே காண்போம்.

## I. கட்டுக் கதை :

பள்ளர் தங்களைத் தேவேந்திர குலத்தார், இந்திரன் வழித் தோன்றல்கள் எனக் கூறுவர். நாட்டில் வழங்கிவரும் கட்டுக் கதையின்படி, தேவேந்திரனுடைய வியர்வையானது நீர் நிலையிலுள்ள தாமரையில் விழ, அது ஒரு மனு உரு வெடுத்து, குழந்தையாகப் பிறந்தது. இக் குழந்தையே பள்ளரின் குல முதல்வன். [1]

Mr. F. J. Richard says :-

'The Pallas call themselves Devendra Kulathar or descendants of Indra - the Lord of Devas. According to a legend, the sweat of Devendra fell on a plant growing in the water from which arose a child who became the ancestor of Pallas.' [1]

2. ஒரு சாரார், பள்ளர் வேளாளரினிமித்தம் உழைப் பதற்காகத் தேவேந்திரனுல் உண்டாக்கப்பட்டனர் என்பர். அவர்களே தங்களை இந்திரன் வழி வந்தவர் என்பர். [2]

---

1. Page 265 to 272 quarterly Journal of Mythe Society Vol. X F. J. Richard.

2. Page 125 The Madurai Dt. Gazetteer.

The Madurai Dt. Gazetteer says :-

'Others say that the Pallas were created by Devendra for the purpose of labouring on behalf of Vellalas. They themselves trace their lineage to Indra.' [1]

II. பள்ளர் கலப்பினம் :

சூத்திரருக்கும் பிராமணப் பெண்டிற்கும் பிறந்தவரின் வழித்தோன்றல்களே இன்று பள்ளர் என வழங்குபவர். [2]

III பள்ளர் பல்லவ மரபினர் :

பள்ளரின் பட்டப்பெயர் குடும்பன், மண்ணடி என்பவை முறையே, பல்லவரின் பட்டப் பெயர்களாகிய குறும்பன், மன்றுடியின் திரிபு, பள்ளர் அனேகமாய், பல்லவ மரபினராய் இருக்கலாம். [3]

Mr. H. A. Stuart says :-

'The common title (of Pallan) is Muppan and Kudumban. But some style themselves as Mannadi. Kudumban is Probably a form of Kurumban and Mannadi is a corruption of Manradi a title borne by Pallavas (Kurumba people). It thus seems not improbable that the Pallas are the old representatives of the old Pallavas or Kurumbas.' [3]

2. கி. பி. 9, 10 ஆம் நூற்றுண்டுகளில் தொண்டை மண்டலம் சோழரால் வெல்லப்பட்டபோது, பல்லவர் படையைச் சேர்ந்த போர் வீரரில், நகரில் தங்கியவர் பள்ளி, படையாட்சி எனவும், ஊர்ப்புறங்களில் தங்கியவர் பள்ளர் எனவும் வழங்கலாயினர். [4]

---

1. Page 125 Madurai Dt. Gazetteer.
2. II Page 473 Castes and Tribes of Southern India Vol. V E. Thurston.
3. Page 247 Madras Census Report 1891 Vol. XIII H. A. Stuart.
3. Page 486 Castes and Tribes of Southern India E. Thurston.
4. Page 29 Madurai Dt. Manual J. H. Nelson.

IV. பண்டைக் காலத்தில் பள்ளர் வேளாளரின் அடிமை களாய் இருந்தவர்; அவர் பின்னவரால் பாண்டிய மண்டலத்தில் குடியேற்றப்பட்டனர் என்பது பெரும்பாலும் உண்மை என்றே படுகிறது. [1]

Mr. E. Thurston says:-

"The pallas are said to have sprung from the intercourse of a Sudra and a Brahmin Woman. Others say Devendra created them for the purpose of labouring on behalf of Vellalas. Whatever may have been their origin, it seems to be tolerably certain, that in the ancient times, they were the slaves of the Vellalas and regarded by them merely as chattels and that they were brought by the Vellalas into the Pandya Mandala" [1]

V. பள்ளர் தொழில் வகுப்பினர் :

1. திரு. S. பூரணலிங்கம் பிள்ளை கூறுவதாவது :-

தொல்காப்பியத்தின்படி, தமிழகத்தின் தலை மக்கள் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்று பிரிந்திருந்தனர். குறிஞ்சி நில மக்கள் குறவராகவும், முல்லை நில மக்கள் ஆயர், இடையராகவும், மருத நில மக்கள் உழவராகவும், பாலை நில மக்கள் வேடர், மறவர், எயினராகவும் நெய்தல் நில மக்கள் பரதவராகவும் வழங்கப்பட்டனர். தொழில் மக்கள் புரோகிதர், பள்ளர், பறையர், சாணர், சக்கிலியர், புலையர் ஆவர். [2]

2. திரு. ந.சி. கந்தையா பிள்ளை கூறுவதாவது :—

பள்ளர் உழவு தொழில் செய்பவர்; முற்காலத்தில் வெள்ளாளருக்கு அடிமைகளாய் இருந்தார்கள். [3]

---

1. Page 473 Castes and Tribes of Southern India E. Thurston.
2. Page 34 Tamil India. Thiru S. Puranalingam Pillai, B. A. L. T.,
3. தென்னிந்திய குலங்களும், குடிகளும்: ந. சி. கந்தையா பிள்ளை.

3. தமிழக அரசு தொல் பொருள் இலாகா இயக்குநர் டாக்டர் R. நாகசாமி கூறுவதாவது :— உழவர் பள்ளர், பறையரோடு கழனியில் இறங்கிப் பணிபுரிபவர். [1]

[குறிப்பு :— இவர் உழவர் இக்கால வேளாளர், பள்ளர் அவரின் பண்ணை அடிமை என்ற கருத்துப்பட இவ்வாறு கூறுகிறார்.]

4. தஞ்சை மாவட்டம் பூண்டி புட்பம் கல்லூரி உதவித் தமிழ்ப் பேராசிரியர் திரு. அ. தட்சிணாமூர்த்தி கூறுவதாவது:-

'மருதநிலம் ஆறுகள் பாய்ந்த வளமார்ந்த பகுதியாகும். உழவர்களில் உழுதுண்ணும் வேளாளரும், உழுவித்துண்ணும் வேளாளரும் என இரு வகையினர் உண்டு. பின்னவர் பெரு-நிலக்கிழாராவர். பள்ளங்களில் (கழனி) வேலை செய்த தொழிலாளர் பள்ளர் எனப்பட்டனர். நடுநர், உழத்தியர், கடைசியர் எனப் பெண்டிர் குறிக்கப்படுவர். மருத நிலமே வளம் மிகுந்த பகுதி. இங்கே இருந்த மக்கள் நாகரிகத்தில் அனைவரினும் மேம்பட்டவர். [2]

5. J. H. ஹட்டன் கூறுவதாவது :—

பள்ளர் தமிழகத்திலுள்ள தீண்டப்படாத வேளாண்மைத் தொழிலாளர். [3]

J. H. Hutton says :—

'Pallan an exterior Tamil caste of Agricultural Labour.'

## VI. பள்ளர் என்ற சொல்லின் பொருளாக்கம்.

மனு சாதிகளை ஏற்படுத்தும் காலத்தில், பள்ளமாகிய நஞ்சை நிலப் பகுதியில் தொழில் செய்து வந்தவர், பள்ளர் என்று பெயர் பெற்றதாகக் கூறப்படுகிறது. இப்பெயர் நஞ்சை சாகுபடியுடன் தொடர்புடையது என்றும், பள்ளர் நஞ்சை

---

1. பக்கம் 173 யாவரும் கேளிர் : டாக்டர் R. நாகசாமி.
2. பக்கம் 24 தமிழர் நாகரிகமும் பண்பாடும். - அ. தட்சிணாமூர்த்தி
3. Page 288 Caste in India : J. H. Hutton.

சாகுபடியில் தேர்ச்சிபெற்றவர் என்பதால் அப்பெயர் பெற்ற தாகவும் சொல்லப்படுகிறது. [1]

The name (Pallan) is said to have been derived from Pallam a pit (low place) in which they were said to be standing when castes were originally formed by Manu. It is also said to be derived from low ground or wet cultivation in which they are experts. [1]

VII. பண்டைய மருதநில மக்களாகிய மள்ளர் இன்று பள்ளர் என வழங்குவர். பல்வேறு அறிஞரும் பண்டைக்கால மள்ளர்தான் இன்று பள்ளர் என வழங்கி வருவதாகக் கூறி யிருப்பதைக் கீழே காண்போம்.

1. **டாக்டர் வின்சிலோ** என்பவர் கி. பி. 19-ஆம் நூற்-ருண்டில் வெளியிட்ட தமிழ் ஆங்கில அகராதியில், தற்காலத்தில் பள்ளர் என வழங்குபவர், பழங்காலத்தில் மள்ளர் என வழங்கினர் என்கிருர்.

2. **திரு. டி. கே. வேலுப் பிள்ளை** என்பவர் பழந்தமிழ் இலக்கியத்தில் கண்ட மள்ளரே பிற்காலத்தில் பள்ளர் என மருவி வழங்கி வருவதாகக் கூறுகிருர். [2]

3. **பண்டித சவரிராயர்** கூறுவதாவது :—

பஞ்சாபிலுள்ள மல்தான் (Maltan) என்னும் நகரில் சூரியனுக்குப் பழைய கோயிலொன்று இருந்ததென்று அறிகின்ருேம். ஔரங்கசீப் என்னும் முகம்மதிய மன்னனின் கட்டளையால், அவ்வாலயத்திலிருந்த சூரியக்கடவுளின் தங்கச் சிலை, உருக்கிக் கருவூலத்தில் சேர்ப்பிக்கப்பட்டது. மல்தான் என்னும் இடம் மல்லர் அல்லது மள்ளர் வாழ் இடமாய் இருந்-தது. பண்டைய மள்ளரே, இன்றையப் பள்ளர். இந்தியாவின் வடமேற்குப் புறத்தில் மள்ளர் முதன்மையான சாதியாராவர். தமிழரின் ஒரு பிரிவினராகிய இவர்கள் மல்தான், மர்வ, மல்வ

1 Page 125 Madurai Dt. Gazetteer.

2. Travancore State Manual-1940; Thiru T.K. Velu Pillai, B. A., B. L.

எல்லைக்குள்பட்ட நாடுகளிலும், இராசபுதனத்திலும் காணப் பட்டனர். 'பள்ள' என்பது 'மள்ள' என்பதன் உச்சரிப்பின் வேறுபாடு. சௌராஷ்டிரத்தில் வாழும் சாதியினருக்கு இப் பெயர் வழங்கும். அங்கு சூரிய வழிபாடும் அவ் வழிபாட்டுக் குரிய பல கோயில்களும் இருந்தன. [1]

4. **திரு. ஞா. தேவநேயப் பாவணர்** குறிப்பிட்டிருப்ப- தாவது :—

பள்ளர் என்பது **மள்ளர்.** மருத நிலத்தில் வாழும் உழவர். [2]

**5. திரு. சோ. இலக்குமிரதன் பாரதி** கூறுவதாவது:—

பள்ளர் என்பது மருத நிலத் தலைமக்களாகிய மள்ளர். பள்ளர் (தேவேந்திர குல வேளாளர்). [3]

6. *1961*-ஆம் ஆண்டு மக்கள் குடிக் கணக்கெடுப்பில் சேலம் மாவட்டம் கணக்கன்கிரி ஊர் பற்றி தயாரித்த கையேட் டில் (monograph) கண்டிருப்பதாவது:-

'பள்ளர் என்பது மருத நில மக்களாகிய மள்ளர்'. [4]

(7) டாக்டர் K. R. அனுமந்தன் கூறுவதாவது:-

பள்ளர், கடையர் என்ற பட்டமுடனும் வழங்குவர். சங்க இலக்கியங்களில் காணப்படும் பண்டைய நாளில், வீரத்திற் சிறந்த மள்ளர், இக்காலப் பள்ளரின் முன்னோராயிருக்கலாம்.

Dr. K. R. Hanumanthan says:-

'The pallas are also denoted by the Title Kadayars. The ancient heroic tribe called Mallas described in the Sangam classics were probably the ancestors of pallas" [5]

---

1. *பக்கம் 206 தமிழர் சரித்திரம்; திரு ந. சி. கந்தையா பிள்ளை.*
2. *செந்தமிழ்ச்செல்வி 1975 ஏப்ரல் வெளியீடு.*
3. *பக்கம் 218 நமது சமூகம்; திரு. சோ. இலக்குமிரதன் பாரதி,* M. A. B. L.
4. Census of India 1961 Vol. IX Madras Part VI Village Survey Monograph Kanakkangiri Village, Salem Dt.
5. Page 120 untouchability in Tamilagam unpublished - Dr. K. R. Hanumanthan.

டாக்டர் K. R. அனுமந்தன் மேலும் கூறுவதாவது:-

இடைக் காலத்தைச் சேர்ந்த ஒரு கல்வெட்டு, பள்ளரில் ஒரு பிரிவினராகிய குடும்பரைப் பாண்டிய மன்னரோடு தொடர்பு படுத்துகிறது. இக் கல்வெட்டின்படி ஒரு காலத்தில் நாட்டில் கடுமையான பஞ்சம் நிலவியதாகவும்.................. இக் கதையின்படி, பள்ளர் நஞ்சை சாகுபடியில் பண்டைக் காலத்திலிருந்தே தேர்ச்சி பெற்றவர் என்றும், அவர்கள் நெல், கரும்பு, வாழை, மற்றும் பனை முதலியவற்றைப் பயிர் செய்வதற்குக் காரணமாயிருந்தவர் என்றும், நன்கு புலனுகிறது. செவி வழிச் செய்திகள், பள்ளர் தமிழகத்தின் பண்டைக் கால மக்கள் எனவும், அவர்கள் பெரும் நிலக்கிழாராகவும், வேளாண்மைத் தொழிலில், குறிப்பாக நஞ்சைப் பயிர் சாகுபடியில் சிறப்பாகத் தேர்ச்சி பெற்றவர் எனவும் வலியுறுத்துகின்றன. அதனுல் இவர்கள் தென்னிந்தியாவின் மற்றப்பகுதியிலிருந்து படையெடுத்து வந்த வேறு குலங்களினுல் அடக்கி ஒடுக்கப்பட்டு, காலப் போக்கில் அடிமை நிலைக்கு உள்ளாக்கப் பட்டிருக்கின்றனர் என்று தோன்றுகிறது. [1]

Dr. K. R. Hanumanthan also says:-

A medieval inscription connects the kudumbars (a branch of the pallas) with the Pandya Kings. According to it, once there was a severve famine...... 'This legend is useful to understand that the pallas were experts in wet cultivation from time immemorial and responsible for the cultivation of wet crops such as Sugarcane, Plantain Palmyrah, Paddy etc. All these traditions stress the fact that the pallas were an ancient people of Tamil Nadu owners of land and great cultivators, especially of wet land of the country. Therefore they seem to have been suppressed into slavery in course of time by latter waves of powerful tribes which came from other parts of Southern India. [1]

---

1. Page 122 untouchability in Tamilagam unpublished - Dr. K. R. Hanumanthan.

திரு. M. சீனிவாச அய்யங்கார் இம் மக்கள் பற்றிக் கூறியிருப் பதைக் கீழே காண்போம்:-

மள்ளர் (பள்ளர்) கடைஞர் மருத நில அல்லது வளம் பொருந்திய நிலத்து மக்கள். [1]

பண்டைக் காலத்தில் பள்ளன் என்ற வகுப்பு இல்லே. அதற்குப் பதிலாக பழைய தமிழ் இலக்கியங்களில் மள்ளர், பள்ளரின் ஒரு பிரிவினராகிய கடைஞர் என்ற பிரிவுகள் காணப்படுகின்றன. இவர்கள் பெரும்பாலும், பாண்டிய நாட்டில் காணப்படுகின்றனர். இவர்கள் பரம்பரைத் தொழி லில் தொண்டை நாட்டில் உள்ள பள்ளி அல்லது வன்னிய வகுப்பினரை ஒத்திருக்கின்றனர். இவர்கள் பண்டைய நாளில் விவசாயத் தொழிலாளராகவும், படை மறவராகவும் செயல்பட்டனர். [2]

Thiru M. Srinivasa Ayyangar says :-

There was no such caste as pallan but in its stead we find in early Tamil literature Mallars and Kadaignars, the latter appearing as a sub-division of palla caste. They are chiefly found in the Pandya country and correspond in their traditional occupations to the pallis or Vanniya caste of the Thondai Nadu. These people were agricultural labourers and soldiers. [2]

பள்ளர் என்பது சரியாக மள்ளர் என்று உச்சரிக்கப்பட வேண்டும். இவர்கள் பாண்டியரின் படை மறவராகவும், பள்ளி வகுப்பார் பல்லவரின் படை மறவராகவும் படகர் அல்லது மடிகா அல்லது சக்கிலியர் கலிங்கம் மற்றும் நாடு களின் படை மறவராகவும் இருந்தனர். [3]

The Pallars correctly Mallars formed the Pandyan army while the Pallis constituted the Pallava army while

1. Page 58 Tamil Studies M. Srinivasa Ayyangar.
2. Page 71 Tamil Studies M. Srinivasa Ayyangar.
3. Page 107 Tamil Studies M. Srinivasa Ayyangar.

the troops of Kalinga and other countries were recruited chiefly from Badagas or Madigas or Chakkiliyas. [1]

திரு. எம். சீனிவாச அய்யங்கார் மேலும் கூறுவதாவது :- பண்டைக் காலத்தில் நகரம் அல்லது ஊரில் பல்வேறு திணை நிலப் பிரிவு மக்களும், எவ்வாறு தனித்தனியாய் பிரிந்து வாழ்ந்தனர் என்பதை, வாசகரின் கவனத்திற்குக் கொண்டு வருவது நலம் பயக்கும். இதற்கு எடுத்துக் காட்டாகப் பெரும்பாணாற்றுப்படையில் இடம் பெற்ற காஞ்சீபுரத்தை எடுத்துக் கொள்வோம். நகரத்தின் உட்புறத்தில் பார்ப்பனர் குடியிருந்தனர். அவர் தெருவுக்கு ஒருபுறம் வலைஞர் தெருக்களும், இன்னொருபுறம் வணிகர் தெருக்களும் இருந்தன. இவைகளைச் சூழ்ந்து மள்ளர் அல்லது பள்ளர், கள்விணைஞர் தெருக்களும் அமைந்திருந்தன. இவற்றிற்கு அப்பால் வெகு தூரத்தில், ஒரு கோடியில் இடையரின் பள்ளியும், அதற்கும் அப்பால் ஓதுக்குப்புறமாய் எயினர் மற்றும் அவரது தலைவர் சேரியும் அமைந்திருந்தன. மள்ளர் தெருக்களை ஒட்டி திருவெக்கா கோயிலும், மன்னன் இளந்திரையனின் அரண் மனையும் காட்சியளித்தன. [2]

Thiru M. Srinivasa Ayyangar adds :—

'But by way of introduction, it is highly desirable to present before the reader a description of an ancient town or village in which the regional classification of tribes explained above is clearly discernible. We shall first take the city of Kanchipuram as described in the Perumpanathuppadai a Tamil work of the 3rd or 4th century A. D. In the heart of the town were the Brahmin quarters where neither the dog nor the fowl could be seen. They were flanked on the one side by the fishermen (வலைஞர்) street and on the other by those of the traders (வணிகர்)

1. Page 107 Tamil Studies M. Srinivasa Ayyangar.

2. Page 76 Tamil Studies M. Srinivasa Ayyangar.

and these were surrounded by the cheris of Mallars or Pallars (உழவர்) and the toddy drawers (கள்ளடு மகளிர்). Then far removed from them, were situated at one extremity of the city, the pallis of the Idaiyars and beyond these, lay the isolated Parachery of the Eyinars and their chiefs. Next to the Mallar (உழவர்) street, were the temple of Tiruvekka and the palace of the king Ilanthirayan. [1]

9. டாக்டர் G. ஒப்பர்ட் கூறுவதாவது :—

பண்டைய இந்திய வரலாற்றில் காணப்படும் மள்ளர் 'மல்லர் மரபினரே' இன்றையப் பள்ளர், பள்ளி வகுப்பார் மள்ளர் முதல் எழுத்தாகிய 'ம' 'ப' வாக மருவி வழங்கப் படுகிறது. 'பாண்டி' 'பாண்டியன்' என்பது பள்ளாண்டி, பள்ளாண்டியன் என்பதன் சுருக்கம். பள்ளரை ஆண்டவன் பள்ளாண்டி – பள்ளாண்டியன் – பாண்டியன் என்று வழங்கி வந்திருக்கலாம். ஆகப் பள்ளரின் தலைவன் தான் பாண்டியன். அனேக திராவிடக் குடிகளின் பெயர்கள் மலை - மல் - கு என்ற சொற்களினின்று தோன்றியது. உச்சரிப்பு பேதத்தால் 'ம' என்பது 'ப' என்பதாக மருவி வழங்கலாயிற்று. இதன் விளைவாக மள்ளர், மல்லர், மாலா, மலையாளி, மறவர் என்ற சொற்கள் பள்ளர், பள்ளி, பல்லவர், பளையர், பறையர், புளிந்தர், புலையன் என்று உச்சரிக்கப்படுகிறது. பள்ளரும் பள்ளியும், பல்லவரும் ஒரே இனம். வேளாளன் – பள்ளி – பள்ளர் என்ற பெயர்கள் வேர் அடிப்படையில் ஒரு பொருளையே உணர்த்தும். [2 & 3]

(10) திரு. கணபதி என்பவர் பள்ளர் பண்டைக் காலத்தில் மள்ளர் என வழங்கியதாகவும், அவர்கள் நாட்டின் தலைக் குடிகள் என்றும், காட்டை வெட்டி நாடாக்கி, குளம் தொட்டு வளம் பெருக்கி, வேளாண்மை செய்து நாகரிகத்தைத் தோற்று

---

1. Page 76 Tamil Studies M. Srinivasa Ayyangar.
2. Page 133 Madras Journal of Literature and Since 1887-1888.
3. The original inhabitants of India. Dr. G. oppert.

வித்தவர் என்றும், இவர்களிலிருந்து பிரிந்து வெவ்வேறு இலாப கரமான தொழில்களை மேற்கொண்டு, பொருளாதாரத்தில் மேம்பட்டவர், சுனுதனக் கொள்கைகள் நாட்டில் பரவியதன் விளைவாக, சமூக நிலையில் உயர் இடத்தைப் பெற்றதாகவும், மாருக பழைய வேளாண்மைத் தொழிலிலேயே நிலைத்து நின்றவர், பொருளாதாரத்தில் தாழ்ந்து, வீழ்குடி உழவன் வித்துண்டாற்போல என்பதற்கொப்ப, சமூக நிலையிலும் தாழ்ந்து, காலப்போக்கில் பள்ளன், கீழ்சாதி, தீண்டப் படாதவன் என்ற நிலையை எய்தினர் என்கிருர். [1]

ஆக மேலே கண்ட கூற்றுக்களிலிருந்து பள்ளர் சமூகம் பற்றி, அடியிற்கண்ட கருத்துக்கள் நிலவுவதாகப் புலப்படும்.

1. பள்ளர் தேவேந்திரனின் வியர்வையிலிருந்து தோன்றியவர்.
2. பள்ளர் சூத்திரனுக்கும், பிராமணப் பெண்டிற்கும் பிறந்த கலப்பினம்.
3. பள்ளர் பல்லவ மரபினர்.
4. பள்ளர் வேளாளரால் பண்ணைத்தொழில் செய்யத் தமிழகத்திற்குள் குடியேற்றப்பட்டவர்.
5. பள்ளர் பண்டைக்காலத் தொழில் வகுப்பார்.
6. சாதிகள் ஏற்பட்ட காலத்தில், பள்ளர் பள்ளமாகிய நஞ்சை நிலத்தில் தொழில் செய்தனராதலாலும், அத் தொழிலில் அவர் சிறந்து விளங்கினதாலும், பள்ளர் என வழங்கலாயினர்.
7. பண்டைய இந்திய வரலாறு மற்றும் தமிழ் இலக்கியங் களில், மருத நில மக்களாக வரும் மள்ளர், மல்லர் பிற் காலத்தில் பள்ளர் என மருவி வழங்கலாயினர்.

ஆக மேலே திரட்டியிருக்கும் பல்வேறு கருத்துக்களில் எது ஏற்புடையது என்பதை அறிய, எல்லாக் கருத்துக்களையும் முறையே ஆராய்வோம்.

---

1. மள்ளர் மாண்பு கணபதி.

**1. பள்ளர், வேளாளர் பண்ணையில் உழைப்பதற்காகத் தேவேந்திரனிடமிருந்து தோன்றியவரா ?**

பொதுவாக எல்லா மாவட்டக் குறிப்புகள், தென்னிந்தியக் குலங்களும் குடிகளும் என்ற நூல் இவற்றில் எல்லாம், வேளாளரின் பண்ணையில் உழைப்பதற்காகத் தேவேந்திரனின் வியர்வையிலிருந்து பள்ளர் தோன்றியதாகப் பலரும் கூறுவதாகவும், இம் மக்கள் தங்களைத் தேவேந்திர குலத்தார், இந்திரன் வழி வந்தோர் எனவும், மற்ற எல்லா சமூகத்தினரையும் விடத் தாங்கள் உயர்ந்தவர் என உரிமை பாராட்டுவதாகவும், ஆனால் எல்லாத் தாழ்ந்த சாதியினரும் கூறுவதுபோன்று, இவர்களும் தங்களைப் பற்றி உயர்வாகக் கூறுவதாகவும், அதனால் இவர்கள் கூற்றை ஏற்பதற்கில்லை என்றும் காணப்படுகிறது. J. H. ஹட்டன் என்பவரும் பள்ளர் வேளாளரின் பண்ணையில் தொழில் செய்ய தேவேந்திரனால் உண்டாக்கப்பட்டவர் என்ற கதையை மூலமாகக் கொண்டு, இவர் தங்களைத் தேவேந்திர குல வேளாளர் எனப் பகர்வதாகவும், ஆனால் இது ஒரு கற்பனைக் கதை என்பதாகவும் கருதுகிறார்.[1]

Mr. J. H. Hutton says :-

Devendra Kula Vellalar - A fancy name for the Pallan. Who it is thereby claimed were created by Devendra the King of the Gods to labour for the Vellalar.[1]

இம் மக்கள் வேளாளர் பண்ணையில் உழைப்பதற்காகத் தேவேந்திரனுடைய வியர்வையிலிருந்து உற்பத்தியானவர் என்று கூறுவது புனைந்துரை. இதை அறிவுடையோர் ஏற்கார். பண்டைய நாளில் இன்றைய வேளாளர் வர்க்கம் இருந்ததா என்பது கேள்விக்குரியது. முதற்கண் சங்க இலக்கியங்களில் வேளாளர் என ஒரு மரபு இருந்ததற்கு சான்றுகள் இல்லை. மாறாக உழவர் இருந்தனர். உழவரை வேளாளர், வெள்ளாளர் என வழங்கும் வழக்கம் இடைக்காலத்தில் தோன்றியதென்றே கருதற்பாலது. அதே போன்று

1. Page 278 Caste in India J. H. Hutton.

இன்றையப் பள்ளர் சமூகம், இதே பெயருடன் அன்று வழக்கில் இருந்ததா என்பது விஞவுக்குரியது. ஆக அக் காலத்தில் தமிழகத்தில் வேளாளர், பள்ளர் என்பதாக இரு மரபுகள் வழக்கில் இல்லே என்றே கொள்ளற்பாலது. ஆனல் இம்மக்கள் தங்களேத் தேவேந்திர குலத்தார், தேவேந்திரகுல வேளாளர், இந்திரனின் வழி வந்தோர் என்றெல்லாம் இக் காலத்தில் உரிமை பாராட்டி வருகின்றனர். J. H. ஹட்டன் மற்றும் மாவட்டக் குறிப்பு ஆசிரியர் குறிப்பிடுவது போன்று, இவர்களின் கூற்று தங்கள் மரபுக்கு ஏற்றம் தேடப்புனேந் துரைக்கப்பட்டதா? அல்லது அவரது கூற்றில் ஏதாவது உண்மை இருக்கிறதா என்பது ஆய்வுக்குரியது. J. H. ஹட்டனே மற்றும் மாவட்டக் குறிப்புகளின் ஆசிரியரோ, மற்றவரோ தமிழகத்தின் பண்டைக் கால மக்கள் பிரிவு பற்றி முறையாக ஆய்வு செய்யாமல், ஆய்வு காலத்தில், பல்வேறு பிரிவினரும் கல்வி, சமூக, பொருளாதார நிலேயில் அடைந்திருந்த மேம்பாட்டைக் கருத்திற் கொண்டு, இதே நிலேயே பண்டைய நாளிலும் அவரிடம் நிலவியதாகத் தவருன எண்ணத்தால் இவ்வாறு எழுதிச் சென்றனர் என்பது குறிப்பிடத்தக்கது. இக்காரணத்தினுலேயே பள்ளரை பண்டுதொட்டு கீழ் மக்களாக இருந்து வந்ததாகச் சித்தரிக் கிறுர்களா என்ற ஐயப்பாடு எழுகிறது. பள்ளர் ஏன் தங்களேத் தேவேந்திர குலத்தார் என்று கூறி வருகின்றனர் என்பது பற்றி ஈண்டு ஆராய்வோம்.

நெல்லே மாவட்டம் சங்கரநயினர் கோயில் தாலுகா கரிவலம் வந்த நல்லூர் கோயில், [1] இராமநாதபுரம் மாவட்டம் சீவிலிபுத்தூர் கோயில், [2] ஆகிய இந்த இரண்டு இடங்களிலுமுள்ள கல்வெட்டுகளில் இவர்களேத் தேவேந்திரக் குடும்பன், தேவ கன்னியின் புத்திரர் எனவும் தேவலோகத் தில் தேவேந்திரனிடம் மழை வரம் வேண்டி சேர, சோழ மன்னருடன் பாண்டியன் உக்கிரப்பெருவழுதி சென்றதாகவும்,

1. A.R.E. 432/1914.
2. A.R.E. 588/1926.

சேரனும், சோழனும் தேவேந்திரன் குறிப்பிட்ட இடத்தில் அமர்ந்து மழை வரம் பெற்றுத் தங்கள் தங்கள் நாட்டுக்குத் திரும்ப, மாருக பாண்டியன் தேவேந்திரனுக்குச் சமமாக அவனது இருப்பிடத்தில் அவனுக்கு அருகிலேயே அமர, மழைவரம் கிடைக்கப்பெருததால் செந்நெல், கன்னல், கதலி, பனை முதலிய வித்துக்களுடன் தேவகன்னியின் புத்திரர் நால்வரைக் கையோடு பூமிக்கு அழைத்து வந்து அவர்களைக் கொண்டு ஒரே நாளில் பன்னீராயிரம் கிணறுகள் தோண்டி, வேளாண்மை கண்டு நாட்டில் பஞ்சத்தைப் போக்க, அதனல் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி மனம் மகிழ்ந்து, அவர் நால்வரில் முதல்வனுக்கு தேவேந்திரக் குடும்ப பட்டமும், மற்ற மூவருக்கும் வரிசையாக வாரியன், அக்கசாலை, இளந்தாரி என்ற பட்டமும் வழங்கியதாகப் பொறிக்கப்பட்டிருக்கிறது. பாண்டியன் உக்கிரப் பெருவழுதி தேவேந்திரனுடன் சமமாய் உட்கார்ந்த சம்பவம் சின்னமனூர் செப்பேட்டில் பராந்தகப் பாண்டியன் மெய்க்கீர்த்தியில் 'தேவேந்திரனேடினிதிருந்த மன்னர்பிரான் வழுதியர் கோன் வடிவம்பலம் நின்றருளி' என்று கண்டிருக்கிறது. கன்னியாகுமரி கல்வெட்டிலும் இச் சம்பவம் பொறிக்கப்பட்டிருக்கிறது. [1]

அத்துடன் பெரும்பற்றப்புலியூர் நம்பியின் திருவிளை-யாடல் புராணத்தில், நாட்டில் பஞ்சம் நிலவ தமிழ் மூவேந் தரும் தேவேந்திரனிடம் மழை வரம் வேண்டின செய்தி காணப்படுகிறது. [2]

பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடல் புராணத்தில், நாட்டில் மழையின்றிப் பஞ்சம் ஏற்பட, பாண்டியன் உக்கிரப் பெருவழுதி, மேக மன்னர் நால்வரைப் பிடித்து பணி கொண்டு, நாட்டை செழிப்பித்த செய்தி அறியக் கிடக்கிறது. கொங்கு நாட்டுக் கல்வெட்டு ஒன்றில் இம் மக்கள் 'தேவப் பள்ளன்' என்று குறிப்பிட்டிருக்கின்றது. [3] செங்கோட்டுப்

1. கன்னியாகுமரி கல்வெட்டு தொடர் எண் (1968/57)
2. பெரும்பற்றப்புலியூர் நம்பி திருவிளையாடல் புராணம் 12, 3, 44, 30.
3. கொங்கு 1974 - செப்டம்பர்

பள்ளில் இவர்களைப் புரந்தரன் குலம், (தேவேந்திர குலம்) [1] என்றும், மூவேந்திரனின் வேண்டுகோளின் மேல், இவர்களின் குல முதல்வன் தேவலோகம் சென்று, நெற்பயிரைப் பூமிக்குக் கொண்டு வந்து பயிர் செய்தான் என்பது பழஞ்செய்தி என்றும், கண்டிருப்பது காண்க. [2] வையாபுரிப் பள்ளிலும், [3] இம் மக்களைத் தேவேந்திரப் பள்ளர் என்று குறிப்பிட்டிருப்பதை அறிக. கரிவலம் வந்தநல்லூர், சீவிலிபுத்தூர் கல்வெட்டுகள் கி. பி. 17ஆம் நூற்றுண்டைச் சேர்ந்ததென்பர். ஆக கி. பி. 17ஆம் நூற்றுண்டிலிருந்து இம்மக்கள் தேவேந்திர குலத்தார் என வழங்கி வருகின்றனர் என அறிகிரும். இதற்கு முன்னுல் இவ்வழக்கு நடைமுறையில் இருந்ததா என்பதும் ஆய்வுக்குரியது. ஆக இம் மக்கள் தேவேந்திர குலத்தார் என்பதற்கு ஆதாரமாகக் கல்வெட்டுகளும், பள்ளு நூல்களும் துணை நிற்கின்றன. ஆக இம் மக்கள் பண்டையத் தமிழ் வேளாண் மரபினர்; தமிழ் மன்னரோடு தொடர்புடைய வர் என அறிதற்பாலது. மேலே குறிப்பிட்ட கரிவலம் வந்த நல்லூர், சீவிலிபுத்தூர், கல்வெட்டுகளில், இவர்களுக்குப் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி தேவேந்திரக் குடும்பப் பட்டம் மட்டுமின்றி, மன்னர்க்குரிய விருதுகளாகிய வெள்ளானை, வெண்கொற்றக் குடை, பகற்பந்தம், கொாடி, சிலம்பு, கொடுக்கு, தேர், பதினெட்டு மேளம், பதினுறு கால் பந்தல், பஞ்சவன் விருது என பல சிறப்புக்களை வழங்கியிருக்கி ருன். இச் சிறப்புக்களைக்கொண்டு இம் மக்கள் மன்னர் மரபினர் என்று கருத ஏதுவாகிறது. அப்படியானுல் தமிழ் வேந்தர் ஆட்சி வீழ்ச்சியுற்ற பின், விசயநகர ஆட்சி, அதன்பின் ஏற்பட்ட நாயக்கர், மராட்டியர், முகம்மதியர் ஆட்சியின் போது, இவர்கள் அடக்கி ஒடுக்கப்பட்டு, பண்ணை அடிமைகள் ஆயினரா எனக் கருதற்பாலது. அவ்வாருனுல் மிகவும் சமீப ஆண்டுகளில் பொருளாதாரம், கல்வி இவற்றில் மேம்பட்ட வரில் ஒரு சாரார், தங்களை வேளாளர், வெள்ளாளர் எனவும்

---

1. செங்கோட்டுப் பள்ளு – செ. 208.
2. செங்கோட்டுப் பள்ளு பக்கம் 221.
3. வையாபுரிப் பள்ளு – செ. 81.

வீண் பெருமைக்காக, தேவேந்திர குலத்தாரைத் தங்களின் பண்ணை அடிமை, தங்களின் கீழ் தொழில்புரிய தேவேந்திரன் இவர்களைப் படைத்தான் எனவும், கதைகள் புனைந்து நாட்டில் பரப்பினர் என்று தோன்றுகிறது. பள்ளு நூல்களில் இம் மக்கள் பண்ணை அடிமைகளாய், உலகம் தோன்றியது முதல் இருந்து வருவதாகச் சித்தரிக்கப்பட்டிருக்கின்றனர். இந்த பள்ளு நூல்களில் காணப்படும் பண்ணையார், வேளாள ராக சுட்டப்படவில்லை என்பதை அறியவும். ஆதலால் இடைக் காலத்தில் அரசியல் காரணமாகவே இம் மக்கள் அடிமைப் படுத்தப்பட்டனர் எனக் கருத ஏதுவாகிறது. பண்டுதொட்டு இவர்கள் அடிமைகளாய் இருந்தனர் என்பதற்குச் சான்று கள் இல்லை. ஏற்கனவே குறிப்பிட்டது போன்று, தேவேந்திர னின் வியர்வையிலிருந்து இவர்கள் தோன்றினர் என்பதை, அறிவுடையோர் ஏற்கார். இவர்கள் தேவேந்திர குலத்தார் என வழங்குவது பற்றி, தேவேந்திர குல வேளாளர் என்ற தலைப்பில் ஆய்வு செய்ய இருப்பதால், இதை இத்தோடு விடுத்து, அடுத்து பள்ளர் சூத்திரருக்கும், பிராமணப் பெண் டிற்கும் பிறந்த கலப்பினமா என்ற வினவிற்கு விடை காண்போம்.

**2. பள்ளர் சூத்திரருக்கும் பிராமணப் பெண்டிற்கும் பிறந்தவரா ?**

பிராமணர் ஆரிய மரபு, பள்ளர் தமிழர் மரபு, ஆரியர் மத்தியில் பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் என நான்கு பிரிவினர் இருந்ததென்பர். பிராமணருக்கு மற்ற மூன்று வகுப்பாரும் கீழ்ப்பட்டவர். இம் மூன்று பிரிவினரும், அவருக்குத் தொண்டு செய்யக் கடமைப்பட்டவர். சத்திரிய ருக்கு வைசியர், சூத்திரர் ஆகிய இருவரும் கீழ்ப்பட்டவர். அவருக்கு இவர் இருவரும் தொண்டு செய்ய வேண்டும். சூத்திரர் மற்ற மூன்று மரபினருக்கும் கீழ்ப்பட்டவர். ஆனதால் அவர் மூவருக்கும் இவர் தொண்டு செய்ய வேண்டும். சூத்திரர் என்பது பொதுவாய் அடிமைகள், போரிற் கைது செய்யப் பட்டவர், விலைக்கு வாங்கப்பட்டவர், குற்றத்திற்காக ஊழியஞ் செய்பவர், தொன்று தொட்டு ஊழியஞ் செய்பவர், தானகவே அன்புடன் ஒருவரிடம் அண்டி ஊழியஞ் செய்பவர் என எழு

வகைப்படுவர். ஆரம்ப காலத்தில் ஆரியரிடம் இந்த நான்கு பிரிவுகளும் இல்லை எனலாம். பழைய வேதத்திலோ, உப நிடதங்கள், இதிகாசங்களிலோ இம் மாதிரி சாதிப் பிரிவுகள் காணப்படவில்லை என அறிஞர் கூறுவர். ஸ்மிருதிகளில் கூறப் பட்ட சாதிப்பிரிவுகளும் ஒழுக்கம் பற்றியதேயன்றிப் பிறப்பி னுல் ஏற்படவில்லை என்பர். ஆரியர் வெண்ணிறமுடையவர் அவர் இந்தியாவிற் புகுந்தபோது இங்கு பழங்குடிகளும், திராவிடரும் இருந்தனர். இவர்கள் பொதுவாகக் கருநிற முடையவர் என்பர். ஆரியர் இவர்களைத் தாசர் என்றனர். ஆரம்பத்தில் ஆரியருக்கும் இந்தியாவிலுள்ள பழங்குடிகள் இவர்களுக்குள் கலப்பு ஏற்பட்டது என்பர். மிகவும் பிற்காலத் தில் கோயிற் பூசாரிகளாய் இருந்த ஆரியர், சுயநலத்தை முன் னிட்டு, தங்களின் தனித் தன்மையைப் பாதுகாப்பதற்காக, நான்கு வருணப் பிரிவுகளை ஏற்படுத்தி, இந்த நான்கு பிரிவு களுக்குள் நிகழும் கலப்பு மூலம் பிறந்தவர் பற்றி, விதிமுறை கள் வகுத்தனர். அதன்படி உயர்ந்த வகுப்பு ஆடவனுக்கும் அவனைவிடத் தாழ்ந்த வகுப்பு பெண்ணுக்கும் பிறந்தவர் 'அனுலோமா' எனவும், தாழ்ந்த வகுப்பு ஆடவனுக்கும், உயர்ந்த வகுப்புப் பெண்ணுக்கும் பிறந்தவர் 'பிரதிலோமா' எனவும் வகுத்தனர். கலப்பு மணங்கள் மூலம் பிறப்பவர் பற்றி மனுஸ்மிருதியில் கண்டிருப்பதாவது 'ஒரு பிராமண னுக்கு ஒரு வைசியப் பெண்ணிடத்தே பிறந்தவன் அம்பட்டன் எனப்படுவான். ஒரு சூத்திரப் பெண்ணிடத்தே பிறந்தவன் நிசாதன் அல்லது பாரசவன் எனப்படுவான். ஒரு சத்திரியனுக்கு சூத்திரப் பெண்ணிடத்தில் பிறந்தவன் உக்ரன் எனப்படுவான். ஒரு வைசியனுக்கு சத்திரியப் பெண்ணிடம் பிறந்தவன் 'மாகதன்' எனவும், ஒரு பிராமணப் பெண்ணிடம் பிறந்தவன் 'வைதேகன்' எனவும் பெயர் பெறுவான். ஒரு சூத்திரனுக்கு ஒரு வைசியப் பெண்ணி டத்தே பிறந்தவன் 'ஆயோகவன்' எனவும், ஒரு சத்திரியப் பெண்ணிடத்தே பிறந்தவன் 'சத்திரி' எனவும் ஒரு பிராமணப் பெண்ணிடத்தே பிறந்தவன் 'சண்டாளன்' எனவும் பெயர் பெறுவான், இன்னும் எண்ணற்ற கலப்பு சாதிகள் பற்றி

மனுஸ்மிருதிகளும் வசிட்டர் போதாயனர் இயற்றிய தரும நூல்களும் குறிப்பிடுவதாகப் பல அறிஞரும் கூறுவர்.

ஆரிய மரபைப் போன்று தமிழகத்தில் நான்கு வருணங்கள் இல்லை. மக்கள் வதிந்த நிலத்தின் இயற்கை அமைப்புக்கு தக்கவாறு, திணை நில மக்களாக வகுக்கப்பட்டனர். மருத நிலத்தில் உழவுத் தொழில் நடைபெற்றதால், உப தொழில்கள் ஏற்பட்டன. பல்வேறு திணை நில மக்களும், இங்கு உழவரை அண்டி, அவர்களிடம் தொழில் கற்று, திணை நிலப் பெயரை விடுத்து, தொழிற்பெயரை மேற்கொண்டனர். அப் பெயரே பிற்காலத்தில் குலப் பெயராக இருகிற்று. இவர்களில் கல்வி, பொருளாதாரத்தில் மேம்பட்ட ஒரு சாரார், சனாதனக் கொள்கை நாட்டில் தோன்றிய காலை, போலிக்குல உயர்வை முன்னிட்டு, தொழிற்பெயரை விடுத்து நாட்டில் உயர்வாக மதிக்கப்பட்ட குலப்பெயர் பூண்டனர். இவ்வாறு புதிய குலப் பெயர் பூண்டு, ஆரியப் பார்ப்பனரைச் சமய குருக்களாகவும், தலைவர்களாகவும் ஏற்றவர், சூத்திரர் எனவும், நாலாம் வருணம் எனவும் வழங்கப்பட்டனர். இப் போக்குக்கு ஆதரவாக நிகண்டுகளும் எழுதப்பட்டன. இவ்வாறு தோன்றிய சூத்திர வகுப்பாரை வேளாளர் பட்டியலில் சேர்த்தனர். பின்னர் வேளாளரையும் சூத்திரராக்கினர். பழைய நிலையில் நிலைத்து நின்றவர் பழைய திணை நிலம் மற்றும் தொழிற் பெயரால் இன்னும் வழங்கப்படுகின்றனர். இவர்தான் குறவர் வேட்டுவர், ஆயர், இடையர், வலையர், பரதவர், கொல்லர், தச்சர், கன்னார்; கற்கொல்லர், செக்கார், மருத்துவர், வண்ணார், நாவிதர் போன்றோர். இவர்கள் சூத்திர வகுப்பில் அடங்கார், பிற்காலத்தில் சூத்திரரை சற் சூத்திரர், அசற் சூத்திரர் என இரண்டாகப் பகுத்து இடையரை சற்சூத்திரராக்கினர். பின்னர் கோவைசியராக்கினர். இச் சூத்திர மரபினரைத்தான் சமீப காலத்தில் வைசியர் எனவும், வேளாளர் எனவும், உயர்த்தி, தொல்காப்பியத்தில் சூத்திரங்கள் இயற்றி இந்த வகுப்புகளை ஒழுங்கு படுத்தினர். இன்றைய வைசியர், வேளாளர் பண்டைய நாளில் எந்த திணை நில மக்களைச் சேர்ந்தவர் என்று கூற இயலாது. இவர்

மருத நில உழவர் குடியினரல்ல என்பது மட்டும் உறுதி. நிகண்டுகளில் வைசியர் என்ற சொல்லுக்கு கோவைசியர், பூவைசியர், தனவைசியர் என்று பொருள் கண்டிருப்பது காண்க. இதன்படி இடையர், பூக்கட்டுபவர், பணம் வட்டிக்குக் கொடுப்போர் வைசியரில் அடங்குவர் என அறிகிறோம். வேளாளர் என்பதற்கும் பூவைசியர் என்று நிகண்டுகளில் பொருள் கண்டிருப்பது காண்க. ஆரியப் பார்ப்பனர் தலைமையை ஏற்காத அனைவரையும் அசற் சூத்திரர் என வழங்கவும் முற்பட்டனர். வடமொழி நிகண்டில் குயவர், கொற்றர், கைக்கோளர், துன்னர், கொல்லர், தட்டார், தச்சர், ஓவியர், நாவிதர், வண்ணார், கூத்தர், பாணர், வேடர், கள் வினைஞர், ஊன் வினைஞர், ஓவியர், இழிகுலத்தோர், மடவோர் என்பவர் சூத்திரராகச் சுட்டப்பட்டிருக்கின்றனர். ஆரியப் பார்ப்பனர் தமிழகத்தில் மேலே கண்ட தொழிலாளர்களைச் சூத்திரர் என்று வழங்கினாலும் எதார்த்த நிலையில் இவர்கள் சூத்திரராகார். கம்மாளர் ஆரியப் பார்ப்பனரின் தலைமையை ஏற்காததன் விளைவாகவே, தாழ்த்தப்பட்டு தீண்டாதவர் நிலையை அடைந்தார் என கருதற்பாலது. அனுலோமா, பிரதிலோமா வகுப்புகளும் தமிழகத்தில் ஏற்பட்டதாகக் கொள்வதற்கில்லை. திருவாரூரில் கலப்பினத்தினரின் உரிமை பற்றி ஒரு கல்வெட்டு காணப்படுகிறது.[1] இதில் கண்டபடி தமிழகத்தில் இப்பிரிவுகள் இருந்ததா என்பது வினவுக்குரியது. ஆரியர் மரபை ஒட்டி அந்தணர், அரசர், வைசியர், வேளாளர் என்ற வகுப்பார் தமிழகத்திலும் உண்டு எனக்காட்டவே, ஏற்கனவே குறிப்பிட்டது போல், தொல்காப்பியம் மரபியற் பகுதியில், சூத்திரங்கள் இயற்றி, வேண்டாத இடத்தில் மிகவும் பிற்காலத்தில் புகுத்தியிருக்கின்றனர். தமிழகத்தில் உழவர் குடிதான் தலைக்குடி. தமிழ் அந்தணர், அரசர், வேளாளர், எனப்படுவர் உழவர் குடியிலிருந்தே தோன்றினர். வணிகம் எல்லாத்திணை நில மக்களாலும் மேற்கொள்ளப்பட்டது. தமிழ் இலக்கியங்களில் காணும் பார்ப்பனர், அந்தணர் தமிழ் குடியைச்

1. ARE 658/1904.

சேர்ந்தவரே. இவர் ஆரிய அந்தணரோ, பார்ப்பனரோ அல்ல. தமிழ்ச் சங்க இலக்கியங்களில் வைசியர், வேளாளர், சூத்திரர் என்ற சொற்கள் இல்லை என்பதை அறிக. பரிபாடலில் ஒரு இடத்தில் மட்டும் வேளாளர் என்ற சொல் காணப்படுகிறது. ஒரே இடத்தில் மட்டும் இச் சொல் காணப்படுவதால், இது இடைச் செருகலாயிருக்குமோ என ஐயப்பட வேண்டிய திருக்கிறது. நிகண்டுகளின்படி தமிழகத்தில் கி. பி. 9-10 நூற்றுண்டுகளில் சூத்திர வகுப்பு தோன்றியதாக அறிகிறோம். பள்ளர் சூத்திர ஆடவருக்கும் ஆரியப் பார்ப்பனப் பெண்டிற் கும் பிறந்ததாகத் தமிழகத்தில் பிற்காலத்தில் கதைகள் பரப்பப்பட்டிருக்கிறது என்று கருத ஏதுவாகிறது. ஏன் இவ்வாறு செய்யப்பட்டது? இவ்வாறு பிறப்பவர் 'சண்டாளர்' என வழங்கப்பட்டதாக ஏற்கனவே கண்டோம். 'சண்டாளர்' என்பது நான்கு வருணங்களுக்கும் அப்பாற்பட்டவர். அதாவது சாதியை இழந்தவர், தீண்டப்படாதவர் எனக் கருதப்பட்டனர். (Outside the four varnas - Anterior caste Untouchables) தமிழ் வேந்தர் ஆட்சியில் உழவர் குடி உயர் நிலையில் இருந்தனர்; அவர் உழவுத் தொழிலும், போர்த் தொழிலும் செய்தவர்; மன்னரால் பெரிதும் மதிக்கப்பட்டவர்; பள்ளர் உழவர் குடி; அவரே மன்னர் மரபினர் என்பதை முன்னிட்டு, தேவேந்திரப்பட்டம் சூட்டப்பட்டனர் என்று கருதற்பாலது; தமிழ் வேந்தர் ஆட்சி முடிந்த பின், விசய நகர மன்னர், நாயக்கர், மராட்டியர் இவர் ஆட்சியின்போது, இம் மக்கள் நிலமிழக்கப்பட்டும், அடக்கி ஒடுக்கி, அடிமை நிலைக்குத் தாழ்த்தப்பட்டு, தீண்டப்படாதவர் நிலையை அடைந்திருக்கலாம் என்பதாக ஏற்கனவே குறிப்பிட்டோம். தேவேந்திர குலத்தார் என்று இம் மக்கள் வழங்குவதற்குத் தேவேந்திரனின் வியர்வையிலிருந்து இவர் தோன்றிய தாகவும், வேளாளர் பண்ணையில் தொழில் புரிய தேவேந்திரன் இவர்களைப் படைத்தான் என்று கூறுவது போன்று, இம் மக்கள் தங்களின் பண்டைய உயர்நிலையிலிருந்து வீழ்ச்சியுற்று கீழ்நிலை அடைந்த காலை, தீண்டப்படாதவர் என்று கொள்வ தற்கு ஆதாரமாக, சூத்திர ஆடவருக்கும், ஆரியப் பார்ப்பனப்

பெண்டிற்கும் இவர்கள் பிறந்ததாக கதை கட்டினர் போலும். ஆக இக் கதை புனைந்துரை; அறிவுடையார் ஏற்கார் எனக் கொண்டு, அடுத்து இம்மக்கள் பல்லவர் மரபினரா என்ற கருத்துப் பற்றி ஆராய்வோம்.

### 3. பள்ளர் பல்லவ மரபினரா?

தேவேந்திர குலத்தாரின் குலப்பட்டம் குடும்பன்,, மண்ணடி என்பவற்றை குறும்பன், மன்ருடி என்பவைகளுடன் ஒருமுகப்படுத்தி இவர்களைப் பல்லவ மரபினர் என H. A. ஸ்டுவர்ட் கருதுகிருர். அடுத்து J. H. நெல்சன் என்பவர் தொண்டை மண்டலத்தைச் சோழர் கைப்பற்றியபோது, பல்லவர் படையைச் சேர்ந்தவர்களில் சோழர் படையில் சேர்ந்து பணியாற்றி நகரில் தங்கியவர் பள்ளி (படையாச்சி - வன்னியர்) எனவும், அவ்விதம் சோழர் படையில் சேராமல், ஊர்ப்புறங்களில் தங்கியவர். பள்ளர் என்று வழங்கினதாகவும் கருதுகிருர். முதற்கண் பல்லவர் எந்த மரபினர் என்று இதுவரை ஒருவரும் கூற முன்வரவில்லை. பள்ளி (படையாச்சி - வன்னியர்] வகுப்பார் தொண்டை மண்டலப் பகுதியில் பெரும்பான்மையினராக இருப்பதால், தங்களைப் பல்லவரின் படை மறவர் என்று கூறி வருகின்றனர். திரு. எம். சீனிவாச அய்யங்கார், இம் மக்களைப் பல்லவர் படை மறவர் என்றே கருதுகிருர்.[1] இதை உணர்த்தவே இம்மரபினரில் பெரும்பாலோர் பள்ளி என்ற பெயரை விடுத்துத் தங்களைச் சமீபகாலமாய் படையாச்சி, வன்னியர் என்று வழங்கி வரலாயினர். பல்லவர் தமிழர் அல்ல; அவர் வேற்று மரபினர் என்றே வரலாற்ருசிரியர் பலரும் கருதுகின்றனர். ஒரு சாரார் பகலவரும் பல்லவரும் ஒன்று என்றும், பிறிதொரு சாரார் அவர்கள் வெவ்வேறு மரபினர் என்றும் கூறுவர். ஒரு சிலர் இவர்களைச் சாதவாகன வகுப்பினர் என்பர். ஆரம்பத்தில் இவர்கள் சமண மதத்தையும், பிராகிருத மொழியையும் ஆதரித்ததால், வட இந்தியாவிலிருந்து வந்தவராகவே கருத ஏதுவாகிறது. இவர்கள் காஞ்சிபுரத்தைத் தலைநகராகக்

---

1. Page 107 Tamil Studies M. Srinivasa Ayyangar.

கொண்டு கி. பி. 4 ஆம் நூற்றுண்டிற்குப் பிறகு கி. பி. 10ஆம் நூற்றுண்டு வரை தமிழகத்தின் வட பகுதியை ஆண்டனர். இவர்கள் ஆட்சி தெற்கே புதுக்கோட்டை வரை பரவியிருந்த தென்பர். பள்ளர், பல்லவ மரபினர் என்று கொள்ள, இவர்கள் தமிழகத்தின் வட மாவட்டங்களில் பெரும்பான்மையின ராகவே இருக்கவேண்டும்; மாருக இவர்கள் பாண்டிய, சோழ, கொங்குநாடுகளிலுமே பெரும்பான்மையினராகக் காணப்படு கின்றனர். ஆனல் தொண்டை நாட்டில் இம் மக்கள் இல்லை என்றே கூறலாம். இக் காரணத்தால் இவர்களைப் பல்லவ மரபினர் எனக் கொள்வது சரியாகாது. இவர்கள் குலப் பட்டமாகிய குடும்பன் என்ற சொல் குடும்பத் தலைவன், குடும்பு பார்க்கிறவன், குடியை, குடும்பத்தை உடையவன் என்றே பொருள் படும். குறும்பன் என்பது முல்லை நில ஆயர் குல மக்களுக்கு வழங்கும் பெயர். அதனல் இந்த இரண்டு சொற்களுக்கும் ஒருமைப்பாடு இல்லை. அடுத்து மண்ணடி என்ற சொல் மன்ருடியின் திரிபு என்பர். மன்ருடி என்பது, மன்றம் + ஆடி ஆக மன்றத்திற்குத் தலைவன் என்று பொருள் கொள்ளலாம். தமிழ்வேந்தர் ஆட்சி காலத்தில் ஊர்ச்சபை களை, மன்றம் என்றும் வழங்கி வத்தனர். இடைக்காலத்தில் இம் மன்றங்கள் பல வாரியங்களாகப் பிரிக்கப்பட்டு பொறுப்பு கள் கவனிக்கப்பட்டு வந்தன. எல்லாக் காரியங்களையும் ஒருங்கிணைத்து செயலாற்றுவது குடும்பு வாரியம் என வழங்கப் பட்டது. ஆக குடும்பன், மன்ருடி என்பது ஒரு பொருளையே குறிக்கும். மண்ணடி என்ற சொல்லும் மன்ருடியின் திரிபா யிருக்கலாம். இந்த ஒருமைப்பாட்டை மட்டும் அடிப்படை யாகக் கொண்டு பள்ளர் பல்லவ மரபினர் என்று கொள்வது பொருந்தாது. இது பற்றி Dr. K. R. அனுமந்தன் தொண்டை மண்டலத்தைச் சோழர் கைப்பற்றிய போது பல்லவர் படை மறவரில் சோழர் படையில் சேர்ந்தவர் பள்ளி எனவும் அவ்விதம் சேராதவர் பள்ளர் எனவும் வழங்கினர் என்றும், படையில் சேர்ந்தவர் உயர் வகுப்பாகவும் அவ்விதம் சேராதவர் ஒடுக்கப்பட்டு அடிமையாக்கப்பட்டனர் என்ற நெல்சன் கூற்று விசித்திரமானது எனக் கூறுகிருர். [1]

1. Page 122 Untouchability in Tamilalagan Dr. K.R. Hanumanthan.

Dr. K.R. Hanumanthan says :—

'Nelson thinks that the Vellalas colonised tondaimandalam after suppressing and enslaving the Kurumbas about the end of the 9th or the beginning of the 10th century AD. The higher class Pallavas who accepted the cola sovereignty and joined the ranks of the cola army came to be designated as Pallis or Padayachis (meaning those who control the army) while low class Pallavas who were reduced to slavery came to be known as Pallas. This seems to be the most plausible explanation of the origin of the Pallas.'[1]

ஆக மேலே கூறப்பட்ட காரணங்களினுல், பள்ளர் பல்லவ மரபினர் அல்ல என்பது தேற்றம். அடுத்து பள்ளர் பண்ணைத் தொழில் புரிய வேளாளரால் பாண்டிய நாட்டில் குடியேற்றப் பட்டனரா என்ற வினுவுக்கு விடை காண்போம்.

**4. பள்ளர் பண்ணைத் தொழில் புரிய வேளாளரால் பாண்டிய நாட்டில் குடியேற்றப்பட்டனரா?**

ஏற்கனவே இன்றைய வேளாளர் சமூகமோ, பள்ளர் சமூகமோ இதே பெயர்களுடன் பண்டைய நாளில் வழங்க வில்லை என்பதாகவும், பள்ளரே பண்டைய தமிழ் மூவேந்தர் மரபினராகப் புலப்படுவதாகவும், தமிழ் வேந்தர் ஆட்சி வீழ்ச்சியுற்றபின் அடக்கி ஒடுக்கப்பட்டு, தாழ்த்தப்பட்ட இந்நிலையில், புதிதாய் தோன்றிய வேளாண் மரபினர், தங்களைப் பண்டைய வேளாண்குடி எனவும், பண்டைய வேளாண் குடியைத் தங்கள் அடிமைகள், தேவேந்திரனுல் தங்களுக்குத் தொழில் செய்யப் படைக்கப்பட்டவர் எனவும் கதைகள் கட்டி நாட்டில் பரப்பினதாகவும், ஆனுல் அதை ஏற்பதற்கில்லை என்றும் கண்டோம். தங்களின் பழைய கூற்றுக்கு அரண் அமைக்கு முகத்தான், பள்ளரை வேளாண் மைத் தொழிலுக்காக, வெளியேயிருந்து பாண்டிய நாட்டில் தாங்கள் குடியேற்றியதாக, வேளாளர்

1. Page 122 untouchability in Tamilalagan-Dr. K.R. Hanumanthan.

பொய்க்கூற்றைப் பரப்பினரா? இம் மக்கள் பாண்டிய நாட்டில் குடியேற்றப்பட்டனர் என்ற கூற்றை ஏற்பதானுல், இவர்கள் எக்காலத்தில், எந்த நாட்டிலிருந்து, எவ்வாறு குடியேற்றப் பட்டனர் என்ற வினுக்கள் எழும். முதற்கண் இம் மக்கள் பாண்டிய நாட்டிலோ, ஏன் தமிழகத்திலோ, பிற நாட்டி லிருந்து குடியேற்றப்பட்டனர் எனக் கொள்ள, ஆதாரமாகத் தகுந்த சான்றுகள் வரலாற்று நூல்கள், இலக்கியங்கள், கல் வெட்டுகள், செப்பேடுகள் இவற்றில் இல்லை. இம் மக்கள் பாண்டிய நாட்டில் மட்டுமின்றிச் சோழ நாட்டிலும், கொங்கு நாட்டிலும் அதிக எண்ணிக்கையில் இருக்கக் காண்கிரும். தொண்டை மண்டலத்தில் மட்டும் இம் மக்களைக் காண்பது அரிது. செங்கற்பட்டு மாவட்டக் குறிப்பில், சோழர் காலத்தில் துளுவ வேளாளர் அங்கு நில உடைமையாளர்களாக இருந்த தாகவும், பள்ளர் அவர்களிடம் பண்ணைத் தொழிலாளர் களாகப் பணி ஆற்றியதாகவும், குறிப்புகள் காணப்படு கின்றன. ஆனுல் இந்நாளில் தொண்டை மண்டலத்தில் பள்ளர் சமூகம் பெரும்பாலும் இல்லை எனலாம். இதிலிருந்து தொண்டை மண்டலத்திலிருந்து இம் மரபினர் அனைவரும், பாண்டிய நாட்டில் குடியேற்றப்பட்டனரா என்ற வினு எழலாம். ஆனுல் மதுரை மாவட்டக் குறிப்பில் பிறிதொரு இடத்தில், J. H. நெல்சன் இன்றைய வேளாளர் பாண்டிய நாட்டில் பாண்டிய மன்னரால் குடியேற்றப்பட்டதாகக் குறிப் பிடுகிருர். மேலும் இவர், பண்டைய நாளில் பாண்டிய நாட்டில் வேளாளர் பெருமளவில் பாண்டியரால் குடியேற்றப் பட்டதாகச் செவி வழிச் செய்திகள் நிலவுவதாகவும் அது அனேகமாய் உண்மையாய் இருக்கலாமெனவும், அக் குடியேற்றம் தொண்டைமண்டலக் குடியேற்றத்துக்குச் சற்று முன்னே, பின்னே ஏற்பட்டிருக்கலாம் என்பதாகவும் கருது கிருர்.[1]

Mr. J. H. Nelson says :—

Tradition uniformly declares them (Vellalars) to be descendants of foreign immigration who were introduced by the Pandyas and it appears to be extremely probable that

1. Page 27 Manual of Madurai Country J. H. Nelson.

they are and that an extensive Vellala immigration took place at a rather remote period perhaps a little before or after the colonisation of tondaimandalam. [1]

இவர் கருத்துக்கொப்ப, பாண்டியன் உக்கிரப் பெருவழுதி நாற்பத்தெண்ணுயிரம் வேளாளர் குடிகளைப் பாண்டிய நாட்டில் குடியேற்றினுன் என்பதாக, அடியிற் கண்ட பழம் பாடல் ஒன்று வழங்கி வருதல் காண்க.

'அன்னமிடும் உக்கிரப் பெருவழுதி அம்புலியை ஆளும் நாளில், அரிதான நற்குடி நாற்பத்தெண்ணுயிரம் ஆராய்ந்து தேடிவைத்த நன்னிலந்தன்னில், ஏழு கூற்றம் பதினெட்டு நாடு, வெற்றித்திவாழ்கின்ற திருமிழலைக் கூற்றம், மிகுந் தமிழ்த்தார்க் கூற்றம், பித்தியான் அரும்பூர்க் கூற்றம், பாரமாளத் திருக்காளைக்கர கூற்றம், முத்தமிழ் சேர் தொரு ஹூர்க் கூற்றம், முதன்மையான கொடும்பாளூர்க் கூற்றம் எத்திசையான் இளையான்குடிக் கூற்றம்'.

டாக்டர் கால்டுவெல், வேளாளர், மறவர் மற்றும் சில வகுப்பார் வேற்றிடங்களிலிருந்து திருநெல்வேலி மாவட்டத்தில் குடியேறினதாகச் செவி வழிச் செய்திகள் நிலவும்போது, பள்ளர், பறையர் அவ்வாறு புதிதாய்க் குடியேறினதாக எவ்விதச் செய்தியும் வழக்கில் இல்லை என்கிருர். அவர் மேலும், பள்ளர், பறையர் என்ற பெயர்கள் நாகரிகத்தின் மேம்பாட்டை உணர்த்துவதாகவும், இம் மக்கள் பண்டைக் குடிகள், வேற்றிடங்களிலிருந்து தமிழகத்தில் குடியேறவில்லை என வலியுறுத்துகிருர். [2]

திரு. மறைமலையடிகள் இம்மக்களைப் பண்டைத் தமிழ்க் குடிகள் என்கிருர். [3]

---

1. Page 27 Manual of Madurai country. J. H. Nelson.
2. Page 4 History of Tinnevely Dt. Dr. R. Caldwell.
3. பக்கம் 24 வேளாளர் நாகரிகம் திரு. மறைமலையடிகள்.

செங்கற்பட்டு மாவட்டக் குறிப்பில் துளுவ வேளாளர் கன்னடத்தைச் சேர்ந்த துளுவ நாட்டிலிருந்தும், கொண்டை கட்டி, சோழிய வேளாளர் சோழநாட்டிலிருந்தும் பண்டைய நாளில் தொண்டை நாட்டில் குடியேற்றப்பட்டதாகக் குறிப்புகள் காணப்படுகிறது.[1] இதற்கு ஆதாரமாகப் பெரியபுராணம் பாடிய தொண்டைமண்டல வேளாண் மரபைச் சேர்ந்தவராகக் கூறப்படும் சேக்கிழாரின் முன்னோர், பண்டைய நாளில் வேற்றிடத்திலிருந்து குடியேற்றப்பட்ட நாற்பத்தெண்ணுயிரம் வேளாண் குடியைச் சேர்ந்தவர் என்று கி. பி. 14 ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த உமாபதி சிவாச்சாரியார்[2] அடியிற்கண்ட பாடல் மூலம் வெளிப்படுத்துகிருர்.

'நாடெங்கும் சோழன்முனந்தெரிந்தே ஏற்றும்
நற்குடி நாற்பத்தெண்ணுயிரத்து வந்த கூடல் கிழான்
புரிசை கிழான், குளவுசீர் வெண் குளப்பாளாக் கிழான்
வரிசைக் குளத்துழான் முன் தெடு புகழாரி
வருஞ்சிறந்து வாழச் சேக்கிழார் குடியிலிந்தத்
தேசம் உய்யப் பாடல்புரி அருண்மொழித் தேவரும்
பிறந்த பாலருவாயரும் வந்துதித்து வாழ்ந்தார்.'[3]

தொண்டை நாட்டில், சோழன் கரிகாலன் வேளாளரைத் துளுவ நாட்டிலிருந்து குடி ஏற்றினன் என்று செவி வழிச்செய்தி நிலவுவதாகவும், செங்கற்பட்டு மாவட்டக் குறிப்பில் காணப்படுகிறது. ஆகப் பாண்டிய நாட்டில் பாண்டியன் உக்கிரப் பெருவழுதியும், தொண்டை நாட்டில் சோழன் கரிகாலனும் வேளாளரைப் பிற இடங்களிலிருந்து கொண்டுவந்து குடியேற்றினர் என்று கூறும்போது, வேளாளர் பள்ளரைப் பாண்டிய நாட்டிலோ, அல்லது தமிழகத்தின் இதரப் பகுதியிலோ, கொண்டுவந்து குடியேற்றினர் எனக் கூறுவது ஏற்புடைத் தக்கதன்று. இவர்கள் கூற்றை ஏற்பதென்ருல், பள்ளரின்

1. Page 31 Chengalpat Dt. Manual. H. A. Stuart 1879.
2. சோழர் கால அரசியல் தலைவர்கள் காம, வெங்கட்ட ராமையா – பக். 141.
3. சேக்கிழார் புராணம் செ. 12.

குடியேற்றம் வேளாளரின் குடியேற்றத்தோடு நிகழ்ந்திருக்க வேண்டும்; அல்லது அவர்கள் குடியேற்றத்துக்குப் பின்னுல் நடைபெற்றிருக்க வேண்டும். ஆனுல் ஏற்கனவே குறிப் பிட்டது போல், அவ்விதம் பள்ளர் குடியேற்றமோ, ஏன் வேளாளர் குடியேற்றமோ நடந்தது என்பதற்குப் போதுமான சான்றுகள், பண்டையத் தமிழ் இலக்கியங்கள், கல்வெட்டுகள் இவற்றில் இல்லே எனலாம். இன்றைய வேளாளரை பண்டைய மருத நில உழவருடனும், வேளிருடனும் இணேத்து மரபு கூறப் பலரும் இக்காலத்தில் முனேவர். ஆனுல் இவர் பண்டைய உழவர் சமுதாயத்தையோ, வேளிர் பரம்பரை யையோ சேர்ந்தவர் அல்லர். தமிழ் இலக்கியங்கள், வரலாற்று நூல்கள், இதுவரை கிடைத்துள்ள கல்வெட்டு, செப்பேடு களின்படி கி. பி. 13ஆம் நூற்றுண்டுக்கு முன்பு வரை தமிழ கத்தில் பள்ளன் என்ற பெயருடைய ஒரு சமூகம் இல்லே என்று கூறலாம். இதிலிருந்து இன்றைய வேளாளர் இம் மக்களே கி. பி. 13ஆம் நூற்றுண்டில், அல்லது அதற்குப் பின் வெளி நாட்டிலிருந்து தமிழகத்தில் குறிப்பாகப் பாண்டிய நாட்டில் குடி ஏற்றினர் என்று கொள்வது ஏற்புடைத்தக்கதா என்பதை ஆராய்ந்தால், இம் மக்களின் மொழி, பழக்க வழக்கம் முதலி யவை, மற்றத் தமிழ் மக்களேப் போன்றவையாகவே, ஏன் பழந்தமிழரின் வாழ்க்கையை பெரிதும் ஒத்ததாகவே வழங்கக் காண்கிறேம். அதனுல் இம் மக்கள் வேற்றிடத்திலிருந்து தமிழகத்தில் குடியேற்றப்பட்டனர் என்ற கூற்றை ஏற்பதற் கிலலே. இவர்கள் குடியேற்றப்பட்டவர் அல்ல என்றுல், இவர் தமிழ்த் தொல்குடிகளா? இது பற்றி இம் மக்களேப்பற்றி எழுந்த பள்ளு நூல்களே ஆராய்வோம். பள்ளு நூல்கள் கி. பி. 17ஆம் நூற்றுண்டிலும், அதற்குப் பின்னும் தோன்றியவை. இப் பள்ளு நூல்களுக்கு முன்னேடியாக உள்ள முக்கூடற் பள்ளில்,

'உத்தரபாகமான சித்திரநதிக்குத் தென்பால்
ஓடும் பொருநையுடன் கூடும்போதே
அத்தனே காலந்தொட்டு இத்தனே காலமுங்கண்டு
அடியடி வாழையாய் நான் குடியில் வந்தேன் [1]

---

1. முக்கூடற் பள்ளு செ. 13.

வட பாகமான சித்திராநதி என்னும் சிற்றாற்றுக்குத் தென்பால் ஓடுகின்ற பொருநையாற்றுடனே, அந்தச் சிற்றாறு வந்து சேரும் காலத்திலேயே, அவ்வளவு காலந் தொடங்கி இவ்வளவு காலமும் கண்டு, வாழையடி வாழையாய் வருகின்ற பழங்குடியில் இம் மக்கள் வந்தவர் என்று மூத்த பள்ளி வாயிலாகப் பள்ளு ஆசிரியர் உணர்த்துகிறார்.[1] இதே போன்று செங்கோட்டுப் பள்ளிலும் ஒரு செய்யுள் காணப் படுகிறது.

'உத்தரமா நதியும் முத்த நதியும் சங்கம்
ஓடும் பவானியுடன் கூடும் போது
அத்தனை நாள் முதல் கொண்டித்தனை நாள் வரைக்கும்
அடியார் தமதடிமைக்குரியதாகி
எத்தேச காலமுந்தான் வற்றாத செல்வமும்
பெற்றிருந்து வளர்ந்த புரந்தரன் குலம் நான்'[2]

பள்ளு நூல்களை விடுத்து, கல்வெட்டுக்களை ஆராய் வோம். நெல்லை மாவட்டம் சங்கரநயினார் கோயில் தாலுகா, கரிவலம் வந்த நல்லூர் கல்வெட்டில்[3], இம் மக்களைப் பாண்டியன் உக்கிரப் பெருவழுதியுடன் தொடர்புபடுத்திக் குறிப்புகள் காணப்படுகின்றன. இதே விபரம் சீவிலிபுத்தூர் கல்வெட்டிலும்[4] பொறிக்கப்பட்டிருக்கிறது. இம் மக்கள் பண்டைய வேளாண்குடி மரபினர்; தமிழ் வேந்தர் ஆட்சிக்குப் பின், இவர் அடக்கி ஒடுக்கப்பட்டு கீழ்குடி ஆக்கப்பட்ட பின், அரசியலில் செல்வாக்குப் பெற்றவர் தங்களை வேளாளர், வெள்ளாளர் என்றும், பண்டைய வேளாண்குடியினரை தேவலோகத்திலிருந்து பாண்டியன் உக்கிரப்பெருவழுதி அழைத்து வந்த கதை போன்றும், தொண்டை மண்டலத்தில் சோழன் கரிகாலன் அவரைச் சோழ நாட்டிலிருந்து குடியேற்றினதைப்

---

1. முக்கூடற் பள்ளு சேதுரகுநாதன் உரை.
2. ,, செ. 208.
3. ARE 432 / 1914.
4. ARE 588 / 1926.

போன்றும், தங்களையும் பாண்டியனும், சோழனும் குடியேற்றினர் என்று கதை புனைந்தார்களா? என்று கருத ஏதுவாகிறது.

அடுத்து திருவாளர்கள் S. பூரணலிங்கம் பிள்ளை, ந. சி. கந்தையா பிள்ளை போன்றோர் இம் மக்களைத் தொழில் மக்கள் என்பதாகக் கூறுவது ஏற்புடைத் தக்கதா என்பது பற்றி ஆராய்வோம்.

## 5. பள்ளர் பண்டைக் காலத் தொழில் வகுப்பினரா?

திரு. S. பூரணலிங்கம் பிள்ளை 'ஆரிய மரபில் நான்கு வருணங்கள் நிலவியது போன்று, தமிழர் சமுதாயத்திலும் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என நான்கு வகுப்புகள் உண்டு; இவர் உயிர் குடியினர் ஆனதால் திணை நில மக்களில் அடங்கார்; மருத நில மக்கள் உழவர்; தொழில் மக்கள் புரோகிதர், பள்ளர், பறையர், சக்கிலியர், சாணர், புலையார்' எனக் கூறுகிறார். டாக்டர் R. நாகசாமி 'உழவருடன், பள்ளர், பறையர் வயல்களில் தொழில் புரிவோர்' என்கிறார். திரு. அ. தட்சணாமூர்த்தியும், மருத நிலத்தில் உழுதுண்ணும் வேளாளர், உழுவித்துண்ணும் வேளாளர் என இரு பிரிவினர் இருந்தனர் எனவும், பள்ளர் பள்ளமாகிய கழனியில் தொழில் செய்தனர் என்றும் கூறுகிறார். திரு. ந. சி. கந்தையா பிள்ளையும் இவ்வாறே கூறுகிறார். J. H. ஹட்டன் மேனாட்டவர். இவர், பள்ளர் தீண்டப்படாத விவசாயத் தொழிலாளர் என்கிறார்.

மேலே கண்ட அறிஞரின் கருத்துப்படி, இன்றைய வேளாளர், வெள்ளாளர் பண்டைய உழவர் குடி; பள்ளர் அவரது பண்ணைத் தொழிலாளர். இந்த அறிஞரின் கூற்றுக்கு சான்று ஒன்றும் காட்டவில்லை. திரு S. பூரணலிங்கம் பிள்ளை குறிப்பிடும் தொழில் மக்கள் சாணர், சக்கிலியர், பள்ளர் என்ற வகுப்புகள் பண்டைய நாளில் இருந்தனவா? சக்கிலியர் தெலுங்கு மரபினர். இவர் விசயநகர ஆட்சி தமிழகத்தில் ஏற்பட்ட போது இங்கு குடியேறினர். இவர் தாய்மொழி

தெலுங்கு. சாணர் வகுப்பு பண்டைய நாளில் தமிழகத்தில் இல்லை என்றே கருதப்படுகிறது. இவர் இடைக்காலத்தில் ஈழவர் என வழங்கினர். இலங்கையிலிருந்து தமிழகத்தில் குறிப்பாக நெல்லை மாவட்டத்தில் குடியேறினதாகவே ஆராய்ச்சியாளர் கருதுவர்.[1 & 2] திருவாளர்கள் ந. சி. கந்தையா பிள்ளை, A. தட்சிணாமூர்த்தி, டாக்டர் R. நாகசாமி இவர்களும், பண்டைய உழவர் சமுதாயம், தற்கால வேளாளர், வெள்ளாளர் என்றே கருதுகின்றனர். இவர்கள் இன்றைய வேளாளர், வெள்ளாளரை உழவர் எனக் கொண்டால், பள்ளர், கடைசியர், உழத்தியர், கடை வருணத்தார் எனக் கருதுவர் போலும். இவர்கள் கருத்து ஏற்புடைத் தக்கதா என்பது பற்றி ஆராய்வோம். ஏற்கனவே இம் மக்கள் பற்றி ஆராய்ந்ததில், இவர்கள் பண்டையத் தமிழ் வேளாண் மரபினர்; வேளாண்மைத் தொழிலை முதன் முதலில் தமிழகத்தில் தோற்றுவித்தவர்; பண்டையத் தமிழ் வேந்தருடன் தொடர்புடையவர்; நாட்டில் பஞ்சம் ஏற்பட, இவர்கள் கிணறுகள் தோண்டி வேளாண்மை கண்டு, பஞ்சத்தைப் போக்க, அதனால் பாண்டியன் உக்கிரப்பெருவழுதி மனமகிழ்ந்து, மன்னர்க்குரிய விருதுகளையும், சிறப்பாகத் தேவேந்திரப் பட்டமும் வழங்கி சிறப்பித்தான் எனவும், விசயநகர ஆட்சியில், இவர்கள் அடக்கி ஒடுக்கப்பட்டதன் விளைவாக, இவர்கள் அடிமை நிலை எய்ய, சமீப காலத்தில் அரசியலில் செல்வாக்குப் பெற்றவர், தங்களைப் பண்டைய வேளாண்குடி, வேளாளன், வெள்ளாளன் என வழங்கியும், இம் மக்களைத் தங்களின் அடிமைகள், வேற்றிடத்திலிருந்து பாண்டிய நாட்டில் குடியேற்றினோம் எனப் பலவாறகக் கதைகள் புனைந்து, நாட்டில் பரப்பினர் எனக்கருத ஏதுவாகிறதாகவும் கண்டோம். ஆதலால் பள்ளர் பண்டைக் காலத் தொழில் வகுப்பினர் அல்ல; மாறாக அவர் பண்டைய உழவர் குடி என்ற முடிவே பொருத்தமாகும். ஏற்கனவே குறிப்பிட்டது போல், இன்றைய வேளாளர், வெள்ளாளருக்கு உழவுத்

1. History of Shanars of Tinnevely Dt. Dr. R. Caldwell.
2. Nadars of South India Dr. Robert L. Hard grave Jr.

தொழில் குறிப்பாக, வயல் உழவு தெரியாது. இவர்கள் பெரிதும் வேறு தொழிலே செய்கின்றனர். இவர்களைச் சூத்திரர் என்றே மேனுட்டவர், டாக்டர் கால்டுவெல் உட்படக் குறிப்பிடுகின்றனர். உழவுத் தொழில் தெரிந்தவர் தான் உழவர் எனப் பண்டைய நாளில் சிறப்பிக்கப்பட்டனர். அத்துடன் அக்கால மருத நில உழவர், உழு தொழிலுடன், போர்த் தொழிலும் செய்தனர் என்பது, 'ஏரும் போரும் இணைபிரியாது' என நாட்டில் வழங்கிவரும் பண்டைய வழக்கால் அறியலாம். ஆனுல் இக்கால வேளாளர், வெள்ளாளரிடம் வயல் உழவு மட்டுமின்றி போர் ஆற்றலும் இல்லை என்பதால், இவர்கள் பண்டைய உழவர் குடியாக இயங்கியதாகக் கருதவியலாது. பண்டைய உழவர் குடி என்பதைத் திட்டமாய் அறிய சங்க கால மக்கள் பிரிவை ஆராய்ந்தால் நன்கு விளங்கும். இதைப் பின்னுல் மேற்கொள்வோம்.

உழவரை வேளாளர் எனக்கொண்டால், அவருக்கு வேளாளன் பற்றுடைய பதினெண் தொழில் மக்கள் உண்டு. அவர்கள் கைக்கோளர், தச்சர், கொல்லர், கம்மாளர், தட்டார், கன்னுர், செக்கார், மருத்துவர், குயவர், வண்ணுர், துன்னர், ஓவியர், பாணர், கூத்தர், நாவிதர், பாகர், பறையர் எனப்படுவர். இவர்களில் பள்ளர் அடங்காதது காண்க.

தமிழகம் விசய நகர ஆட்சிக்குட்பட்ட பிறகு, மதுரையில் விசய நகர அரசின் பிரதிநிதியாக இருந்த விசுவநாத நாயக்கன், நாட்டை 72 பிரிவுகளாகப் பிரித்து, அவற்றை நிர்வகிக்கப் பாளையப்பட்டுகளை நியமித்தான். இவர்கள் பெரும்பாலும் தெலுங்கரும், மறவரும், ஒரு சிலர் வன்னியரும், கள்ளரும் ஆவர். இப்பாளையப்பட்டு முறையால் நிலங்கள் அரசுக்குச் சொந்தமாயின. ஏற்கனவே நில உடைமை யாளராயிருந்த வேளாண் மரபு, நிலமற்ற தொழிலாளராக மாறினர். தமிழ் வேந்தர் காலத்தில் வேளாண் மரபினர் அரசியலில் உயர் மட்டத்தில் செல்வாக்குடன் விளங்கினர். அவரது ஆட்சிக்குப் பின் இவரது நிலை தாழ்ந்தது. இக் காலத்தில் தான் பெரும் பண்ணைகள் தோன்றின.

இக்கால வேளாளரில் காரைக்காட்டார் என்ற பிரிவினர் விசுவநாத நாயக்கன் படைத் தலைவனும், அமைச்சனு மான அரியநாயகம் என்பவனின் ஆதரவால் தென் மாவட் டங்களில் குடியேற்றப்பட்டு அரசு பதவிகளும், நிலங்களும் பகிர்ந்தளிக்கப்பட்டனர் என்பது முக்கூடல் பள்ளு முதலான நூல்களால் விளங்குகிறது. இவர்கள் சமீப காலமாய் கார்காத்த வேளாளர்என வழங்கி வருகின்றனர். அக்காலத்தில் இவர்கள் சிறுபான்மையினரே. ஆக அன்று காரைக்காட்டார்; இன்று கார்காத்தார் ஆகிவிட்டனர். நில உடைமையாளர் பாளையப் பட்டுகள், தெலுங்கர், மறவர், வன்னியர், கள்ளர் ஆனதால் பெரும் பண்ணைகள் இவர்களிடமே அடக்கம். இவர்களைத் தவிர்த்து, சில கோயில்களுக்கும், மடங்களுக்கும் நிலங்கள் சொந்தமாயிருந்தன. ஆதலால் இக் காலத்தில் கூட தற்கால வேளாளர், வெள்ளாளர் பண்ணையாராக இயங்க வில்லை. பல்வேறு பிரிவினரும், குல உயர்வுக்காக, பொருளா தாரம், கல்வி இவற்றில் முன்னேறியதன் பயனாக தங்களை வேளாளர், வெள்ளாளர் என வழங்கினதாகவே பலரும் கருது கின்றனர். குறிப்பாகப் பாண்டிய வேளாளர், பாணர்; சோழிய வெள்ளாளர், கலப்பினம்;[1] கொங்கு வேளாளர் வேட்டுவர்; துளுவ வேளாளர் இடைக்காலத்தில் அகம்படிய ராக உருவானவர்; நாஞ்சில் நாட்டு வேளாளர் தேவரடியார் வழி வந்தோர்;[2] நாங்குடி வேளாளர் அல்லது செவலைப்பிள்ளை மார் கொண்டையன் கோட்டை மறவரிலிருந்து உருவானவர் என மாவட்டக் குறிப்புகளும், தென்னிந்தியக் குலங்களும் குடி களும் என்ற நூல்களிலிருந்தும் அறிகிறோம். கன்னியாகுமரி மாவட்டம், சுசீந்திரத்திலுள்ள, சைவ வேளாளர் ஏற்கனவே பூக்கட்டுதல் பதிகம் பாடும் தொழிலில் ஈடுபட்டவர்.[3]

1871 ஆம் ஆண்டு மக்கள் குடிக் கணக்கெடுப்பில் இக் காலத்தில் வழங்கும் கார்காத்த வேளாளர், சைவ வேளாளர், கொங்கு வேளாளர், கொண்டை கட்டி வேளாளர், இசை

---

1. Page 386 Castes & Tribes of Southern India Vol VII.
2. Page 377 do E Thurston.
3. Page 246 Suschindram Temple Dr. K. K. Pillay.

வேளாளர் முதலிய பல பிரிவுகள் குறிக்கப்படாததிலிருந்து இப்பிரிவுகள் 1871 ஆம் ஆண்டிற்குப் பிறகே உற்பத்தியாயின என்பது தேற்றம்.[1] வெள்ளாளரில் 1. சைவ வெள்ளாளர், 2. சாயக்கார வெள்ளாளர், 3. ஈரங்கொல்லி வெள்ளாளர், 4. கொண்டை கட்டி வெள்ளாளர், 5. கும்பிடுசட்டி வெள்ளாளர், 6. கரையான் வெள்ளாளர், 7. பட்டினத்து வெள்ளாளர், 8. கீரைக்கார வெள்ளாளர், 9. கொடிக்கால் வெள்ளாளர், 10. அகம்படிய வெள்ளாளர், 11. நீர்பூசி வெள்ளாளர், 12. கருக்கு மட்டை வெள்ளாளர், 13. கசுல வெள்ளாளர், 14. அச்சு வெள்ளாளர், 15. வருண குல வெள்ளாளர், 16. மலையாளி வெள்ளாளர், 17. இர்குடி வெள்ளாளர், 18. குக வெள்ளாளர், 19. கரைத்துறை வெள்ளாளர், 20. இல்லம் வெள்ளாளர், 21. புளுவன் வெள்ளாளர், 22. அரும்பு கட்டி வெள்ளாளர் என ஏராளமான உட்பிரிவுகள் இருக்கின்றன.[2]

Mr. Edgar Thurston says:-

Instances of members of other castes who have assumed the name are position of Vellalas are Vettuva Vellalas who are really Vettuvars; the Puluva Vellalas who are only Puluvans; the Illam Vellalas who are Panikkans; the Karaiturai Vellalas (Lord of the Shore) who are Karayans; the Karukumattai (Palmyrah leaf stem) Vellalas who are Shanans, the Gazula (Bangle) Vellalas who are balijar; the Guha (Rama's boat man) Vellalas who are Sembadavans and the Irkudi Vellalas who are Vannans. The children of dancing girls also often call themselves Mudali and claim in time to be Vellalas and cven Paraiyans assume the title Pillai and trust to its eventually enabling them to pass themselves off as members of the caste. The name Acchu Vellalas has been assumed by Karaiyans and Pattanavan.

1. Census of Madras Presidency 187 (No. 16 caste vih)
W. R. Cornish, F. R. C. S., Surgeon Major
2. Page 376-377 Castes Tribes of Southern India Vol VII.
E. Thurston.

call themselves Varunakula Vellalas or Varunakula Mudali after Varuna - the god of the waters. At times of census many hill malayalis return themselves as Vellalas in accordance with the tradition that they are Vellalas who migrated to the hills. Some thieving Koravas style themselves Agambadiyar Vellala or Pillai and have to some extent adopted the dress and manners of the Vellalas. In Tiruvancore to which state some Vellalas have migrated, males of Devadasi (dancing girl) caste some times call themselves Nanchinad Vellalas'][1]

* * *

'The Solias (or Cholias) are numerous and ubiquitous They are generally regarded as of doubtful descent since Parvenus who wish to be considered Vellalas usually claim to belong to this subdivision'[2]

*1891* இல் எடுத்த குடிக்கணக்குப்படி வெள்ளாளரில் *930* உட்பிரிவுகள் இருந்ததாகக் கணக்கெடுக்கப்பட்டிருக்கிறது.[3] இவர்களில் அனேகம் இடத்துப் பெயரையே பிரிவாகக் கொண்டது. இத்தனை உட்பிரிவுகள் இருந்தாலும், இவர்கள் மத்தியில் நெல், கரும்பு, வாழை உற்பத்தி செய்வதைக் குறிக்கும் வேளாளப் பிரிவுகள் இல்லை என்பது கண்கூடு. இக் காரணத்தினால் இவர்கள் மருத நில வேளாளர் அல்ல எனக் கருத ஏதுவாகிறது. இவர் பல்வேறு மரபிலிருந்து வேளாளராக உருவானதினாலேயே, 'கள்ளர், மறவர், கனத்தால் அகம்படியர், மெள்ள மெள்ள வந்து வெள்ளாளராகி, முதலியார் என்று சொன்னார்'; 'காயிலே கெட்டது கத்தரிக்காய் சாதியிலே கெட்டது வெள்ளாள சாதி' என்ற பழமொழிகள் தமிழகத்தில் வழக்கில் வந்தன. கத்தரிக்காயை எல்லாவிதமான காய்கறிகளுடன் சேர்த்து சமைக்கலாம். அதே போன்று வெள்ளாளர் எல்லா மரபினரும் கூட்டுச் சேர்ந்தவர் என்று இப் பழமொழி

---

1. Page 376-77 Castes and Tribes of Southern India Vol. VII E Thurston.
2. Page 386 Castes and Tribes of Southern India Vol. VII do.
3. Page 232 1891 Census Vol XIII H. A Stuart.

பொருள்படும்.[1] பண்டையத் தமிழ் மரபுப்படி வேளாளர் என்ருல் கொடையாளி, உபகாரி என்று பொருள். தமிழகத்தி லுள்ள சில குறிப்பிட்ட மரபினரின் குணதிசயங்களைக் கண்டறிந்த மேனுட்டு அறிஞர் நெல்சன் இக்கால வேளாளரை சுயநலக்காரர்[2] (Selfish) எனக் கூறுகிருர்.

Mr. Nelson says :-

"In character, disposition, the several castes and tribes differ from one another very considerably. The pharasaical Brahmin, the lawless Marava, the mean chetti, the selfish Vellala, the dull Nayakkan, the Skulking Kallan, the restless Kurava, the licentious pariah - these and a series of other castes are distinguishable each by peculiar traits of character etc."[2]

திரு. மறைமலையடிகள் கூட, வேளாளரைப் பற்றிக் குறிப்பிடுகையில், இவர்கள் வேறு மரபைச் சேர்ந்த விருந்தி னரை வீட்டின் வெளியே பசியுடன் உட்கார வைத்து, தாங்கள் உண்டபின், மிச்ச உணவை அவர்களுக்கு அளிப்பதாகக் கூறுகிருர். இவர் கூறுவதாவது :-

"வேளாளர் வகுப்பினரிற் சிலர் இக்காலத்தில் ஆரியப் பார்ப்பனரைப் பார்த்து, தாமும் அவர் போல் ஆகல் வேண்டி, விருந்தினராய் வந்த வேற்றினத்தாரைப் புறத்தே வைத்துத் தாம் உண்ணுதலும், தாம் உண்டு மிஞ்சிய மிச்சிற் சோற்றை அவர்க்கு இடுதலும், தாம் உண்டபின் எஞ்சிய உணவுகளைப் பறையர்க்கு இட்டால் தமக்குத் தீட்டாகும் எனப் பிழைபடக் கருதி, அவற்றை நிலத்தின் கீழ் வெட்டிப் புதைத்தலுஞ் செய்து நடத்தல் உண்மையே."[3] ஆனுல் வேளாளர் பண்பாடு விருந்தினரை வெளியே பசியுடன் காக்க வைத்து விட்டு, தாங்கள் மட்டும் தனியே உணவு உண்ணுர். மாருக

1. Page 377 Castes & Tribes of Southern India Vol VII E. Thurston.
2. Page 16 Manual of Madurai Dt. Mr. J. H. Nelson.
3. பக்கம் 26 – 27 வேளாளர் நாகரிகம் திரு. மறைமலையடிகள்.

அவர் விருந்தினரை அன்புடன் உபசரித்து விருந்திட்ட பிறகே தாம் உணவு உட்கொள்வர். இதனுலேயே, 'வேளாளன் என்பவன் விருந்திருக்க உண்ணுதான்' என்ற பழமொழி நாட்டில் வழக்கில் உள்ளது. வேளாண்மை என்பதற்கு நிகண்டில் 'ஈகையும், கொடையும் விளம்பும்' என்று கண்டிருப்பது காண்க. இதிலிருந்தே இவர் பண்டைய வேளாண் மரபு அல்ல. இவர் புதிதாய் தோன்றியவர் எனக் கருத இடமாகிறது. ஆக திருவாளர்கள் S. பூரணலிங்கம் பிள்ளை, ந. சி. கந்தையா பிள்ளை, A. தட்சிணுமூர்த்தி, டாக்டர் R. நாகசாமி போன்ருேர் இக்கால வேளாளரைப் பண்டைக் கால உழவருடன் ஒப்பிட்டு, பண்டைய உழவர் குடியாகக் கருதப்படும் பள்ளரை அவர்களின் (இன்றைய வேளாளரின்) தொழில் மக்கள் எனப் பகர்வது தவறு.

இவர்கள் அறியாமையினுல் இவ்வாறு கூறுவதாக கருதுவதற்கில்லை. தமிழரின் உண்மை வரலாற்றைத் திரையிடும் தீய நோக்கோடே இவ்வாறு கூறினரோ என்றே கருத ஏதுவாகிறது. இவர் மட்டுமல்ல, இவரைப் போன்றே பல தமிழ்ப் புலவர்களும் மற்றும் வரலாற்ருசிரியரும், நாள்தோறும் எழுதி வருகின்றனர். இவர்கள் போக்குக்கு காலந்தான் பதில் இறுக்க வேண்டும்.

### 6. பள்ளமாகிய வயலில் தொழில் செய்தவர் பள்ளர் எனப் பெயர் பெற்றனரா ?

தமிழகத்தில் சாதிகளை ஏற்படுத்தும் காலத்தில் பள்ளர் பள்ளமாகிய நஞ்சை நிலங்களில் தொழில் புரிந்து வந்ததாலும் நஞ்சைப்பயிர் சாகுபடியில் இவர் தேர்ச்சி பெற்றவர் என்பதாலும், பள்ளர் என்று பெயர் பெற்றனர் என்று குலங்களும் குடிகளும், மற்றும் மாவட்டக் குறிப்புகள் முதலிய நூல்களில் குறிப்பிடப்பட்டிருப்பதை ஏற்கனவே கண்டோம். பள்ளர் என்ற பெயர் ஏற்பட்டதற்கு இந் நூல்களில் கூறப்பட்டிருக்கும் காரணங்கள் சரிதாஞ என்பதை ஈண்டு ஆராய்வோம்.

தமிழகத்தில் பண்டைய நாளில் சாதிகள் பிறப்பினுல் ஏற்படவில்லை என்பதை அறிஞர் ஒப்புக்கொள்வர். மக்கள் நாகரிகமின்றி பெரும்பாலும் காட்டுவாணர்களாய் தனித் தனிக் குடிகளாய் (Tribes) வேட்டையாடியும், சூரையாடியும், கால்நடைகளை ஓட்டித் திரிந்தும் வாழ்க்கை நடத்தினர். ஆற்ருேரங்களில் நெற்பயிர் சாகுபடி தோன்றிய பிறகு தான் ஒரு நிலையான குடியிருப்பும், தொழில்களும், நாகரிகமும் ஏற்படலாயின. நெற்பயிர் சாகுபடியாளருக்கு உதவியாகக் கன்னுர், கொல்லர், கற்கொல்லர், தச்சர், கம்மாளர், செக்கார், மருத்துவர் எனப்பல தொழிலாளர் தோன்றினர். இப்பெயர்கள் ஆரம்பத்தில் தொழில் காரணமாய்த் தோன்றி பின் குலப் பெயராக நிலைத்தது. இதனுலேயே வள்ளுவர் ‘பிறப் போக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையான்’ என்ருர். (குறள் 972) உதாரணமாக வலையர் வலையைக்கொண்டு மீன், பறவைகளைப் பிடிப்பவர்; இடையர் கால் நடைகளைப் பேணுபவர்; பரதவர், பரவை யாகிய கடலில் தொழில் புரிபவர். இவ்வாறே பல தொழிற் பெயர் அல்லது காரணப்பெயர் குலப்பெயராக அமைந்தன. இதே போன்று மருத நிலத் தலைமக்கள் உழவுத் தொழிலில் ஈடுபடும்போது உழவர் எனவும், அவர் போரில் ஈடுபடும் போது, வேறு பெயராலும் வழங்கினர். அக்காலத்தில் உழவர் வேளாளர் என்று வழங்கவில்லை. அவர் மரபுப் பெயர் வேறு. வேளாளர், என்ற பெயர் இடைக்காலத்தில் ஏற்பட்டது. இடைக் காலத்தில் ஏற்கனவே குறிப்பிட்டது போல, நச்சினுர்க்கினியர் உழவர் என்பதற்கு உழுதுண்ணும் வேளாளர் உழுவித்துண்ணும் வேளாளர் என இரு பிரிவினர் எனவும், உழுதுண்ணும் வேளாளர் தங்களுடையவும், பிறர் நிலத்தையும் உழுதுண்பவர் எனவும், உழுவித்துண்போர் தண்டத் தலைவரும், மண்டலத் தலைவரும், முடியுடை மன்னர்க்கு மகட் கொடை கொடுப்பதற்குரியவர் எனவும் கூறுகிருர். இவர் கூற்று சரி என்று கொண்டால் இன்றுள்ள வேளாளரில் யார் உழுதுண்பவர் யார் உழுவித் துண்பவர்? என்ற விணுக்கள் எழும். இவ் விணுக்களுக்கு இது வரை தமிழ் அறிஞர் ஒருவரும் சரியாக விளக்கம்

கொடுக்கவில்லை. ஏன்? வேளாளர் யார்? வெள்ளாளர் யார்? என்பதற்கே பொருள் கொடுக்கத் தயங்குகின்றனர். இது பற்றி எல்லோரும் குழப்பி விட்டே சென்றிருக்கின்றனர். பள்ளர் தங்களைத் தேவேந்திர குல வேளாளர் என்று உயர்வாக கூறிவருவது பற்றி ஏற்கனவே கண்டோம். ஆனால் பிற சமூகத்தார் இவர்களைப் பள்ளன், தீண்டப்படாதவன், என்கின்றனர். மேலும் பள்ளர் நஞ்சை சாகுபடி செய்வதால் பள்ளர் என்பதாகப் பெயர் கொண்டால், இக்கால வேளாளர் வெள்ளாளர் புஞ்சை சாகுபடி செய்பவரா? வேளாளர் என்றால் உபகாரி கொடையாளி என்று பொருளாகிப் பின்னால் பயிர்த் தொழில் செய்பவரை உணர்த்தியது. வெள்ளாளர் என்றால் வெள்ளத்தை அடக்கி ஆள்பவர் என்று பொருள். ஆக இரு பெயரும் மருத நில உழவருக்கே சிறப்பாகப் பொருந்தும். சிலர் வெண் களமர் என்பதிலிருந்து வெள்ளாளர் என்று வழங்கலாயிற்று என்பர். தமிழர் கரியவர் என்பது 'தென்னவன் கரியவன்' என்று வழங்கப்படுவதிலிருந்து அறியலாம். நிகண்டுகளில் வண்களமர் என்று தான் கண்டிருக்கிறது. வெண்களமர் என்பதற்குச் சங்க இலக்கியங்களில் சான்று இல்லை. நச்சினார்க்கினியர் வெண்களமர் என்று ஒரு இடத்தில் மேற்கோள் காட்டியிருப்பதாகச் சிலர் கூறுவர். இது பொருந்தாக் கூற்று. இன்றைய வேளாளர் வெள்ளாளருக்கு நஞ்சைப் பயிர் சாகுபடி செய்யத் தெரியாது. அதனாலேயே இவர்கள் வேறு மரபினரைக் கொண்டு இத் தொழிலைச் செய்து வருகின்றனர். புஞ்சை நிலத்தில் பயிர் செய்வதை விட நஞ்சை நிலத்தில் பயிர் செய்வது சிறந்தது என்பதற்கு 'மேட்டுப் புஞ்சையை உழுதவனும் கெட்டான், மேனி மினுக்கிய மணந்தவனும் கெட்டான்' என்ற பழமொழி தமிழகத்தில் வழங்கி வருவது காண்க. ஆக மேட்டு நிலமாகிய புஞ்சையில் உழுதொழில் மேற்கொள்பவரை வேளாளர், வெள்ளாளர் என்றும், மக்கள் எல்லோரும் விரும்பும், ஏன் தெய்வத்திற்கே அமுது படைக்க உதவும் நெல் உற்பத்தி செய்பவர் பள்ளர், கீழ்சாதி என்று கொள்வது அறிவிற்குப் பொருந்தாது. வள்ளுவன் உழுவான்

'உலகத்தார்க்கு ஆணி' சுழன்றும் 'ஏர்ப்பின்னது உலகம்' 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்' என்றெல்லாம் கூறினது, வயல் உழவனுக்கே சிறப்பாகப் பொருந்தும். பண்டைய நாளில் வயல் உழவன்தான் விளைபொருளில் ஆறிலொரு பங்கை அரசுக்குத் திரையாகச் செலுத்தினன். அது மட்டு மின்றி இரப்போர்க்கும், துறப்போர்க்கும், துணையாக இருந்தான். அவ்வாறு சிறப்பிக்கப்பட்ட உழவர்குடி ஏன் பள்ளர் என்று பெயர் பெற்றனர். இடைக்காலம் வரை பள்ளர் என்ற பெயர் தமிழகத்தில் வழங்கவில்லை என்பது வரலாற்றுக் குறிப்புகள், இலக்கியம், கல்வெட்டுகள் மூலம் நன்கு விளங்கும்.

மாவட்டக் குறிப்புகள், தென்னிந்திய குலங்களும் குடிகளும் என்ற பல நூல்களில் பள்ளர் என்ற பெயர் பள்ளம் என்ற சொல்லின் அடிப்படையிலிருந்து பிறந்ததாகக் கண்டி ருக்கிறது. ஆனல் H. A. ஸ்டுவர்ட் என்பவர் இக் கருத்தை ஒப்புக்கொள்ளவில்லை.[1]

(The ordinary derivation of the name (pallan) is from pallam low wet land but this is not satisfactory).[1]

ஆதலால் பள்ளம் என்ற சொல்லின் பொருள் பற்றி ஆராய்வோம். பிங்கல நிகண்டின்படி பள்ளம் என்றால் ஞொள்ளல், தாழ்வு, படுகர், குழி, இழிவு, பயம்பு என்று பொருள்.[2] இந் நிகண்டு கி. பி. 10-ஆம் நூற்றுண்டைச் சேர்ந்ததென்பர். சூடாமணி நிகண்டின்படி, பள்ளம் என்றால் இழிவு, கீழ், பயப்பு, தாழ்வு, படுகர், குழி, ஞொள்ளல், உவளகம், கிழக்கு, அவல் என்று பொருள். இந் நிகண்டு கி. பி. 16ஆம் நூற்றுண்டைச் சேர்ந்தது. ஆக இந்த இரண்டு நிகண்டுகளின்படி, பள்ளம் என்பது வயல், கழனி, புலம் ஒன் றையும் குறிக்கவில்லை. வயல் என்ற சொல்லுக்கு பிங்கல நிகண் டின்படி கழனி, புலம், மருதம், சேறு, பண்ணை, பானல், பகர் செய் என்று பொருள். பள்ளம் வயலைக் குறிக்காததால் பள்ளம்

1. Page 247. 1891 Census Report Vol. XIII. H. A Stuart.
2. பிங்கல நிகண்டு 488.

என்பதை வயலாகக்கொண்டு, வயலில் தொழில் புரிவோர் பள்ளர் எனப் பெயர் பெற்றனர் என்று கொள்வது தர்க்கரீதிக்குப் பொருந்தாது. பின் எவ்வாறு இப்பெயர் ஏற்பட்டது? சூடாமணி நிகண்டில் பள்ளம் என்பதற்குக் கீழ், கிழக்கு என்றும், பொருள் கண்டிருக்கிறது. பள்ளர் பெரும்பாலும் ஊர் நத்தத்தின் கீழ் பகுதியில் குடி இருந்து வருவதாக ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறோம். தமிழகமானது மேற்கே மேடாகவும், வரவரக் கிழக்கே பள்ளமாகவும் இருந்து வருவதை, மேற்கேயுள்ள மேற்குத் தொடர்ச்சி மலையையும் கிழக்கேயுள்ள கடலையும் கொண்டு புரிந்து கொள்ளலாம். தமிழகத்திலுள்ள ஆறுகள் எல்லாம் மேற்கே தோன்றி கிழக்கே கடலில் கலப்பதும் இதற்குச் சான்றாகும். ஆக மேற்கு மேல், கிழக்கு கீழ் என்ற திசைச் சொற்கள், மேல் மேடு, கீழ் பள்ளம் என்ற அடிப்படையிலேயே பிறந்திருக்கின்றன. ஆனால் மேற்கு, கிழக்கு என்ற சொற்கள் பிற்கால வழக்காகத் தோன்றுகிறது. பண்டைய நாளில் மேற்கு என்பதற்குக் ‘குட’ என்றும், கிழக்கு என்பதற்குக் ‘குண’ என்றும் வழங்கியிருக்கிறது என்பது ‘தென் குமரி வட பெருங்கல் குணகுட கடலா வெல்லை’[1] என்று தமிழகத்தின் எல்லையைப் பற்றி சங்க இலக்கியத்தில் வரும் செய்யுளால் அறியலாம். இதனாலேயே பண்டைய நாளில், சேர நாட்டைக் ‘குடபுலம்’ எனவும், சோழ நாட்டைக் ‘குணபுலம்’ எனவும் வழங்கினர். ஆகத் தமிழகத்தின் மேற்கு மேடாகவும், கிழக்கு பள்ளமாகவும் இருப்பதைக்கொண்டு, பள்ளர் ஊர் நத்தத்தின் கிழக்குப் பகுதியில் குடியிருப்பதால், இவர்களின் குடியிருப்பை அடிப்படையாகக்கொண்டு, பள்ளர் என்று பெயர் பெற்றனரா? என்ற வினா எழுகிறது. பொதுவாக மேற்கே இருக்கும் குடியிருப்பை மேல்குடி என்றும், கிழக்கே இருக்கும் குடியிருப்பைக் கீழ்குடி என்றும் வழங்குவது இயல்பு. ஆனால் மேல்குடி, கீழ்குடி என்று வழங்குவதற்கு இந்த இரண்டு குடியிருப்புகளும் ஒன்றோடொன்று சேராமல் தனித்தனியாய் இயங்க வேண்டும்; ஆனால், சாதி இந்துக்களும், பள்ளரும் ஒரே நத்தத்தில் ஒருவருக்கொருவர் அருகாமையிலேயே

1. புறநானூறு செ. 17.

இருக்கிறார்கள். பறையர் மட்டும் ஊருக்கு வெளியே ஒதுக்குப் புறமாய்த் தனியாய் இருக்கிறார்கள். என்றாலும் பள்ளரின் குடியிருப்பின் அமைப்பைக்கொண்டு, இவர் குடியிருப்பைக் கீழ்குடி, பள்ளக் குடி என்று கொண்டு அதனால் கீழ்சாதி, பள்ளர் என்று பெயர் பெற்றனர் என்று கூறலாமா? இது சாத்தியமன்று. ஏனெனில் ஏற்கனவே கூறியது போன்று இரு பிரிவினரும் ஒரே நத்தத்திலேயே வசிக்கிறார்கள். பின் எவ்வாறு பள்ளர் என்று பெயர் பெற்றனர்? என்ற கேள்வி எழுகிறது.

பிங்கலந்தை, சூடாமணி ஆக இரண்டு நிகண்டு களிலும், பள்ளம் என்றால் தாழ்வு, இழிவு, கீழ் என்று பொருள் கண்டிருக்கிறது. இச் சொற்களை அடிப்படையாகக்கொண்டு பார்த்தால், பள்ளர் என்பதற்கு இழிந்தவர், தாழ்ந்தவர், கீழ் மக்கள் என்று பொருள் படும். சமூகத்தில் இம் மக்கள் தாழ்த் தப்பட்டவராகவும், தீண்டப்படாத கீழ்சாதியாகவும் கருதப் பட்டுவருவதைக் கவனத்தில் கொண்டு பார்த்தால், இழிந்த, தாழ்ந்த, கீழ்சாதி என்று சுட்டவே பள்ளர் என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது எனக் கொள்ளலாம். மாறாக பள்ளமாகிய வயலில் தொழில் செய்து வந்ததால், பள்ளர் என்று பெயர் பெற்றனர் என்று கொள்வது, தர்க்கரீதிக்குப் பொருந்தாது. இம் மக்கள் தங்களைப் பள்ளர் என்றோ, அல்லது தங்கள் குடி யிருப்பைப் பள்ளக்குடி, பள்ளத் தெரு என்றோ, பிற சமூகத் தினர் கூறுவதை அனுமதிப்பதில்லை. குறிப்பாகப் பாண்டிய நாட்டிலும், கொங்கு நாட்டிலும், இவர்களைக் குடும்பன், பண்ணாடி, தேவேந்திரன் என்றே பெரும்பாலும் மற்ற மரபினர் வழங்கி வருகின்றனர். அதே போன்று இவர்கள் குடியிருப்பையும், குடும்பமார் தெரு, தேவேந்திரர் தெரு, பண்ணாடி தெரு, என்றே வழங்கி வருகின்றனர். சோழ நாட்டில் அதிலும் குறிப்பாகத் தஞ்சை மாவட்டத்தில் கோயில், மடங்கள் மற்றும் பெருநிலக்கிழார்கள் இவர்களுக்குப் பெரும்பாலான நிலங்கள் உள்ளடக்கம் ஆனதால், இங்கு இம் மக்கள் அண்மைக்காலம் வரை கொத்தடிமைகளாய் இருந்து வந்தனர். இங்கு இவர்களை மற்ற சமூகத்தார் பள்ளர் என்றும்

இவர்கள் குடியிருப்பைப் பட்சேரி, பள்ளக்குடி என்றும் வழங்கி வருகின்றனர். பொதுவாக இம் மக்கள் மற்ற சமூகத்தினர், தங்களைப் பள்ளன் என்று வழங்குவதை வெறுக்கின்றனர் என்பதற்கு, இம் மக்கள் பற்றி எழுந்த முக்கூடல் பள்ளில்:-

'பக்கமே தூரப் போயும்
தக்க சோறென் வெள்ளாமை
பள்ளா பள்ளா என்பார்
மெய் கொள்ளாதவர்
மைக்கடல் முத்துக்கீடாய்
மிக்க நெல் முத்துண்டாக்கும்
வடிவழகக் குடும்பன்
நானே யாண்டே [1]

என்று வரும் செய்யுள் சான்றாகும்.

'உண்மையைத் தெரிந்து கொள்ளாதவர் பள்ளளா-பள்ளா விலகு என்பர். அவ்வாறு விலகிப் போனாலும் நாங்கள் அவர் களுக்கு நெருக்கந்தான். எவ்வாறெனில் அவர்கள் உண்ணுந் தக்க சோறு யான் பயிரிட்ட வெள்ளாண்மைத் தொழிலாலே வந்ததுதான். கருங்கடலிலே தோன்றிய முத்துக்கொப்பாக மிகுந்த முத்துச்சம்பா முதலிய முத்துப் போன்ற அரிசி தரும் நெல்லை உண்டாக்குகிற வடிவழகக் குடும்பன் நானே' [2]

ஆக மேலே கண்ட சான்றுகளினால், இம் மக்கள் இயற் பெயர் பள்ளர் அல்ல என்று அறிகிறோம். இப்பெயர் இடைக் காலத்திலேயே தோற்றுவிக்கப்பட்டிருக்கிறது. நிகண்டு களிலோ, தமிழ் இலக்கியங்களிலோ கி.பி. 16ஆம் நூற்றாண்டு வரை, பள்ளர் என்ற சமூகம் தமிழகத்தில் இல்லை. கி.பி. 13-14 நூற்றாண்டுகளைச் சேர்ந்ததாகக் கருதப்படும் ஒரு சில கல் வெட்டுகளில் பள்ளர் என்று கண்டிருக்கிறது. அதே சமயம் கி. பி. 17 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சில கல்வெட்டுகளில் தேவேந்திரக் குடும்பன் என்று கண்டிருக்கிறது. ஆக இக் காலத்தில் இடத்துக்கு இடம் இம் மக்கள் வெவ்வேறு பெயரால்

---

1 முக்கூடல் பள்ளு - செ. 15.

2. முக்கூடல் பள்ளு-ந. சேதுரகுநாதன் உரை.

வழங்கப்பட்டனர் என்று தெரிகிறது. இம் மக்கள் பள்ளர் என்று வழங்கு முன் கொண்டிருந்த இயற்பெயர் என்ன? என்பது பற்றி அடுத்து ஆராய்வோம்.

**7. பல அறிஞரும் பண்டைக்கால மள்ளர், மல்லர் மரபினரே இக்காலத்தில் பள்ளர் என வழங்குவதாகக் கருதுகின்றனர். இவர் கருத்து ஏற்புடைத் தக்கதா?**

பண்டைக்கால இந்திய வரலாற்றில் காணப்படும் மள்ளர், மல்லர் மரபினரின் வழி வந்தோரும், தமிழ் இலக்கியங்களில் காணப்படும் மருத நில மக்களே இன்று பள்ளர் என்று வழங்கி வருவதாக திருவாளர்கள் Dr. விண்சிலோ, Dr. G. ஓப்பர்ட், Dr. K. R. அனுமந்தன், பண்டிதர் சவரிராய பிள்ளை, T. K. வேலுப்பிள்ளை, M. சீனிவாச அய்யங்கார், G. தேவநேயப்பாவணர் போன்ற பல அறிஞரும் கூறியிருப்பதை ஏற்கனவே கண்டோம். இவர்களில் ஒரு சாரார், மள்ளர் பண்டைக் காலத்தில் இந்தியாவின் பல பாகங்களிலும், வாழ்ந்ததாகவும், ஔரங்கசீப் காலத்தில், பஞ்சாப் பகுதியில், இம் மக்கள் வழிபட்ட சூரியக் கடவுளுக்கு எழுப்பியிருந்த கோவிலிலுள்ள தங்க விக்ரகம் ஔரங்கசீப்பின் ஆணையால் உருக்கி கருவூலத்தில் சேர்க்கப்பட்டதாகவும், இவர்கள் வாழ்ந்த இடம் மல்தான் (Maltan) என வழங்கப்படுவதாகவும், இராசஸ்தான் மற்றும் பகுதிகளில், இவர்கள் காணப்படுவதாகவும், இவர்கள் பண்டையத் தமிழரில் ஒரு பிரிவினர் என்றும் கருதுகின்றனர். ஒரு சிலர் பள்ளரின் தலைவன் தான் பாண்டியன் என்றும், இன்னும் சிலர், இம் மக்கள் பண்டைக் காலத்தில் படை மறவராகவும், பெரும் நிலக்கிழாராகவும், இருந்ததாகவும், இடைக் காலத்தில் தென்னிந்தியாவிலுள்ள வேற்று நாட்டார் படையெடுப்பால், அடக்கி ஒடுக்கப்பட்டு, காலப்போக்கில் தாழ்ந்து, தீண்டப்படாதவர் நிலையை எய்தினர் என்றும் கருதுகின்றனர். இம் மக்கள், பண்டைய நாளில் இந்தியா முழுவதும் பரவியிருந்தனர் என்பது பற்றி ஆராய்ச்சி மேற்கொண்டால் விரியும் என்ற காரணத்தால், இவர்கள் தமிழகத்தின் பண்டைய இலக்கியங்களில்

காணப்படும் மள்ளர், மல்லர் மரபினரின் வழி வந்தோர்தானு என்பது பற்றி மட்டும் ஆராய்ச்சியை ஈண்டு மேற்கொள்வோம்.

தமிழ் இலக்கியங்களில் காணப்படும் மள்ளர் என்ற சொல்லுக்குச் சில அறிஞர், உழவர், பள்ளர், போர் மறவர் என்று பொருள் கண்டிருக்கின்றனர். சில தமிழ் அகராதிகளில் மள்ளர் என்ற சொல்லுக்கு பள்ளர், உழவர் என்று பொருள் கண்டிருக்கின்றனர். இம் மக்கள் பற்றித் தோன்றிய பள்ளு நூல்களின் முன்னோடியாகக் கருதப்படும் முக்கூடற் பள்ளுக்கு விருத்தாசலம் திரு. தியாகராசக் கவிராயர் செய்த சிறப்புப்பாயிரத்தில் கண்டிருப்பதாவது:-

'முக்கூடல் என்னும் மூதூர் மேவும்
எழிலார் கமலத்து என்றுய் உதவும்

* * *

ஒழுங்காய்த் தந்த உயர் நகர் வளனும்
பண்ணையார் வளனும் பாய்புனல் வளனும்
எண்ணரும் பொங்கரின் எய்திய வளனும்
இவ்வளம் முதலிய இன்புற உதவும்
செவ்வியார் மள்ளர்கள் தேவியாம் பள்ளியர்

* * *

இந்திரத் தெய்வ தம் போற்றி எக்காலும்

* * *

பள்ளெனப் பகரல் அப்பரிசினைத் தழீஇ
திருமுக்கூடற் பள்ளியாந் தெரிவையும்
மருதூர்ப் பள்ளி என்னும் மங்கையும்
அந்நகர்ப் பள்ளனுக் கின்னலந்தருஉம்
பொன் மனையாகப் பொருந்தி முக்கூடற்
பள்ளென் றெருநூல் பாரெல்லாம் மகிழ்கூர்' 1

* * *

1. முக்கூடற் பள்ளு ந. சேதுரகுநாதன் உரை.

இச் சிறப்புப்பாயிரத்திலிருந்து, மள்ளரின் தேவியர், பள்ளியர் என வழங்கியதாகவும், பள்ளியர் என்ற பெயரின் அடிப்படையில் பள்ளி, பள்ளன் என்றும், அம் மக்கள் மீது பாடப்பட்ட நூலுக்கும் பள்ளு, பள்ளேசல் என்ற பெயர் சூட்டப் பட்டதாகவும் அறிகிறோம். முக்கூடற் பள்ளை முன்னோடி யாகக் கொண்டு எண்ணற்ற பள்ளு நூல்கள் இம் மக்கள் மீது புனைந்து, கூத்து நாடகங்களாக குறவன் குறத்தி கூத்துப் போன்று, தெருக்களில் நடிக்கப் பெற்றிருக்கின்றன என்று ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறோம். இப் பள்ளு நூல்களில் சில வெளிவந்திருக்கின்றன; பல மறைந்திருக்கின்றன. வெளி வந்திருக்கும் பள்ளு நூல்கள் சிலவற்றில் இம் மக்கள் எவ்வாறு சுட்டப்பட்டிருக்கிறார்கள் என்பதைக் கீழே காண்போம்.

முக்கூடற்பள்ளு :

1. ‘சோதி முக மள்ளருக்கே’ (செ. 9)
2. ‘மள்ளர் குலத்தில் வரினும் இரு பள்ளியர்க்கோர் பள்ளக் கணவன் (செ. 12)
3. ‘மாரிப் பொருட்டால் வரங்குறித்த மள்ளரெல்லாஞ்’ (செ. 31)
4. மள்ளர் கூட மது உண்டான் (செ. 123)
5. சேற்றுக் கால் மள்ளருக்குத் தென்றெற்கா லென்னுமோ (செ. 127)
6. மள்ளர் பலரும் நாடி வயலிற் கூடி (செ. 137)

வையாபுரிப் பள்ளு :

‘ மள்ளர் களெல்லேரு மேர்பூட்டி
வளமாகத் தரிசடித்த பின்பு
மெள்ள விரட்டித்து முச்சலித்து
விட்டுத் தடவி நாலு ழவுழுது
பள்ளியரெல் லோரு நாற்றெடுத்துப் (செ. 172)

செங்கோட்டுப் பள்ளு :

1. பள்ளனும் பள்ளியருடனே வந்து போற்ற
மள்ளர்கள் பள்ளியருடனே கூடி வந்து (செ. 197 )

2. வந்துமே திருக்கூட்டமதாகவும்
மள்ளரும் பள்ளி மார்களும் கூடியே (செ. 245)

**தண்டிகைக் கனகராயன் பள்ளு :**

1. காக்கு மள்ளர் கடாக்கும் வயலிற்
கடை கடந்த கடைச்சிய ரெல்லாந் (செ 20)
2. ஏற்றைப் பூட்டியே மள்ளருரப் பிட (செ. 23)

டாக்டர் K. R. அனுமந்தன் பிற்காலத்தில் தோன்றிய முக்கூடற் பள்ளு நூலில், பள்ளர் பற்றிச் சித்தரிக்கப்பட்டிருக்கும் குடியானவர் வாழ்க்கை பள்ளரைப் பண்டைக்கால மள்ளருடன் ஒருமைப்படுத்துகிறது என்கிறார் : [1]

(In fact the Mukkudal Pallu of latter literature describing the idyllic life of the Pallas clearly indentifies the Pallas with Mallas.) [1]

மேலே கண்ட மேற்கோள்களிலிருந்து, பண்டைய நாளில் மள்ளர் என்று வழங்கப்பட்ட மக்களில், ஆண்பாலாரைப் பள்ளர் எனவும், பெண்பாலாரைப் பள்ளி எனவும் பெயர் மாற்றம் செய்து பள்ளு நூல்கள் பெருமளவில் இயற்றப்பட்டு, பள்ளிச்சிறுர்களுக்கு பள்ளிகளில் கற்பிக்கப்பட்டும், ஏற்கனவே குறிப்பிட்டது போன்று, பள்ளு கூத்து நாடகங்கள் ஆங்காங்கே கோவில் உற்சவங்களின் போதும் நடிக்கப்பட்டு, இம் மக்கள் பள்ளர், கீழ்சாதி என்று பரப்பப்பட்டிருக்கிறது. இதனுலேயே நெல்லை மாவட்டத்தில் கிராமப்புறங்களில் சிறுவர்கள் 'பாளையங்கோட்டையிலே தில்லாலே லேலோ - பள்ளப்பிள்ளை யைத் தொடமாட்டேன் தில்லாலே லேலோ' என்று பாடி வருகின்றனர் என்று அறிக. மள்ளர் இதன் முதல் எழுத்து 'ம' 'ப' வாக மருவி பள்ளர் என வழங்கி வருகிறது என்ற டாக்டர் G. ஒப்பர்ட்டின் கருத்து ஏற்புடைத் தக்க தன்று. ஏனெனில் 'ம' வை முதல் எழுத்தாகக் கொண்ட பல்வேறு வகுப்புகள் இன்றும் நாட்டில் வழங்குகின்றன. ஆகப் பெயர் மாற்றம் இடைக்காலத்திலேயே திட்டமிட்டு நடந்திருக்கிறது.

1. Page 150 Untouchablity in Tamilakam Dr. K. R. Hanumanthan.

இம் மாற்றம் தற்செயலாய் நடந்ததாகக் கருதுவதற்கில்லை. மள்ளர் யார்? அவர் ஏன் பள்ளராக மாற்றப்பட வேண்டும்? ஏன் இழி மக்களாக சித்தரிக்கப்பட்டு மக்கள் மத்தியில் இழிவுபடுத்தப்பட வேண்டும்? பள்ளு நூல்கள் தோன்றிய காலம் தெலுங்கர் தமிழகத்தை ஆண்ட காலம். இக் காலத்தில் தமிழ் இலக்கியங்கள் பெரிதும் தோன்றவில்லை. குற்றாலக் குறவஞ்சியும், பள்ளு நூல்களுந்தான் தோன்றின. நாயக்க மன்னர் தமிழ்ப் புலவர் ஆதரிக்கவில்லை. என்பதை எல்லா வரலாற்றாசிரியரும ஒருங்கே ஒப்புக்கொள் கின்றனர். குறவஞ்சி குறி சொல்லிப் பிழைக்கும் குறிஞ்சி நில மக்களாகிய குறவர் சமூகத்தைப் பற்றியது. பள்ளு நூல் கள் மருத நில உழவர் சமுதாயத்தைப் பற்றியது. நாயக்கர் காலத்திற்கு முன்பு, தமிழ் வேந்தர் தமிழகத்தை ஆண்ட போது, உழவர் உயர்குடி மக்களாக ஏற்றவும், போற்றவும் பட்டனர். ஆனால் அவர் ஆட்சி முடிந்த பின் இவர்கள் கொத்தடிமைகளாய், பண்ணையில் உழன்று வாழ்க்கை நடத்தும் நிலை எவ்வாறு ஏற்பட்டது? ஆக ஏற்கனவே குறிப்பிட்டது போன்று, தெலுங்கர் ஆட்சியில் உழவர் சமுதாயம் அடக்கி ஒடுக்கப்பட்டு, சமூகத்தில் இழி மக்களாக நடத்தப்பட்டிருக்கின்றனர். விசய நகரம், அதற்குப் பிறகு ஏற்பட்ட நாயக்கர், மராட்டியர் ஆட்சியில் உழவர் நிலை மிகவும் பரிதாபமாயிருந்ததென்று பெரும்பாலான வரலாற்றாசி ரியரும் கூறுகின்றனர். ஆக உழவர் குடி மக்கள் விசய நகர, தெலுங்கு, மராட்டிய அரசுகளுக்கு எதிரிகளா? Dr. K. R. அனுமந்தன், Dr. G. ஒப்பர்ட், M. சீனிவாச அய்யங்கார் போன்றோர், மள்ளர் படை மறவர் என்கின்றனர். அப்படியானால் தமிழ் வேந்தரிடம் இவர்கள் படை மறவராய் இருந்தனரா? பண்டைய நாளில் ஏரும், போரும் இணை பிரியாது என்ற வழக்கு நாட்டில் வழங்கியதற் கொப்ப இடைக் காலத்திலும் இம் மக்கள் உழவராகவும், போர் மறவராகவும் தமிழ் வேந்தரின் ஆட்சியில் செயல்பட்டார்களா? அப்படி செயல்பட்டதன் காரணமாய் அவர் ஆட்சி முடிந்த பின் இம் மக்கள் அடக்கி ஒடுக்கப்பட்டனரா? இதை அறிய தமிழகத் தின் பண்டைய மற்றும் இடைக்கால நிலை பற்றி அடுத்து ஆராய்வோம்.

—***—

# தமிழகத்தின் பண்டைய நிலை

'பள்ளர் தமிழ்த்தொல் குடியினர்; அவர் பண்டைய நாளில் மள்ளர் என்று வழங்கப்பட்டனர்; அவர் மருத நில மக்கள்; படை மறவராகவும், நிலச்சுவான்தாரராகவும் இருந்தனர்; இடைக் காலத்தில் வேற்று இனத்தார் படையெடுப்பின் காரணமாக, பண்டைய நிலையிலிருந்து வீழ்ச்சியுற்றனர்; தமிழ் மக்களில் சில மரபினர் ஆரியக் கொள்கைகளையும், பழக்க வழக்கங்களையும் மேற்கொள்ள, மாருக இவர் பண்டைய திராவிடப் பழக்க வழக்கங்களையும், கொள்கைகளையும் விடாப்பிடியாகக் கட்டிக்காத்து வந்தனர்; இதனுல் காலப் போக்கில் இவர், தாழ்த்தப்பட்டு தீண்டப்படாதவராகக் கருதப்பட்டனர்;' இவ்வாறு அறிஞர் சிலர் கூறியிருக்கும் கூற்றை ஆராய்ந்ததில், பெயர் மாற்றம் இடைக் காலத்தில் ஏற்பட்டதென்றும், அதன் பின் இவர்கள் இடத்துக்கு இடம் வெவ்வேறு பெயரால் வழங்கி வந்ததாகவும் கண்டோம். மள்ளர் மருத நில மக்கள், படை மறவர், நிலக்கிழார் என்ற கூற்றுக்களின் உண்மையினை ஆராய வேண்டும். மேலும் இன்று தமிழகத்தில் பல்வேறு மரபினர் இருந்து வருகின்றனர். பாளையக்காரர், கள்ளர், மறவர், முதலானோர் இம் மக்களைக் கொடுமைப்படுத்தினர் என்று பல அறிஞரும் கூறியிருப்பதை ஏற்கனவே கண்டோம். இம் மரபினர் ஏன் இம் மக்களை அவ்வாறு கொடுமைப்படுத்த வேண்டும். இம் மரபினருக்கும் தேவேந்திர குலத்தாருக்குமுள்ள தொடர்பு என்ன? ஆக இம் மக்களின் வரலாற்றை அறிய அவர்களைச் சூழ்ந்துள்ள முக்கியமான பல்வேறு மரபினரைப் பற்றியும் நாம் ஓரளவு தெரிந்து கொள்வது இன்றியமையாதது.

ஒரு சாரார் பள்ளர், பறையரைத் தாழ்த்தப்பட்டவர், தீண்டப்படாதவர் என்றும், பார்ப்பனரையும் இதர வேற்று மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவரைத் தவிர்த்து, தமிழகத்தில் வாழும் மற்றெல்லோரையும் தமிழர் என் கின்றனர். தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட அனைவரும் தமிழர் என்றும்; யார் பண்டைத் தமிழர், புதுத் தமிழர் என்று

அறிய முடியாதவாறு மக்கள் ஒன்றறக் கலந்து விட்டதாகவும், திரு. வி. கலியாணசுந்தரனுர், மறைமலையடிகள் போன்ருேர் கூறுவர். இன்னெரு சாரார், தாழ்த்தப்பட்டவரில் தமிழ் பேசுவோர் பழந்தமிழர் அல்லது ஆதி திராவிடர் என்றும், பார்ப்பனரைத் தவிர்த்து தமிழைத் தாய்மொழியாகக்கொண்ட அனைவரும் புதுத் தமிழர் அல்லது திராவிடர் என்றும் கூறுவர். இதுபற்றி வரலாற்ருசிரியர் ஒருவரும் திட்டவட்டமான கருத்து எதுவும் வெளியிட முன் வரவில்லை. பள்ளர் தவிர்த்து, இன்று தமிழகத்தில் வேளாளர், கள்ளர், மறவர், அகம்படியர், சாணுர் (நாடார்), இடையர், செங்குந்தர், கைக்கோளர், சேனைத் தலைவர், பறையர், பள்ளி, (படையாச்சி) வன்னியர்) கம்மாளர் என்று பல்வேறு பிரிவினரைப் பார்க்கின்ருேம். இப் பிரிவினர் பண்டைய நாளில் தமிழகத்தில் இருந்தனரா? அவ்வாறு இருந்தால், இவர்கள் என்ன பெயருடன் அன்று வழங்கி வந்தனர். அவர் அன்றுள்ள அதே பெயருடன் வழங்காமல், புதிய மொந்தையில் பழைய கள் என்பதற்கொப்ப, இன்று புதிய மரபுப் பெயர் மேற்கொண்டிருக்கின்றனரா? திரு. வி. கலியாணசுந்தரனுர், திரு. மறைமலையடிகள் போன்ருேர் கூற்றுப்படி, பண்டைய நாளில் இருந்த குலங்கள் அடையாளந் தெரியாமல் மறைந்து விட்டனவா? அல்லது இன்று எஞ்சியுள்ள குலங்களுடன் அவை கலந்து விட்டனவா? அவ்வாறு ஒன்றறக் கலந்தன என்று கொண்டால், எந்தெந்தக் குலங்கள், எந்தெந்தக் குலத்தோடு எப்போது கலந்தன என்று கேள்விகள் எழும். திரு. எம். சீனிவாச அய்யங்கார் இது பற்றிக் கூறியிருப்பதாவது :–

'ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தற்காலத்திலுள்ள தமிழ் வகுப்புகள் வழக்கில் இல்லை. தமிழ் மரபினர் திணைநில மக்களாகப் பிரிந்து, அந்தந்த நிலத்திற்குத் தக்கபடி குலப் பெயர் கொண்டு அழைக்கப்பட்டனர்.' [1]

Thiru M. Srinivasa Ayyangar says:-

'About a thousand or more years ago all the modern Tamil castes were not in existence. The Tamil people were

1. Page 352 Tamil Studies - M. Srinivasa Ayyangar.

divided into tribes according to the nature of the soil in which they lived.' [1]

பண்டைக் காலத்தில் தமிழகத்தின் வறண்ட பகுதிகளில் நாகரிகமில்லாத காட்டு வாணர் இருந்திருக்கின்றனர். மன்னர்கள் காடுகளை அழித்து, நாடாக்க, காட்டாண்டிகளில் பெரும்பாலோர் காலப்போக்கில் ஆறலைத்தல், வேட்டுவ மற்றும் அநாகரிகமான பண்டையத் தொழில்களை விட்டு விட்டு நாகரிகம் எய்தியிருந்த மக்களை அண்டி, திருந்தி தொழில் கற்று மேம்பாடடைந்திருக்கின்றனர். 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பு ஒவ்வா செய்தொழில் வேற்றுமை யான்' (குறள் 972) என்ற வள்ளுவரின் வாக்குக்கொப்ப, பற்பல தொழில்களை மேற்கொண்டவர், அத் தொழில் பெயரையே தம் குலப் பெயராகக் கொண்டனர். காலம் செல்லச் செல்ல, ஆரியப் பார்ப்பனரின் சனாதனக் கொள்கை நாட்டில் பரவ, போலிக்குல உயர்வுக்காக தொழிற் பெயரை விடுத்து, வெவ்வேறு குலப் பெயரைக் கல்வியிலும், பொருளாதாரத்திலும் மேம்பாடடைந்தவரில் பலர் மேற் கொண்டனர். சில பிரிவினருக்கு அவர் விருப்பத்திற்கு மாறாக, புதுப்பெயர் சூட்டப்பட்டு வழக்கில் வந்திருக் கின்றன. இன்று பள்ளர் என்ற பெயர் எவ்வாறு தொழிற் பெயரை உணர்த்தவில்லையோ, அதே போன்றுதான் வேளாளர், பறையர், பள்ளி முதலிய பல பெயர்களும். வேளாளர் என்றால் கொடையாளி, உபகாரி என்று பொருள். இன்றுள்ள வேளாளர் அனைவருமே கொடையாளிகளா? உபகாரிகளா? பறையர் என்றால் பறை அடிப்பவர், பறை அறிவிப்பவர் என்று பொருள். இன்று தமிழகத்தில் நாற்பது இலட்சம் மக்களுக்கு மேல் பறையர் என்று கணக்கிடப்பட்டி ருக்கின்றனர். இவர் அனைவரும் பறை அடிப்பவரா? அல்லது பறை அறிவிப்பவரா? 'ஆதியிலும் பறையனில்லை, சாதி யிலும் பறையனில்லை, இந்த இராசாங்கம் செய்ததல்லவோ, ஆண்டே இந்த இராசாங்கம் செய்ததல்லவோ' என்று ஞானவெட்டியான் பாடிச் சென்றது இது பற்றியோ, என்று

1. Page 352 Tamil Studies - M. Srinivasa Ayyangar.

கருத ஏதுவாகிறது. பள்ளி என்ருல் முல்லை நிலத்து ஊர், இடைச்சேரி என்று நிகண்டில் பொருள் கண்டிருக்கிறது. 'பறையர்' 'பள்ளி' என்ற குலப் பிரிவுகள் நிகண்டுகளில் குறிக்கப்படாதது அறிக. ஆகப்பள்ளி வகுப்பார், பண்டைய நாளைய குறும்ப மரபினரா? பள்ளி வகுப்பார் தங்களை மற்றவர் பள்ளி என்று அழைப்பதை வெறுக்கின்றனர் இவர் தங்களைப் பல்லவ மரபினர் என்றும், 'வன்னியர்', 'படையாச்சி' என்றும் கூறி வருகின்றனர். ஆக பண்டைக்கால மள்ளர் மரபினருக்கு மட்டுமின்றி, பிற மரபினர்க்கும் புதுப்பெயர்கள் வழங்கப்பட்டிருக்கின்றன என்பது கண்கூடு. அது மட்டுமின்றி, சமூக நிலையிலும் பற்பல வகுப்புகளுக்குள் ஏற்றத்தாழ்வு ஏற்பட்டிருக்கிறது. இதன் காரணம் என்ன? ஆரியப் பழக்க வழக்கங்களைப் பின்பற்ருமல் பண்டையப் பழக்க வழக்கங்களை விடாப் பிடியாய் கட்டிக் காத்து வருகிறவர் சமூக நிலையில் தாழ்ந்தும், பார்ப்பனரை குருக்களாக ஏற்று ஆரியக் கொள்கை பழக்க வழக்கங்களை மேற்கொண்டு, ஆரியப் பார்ப்பனரையும் விஞ்சும்படி நடந்து வருகிறவர் சமூக நிலையில் உயர்ந்த வகுப்பாகவும், சற்சூத்திரராகவும் உயர்த்தப் பட்டும், நன்மை, துன்மைச் சடங்குகளுக்கு பார்ப்பனரைக் குருவாக ஏற்றுக்கொள்ளாத கள்ளர், மறவர், அகம்படியர், வலைஞர் போன்ற சில சமூகத்தார் இன்று இடை நிலையில் இருப்பதை நாம் காணலாம். ஆக பண்டைய சமூக நிலைக்கும், இன்றைய சமூக நிலைக்கும் உள்ள ஒப்புமை காண, பண்டையத் தமிழக வரலாற்றையும் அக்காலத்தில் வாழ்ந்த மக்கள் பிரிவுகளையும் நாம் ஓரளவு தெரிந்து கொள்வது நலமாகும்.

உலகத்தில் பழைமையாலும், பண்பாட்டாலும், நாகரிகத்தாலும் மேம்பாடடைந்த நாடுகளில் தமிழகமும் ஒன்று. அதன் மொழி தொன்மையானது. உலகிலுள்ள பழமையான மொழிகளுள் தமிழும் ஒன்று என்பது அறிஞர் பலராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. இதில் வாழ்ந்த மக்கள் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்பதற்கொப்ப வந்தவர்க் கெல்லாம் வாழ்வளித்து அவரை ஆதரித்தனர்.

தமிழகம் பற்றி பனம்பாரனுர் என்னும் புலவர், தொல் காப்பியம் சிறப்புப்பாயிரத்தில்

> 'வடவேங்கடம் தென் குமரி
> ஆயிடைத்
> தமிழ் கூறும்நல்லுலகத்து' என்கிருர்.

குறுங்கோழியூர் கிழார் என்னும் புலவர்,

'தென்குமரி வடபெருங்கல் குணகுட கடலா வெல்லை' (புறம் 17) என்று கூறுகிருர். தமிழகம் என்பது, தெற்கே இந்துமகா சமுத்திரத்தில் அமிழ்ந்து போன லெமூரியா கண்டத்தில் ஓடிய பஃறுளியாற்றுக்கும், வட பெண்ணையாற்றுக்கும் இடைப்பட்டதாயிருந்தது என்பர். பின்னர் பஃறுளி ஆற்றையும் கடல் கொள்ள, அது குமரியாற்றுக்கும், வேங்கடத்துக்கும் இடைப்பட்டதென்பர். பஃறுளியாறும், குமரியாறும் கடல் கொண்டதைப் பற்றி இளங்கோவடிகள்

> 'பஃறுளியாற்றுடன் பன்மலையடுக்கத்துக்
> குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள
> வடதிசைக் கங்கையும் இமயமுங் கொண்டு
> தென்திசை யாண்ட தென்னவன் வாழி'

(சிலப்பதிகாரம் - 11, 19, 22)

என்று கூறுகிருர். இப் பாடலிலிருந்து பாண்டியன் நெடியோன் பாண்டிய நாட்டின் பெரும் பகுதி கடற் கோளால் மூழ்க, வடக்கு நோக்கி வந்து இந்திய நாடு முழுவதையும் ஆண்டதாகத் தெரிகிறது. பண்டைக் காலத்தில் இந்திய நாடு முழுவதும் தமிழ் பரவியிருந்தது. தமிழுடன் தொடர்புடைய பல திராவிட மொழிகள் இன்னும் வட இந்தியாவின் பல பாகங்களிலும் சிதைந்து வழங்கி வருவதும், இளங்கோவடிகளின் கூற்றும் இதற்குச் சான்ருகும். பஃறுளி மூழ்கிய பின், குமரி பெரியாருயிருந்த தென்பது,

> 'தெனு அதுருகெழுகுமரி' (புறம் 6)
> 'குமரியம் பெருந்துறை' (புறம் 67)

என்ற சங்க இலக்கிய மேற்கோள்களால் அறியலாம். இந்தியா வின் வட பகுதியில் வாழ்ந்தவர், ஆரியர் மற்றும் துரானியர், மங்கோலியர் எனப் பல்வேறு இனத்தாரின் படையெடுப்புக் களால் அவர்களுடன் கலந்தனர் என்றும், தக்கிணத்திற்குத் தெற்கே இருந்தவர் தங்களின் மொழி, கலாச்சாரம், பண் பாட்டைக் கட்டிக் காத்து வந்ததாகவும், காலப் போக்கில் விந்திய மலைக்குத் தெற்கேயும் ஆரியரின் ஊடுருவலால் வட பகுதியில் வழங்கிய தமிழ் கலப்புற்று, துளு, தெலுங்கு, கன்னடமாக மாறி அம் மொழி வழங்கிய பகுதிகளும் அப் பெயர்களுடன் வழங்க, எஞ்சிய தென்னகம் ‘ தமிழகம் ’ என வழங்கி வருவதாகக் கூறுவர்.

இத் தமிழகத்தைப் பண்டைய நாளில் சேர, சோழ பாண்டியர் என்று மூவேந்தர் ஆண்டனர் என்பது யாவரும் அறிந்ததே. இந்த மூன்று மன்னர்க்கும் வரையறுக்கப்பட்ட எல்லைகளுடைய தனித்தனி நாடுகள் இருந்தன. சேரன் முதலில் கரூர் என்ற வஞ்சியையும், பின்னுல் மேற்கே அரபிக் கடல் சுருங்கித் தரை தென்பட, மேற்கேயுள்ள பொருநை ஆற்றங்கரையிலுள்ள வஞ்சியையும், தலைநகராக அமைத்து ஆண்டான் என்பர். பிற்காலத்தில் மேற்குத் தொடர்ச்சி மலைக்குக் கீழ்ப்பட்ட பகுதி கொங்கு நாடு எனப் பிரிந்தது. பாண்டியன் ஏற்கனவே அமிழ்ந்து போன பஃறுளியாற்றங் கரையிலுள்ள தென் மதுரையிலும், பின் குமரியாற்றங்கரை யிலுள்ள கபாடபுரத்திலும் தலைநகரை அமைத்து, முறையே முதற் சங்கம், இடைச் சங்கம் அமைத்து, புலவர்களைக் கொண்டு தமிழை ஆய்வு செய்தான் என்றும், கபாடபுரமும் கடல் கோளால் அழிய, தாம்பிரபரணி என்னும் பொருநை ஆற்றின் கரையிலுள்ள கொற்கை என்னும் துறைமுகப் பட்டினத்தில் தலைநகரை அமைத்து ஆண்டான் என்றும், பிறகு மணலூரையும், அதன் பின் வையை ஆற்றின் கரை யிலுள்ள கூடல் என்ற மதுரையையும், தலைநகரமாக்கி, அங்கு மூன்ரும் தமிழ்ச் சங்கத்தை நிறுவினன் என்றும் தமிழறிஞர் கூறுவர். சோழன் காவிரிக் கரையில் உள்ள உறையூரில் தலைநகரை அமைத்து ஆண்டான். கரிகாலன் தன்

காலத்தில் தலைநகரை உறையூரிலிருந்து புகார் என்ற காவிரி பூம்பட்டினத்திற்கு மாற்றினன். இடைக்காலத்தில் தலைநகர் பழையாறை, தஞ்சாவூர், கங்கை கொண்ட சோழபுரம் இங்கெல்லாம் மாற்றப்பட்டது. மூவேந்தரும் தமிழ் மரபைச் சேர்ந்தவர் என்பது

'மண் திணி கிடக்கைத் தண் தமிழ்க் கிழவர்
முரசு முழங்குதானை மூவர்' (புறம் 35)
'தமிழ்கெழு மூவர்' (அக. நா. 31)
'வண்புகழ் மூவர் தண் பொழில் வரைப்பின்'
(தொ. பொரு. 384)

என்ற செய்யுட்களால் விளங்குகிறது.

பாண்டியருக்குத் தமிழை வளர்த்த தனிச் சிறப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. மதுரையைச் சுற்றியுள்ள பகுதி செந்தமிழ் நாடு எனவும், மற்றது கொடுந்தமிழ் நாடு எனவும் வழங்கப்பட்டது. பாண்டிய நாட்டைப் பற்றி ஔவையார் 'நின்னுடு நல்ல தமிழுடைத்து' என்று கூறியது அறியத் தக்கது. ஆக அக் காலத்தில் தமிழ் மொழியை நன்கு பேசத் தெரிந்தவர், அரை குறையாகப் பேசத் தெரிந்தவர், அதை முற்றும் தெரியாதவர் இருந்ததாக அறிகிறேம். வேற்று மொழி பேசுவோர், குறிப்பாக, ஔியர், அருவாளர், எயினர், கோசர், மோரியர், குறும்பர், மழவர், யவனர் என்று பல இனத்தவர் நாட்டில் இருந்ததாகச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. இவர்களில் தமிழைக் கற்று நாகரிகம் எய்தி தமிழருடன் கலந்தவர் போக, எஞ்சியவர் இன்னும் பழியர், மலசர், காடர் என பல்வேறு பிரிவினர் மலைவாழ்நராக இருந்து வருவதைக் காணலாம். வேங்கடத்திற்கு வடக்கே மொழி பெயர்தேயம் இருந்ததென்பதை:-

'பனிபடு சோலை வேங்கடத்தும்பர்
மொழி பெயர் தேஎத்தர் ஆயினும் நல்குவர்'
(அகம் 211)

'பல்வேற் கட்டி நன்னுட்டும்பர்
மொழி பெயர் தேஎத்தராயினும்' (குறு 11)

என்ற செய்யுட்களால் அறிகிறேம்.

அதனுலேயே பாண்டியர், தமிழ் மொழியை ஆய்வு செய்ய, தலை, இடை, கடை என்ற முச் சங்கம் நிறுவி, தமிழ்ப் புலவர்களைக் கூட்டி தமிழ் மொழிக்குரிய இலக்கணம் கண்டு, அதை நாடு முழுவதும் பரப்பினர் என்று தெரிகிறது. மதுரையிலிருந்து பாண்டியர் தமிழ் வளர்த்தனர் என்பது

> 'தமிழ்கெழு கூடல் தண்கோல் வேந்தே' (புறம் 58)
> 'தமிழ் நிலைபெற்ற தாங்கரு மரபின்,
> மகிழ்நனை மருகின் மதுரையும் வறிதே'
>
> (சிறுபாணுற்றுப் படை (அடி 66-67).

என்ற செய்யுட்களால் புலனுகிறது.

ஆங்கிலேயரிடம் இந்திய நாடு அடிமைப்பட்டபோது, அவர் ஆங்கிலத்தை அரசியல் மொழியாக கொள்ளுமுகத்தான், இந்தியாவில் அதை விரைவில் பரப்புவதற்காக ஆங்காங்கு பள்ளிகள் நிறுவி, இந்தியருக்கு அந்த மொழியைக் கற்பித்தும், நாடு விடுதலை பெற்ற பின், இந்தி மொழியானது மத்திய ஆட்சி மொழிகளில் ஒன்ருக அங்கீகரிக்கப்பட்டதன் காரண மாய், அம்மொழியை நாடு முழுவதும் பரப்ப, மத்திய அரசு முயற்சி எடுத்து வருவதும் அனைவரும் அறிந்ததே. சோழ நாட்டுக்கு வடக்கே அருவா நாடு, அருவா வடதலை நாடு இருந்தது என்று அறிகிறேம். இப் பகுதியில் குறும்பர், ஒளியர், அருவாளர், எயினர் இருந்ததாக தமிழ் இலக்கியங்கள் கூறுகின்றன. ஆனுல் தற்காலத்தில் அவர்களில் சிறுபான்மை குறும்பர் தவிர்த்து, மற்றவர் அறவே இல்லை எனலாம். ஆனுல் இன்று இப் பகுதியில் பள்ளி, பறையர் ஆகிய இரு வகுப்பார் பெரும்பான்மையினராய் இருப்பதைக் காண்கிறேம். இவர்கள் பண்டைய குறும்பர், ஒளியர், அருவாளர், எயினர் மரபினரா? இது ஆராய்ச்சிக் குரியது. அக்காலத்தில் ஆறுகள் கட்டுப் பாடின்றி காட்டாறுகளாய் எதேச்சையாய் ஓடிக் கொண்டிருந்தன. காட்டுவாணர்கள் அவற்றின் நீரைக் கொண்டு பயிர்த் தொழில் செய்யத் தெரியாமல் இருந்தனர் என்று அறிகிறேம். மூவேந்த மரபினர்தான் ஆறுகளுக்குக் கரை கண்டு, கால்வாய்கள் அமைத்து, காடுகளை அழித்து நாடாக்கி

குளங்கள் வெட்டி நாட்டைச் செழிப்புறச் செய்தனர் என்று சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. அதனாலேயே மூவேந்தரின் தலைநகரங்கள் ஆற்றோரங்களில் அமைந்தன. காவிரிப் பகுதியை வளப்படுத்தியபின், கரிகாலனும் அதன் பின் சோழ இளவரசன் இளந்திரையனும், தொண்டை நாட்டிலுள்ள, ஒளியர், அருவாளர், எயினர் மற்றும் குறும்பரை வென்று பாலாற்றுப் பகுதியில் தங்கள் மரபினரைக் குடியேற்றி நாட்டை வளப்படுத்தினர் என்று பட்டினப் பாலை, பெரும் பாணாற்றுப் படை என்ற சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. நாட்டில் மழையின்றி மக்கள் வறுமையுற, மூவேந்தரும் தேவ லோகம் சென்று தேவேந்திரனிடம் மழை வரம் வேண்டியதாகவும், பாண்டியன் அங்கிருந்து செந்நெல், கன்னல், கதலி, பனை முதலிய வித்துக்கள் கொண்டுவந்து வேளாண்மை கண்டதாகக் கரிவலம் வந்த நல்லூர்,[1] சீவிலிபுத்தூர் கல்வெட்டுகள்[2] சான்று பகர்கின்றன. அதியமானின் முன்னோனாகிய சேர மரபினன் கரும்பைத் தமிழகத்திற்குக் கொண்டு வந்து பயிரிட்டான் என்று சங்க இலக்கியம்[3] சான்று பகர்கின்றது. வெற்றிலையை மலாயாவிலிருந்து சூராவாதித்த சோழன், சோழ நாட்டிற்குக் கொண்டுவந்து பயிரிட்டான் என்று செவ்வந்திப் புராணமும், உறையூர்ப் புராணமும் கூறுகின்றன. புராண மரபுச் சோழன் காந்தமன், குடகுமலையைப் பிளந்து, காவிரியைச் சோழ நாட்டில் பாயச் செய்தான் என்று தெரிகிறது. கரிகாலன் காவிரிக்குக் கரை கட்டியதை, 'பொன்னிக்கு கரை கண்ட பூபதி' என்று மூவருலாவில் ஒட்டக்கூத்தர் பாடியிருப்பதால் அறிகிறோம். மூவேந்தரையும் ஒரே தாய் வயிற்றில் பிறந்தவர் என்றும் ஒரு காலத்தில் மூவரும் கொற்கையில் தங்கியிருந்ததாகவும், பாண்டியன் மட்டும் அங்கேயே தங்கிவிடச் சேரனும், சோழனும் பாண்டியனை விட்டுப் பிரிந்து, தனித்தனியாக முறையே வஞ்சியிலும், உறையூரிலும் தலைநகர் அமைத்து ஆட்சி ஏற்படுத்தி, அப் பகுதிகளை ஆண்டு வந்ததாகவும் செவிவழிச்

1 A. R. E 432/1914.
2. A. R. E. 588/2926.
3. புறநானூறு.

செய்தியாகக் கூறுவர். மூவேந்தரின் தொன்மையைப் பற்றி கூறும்போது, 'வழங்குவதுள், வீழ்ந்த கண்ணும் பழங்குடி பண்பில் தலைப்பிரிதலன்று' (குறள் செ. 955) என்ற செய்யுளுக்கு உரை செய்த பரிமேலழகர், 'பழங்குடி என்பது சேர, சோழ, பாண்டியர் என்றுப் போல் படைப்பு காலந்தொட்டு மேம்பட்டு வரும் குடி என்று கூறுகிறுர்.

இக் குடியினரையே புறப்பொருள் வெண்பாமாலை,

'கல் தோன்றி மண் தோன்ருக் காலத்தே
வாளொடு முன் தோன்றி மூத்த குடி' (செய்யுள் 35)

என்று குறிப்பிடுகிறது.

மணிவாசகரின், 'பாண்டிய நாடே பழம்பதி' என்ற கூற்று, பாண்டியரே பழமையானவர் என்பதைக் காட்டுகிறது. சேரரும், சோழரும் அரசு அமைப்பதற்கு முன்னுல் பாண்டியர் அரசு அமைத்ததினுல் அவர்களே தமிழை நாட்டில் பரப்ப ஆவன செய்ய வேண்டி இருந்தது என்பதும், பாண்டியநாடு செந்தமிழ் நாடு என்று வழங்கப்படுவதும் அறியற்பாலது. மேலும் 'பாண்டியன்' என்ற சொல்லே சேர, சோழரைவிட பாண்டியர், முந்தியவர் என்பதை உணர்த்துகிறது. பண்டு, பாண்டு, பாண்டியர் என்ற சொற்கள் பழமையைக் குறிக்கும் சொற்களே. மூவேந்தரும் ஒரே குடியினர் என்பதையும், அக்குடி பெருங்குடி என்பதையும், 'பெருநில முழுதாளும் பெருமகன் தலைவைத்த ஒரு தனிக்குடி'[1] என்ற இளங்கோவின் கூற்ருல் அறிகிறேும். மூவேந்தர்க்கும் தனித்தனி நாடுகள் இருந்தது போன்று தனித்தனிப் படைப் பிரிவுகளும், கொடி, குடை, முரசும் இருந்ததென்பது

'படையுங் கொடியுங் குடையும் முரசும்
நடை நவில் புரவியுங் களிறுந் தேரும்
தாரு முடியும் நேர்வன பிறவும்
தெரிவு கொள் செங்கோல் அரசர்க்குரிய'

என்ற தொல்காப்பிய சூத்திரத்தால் விளங்கும். (பொரு. 616)

---

1. சிலப்பதிகாரம் 7–31.

இவருக்குத் தனித்தனியாய் தேர்ப்படை, யானைப்படை, குதிரைப் படை, காலாட்படை என நான்கு படைப் பிரிவுகள் இருந்தன. அத்துடன் கடற்படையும் சோழருக்கு இருந்ததென்பர். சேரருக்கு விற்கொடியும், சோழருக்குப் புலிக்கொடியும், பாண்டியருக்கு மீனக்கொடியும் ஏற்பட்டது. அடையாள மாலையாக சேரருக்கு பனம்பூ, சோழருக்கு அத்திப்பூ, பாண்டியருக்கு வேப்பம்பூ ஏற்பட்டதென்பது,

'போந்தை வேம்பே ஆர் என வரும்' என்ற தொல் காப்பிய சூத்திரத்தால் அறியலாம். மூன்று நாடுகளும் தனித் தனிச் சிறப்புடையது. சேரநாடு மலைகளடர்ந்ததால் யானைக் குப் பேர் போனது. சோழநாடு முழுவதும் வயல்கள் நிறைந் தது. அதனால் உணவுப் பண்டங்கள் இங்கு அதிகம் விளைந்தது. பாண்டிய நாட்டு கடற்கரையில் முத்து குளித்தல் நடைபெற்றது. இந்த முத்துக்கள் கடல் கடந்து அன்னிய நாடுகளுக்கெல்லாம் ஏற்றுமதியாயிற்று. இந்த சிறப்பைப் பற்றி ஔவையார்

'வேழமுடைத்து மலைநாடு மேதக்க
சோழவளநாடு சோறுடைத்து - பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்து' என்று பாடினார்.

சங்க கால மன்னரில் சேரன் செங்குட்டுவன், தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், சோழன் கரிகாலன் ஆக மூவரும் பிரசித்திப் பெற்றவர் என அறிகிறோம். சேரன் செங்குட்டுவன், கரிகாலன் இவர்கள் இமயம் வரை படை எடுத்துச் சென்று, தங்கள் தங்களது கொடிச் சின்னத்தை இமயமலையில் பொறித்ததாக இலக்கியங் கள் கூறுகின்றன. பாரதயுத்தத்தில் மூவேந்தரும் பங்கு பெற்றனர் என்று சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.

சங்க காலத்துத் தமிழர் உயர்ந்த பண்பாடு, கொடை, வீரம் இவற்றில் சிறந்து, 'யாதும் ஊரே யாவருங்கேளிர்' எனப் பரந்த நோக்குடன், வந்தவர்க்கெல்லாம் வாரி வழங்கி வாழ்வளித்தனர் என்றும், தங்கள் வாழ்க்கையில் புகழ் பெற வேண்டுமென்ற ஒரே குறிக்கோளுடன் வாழ்ந்தனர் என்றும்,

சங்க இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. போரிலும் அறத்தையே பின் பற்றினர். அதற்கென்று விதிமுறைகள் வகுத்திருந்தனர். வலிகுன்றியவர், புறமுதுகு காட்டி ஓடுபவர், பெண்கள், குழந்தைகள், முதியோர், புலவர் முதலியோருக்கும், கால் நடைகளுக்கும் தீங்கு இழையார். பெண்களில் பலர் பெரும்புலவராகவும் திகழ்ந்தனர். அக்கால மக்கள் அமுதமே கிடைப்பதாயினும் அதைத் தாமே தனித்து உண்ணுர்; சினமற்றவர்; பிறர் அஞ்சுவதற்குத் தாமும் அஞ்சி வாழாது சோம்பியிருப்பவருமல்லர்; புகழ் எனின் உயிரும் கொடுப்பவர்; பழி எனின் உலகம் முழுவதுமே பெறுவதாயினும் மேற்கொள்ளார்; அயர்வு அற்றோர்; அத்தகைய மாட்சிமைப் பட்டவராக வாழ்பவர் உயர்ந்தோராவர்; அவர் தமக்கென எதுவும் செய்யாது பிறர்க்கு என உழைக்கும் உண்மையான இயல்பு உடையவராகத் திகழ்ந்ததே, அவர் பெருந்தகுதிக்குத் காரணமாயிருந்தது; அவராலேயே உலகம் சிறப்புற வாழ்ந்தது என்பது கடலுள் மாய்ந்த இளம் பெரு வழுதி பாடியிருக்கும் அடியிற் கண்ட செய்யுளால் அறியலாம்.

> 'உண்டால் அம்ம! இவ்வுலகம்; இந்திரர்
> அமிழ்தம் இயைவதாயினும், இனிது எனத்
> தமியர் உண்டலும் இலரே; முனிவிலர்
> துஞ்சலும் இலர்; பிறர்அஞ்சுவது அஞ்சிப்,
> புகழ் எனின், உயிருங் கொடுக்குவர், பழியெனின்,
> உலகுடன் பெறினும், கொள்ளலர், அயர்விலர்,
> அன்னமாட்சி அனையராகித்,
> தமக்கென முயலா நோன்தாள்,
> பிறர்க் கென முயலுநர் உண்மையானே.'

புறம் 182

கி. பி. மூன்றும் நூற்றுண்டின் இறுதியில் களப்பிரர் என்ற ஒரு இனத்தார் கருநாடகம் வழியாகத் தமிழகத்திற்குள் பெருங்கூட்டமாய் நுழைந்து குழப்பம் விளைவித்ததால் மூவேந்தர் அரசும் நிலை குலைந்தது. மூன்றுவது தமிழ்ச்

சங்கமும் அத்துடன் முடிவடைந்து விட்டதென்பர். சங்க காலத்தில் நிலவிய மக்கள் பழக்க வழக்கம், நாகரிகம், பண்பாடு, ஆட்சிமுறை, மன்னர்கள் நடத்திய போர்கள் பற்றி இலக்கியங்கள் தோன்றியிருக்கின்றன. அந்த இலக்கியங்கள் எட்டுத் தொகை, பத்துப் பாட்டு, பதினெண் கீழ்க் கணக்கு நூல்கள் எனப்படும். தமிழ் எழுத்து, சொல், பொருள் பற்றி தொல்காப்பியம் என்ற இலக்கண நூலும், சங்க காலத்தில் இயற்றப்பட்டிருக்கிறது. எல்லா இலக்கண நூல்களுக்கும் இது முந்தியது என்பர் ஆராய்ச்சியாளர். களப்பிரர் நாட்டில் புகுந்தபின் தமிழகத்தில் நடந்த செய்திகள் ஒன்றும் அறிவதற்கில்லை. வடக்கே பல்லவர் கி. பி. 4–ஆம் நூற்றாண்டு இறுதியில் காஞ்சியைக் கைப்பற்றி தொண்டை மண்டலப் பகுதியை ஆளத் தொடங்கினர். இவர் சோழ மரபினரான இளந்திரையன் வழி வந்தோரிடமிருந்து நாட்டைக் கைப் பற்றினரா? அல்லது களப்பிரரிடமிருந்து கைப்பற்றினரா? என்று அறிவதற்கில்லை. கி. பி. 7–ஆம் நூற்றாண்டில் இவர் ஆட்சி சோழ நாட்டையும் உள்ளடக்கித் தெற்கே புதுக்கோட்டை மட்டும் பரவியிருந்தது. கி. பி. 6–ஆம் நூற்றாண்டு இறுதியில் கடுங்கோன் என்னும் பாண்டியன் தோன்றி, களப்பிரரை வெற்றி கண்டு பாண்டிய அரசை மீண்டும் மதுரையில் ஏற்படுத்தினான். இச் செய்தி வேள்விக்குடி, தளவாய்புரம் செப்பேடுகளில் பொறிக்கப்பட்டிருக்கிறது காண்க. மூன்றாம் தமிழ்ச் சங்கம் முடிந்து, கடுங்கோன் பாண்டிய நாட்டை மீட்கும் வரையிலுள்ள காலப் பகுதியை இருண்ட காலம் என்று வரலாற்றாசிரியர் கூறுவர். நாளடைவில் பாண்டிய அரசு வலுப்பெற்றது. அவர் பல்லவருடன் பொருதி சோழ நாட்டின் பல பகுதிகளைப் பிடித்து காவிரிவரை ஆட்சியின் எல்லையை விரிவுபடுத்தினர். பாண்டியருக்கும், பல்லவருக்கும் அடிக்கடி போர்கள் நிகழ்ந்தன. இக் காலத்தில் சோழர் இருந்த இடம் திட்டமாகத் தெரியவில்லை. அவர் மறைந்து வாழ்ந்தனரா? கும்பகோணம் அருகிலுள்ள பழையாறையில் சோழர் பரம்பரை இருந்து வந்ததாகப் பெரிய புராணத்திலிருந்து தெரிகிறது. சமணத்தை விட்டு சைவ

சமயத்தை மேற்கொண்ட பாண்டியன் நெடுமாறன் என்ற கூன் பாண்டியன் தேவி மங்கையர்க்கரசி, சோழனின் மகள் என்பது நினைவு கூரத்தக்கது. கி. பி. 6–ஆம் நூற்றாண்டின் இறுதியில் உள்ள பல்லவ மன்னன் சிம்ம விஷ்ணு, சோழனை வென்று, அவன் நாட்டைக் கைப்பற்றியதாக 'வேலூர் பாளையம்' 'காசாகுடி' செப்பேடுகள் கூறுகின்றன. கி.பி.9ஆம் நூற்றாண்டு இடைப்பகுதியில், சோழர் மரபில் விசயாலயன் தோன்றி, தஞ்சையை அப்போது ஆண்டுவந்த முத்தரையரை வென்று சோழ அரசை மீண்டும் ஏற்படுத்தினான் என்பது, செந் தலைக் கல்வெட்டால் புலனாகிறது. சங்க காலத்திற்குப் பிறகு சேர அரசு எந்நிலை எய்தியது என்று அறியச் சரியான வரலாறு எழுதப்படவில்லை. சேரமான் பெருமாளும், அவனது மரபி னரும், கி. பி. 8–ஆம் நூற்றாண்டிலிருந்து சேர நாட்டை நம்பூதிரிகளின் கைப்பாவையாக இருந்து ஆண்டு வந்ததாகத் தெரிகிறது. நாளாக ஆக, சோழ அரசு வலுப்பெற்று வந்தது. அதே சமயம் பல்லவ அரசும், பாண்டிய அரசும் வலுவிழந்து, சோழரின் கீழ் சிற்றரசு நிலையை எய்தின. சேர நாடும் சோழர் ஆட்சிக்குட்பட்டது. சோழ அரசின் எல்லை வடக்கே துங்கப்பத்திரை நதி வரை விரிவடைந்தது. இக் காலத்தில் இந்தியாவிலேயே சோழ அரசு ஒரு பெரிய வல்லரசாகத் திகழ்ந்தது என வரலாற்றறிஞர் கூறுவர். இடைக்காலச் சோழரில் முதலாம் இராச ராச சோழன், அவன் மகன் இராசேந்திரன், முதலாம், மூன்றாம் குலோத்துங்கச் சோழ மன்னர்கள் புகழ் பெற்றவர் ஆவர். சோழ ஆட்சி நானூறு ஆண்டுகளுக்கு மேல், பெரிய வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்ததாய்த் திகழ்ந்தது. கி. பி. 12–ஆம் நூற்றாண்டு இறுதியில் பாண்டிய நாட்டில் அரசுப் பதவிக்குப் போட்டி இருந்தது. குலசேகர பாண்டியனும், வீரபாண்டி யனும் இதில் ஈடுபட்டிருந்தனர். குலசேகரன் இறந்த பின், அவன் மகன் விக்கிரம பாண்டியன் இப் போர் களில் ஈடுபட்டான். சோழ மன்னரும், இலங்கை மன்னன் பராக்கிரமபாகுவும் எதிர் தரப்பில் இப் போர்களில் கலந்து கொண்டனர். சிங்களப் படைகள் பாண்டிய நாட்டின் கீழ்ப்

பகுதியில் சில ஊர்களைப் பிடித்தன. இராமேசுவரம் இதன் கைவசமாகிவிட்டது. இப் படை நீண்ட காலமாய் இராமேசுவரம் பகுதியில் நிறுத்தப்பட்டிருக்கிறது. கடைசியாக தமிழகத்தின் கீழ் பகுதியிலேயே இது நிலைத்து விட்டதாகத் தெரிகிறது. கி. பி. 13-ஆம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் சோழ அரசு வலிமை குன்றியது.

இந் நிலையில் வடக்கேயுள்ள குறுநில மன்னர் சோழரின் ஆட்சியிலிருந்தும் தங்களை விடுவித்துக்கொண்டு, தங்கள் தங்கள் பகுதிகளைத் தன்னுரிமையுடன் ஆளத் தொடங்கினர். அதே போன்று பாண்டியரும், சேரரும் தன்னுரிமை பெற்று தங்கள் தங்கள் நாட்டை மீட்டு சுயேட்சையுடன் ஆண்டனர். அதோடு மட்டுமின்றி, பாண்டிய அரசு மீண்டும் வலுப்பெற்று அது ஒரு பெரிய பேரரசு நிலையை எய்தியது. பாண்டியன் சடாவர்மன் சுந்தரபாண்டியன் சோழ நாட்டின் மீது படையெடுத்து சோழனை வென்று, அவனைப் பாண்டியருக்குத் திரை செலுத்தும் சிற்றரசனுக்கினுன். சோழன், பாண்டிய அரசுக்கு விரோதமான செயல்களில் ஈடுபட்டதனுல், சடாவர்மன் சுந்தரபாண்டியன் இரண்டாவது முறை சோழ நாட்டின் மீது படையெடுத்து, அங்கு பல பகுதிகளை அழித்தான். உறையூரையும், தஞ்சையையும் தணல் கொண்டு கொளுத்தினுன் என்று அவனது மெய்க் கீர்த்தி கூறுகிறது. காவிரிப்பூம்பட்டினத்தில் கரிகாலன் முன்னிலையில் பட்டினப் பாலை அரங்கேற்றத்துக்குக் கட்டப்பட்ட பதினுறு கால் மண்டபம் மட்டும் அழிக்கப்படாமல் விடுபட்டது. சுந்தர பாண்டியன் சோழ நாட்டின் அனேக பகுதிகளைத் தனக்கு உதவியவர்களுக்கும், வைதீகர்களுக்கும், கோயில்களுக்கும் பங்கிட்டிருக்கிருன். இதனிமித்தம் அங்குள்ள சோழ மரபினர் நிலமிழந்து வறுமை எய்தியிருக்கின்றனர். இது பற்றி அருப்புக்கோட்டை முதலிய ஊர்களிலுள்ள கோயில் கல்வெட்டுகள் சான்று பகர்கின்றன. மூன்ரும் குலோத்துங்கச் சோழன் காலத்தில், பாண்டியன் சோழன் செய்த உதவியை மறந்து, சிங்களப் படையுடன் சேர்ந்து சோழ நாட்டிற்கு விரோதமான செயல்களில் ஈடுபட்டதினுல், மதுரை

நகரை சோழனின் படைகள் அழித்தன. அத்துடன் மூன்றும் குலோத்துங்கன், பாண்டியனை மிகவும் அவமானப்படுத்தினான். இதை மனதிற்கொண்ட சடாவர்மன் சுந்தரபாண்டியன், சோழ நாட்டைத் தணல் கொண்டு கொளுத்தினான் என்பர். பாண்டியப் பேரரசு ஒரு நூற்றாண்டு புகழுடன் விளங்கியது. இக் காலத்தில் இங்கு வந்து போன மேனாட்டு அறிஞன் மார்க்கோபோலோ, பாண்டிய நாட்டின் சிறப்பைப் பற்றி வெகுவாகப் புகழ்ந்து குறிப்புகள் வரைந்திருக்கிறான்.

கி. பி. 14–ஆம் நூற்றாண்டில் பாண்டிய அரசும் வலிமை குன்றியது. அதன் கீழிருந்த சிற்றரசுகள் தன்னுரிமை பெற்றன. முகமதியர் அடிக்கடி தமிழகத்திற்குள் புகுந்து, ஊர்களைக் கொளுத்தி, மக்களைக் கொன்று குவித்தும் திரண்ட செல்வத்தைக் கொள்ளையடித்துச் சென்றனர். குலசேகர பாண்டியன் முதுமை எய்திய காலை, அரசு பதவியைத் தனது நேரிடை வாரிசான மகன் சுந்தரபாண்டியனுக்குக் கொடுக்க மறுத்து, தன் காதற் கிழத்தியின் மகனான வீரபாண்டியனுக்குக் கொடுக்க முன் வந்தான். இதனால் சுந்தரபாண்டியன் வெகுண்டு தன் தந்தையைக் கொலை செய்தான். இதனால் நாட்டில் நெருக்கடி நிலை ஏற்பட்டது. பதவியைக் கைப்பற்ற வீரபாண்டியனுக்கும், சுந்தரபாண்டியனுக்கும் இடையே போர் மூண்டது. ஆரம்பத்தில் வீரபாண்டியன் தோல்வியுற்றான். பின்னர் மீண்டும் சுந்தரபாண்டியனோடு பொருதி அவனை வெற்றி கண்டான். மனமுடைந்த சுந்தரபாண்டியன் டில்லி சுல்தானின் துணையை நாடினான். மத்தியில் மாலிக்கபூர் நாட்டிற்குள் புகுந்து கொள்ளை, கொலை பல நடத்தி திரண்ட செல்வத்தை யானைகளிலும், குதிரைகளிலும், வண்டிகளிலும் ஏற்றி டில்லிக்குக் கவர்ந்து சென்றான். அதனால் தமிழ்நாடு வறுமையுற்றது. வீரபாண்டியனுக்கும், சுந்தரபாண்டியனுக்கும் நடந்த பதவிப் போர்கள் காரணமாக நாட்டில் பிளவு ஏற்பட்டது. அதனால் துருக்கர் பாண்டிய அரசையே கைப்பற்றி, பாண்டியரைக் கைப்பாவையாக வைத்து 40 ஆண்டுகள் மதுரையில் ஆட்சி நடத்தினர். இக் காலத்தில் அவர்கள் நடத்திய அட்டூழி

யங்கள் கொஞ்ச நஞ்சமல்ல. கி. பி. 14-ஆம் நூற்ருண்டு இறுதியில் விசயநகர அரசின் படைத் தலைவரில் ஒருவனுகிய குமாரகம்பண்ணன் மதுரை வந்து துருக்கரோடு பொருதி அவரை வெற்றி கண்டு பாண்டியரை விசய நகர ஆட்சிக்குத் திரை செலுத்தும் சிற்றரசராக்கி விட்டுச் சென்ருன். கி. பி. 14, 15-ஆம் நூற்ருண்டுகளில் சேரர் பல தடவை பாண்டிய, சோழ நாடுகளின் மீது படையெடுத்தனர். வடுகர் அடிக்கடி தமிழகத்திற்குள் புகுந்து கொள்ளையடித்தனர். நரசு நாயக்கன் தமிழகத்திற்குள் புகுந்து ஏராளமான பொருட்களைக் கொள்ளை யடித்துச் சென்ருன். இக் காலத்தில் விசய நகர ஆட்சிக்கும், சோழ மன்னருக்கும், பாண்டிய மன்னருக்கும் இடையே பல போர்கள் நடந்திருக்கின்றன. தெலுங்கர் பெருவாரியாக தமிழகத்தில் குடியேற்றப்பட்டு முக்கியமான அரசு பதவிகளில் அமர்த்தப்பட்டிருக்கின்றனர். தமிழ் மன்னரின் பின்னே ராகிய அவரது மரபினர் அடக்கி ஒடுக்கப்பட்டும், ஒழிக்கப் பட்டும், சொல்ல வொண்ணு இன்னல்களுக்கு உள்ளாகியிருக் கின்றனர். பலர் தங்களையும், தங்கள் குடும்பங்களையும், தன் மானத்திற்காக அழித்துக்கொண்டிருக்கின்றனர்.

கி. பி. 16-ஆம் நூற்ருண்டின் மத்தியில் விசயநகர அரசும் கலகலத்தது. இதற்கு மத்தியில் மதுரையில் விசய நகர ஆட்சியின் கீழ் திரை செலுத்தி வரும் நிலையிலிருந்த சந்திர சேகர பாண்டியனை, வீரசேகர சோழன் வென்று பாண்டிய அரசையும் தனதாக்கிக் கொண்டான். இது பற்றி சந்திர சேகர பாண்டியன் விசய நகர அரசனிடம் முறையிட அவன் நாகம்மன் என்ற படைத் தலைவனை தெற்கே அனுப் பினுன். இவன் வீரசேகர சோழனை வென்று ஆட்சியை சந்திரசேகர பாண்டியனிடம் ஒப்புவிக்காமல், அதைத் தானே வைத்துக்கொண்டான். மீண்டும் சந்திரசேகர பாண்டியன் விசயநகர அரசனிடம் முறையிட, நாகம்மன் மகன் விசுவ நாதன் மதுரைக்கு அனுப்பப்பட்டான். இவன் தந்தையை அடக்கி, அவனை விசய நகர அரசனிடம் கைதியாக அழைத் துச்சென்று ஒப்புவித்ததால், விசயநகர மன்னன் விசுவநாத னின் செய்கையை மெச்சி, அவனையே மதுரையில் தனது

பிரதிநிதியாக நியமித்தான். விசுவநாதனுக்கு உதவியாக தொண்டை மண்டலத்திலுள்ள மெய்ப்பேடு ஊர்வாசியும், விசய நகரத்துக்கு எழுத்து வேலே செய்து பிழைக்கச் சென்றவனுமான அரியநாதன், கணக்கன் தொழிலிலிருந்து படிப்படியாக பதவி உயர்வு பெற்று அமைச்சனுகவும் தளவாயாகவும் நியமிக்கப்பட்டு மதுரைக்கு அனுப்பப்பட்டான். கி. பி. 16ஆம் நூற்ருண்டின் மத்தியில் முகமதியர் தாக்குதல்களினுல் விசய நகர ஆட்சி உடைந்து துண்டு துண்டாய்ச் சிதறியது. செஞ்சி, மதுரை, தஞ்சை, விசயநகரப் பிரதிநிதிகள் மத்திய அரசிலிருந்து தங்களே விடுவித்துக்கொண்டு தன்னரசு நிலே எய்தினர். சோழர் பரம்பரை கி. பி. 16-ஆம் நூற்ருண்டு இடைப்பகுதிவரை இருந்ததாகத் தெரிகிறது. வீரசேகரசோழன் சந்திரசேகர பாண்டியனேடு கி பி. 16-ஆம் நூற்ருண்டில் பொருதியதைத் தவிர, சோழ இளவரசன் ஒருவன் கம்பம் கூடலூர்ப் பள்ளத்தாக்கில் நாயக்கர் ஆட்சியை எதிர்த்துப் போர் தொடுத்திருக்கிருன். பாண்டிய மரபினர் மதுரையை விட்டுத் தெற்கே சென்று கொற்கை திருநெல்வேலி, தென்காசி முதலிய இடங்களிலிருந்து ஆட்சி செய்திருக்கின்றனர். நாயக்கர் ஆட்சியை எதிர்த்து தமிழ் வேந்தர் பல போர்கள் நடத்தியிருக்கின்றனர். இக் காலத்தில் அரசு அலுவல்களில் பணியாற்ற, பார்ப்பனரைத் தவிர தொண்டை நாட்டிலிருந்து பலர் வரவழைக்கப்பட்டு குடியேற்றப்பட்டனர். படைத்தொழில், வரி வசூல், கணக்கெழுதும், தொழில் முதலியவை இவர்களுக்குக் கொடுக்கப்பட்டது. தமிழகத்திலுள்ள பண்டைய அரச மரபினர், நாயக்க அரசுக்கு ஒத்துழைப்புத் தரவில்லே என்பது இதனுல் நன்கு விளங்கும். அரியநாதன் தளவாயாகவும், முதல் அமைச்சனுகவும் செயல்பட்டதால், அவனுக்கு விசுவநாத நாயக்கன் 'முதலி' என்ற பட்டம் வழங்கியதாகக் கூறுவர்.

தெலுங்கருக்கும், தமிழ் வேந்தருக்கும் மத்தியில் பல போர்கள் நடந்ததென்று ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிரேம். தென் பாண்டி நாட்டில்தான் பாண்டியர் தெலுங்கரை நீண்ட காலம் எதிர்த்து வந்திருக்கின்றனர். குறிப்பாக

கயத்தாற்றில் பஞ்ச பாண்டியருக்கும், நாயக்கருக்கும் இடையே நீண்ட காலம் போர் நடந்தது. பஞ்ச பாண்டியரை எதிர்க்க அரியநாதன் நாயக்கர் தரப்பில் படைத் தளபதியாக அனுப்பப்பட்டான். இந்தப் போரில் அரியநாதன் பஞ்ச பாண்டியரிடம் எதிர்த்து நிற்க முடியாமல், புறமுதுகு காட்டி ஓடினான். இதனால் விசுவநாத நாயக்கனே, புதுப்படை பலத்தோடு சென்று பஞ்ச பாண்டியரோடு பொருத முற்பட்டான். பாண்டியர் படையை எதிர்த்து வெற்றி பெற முடியாதென்று உணர்ந்த விசுவநாதன், சூழ்ச்சி மூலம் போரில் வெற்றி பெறத் திட்டமிட்டான். நாயக்கர், பாண்டியர் இரு படைகளும் பொருதினால் இரு தரப்பிற்கும் ஆட்சேதமும், பொருட்சேதமும் அதிகம் ஏற்பட நேரிடுமென்றும், அதனால் இரு தரப்பின் படைகளும் யோதாமல், இரு தரப்பிலும் ஒருவர் மட்டும் நேருக்கு நேர் சண்டை செய்யலாமெனவும், அதன்படி நடக்கும் சண்டையில் இரு தரப்பில் யார் வெற்றி பெற்றாலும், அதை அத்தரப்பின் வெற்றியாகப் பாவித்து, உடனே போரை நிறுத்திக்கொண்டு, அத்துடன் இரு தரப்புப் படைகளையும் கலைத்து விட வேண்டு மென்று பஞ்ச பாண்டியரிடம் ஒரு ஒப்பந்தத்திற்கு ஏற்பாடு செய்தான். இதற்கு பஞ்ச பாண்டியரும் ஒப்புக் கொண்டனர். நாயக்கர் தரப்பில் விசுவநாத நாயக்கனே போர் செய்ய முன் வந்தான். பாண்டியர் தரப்பில் வீமன் பாண்டியன் முன் வந்தான். இருவருக்கும் கடுமையான சண்டை நடந்தது. விசுவநாதன் பலத்த காயமடைந்து கீழே விழுந்தான். அவன் தரையில் குற்றுயிராய்க் கிடக்கிறதைப் போல் பாசாங்கு செய்தான். இந்நிலையில் வீமன் பாண்டியன் குற்றுயிராய்க் கிடக்கிறவனைத் தாக்குவது, போர் மறமல்ல என்று கருதி நிற்கும் போது, விசுவநாதன் திடீரெனத் தன் ஈட்டியால் வீமன் பாண்டியனைத் தாக்கினான். எதிர்பாராத நேரத்தில், விசுவநாத நாயக்கன் தாக்கியதால் வீமன் பாண்டியன் குடல் சரிந்து உயிர் நீத்தான். பண்டைத் தமிழர் பண்பாட்டுக் கொப்ப மற்றப் பாண்டிய மன்னர்கள் ஒப்பந்தப்படி வீமன் பாண்டியன் மரணத்தைத் தங்கள் தரப்பின் தோல்வியாக

ஏற்றுக்கொண்டு போரை உடனே நிறுத்தி விட்டுப் படைகளைக் கலைத்தனர். இந்தப் படை வீரரில் ஒரு சாரார், பொதிகை மலைச்சாரல் செங்கோட்டைப் பகுதிக்குச் சென்றனர் என்று சரித்திர ஆசிரியர் கூறுவர். இப்போருக்குப் பிறகும் கொற்கை, தென்காசி, திருநெல்வேலிப் பாண்டியர் சிற்றரசராக இருந்து தென் பாண்டி நாட்டில் சிறு சிறு பகுதிகளை ஆண்டு வந்ததாகத் தெரிகிறது. இவர்கள் பெரும்பாலும் நாயக்கர் ஆட்சியை எதிர்த்துப் போர் செய்து போர்க் களங்களில் வீர மரணம் அடைந்ததாகவே செவி வழிச் செய்திகள் நிலவுகின்றன. கி. பி. 18 ஆம் நூற்றாண்டு நடுப் பகுதி வரை கூட இப்பகுதியில் பாண்டியர் ஆட்சி நீடித்து வந்ததாகத் தெரிகிறது. அதன் பிறகு அவர்கள் செல்வாக் கிழந்து, பெரு நிலக்கிழார் நிலைக்குத் தாழ்ந்து, காலம் செல்லச் செல்ல கீழ்நிலை எய்தி, தங்கள் மரபோடு மரபாகக் கலந்தனர் என்பதாக வரலாற்றாசிரியர் கூறுவர். சோழ மன்னரின் வழி வந்தோர் என்ன ஆயினர் என்பதற்குச் சரித்திரச் சான்றுகள் கிடைப்பதற்கில்லை. பாண்டியரைப் போன்று சோழன் வழி வந்தோரும் போர்களில் அழிந்தவர் போக எஞ்சியவர், தங்களின் மரபோடு மரபாக கலந்திருக்க வேண்டும். திரு. எம். சீனிவாச அய்யங்கார் இது பற்றிக் கூறுவதாவது :- இந்த நாட்டில் தமிழ் வேந்தர் மரபினர் பற்றிய அடையாளக் கூறுகள் கிடைப்பதற்கில்லை. அவர்கள் அநேகமாய் கலப்பற்ற பழைய வெள்ளாள மரபினருடன் கலந்திருக்க வேண்டும். [1]

Thiru M. Srinivasa Ayyangar says:-

'No traces of the Tamil Kings are to be found at present in this country and it is highly probable that they should have merged with the Pure Vellala caste.' [1]

கொங்குநாடு சேர நாட்டிலிருந்து விலகி தனியாய்ப் பிரிந்த பின், அது பாண்டியர் அல்லது சோழர் ஆட்சியில் மாறி மாறி இருந்து வந்தது. இதை இடையிடையே, கங்கர்

1. Page 62 Tamil Studies M. Srinivasa Ayyangar.

ஹொய்சாளர், பல்லவர் மாறி மாறி ஆண்டதாகக் கூறுவர். தொண்டை நாடு, கி. பி. 13-ஆம் நூற்றுண்டு வரை சோழர் ஆட்சியின் கீழும், பின்னர் சிலகாலம் பாண்டியர் ஆட்சியின் கீழும் அடங்கிய பகுதியாக இருந்து வந்தது. மூவேந்த மரபினர் விசய நகரம், மற்றும் நாயக்கர் ஆட்சி காலத்தில் அடக்கு முறைக்கு உள்ளாகி அழிக்கப்பட்டும், அங்கிருந்து விரட்டப்பட்டும் இருக்கின்றனர். ஆக மூவேந்த மரபினர் யார்? தமிழகத்திலுள்ள பல்வேறு வகுப்பாரும், குறிப்பாக கள்ளர், மறவர், சாணார், (நாடார்), இன்றைய வேளாளர், வெள்ளாளர் தாங்கள்தான் மூவேந்த மரபு என்று எழுதியும், பேசியும் வருகின்றனர். Dr. G. ஒப்பர்ட், திரு. எம். சீனிவாச அய்யங்கார், Dr. K. R. அனுமந்தன் போன்றோர் தேவேந்திர குலத்தாரை பண்டைக்காலப் படை மறவர், நிலக்கிழார் என்று கருதுகின்றனர். கரிவலம் வந்த நல்லூர், சீவிலிபுத்தூர் கல்வெட்டுகள், இவர்களை மன்னர் மரபினராகவே சுட்டுகின்றன. என்றுலும் பல்வேறு மரபினரும், தங்கள் தங்கள் மரபினர்தான், தமிழகத்தை ஆண்டனர் என உரிமை பாராட்டி வருவதால், முறைப்படி சங்க இலக்கியங்களின் துணைக் கொண்டு, மூவேந்த மரபினர் யார் என்பது பற்றி அடுத்து ஆராய்வோம்.



# மூவேந்த மரபினர் யார்?

“பன்னெடுங் காலமாய், தமிழகத்தைச் சேர, சோழ, பாண்டியர் என மூவேந்தர் ஆண்டனர்; சேரரும், சோழரும் கி.பி. 16ஆம் நூற்றுண்டுவரை ஆட்சி செய்திருக்கின்றனர். பாண்டியரில் ஒரு பிரிவினர், கி. பி. 18-ஆம் நூற்றுண்டின் நடுப்பகுதிவரை, நெல்லை மாவட்டத்தில் பல இடங்களில் இருந்து ஆட்சி செய்திருக்கின்றனர். இந்த மூவேந்தர் மரபு தமிழகத்தில் விசய நகரம் பின் அதைத் தொடர்ந்து ஏற்பட்ட நாயக்கர், மராட்டியர், முகமதியர் முதலிய வேற்று நாட்டாரின் ஆட்சி ஏற்பட்டதன் காரணமாய், அடக்கி ஒடுக்கப்பட்டிருக்கின்றனர். இவர் தமிழ்த்தொல் குடியினர்” என்றெல்லாம் ஏற்கனவே கண்டோம். சங்க காலத்தில் தமிழகத்தை ஆட்சி செய்த மூவேந்த மரபின் வழிவந்தவர்தான், இடைக் காலத்தில் களப்பிரர் இடையூட்டுக்குப்பின் தோன்றிய மன்னர் என்பதைப் பொதுவாக வரலாற்றுசிரியர் அனைவரும் ஒப்புக் கொள்வர். இதில் கருத்து வேறுபாடு இருப்பதற்கில்லை எனலாம். என்றுலும் இக்கருத்துக்கு ஆதரவாக சான்றுகள் உண்டா என்பது பற்றி ஈண்டு ஆராய்வோம்.

முதலில் பாண்டியரை எடுத்துக்கொள்வோம். வேள்விக்குடிச் செப்பேட்டில் பாண்டியன் நெடுஞ்சடையன் பராந்தகன் முன்னேனைப் பற்றி:-

‘கொல் யானை பலவோட்டிக் கூடாமன்னர் குழாந் தவிர்த்த பல் யாக முதுகுடுமிப் பெருவழுதியெனும் பாண்டியாதி ராசனுல்’

என வரும் அடிகளும், தளவாய்புரம் செப்பேட்டில் சடையவர்மன் பராந்தகப் பாண்டியன் முன்னேரைப் பற்றி:

‘அகத்தியனேடு தமிழாராய்ந்தும்
மணந்திரா வகைவென்று தென் மதுரா புரஞ் செய்தும்
அங்கதனில் அருந்தமிழ் நற்சங்கம் இரீஇத் தமிழ்வளர்த்தும்’

என வரும் அடிகளும், மூன்றும் இராசசிங்க பாண்டியனின் முன்னேரைப் பற்றி, சின்னமனூர் செப்பேட்டில்:-

'தென்றமிழின் கரை கண்டும்
வெம்முனே வேலொன்று விட்டும்
விரை வரவிற் கடன் மீட்டும்
பூழிய னெனப் பெயரெய்தியும்
பொற் குன்ருயிரம் வீசியும்
பாழியம் பாயலினி மிர்ந்தும்
பஞ்சவ னெனப் பெயர் நிறீஇயும்
வளமதுரை நகர் கண்டும் மற்றதிற்கு மதில் வகுத்தும்
உளமிக்க மதியதனு லொண்டமிழும், வடமொழியும்
பழுதறத் தானுராய்ந்து, பண்டிதரின் மெந்தோன்றியும்'

என வரும் அடிகளும் குறிப்பிடுகின்றன. நெடுஞ்சடையன் சடையவர்மன், இராசசிங்கபாண்டியன் இவர்கள் கி. பி. 6 ஆம் நூற்ருண்டில் களப்பிரரை அடக்கி வெற்றிகண்டு மதுரையில் பாண்டிய அரசை மீண்டும் தோற்றுவித்த கடுங்கோன் வழி வந்தவர். வேள்விக்குடிச் செப்பேட்டில் காணும் முதுகுடுமிப் பெருவழுதி என்பவன சங்ககாலப் பாண்டியரில் ஒருவன் தளவாய்புரம் சின்னமனூர் செப்பேடுகளில் காணும் குறிப்புகள் புராண கால பாண்டியரைக் குறிக்கின்றன. ஆக இச் செப் பேடுகள் இடைக்காலப் பாண்டியர், சங்ககாலப் பாண்டியரின் வழித் தோன்றல்கள் என்பதை மெய்ப்பிக்கின்றன.

அடுத்து சோழரை எடுத்துக் கொள்வோம். இடைக் காலத்தில் சோழ மன்னரில் சிலரின் வெற்றிச் சிறப்புக்களைப் பற்றி பரணி, உலா எனச் சில இலக்கியங்கள் தோன்றியிருக் கின்றன. அவைகளில் குறிப்பிடத்தக்கவை கலிங்கத்துப் பரணி, விக்கிரம சோழனுலா, இராசராச சோழனுலா, குலோத்துங்கச் சோழனுலா, சங்கர சோழனுலா, என்பவை யாம். கலிங்கத்துப் பரணி முதற் குலோத்துங்க சோழனது படைகள் கருணுகரத் தொண்டைமான் தலைமையில் கலிங் கத்தின் மீது படை எடுத்துப் பெற்ற வெற்றிச் சிறப்பைப் பற்றிப் பாடப்பட்டது முதற் குலோத்துங்கச் சோழன் முதலாம் இராசராசனின் மைந்தனுகிய முதலாம் இராசேந்திரன மகளாகிய அம்மங்கைக்கும் கீழைச் சாளுக்கிய மன்னன் இராச ராசனுக்கும் பிறந்தவன். சாளுக்கிய மன்னன் இராசராசன்

முதலாம் இராசராசனின் மகளாகிய குந்தவை வயிற்றில் பிறந்தவன். முதலாம் குலோத்துங்கன் தந்தை சாளுக்கிய மரபு என்றாலும், இவன் தாயார் பிறந்த சோழர் மரபையே தனக்கு உரியதாக்கிக் கொண்டான். கலிங்கத்துப் பரணி பாடிய செயங்கொண்டார், குலோத்துங்கன் மரபை திருமாலின் உந்தியினின்றும் தோன்றியதாக வருணிக்கிறார். அதாவது செந்தாமரை மலர் திருமால் உந்தியினின்று தோன்றியது. அதிலிருந்து நான்முகன் தோன்றினான். அவனிடமிருந்து மரீசி தோன்றினான். மரீசியிடமிருந்து காசிபன் பிறந்தான். காசிபன் சூரியனைப் பெற்றான். சூரியனிடமிருந்து மனு பிறந்தான். இவன் தான் ம[illegible]நீதிச சோழன் என வழங்கப் பட்டவன். இவன் [illegible]யில் இன்னும் பல புராண மரபுச் சோழர் தோ[illegible]னர் என்றும், வரலாற்று காலமாகிய சங்க கா[illegible]ல் சோழ நாட்டை ஆண்ட கிள்ளி வளவன், இளஞ் சேட் சென்னி, கரிகாலன் பின் இடைக் காலத்தில் சோழ அரசைத் தஞ்சையில் நிறுவிய விசயாலயன், அவன் பேரன் முதலாம் பராந்தகன் முதலான மன்னர் குறிப்பிடப்பட்டிருக் கின்றனர். சோழரின் வம்சாவளி கலிங்கத்துப் பரணியில்:-

> 'ஆதிமால் அமல நாபி கமலத்து அயன் உதித்து
> அயன்மரீசி எனும் அண்ணலை அளித்த பரிசும்
> காதல் கூர்தரு மரீசி மகன் ஆகி வளரும்
> காசிபன் கதிர் அருக்கனை அளித்த பரிசும்' (செய் 187)

என்பதிலிருந்து:-

> 'இப்புறத்து இமயமால் வரையின் மார்பின் அகலத்து
> எழுதினான்; எழுதுதற்கு அரிய வேதம் எழுதி
> ஒப்புரத்தனது தொல் மரபும் அம்மரபின் மேல்
> உரை செய் பல் புகழும் ஒன்றும் ஒழியாத பரிசே'
> (செய். 209)

வரையுள்ள இச்செய்யுள்கள் சோழரின் வமிசாவழியை எடுத்து இயம்புகின்றன. நாரதர் சோழர் வரலாற்றைக் கூறினதாக வும், அதைக் கேட்ட சோழன் கரிகாலன் அவற்றை இமயமலையின் தென்திசைப் பகுதியில் உள்ள நடுவிடத்தில்

ஒன்று விடாமல் எழுதியதாகவும் செயங்கொண்டார் கூறுகிருர். அடுத்து உலாக்களில் விக்கிரம சோழனுலாவை ஆராய்வோம். இது புலவர் ஒட்டக் கூத்தரால் பாடப்பட்டது. விக்கிரம சோழன் முதற் குலோத்துங்கச் சோழனின் மைந்தன். இவனது வமிசாவழியையும் முதற் குலோத்துங் கனைப் பற்றிக் கூறியது போன்று, திருமாலிலிருந்து ஆரம்பித்து முதற் குலோத்துங்கன் முடிய :

'சீர்தந்த தாமரையாள் கேள்வன் றிருவுருவக்'
(செய்யுள் வரி 1)

என்பதிலிருந்து

'பூவலயமுற்றும் புரந்ததறம - மேவலர்தஞ்'
(செய்யுள் வரி 46)

வரையுள்ள பகுதியில் கூறியிருக்கின்றது.

இதே போன்று குலோத்துங்கச் சோழனுலா (வரிகள் 1-32), இராசராச சோழனுலா (வரிகள் 1-40) இவற்றிலும் மேலே கண்ட பிரகாரம் சோழரின் வமிசாவழி கூறப்பட்டிருக் கின்றன.

ஆக மேலே கண்ட மேற்கோள்களிலிருந்து சங்க காலப் பாண்டியரும், சோழரும் இடைக் காலப் பாண்டியரும், சோழரும் ஒரே மரபினர் என்பது ஐயத்திற்கு இடமின்றி நன்கு புலனுகும். இடைக் காலச் சேர மன்னரும், சங்க காலச் சேர மன்னர் வழித் தோன்றல்களே என்பதை ஒருவரும் மறுப்பதற் கில்லை. இந்தச் சேர, சோழ, பாண்டிய மரபினர் யார்? இவர் ஆட்சி முடிந்ததும் முற்றிலும் மடிந்து மறைந்து விட்ட னரா? அல்லது இவரில் போரிலும், அடக்கு முறையிலும் இன்னும் பல காரணங்களினுலும் மாண்டவர் போக மிஞ்சிய வர் இன்று எஞ்சி இருக்கின்றனரா? மூவேந்தர் மரபு பற்றி வரலாற்ருசிரியர் மற்றும் தமிழறிஞர் ஒருவரும் இது வரை முறையாக ஆராயவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இப்போக்கை தமிழகத்திலுள்ள பல்வேறு சமூகங்களும் தங்களுக்கு அனுகூலமாகக் கொண்டு போலிக் குல உயர்வு

காரணமாய் தங்கள் தங்கள் மரபினரை மூ வே ந் த ரு ட ன் தொடர்புபடுத்திப் பேசியும், எழுதியும் வருகின்றனர். நெசவுத் தொழிலில் ஈடுபடுபவரில் ஒரு சாரார், தங்களை செங்குந்தப் படையினர், சேனைத் தலைவர், கைக்கோள் ப டை யி ன ர் என்று கூறி பெருமிதம் அடைகின்றனர். இடைக் காலத்தில் ஈழவர் என்றும், தற்காலத்தில் சாணார், நாடார் என வழங்கும் சமூகத்தார் கடந்த ஒரு நூற்றுண்டிற்குள், தங்களில் ஒரு சாரார் கிறித்துவ மத மாற்றத்தினுல் கல்வியிலும், இன்னுமொரு சாரார் வணிகத் தொழிலை மேற்கொண்டதால் பொருளா தாரத்திலும் அடைந்த முன்னேற்றத்தின் கா ர ண மா ய், தாங்கள் சான்ருேர், சத்திரியர், மூவேந்த மரபினர் எனவும், நாயக்கர் பாண்டிய நாட்டைக் கைப்பற்றுவதற்கு முன் தங்கள் மரபினர் பாண்டிய நாட்டின் மன்னராய் இருந்தவர் எனவும், பலவாறு எழுதியும், பேசியும் வருகின்றனர். இவர் சங்க இலக்கியங்களில் சான்ருேர், நாடன் என்று சுட்டப் படும் மக்கள், தங்கள் மரபினர் என்பதாகவும், அவை இன்று சாணுன், நாடான் என மருவி வழங்குவதாகவும் கூறுவர். இவரின் கூற்றுக்கு அரண் அமைக்கு முகத்தான், தங்கள் பெய ருடன் 'பாண்டியன்' என்ற அடைமொழியையும் சேர்த்து வழங்கி வருகின்றனர். இதை அறியாதவர் தமிழகத்தில் இல்லை எனலாம்.

இவர்களை அடுத்து இராமநாதபுரம், நெல்லை மாவட்டங் களில் மறவர் கணிசமாய் பெரும்பான்மையினராய் இருப் பதைக் கொண்டு, இவர் தங்களைச் சோழ, பாண்டிய மன்னர் என உரிமை பாராட்டி வருகின்றனர். இவரது கூற்றுக்கு ஆதரவாக, இராமநாதபுரம், சிவகங்கை சுதேசசமத்தானங் கள் மற்றும் இந்த இரு மாவட்டங்களிலும், நாடு விடுதலை பெறுவதற்கு முன் இருந்த சமீன்கள் இவைகள் மறவரின் ஆதிக்கத்திற்குள் அடக்கமாய் இருந்ததைக் குறிப்பிடுவர். இவரும் தங்கள் பெயருக்குப் பின் பாண்டியன் என்ற அடை மொழியையும், அத்துடன் தேவர் என்ற குலப்பட்டத்தையும் சேர்த்து வழங்குவர்.

மறவர் ஒரு புறமிருக்க, மதுரையில் கள்ளர், மறவர், சேர்வை என வழங்கும் அகம்படியர் ஆக மூவரும் தாங்கள் ஒரே சேயின் புதல்வர் எனவும், ஆதியில் தமிழகத்தில் இருந்த இனம் ஒன்று மூன்ருகப் பிரிந்து முக்குலமாகத் திகழ்வதாகவும், இவர் சேர, சோழ, பாண்டியர் எனவும், தமிழ் வேந்தர் மரபில் வந்தவரென்று எழுதியும், பேசியும் வருகின்றனர். இவர்கள் கூற்றுக்கு ஆதரவாக சோழர், பாண்டியர் பூண்டிருந்த தேவர் என்ற பட்டத்தை தங்களின் குலப்பட்டமாகக் கொண்டிருப்பதைச் சுட்டிக் காட்டுவர். இக் கூற்றை நாட்டில் பரப்பவும், அதனுல் தங்களின் மூன்று குலத்திற்கும் சமூகத்தில் உயர்வு தேடவும், முக்குலத்தோர் சங்கம், மூவேந்தர் பண்பாட்டுக் கழகம் என்ற அமைப்புகளை ஏற்படுத்திச் செயல்படுத்தி வருகின்றனர்.

பாண்டிய நாட்டை விடுத்து, சோழ நாட்டிற்கு வருவோம். புதுக்கோட்டை மாவட்டத்திலும், தஞ்சை மாவட்டத்தில் ஒரு பகுதியிலும் கள்ளர் பெரும்பான்மையாய் காணப்படுகின்றனர். புதுக்கோட்டை சுதேச சமத்தானம் கள்ளர் மரபைச் சேர்ந்த தொண்டைமான் ஆட்சியில் நாடு விடுதலை பெறுமட்டும் இருந்து வந்ததையும், இப் பகுதியில் அண்மைக்காலம் வரை இருந்த சமீன்கள் கள்ளர் ஆதிக்கத்தில் அடக்கமாய் இருந்து வந்ததையும், சோழகர், தஞ்சைராயன் சிங்கராயன், மழவராயன், பல்லவராயன், காளிங்கராயன், களங்காப்புலி, ராசாளி, தென்கொண்டார், வல்லத்தரசு என்று பல விருதுப் பெயர்களைக் குலப்பட்டங்களாகப் பூண்டிருப்பதையும் சான்றுகள் காட்டி, கள்ளர் சோழர் மரபினர் என எழுதியும், பேசியும் வருகின்றனர். சாணர், கள்ளர், மறவர், அகம்படியர் இவர்கள் ஒருபுறமிருக்க இன்றைய வேளாளர், வெள்ளாளர், தாங்கள்தான் நாடாண்ட தமிழ் வேந்தர் மரபினர் என்பர். பொதுவாக வேளாளர்தான் தமிழகத்தில் நாகரிகத்தையும், அரசையும் தோற்றுவித்தவர் என்னும் கருத்துக்கள் நாட்டில் வழக்கில் இருப்பதால் இவர் தாங்கள் தான் மூவேந்த மரபினர் என உரிமை பாராட்டி

வருகின்றனர். மதுரை நகரில் அதன் சுற்றுப்புறங்களிலிருந்து குடியேறி, தையற் தொழிலில் ஈடுபட்டிருக்கும் பாணர் வகுப்பார், தங்களைப் பாண்டிய வேளாளர் என வழங்கி வருகின்றனர். சோழ நாட்டில் ஒரு சாரார் தங்களைச் சோழிய வேளாளர் என்றும், கொங்கு நாட்டில் சமீப காலமாய் ஒரு சிலர், தங்களைச் சேர வேளாளர் எனவும் வழங்கி வருகின்றனர். இவ்வாறு வழங்குவது தங்கள் தங்கள் மரபினர்தான் சேர, சோழ பாண்டிய நாடுகளில் வேளாண்மையையும், அரசையும் தோற்றுவித்தவர் எனப் பொதுமக்களை நம்ப வைக்கவும், அதன் மூலம் தங்கள் மரபுக்கு ஏற்றம் ஏற்படும் என்ற எண்ணத்தினலேயே. மூவேந்தர் மரபு பற்றி மேனுட்ட வரும் மற்றுமுள்ள தமிழ் அறிஞர், புலவர், கவிஞர் பலரும் வெளியிட்டிருக்கும் கருத்துக்களைக் கீழே காண்போம்.

1. திரு. வி. கனகசபை பிள்ளை தமிழ் வேந்தர் மற்றுமுள்ள பல்வேறு குறுநில மன்னரும் வெள்ளாள மரபினர் என்கிருர். [1]

2. மறைமலையடிகள் கூறுவதாவது: 'கரிகாற் சோழன் நாங்கூர் வேள் என்னும் வேளாளனிடத்தும், கரிகாற் சோழன் தந்தையாகிய உருவப்பஃதேர் இளஞ்சேட் சென்னி என்னும் மன்னன் அழுந்தூர் வேள் என்னும் வேளாளனிடமிருந்தும் மகட்கொடை கொண்டதாலும், பண்டை நாளிலிருந்து சிறந்த சோழ அரசர்களும் வேளாள வகுப்பினரேயாதல் நன்கு தெளியப்படும்.' [2]

3. திரு ந.சி. கந்தையா பிள்ளை சேர, சோழ, பாண்டிய அரசர் வேளாளர் மரபில் தோன்றியவர்களே என்று கூறுகிருர். [3]

4. சாமி சிதம்பரனுர் கூறுவதாவது:- 'மருத நிலத்தின் தெய்வம் வேந்தன் என்று தொல்காப்பியம் கூறுகின்றது. இதனுல் தமிழகத்தில் மருத நிலத்தில் அரசன் இருந்தான் என்று அறியலாம். பயிர்களைச் சேதமில்லாமல் காக்கத்

1. 1800 ஆண்டுகளுக்கு முன்பு - திரு. வி. கனகசபை பிள்ளை.
2. பக்கம் 11வேளாளர் நாகரீகம். மறைமலையடிகள்
3 பக்கம் 69 திராவிட இந்தியர் ந. சி. கந்தையா பிள்ளை

தோன்றிய வீரர் பரம்பரையினரே, பிற்காலத்தில் அரச ராயினர்; வேந்தர்களாயினர். [1]

5. எல். டி. பர்னெட் கூறுவதாவது:- தமிழகத்தின் அதிபர்கள் தமிழர் என அறியப்படும் படையெடுத்து வந்த புரோட்டோ திராவிடரின் வழித் தோன்றல்கள். இவர்களும் இவர்களது ஆளுகைக்கு உள்பட்ட குழுவினரும் சேர, சோழ, பாண்டிய அரசுகளைத் தோற்றுவித்தனர். இவர் உழவுத் தொழிலில் ஈடுபட்டிருந்த வெள்ளாள மரபினரே. பாண்டியர் தங்களை மாறன் வழி வந்தவர் என்றனர். அவர்களின் வழி வந்தோரில் ஒரு முக்கிய பிரிவினர் கன்னியாகுமரிக்கு அருகில் உள்ள பொதிய மலையில் மோகூரைத் தலைநகராகக் கொண்டு பழையன் மாறன் என்ற பட்டத்துடன் வெகு காலம் ஆண்டு வந்தனர். சோழர் திரையர் மரபு; அதாவது கடல் மார்க்கமாய் வந்தவர் எனவும் கருதப்பட்டனர். கரிகாலன் காலத்தில் இன்னொரு முக்கிய அரச பரம்பரை காஞ்சிபுரத்தில் ஆண்டு வந்தனர். சேரர் வானவ மரபினர் என வழங்கினர். [2]

'The overlords of Tamilagam were the descendants of the proto-Dravidian invaders the Tamil in the strict sense of the term. They with the races subject to them formed the three Kingdoms, the Pandyas, Cholas and Cheras, the land tilling class or Vellalars at the head of whom were the Kings. The Pandyan Kings claimed descent from a tribe styled Maran which however had for many years another important representative in the princes bearing the title Palayan Maran (the ancient Maran) whose capital was Mogur near Podiya Hills, not far from Cape-comorin. The Chola Kings were alleged to belong to the tribes of Thirayan or men of the sea. Another main dynasty was reigning at Conjeevaram in the time of Kari-kala Chola. The Chera Kings in their turn were said to be of Vanavar tribe. [2]

1 பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும். - சாமி சிதம்பரனார்.
2. Page 129 Tamil Culture and Civilization S. Thaninayagam

6. J. H. நெல்சன் கூறுவதாவது:- இந்துக்களின் சில குறிப்புகளிலிருந்து பாண்டியர் அயோத்தியிலிருந்து வந்தவர் என்று கண்டிருக்கிறது. ஆனல் இதை செவிவழிச் செய்தியாகக் கொள்வதற்கில்லை. பாண்டியர் திங்கள் மரபைச் சேர்ந்த சத்திரியர் என பொதுவாக நம்பப்படுகிறது. அதனல் இவர் வெள்ளாளரோ அல்லது வேளாளர் மரபினரோ அல்ல. [1]

7. வில்லியம் டெய்லர் தொகுத்த மெக்கன்சி கைப் பிரதி களில் கண்டிருப்பதாவது :-

'வடதேசத்திலுள்ள பாண்டியனுகிய வெள்ளாளனிந்த இராமேசுர யாத்திரைக்குப் புறப்பட்டு வந்தான். இப்படி யரசன் பாண்டியன் பெயர் மதுரநாயக பாண்டியன். அவன் முதலுண்டு பண்ணின பட்டணத்துக்குத் தன் பேரைத் தானே வைத்து மதுராபுரியென்றும், மதுரை நகரென்றும் பேரிட்டு பின்னுமனேக பட்டணங்களை உண்டு பண்ணினன். சோழ அரசை ஏற்படுத்தியவன் தேயமான் நள்ளியும் ஒரு வெள்ளாளன் எனப்பட்டவன்.' [2 & 3]

8. சோழன் பூர்வபட்டயத்தில் சேர, சோழ, பாண்டியர் தோற்றம் பற்றிக் கண்டிருப்பதாவது :-

'சமுத்திரமாகிய காவேரி கசமடுவில் நீந்திக் கரை கண்டு ஆதிசதாசிவன் இந்த முனையும் தப்பிக்கவே (சே)றும் முகத்திலே வேதசாத்திர முகாந்தரத்தினலே புவனத்தைப் பார்த்து ஒரு தரம் தியானிக்க, வீரசோழவள நாட்டில் வேளாளர் பாடியில் வீரசோழன் உற்பத்தியாக இரண்டாந் தரம் தியானிக்க இலாடர்வளநாட்டில் நந்தகோபால் இடையர் பாடியில் உலாச் சேரன் உற்பத்தியாக மூன்றுந்தரம் தியானிக்க, பாண்டிய வளநாட்டில் வலையர் பாடியில், வச்சிரங்கதப் பாண்டியன் உற்பத்தியாக' [4]

---

1 Page 44 Madurai Manual Part III.
2. William Mackenzie Collections - Tamil local History No. 4 William Taylor - Vol III
3. Page 102 and 103 The original inhabitants of India - Dr. G. Oppert.
4. பக்கம் 4 சோழன் பூர்வபட்டயம் - Madras Government Oriental Series.

9. திரு. பி. டி. சீனிவாச அய்யங்கார் கூறுவதாவது :-

சோழர் காவேரிப் பள்ளத் தாக்கில் வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டுவந்த வேளாளர்; சேரர் குறிஞ்சி நிலவாழ் குறவர்; பாண்டியர் நெய்தல் நிலவாழ் பரதவர் ஆவர். [1]

Thiru P. T. Srinivasa Ayyangar says :-

'The cholas were agricultural tribes (Vellalar) who lived in the Valley of Kaveri and had the athi, The Cheras are Koravas of the Kurunji region. The Pandyas were the coast people-Paradavar.' [1]

10. திரு V. R. இராமச்சந்திர தீட்சிதர் கூறுவதாவது :-

தமிழ் அரசுகள் முல்லை மருத நிலங்களில் வதிந்த மக்கள் குழுவிலிருந்து தோன்றியது என நன்கு புலனுகிறது. மன்னர் தரித்திருந்த பட்டங்களில் கோ அல்லது கோன் என்பதும் ஒன்று. இப்பட்டத்தை ஆயரும் பூண்டிருந்தனர். ஆயருக்கு கால்நடைகள் தான் குடும்பத்தின் உடைமைகளாய் இருந்தன. அதைத்தான் அவர் தங்களின் பின்னேருக்குப் பகிர்ந்தளிப்பர். பண்டைக் காலத்தில் மக்களுக்கு உடைமையாய் இருந்தவற்றில் கால்நடைகளும் ஒன்று என்பது நாமறிந்ததே. அதனுல் கோன் என்பது கால்நடைகளை உடைமையாகக் கொண்டிருந்த தலைவனைச் சுட்டும். ஆயர் மரபிலிருந்து பாண்டியர் மரபு தோன்றினது என்பது கலித்தொகையில்:

... ... ... ... ... ... தென்னவன்
நெல்விசை நட்டகுடியொடு தோன்றிய
நல்லினத் தாயர் (கலித் 104 - 11 - 46)
வீவில் குடிப்பினிருங்குடியாவரும் (கலித் 106 - 1 - 7)

எனவரும் மேற்கோள்களிலிருந்து உறுதிப்படுகிறது. இதே நிலை தான் மருத நிலத்தில் அரசுகள் உருவானதற்கு அடிப்படையாய் அமைந்தது. வேளாண்மைத் தொழில்

1. Page 139 History of the Tamils from the earliest times to 600 A. D. P. T Srinivasa Ayyangar.

மக்களின் உயிர்நாடியாகவும் மட்டுமின்றி, அது சமூக மேம்பாட்டிற்கு இன்றியமையானதாகவும் அமைந்தது. [1]

11. A. C. பர்னெல் ப... யரும், சோழரும் தற்காலத்தில் கீழ்சாதியாக உள்ள கள்ளர் ... திருடர் மரபைச் சேர்ந்தவர் என்று கூறுகிறார். [2]

The Cholas and Pandyas were merely Kallar or robbers a low caste at the present time. [2]

12. திரு. S. இராமகிருஷ்ணன் என்பவர் கூறுவதாவது:- சேரர் கிளையான அதியர் குடும்பத்தில் உதித்த அஞ்சியை மழவர் பெருமகன் (புறம் 88-3) எனவும் பல்யானைச் செங்கெழுகுட்டுவனை 'மழவர் மெய்ம்மறை' (பதிற்றுப் பத்து 21.24) எனவும் கொல்லியமலைத் தலைவன் வல்வில் ஓரியை 'மழவர் பெருமகன் மாவண் ஓரி' (நற். 52) எனவும் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுவதால், சேரர் மழவர் இனக் கிளையே.[3] நலங்கிள்ளி தம்பியான மாவளத்தான் 'மறவர் பெரும' (புறம் 43) சோழர் வழிமுறையினனான இளந்திரையன் 'மறவர் மறவ' (பெரும் 455) என்றும் விளிக்கப்பெறுவது அவர் குலத் தொடர்பை சுட்டுமெனில் சோழர் தொன்னாளில் மறவர் இனத்திலிருந்து கிளைத்து வேறுபட்டனர் எனலாம். [4] சங்க காலத்தில் பாண்டியரின் பூர்வீக தொடர்பை அறிய உதவுவது ஒரே பாட்டு அகம் 342.6. அது பாண்டியனைக் 'கள்வர் பெருமகன்' என்று குறிப்பிடுவதிலிருந்து பண்டு ஒளிந்த நாளில் பாண்டியர் குடி கள்வர் இனத்திலிருந்து கிளைத்து வேறுபட்டு உயர்ந்தது என்று கொள்வதற்கு இடந் தரும். சங்க கால மூவேந்தர் ஆட்சிக்கு இறுதி சூழ்ந்து ஏறத்தாழ 200 ஆண்டு தமிழகத்தை ஆண்ட களப்பாளரும் (களப்பிரர்) கள்வர் எனப்பெறும் கள்ளரே. பல்லவரும், பாண்டியரும்

---

1. Pages 178, 179 Studies of Tamil Literature and History — V. R. Ramachandra Dikshidar.
2. Page 36 Elements of South Indian Paleography - A. C. Burnell.
3. பக்கம் 213 இந்தியப் பண்பாடும் தமிழகமும் - S. இராமகிருஷ்ணன்.
4. பக்கம் 215 do. do.

எழுச்சியுற்ற பின்பும், முத்தரையர் முதலிய கள்வர் குறுநில மன்னராய் விளங்கினர். பல்லவர், க...பாளர், சோழர் பாண்டியர் என்னும் அரச குல...ள ஒன்ருய் இணைந்த பின்னுளில் சோழரைக் கள்...கவும், பாண்டியரை மறவராக வும் கருதும் கொள்...தோன்றியது. 5

குறிப்பு: ...ழவர் பெரும என்பது மழவருடன் பொருதி வெற்றி கண்டவன்; அவரை அடக்கியவன் எனப் பொருள் படும். ஆசிரியர் பெரும் பாணுற்றுப் படையில் 'மள்ளர், மள்ள; மறவர், மறவ; செல்வர், செல்வ' எனவரும் அடிகளில் 'மறவர் மறவ என்று வரும் அடியை மட்டும் மேற்கோளாகக் கையாள்கிருர். மறவர் மறவ என்ருல் கொடியவர்க்குக் கொடியவன் என்று பொருள்படும். 'மள்ளர் மள்ள' என்பது போர்வீரரில் சிறந்த போர் வீரன் என்றும் 'செல்வர் செல்வ' என்பது செல்வந்தரில் பெரிய செல்வந்தன் என்றும் பொருள் படும். இதிலிருந்து சோழர் மறவர் மரபினர் அல்ல என்பது தெளியப்படும். 'கள்வர் பெருமகன்', 'கள்வர் கள்வன்' என்பது கள்வரை வென்றவன், கள்வர்க்கு கள்வன் என்று பொருள்படும். கள்வர் பெருமகன் என்பது கள்வர்க்கு தலைவன் என்று பொருள் படாது. ஆக பாண்டியர் கள்வர் மரபினர் அல்ல என்று இதனுல் விளங்கும்.

13. திரு. ந.மு. வேங்கடசாமி நாட்டார் கூறுவதாவது:-

'அகநானூற்றில் 'கள்வர் பெருமகன் தென்னவன்' என மதுரை கணக்காயனுர் என்னும் புலவர் ஒரு பாண்டியனைப் பற்றி குறித்துள்ளார். இவற்ருல் சங்க காலத்தில் கள்வர் குலத்தவர் அரசராயிருந்தனர் என்று தெரிகிறது. விசயாலயன் என்னும் சோழ அரசன் தஞ்சையைப் பிடித்து சோழ ஆட்சியை நிலை நிறுத்துவதற்கு முன் முத்தரையர் ஆண்டனர். முத்தரையர் கள்ளர். முத்திரியர் வேறு; முத்தரையர் வேறு. செந்தலைக் கல்வெட்டில் தஞ்சைக்கோன், கள்வர் கள்வன், பெரும் பிடுகு முத்தரையன் என்று கண்டிருக்கிறது. 'வல்லத் தரசு' 'தஞ்சைராயர்' 'செம்பிய முத்தரையர்' என்னும் பட்ட

5. பக்கம் 228 இந்தியப் பண்பாடும் தமிழகமும் - S. இராமகிருஷ்ணன்.

முள்ள கள்ளர் குலத்தவர் தஞ்சையைச் சூழ்ந்த இடங்களில் இருக்கின்றனர். கி. பி. 7, 8 நூற்றாண்டுகளில் பலம் பெற்ற கள்வர் மரபினர் குறுநில மன்னராயிருந்தனர் என்பது அக நானூற்றில் காணப்படும் 'கள்வர் கோமான் புல்லி', 'கள்வர் கோமான் தென்னவன்' என்னும் மேற்கோள்களால் அறிய லாம். பர்னெலும் திரு. வெங்கிடசாமிராவும், சோழர் கள்ளர் என்கின்றனர். திரு. எம். சீனிவாச அய்யங்கார் சோழர் கள்ளர், பாண்டியர் மறவர் எனக் கூறுகிறார். திரு. வி. கனக சபை பிள்ளை என்பவர் சேர, சோழ, பாண்டியர் வெள்ளாள மரபினர் எனக் கூறுவது தவறு.[1]

**குறிப்பு :** திரு. ந மு. வெங்கடசாமி நாட்டார் பெருந் தமிழ்ப் புலவர். சங்க இலக்கியங்களில் பலவற்றிற்கும் சிலப்பதி காரத்திற்கும் உரை செய்திருக்கிறார். கள்வர் கோமான் என்றால் கள்வரை வெற்றி கண்டவன் என்று பொருள். கள்வர் என்பதற்கு கரியவன் என்றும் பொருள்படும். கள்வர் கள்வன் என்பது கள்வர்க்கு கள்வன் அதாவது திருடரை அடக்கி வெற்றி கண்டவன் எனப் பொருள்படும்.

14. கவிஞர் கண்ணதாசன் கூறுவதாவது:—

'பாண்டிய மன்னர்கள் சோழ மன்னர்கள் இருவரது பெரும் மெய்க்கீர்த்திகளில் எழுதப்படும்போது தேவர் என்ற பட்டப் பெயரோடு எழுதப்படுவது வழக்கம். பாண்டிய, சோழ நாடுகளை நீண்ட நாட்கள் ஆண்டவர்கள் மறவர்கள். மறவர்க்கான உயர்ந்த பட்டம் தேவர் என்ற பட்டமாகும். பாண்டிய நாட்டுப் படைப் பிரிவுகள் மூன்று. ஒன்று கள்ளர் படை; மற்றொன்று மறவர் படை; மூன்றாவது அகப்படை. மூன்றும் மூன்று குலமாக முக்குலம் என்று அழைக்கப்படும். கள்ளர் படை எதிரியின் நாட்டுக்குள்ளும் கோட்டைக்குள்ளும் சென்று வேவு பார்ப்பது; மறவர் படை நேரடியாகப் போர்க் களத்துக்குச் சென்று போர் புரியும் படை; எதிரி கோட்டைக்கு வரும்போது கோட்டையைக் காப்பது அகப்படை. இந்த மூன்று குலங்களில் மறவர் குலத்தைச் சேர்ந்தவர்களே மன்னர்களாக இருந்திருக்கிறார்கள். பாண்டிய நாட்டுக் கோயில்கள் அனைத்தையும் கட்டியவர்கள் இவர்களே.[2]

---

1. கள்ளர் சரித்திரம் – ந.மு. வெங்கிடசாமி நாட்டார்.
2. கல்கி 15–2–76, சேரமான் காதலி, அத்தியாயம் 15 இது பாண்டிய நாடு – கவிஞர் கண்ணதாசன்.

15. திருவாளர்கள் இராமலிங்க குருக்கள், V.A. குமரைய நாடார், இவர் இருவரும் கூறுவதாவது:-

சாணர் என்ற சொல் சான்றோர் என்பதன் திரிபு. நாடான் என்பது நாடன் என்பதன் திரிபு. நாடன், சான்றோர் என்பவர் சத்திரிய மரபினர். நாயக்கருக்கு முன்னால் இவர் தமிழகத்தை ஆட்சி செய்த முடியுடை மூவேந்த மரபினர். நாயக்கர் மதுரையைக் கைப்பற்றின உடன் பாண்டிய மரபினராகிய சான்றோர் குல மக்கள் பின் வாங்கி நெல்லை மாவட்டத்தின் தென் பகுதியில் குடியேறினர். நாயக்கருடன் போரில் தோற்றதன் காரணமாய் பாண்டிய மரபினராகிய சான்றோர் அடக்கி ஒடுக்கப்பட்டு, காலப்போக்கில் தாழ்த்தப் பட்டோர் நிலையை அடைந்தனர்.[1]

ஆக மேலே கண்ட கூற்றுக்களின்படி ஆயர், பரதவர், குறவர், கள்ளர், மறவர், அகம்படியர், வெள்ளாளர், சாணர் (நாடார்) ஆகிய மரபினர்கள் தெலுங்கர் தமிழகத்தைக் கைப்பற்று முன் இங்கு ஆட்சி செலுத்தி வந்தனர். இக் கூற்றுக்களில் எது உண்மையானது என்பது பற்றி ஆராயு முகத்தான் தமிழகத்தில் சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் பிரிவுகளைப் பற்றி அடுத்து ஆராய்வோம்.

**சங்க கால மக்கள் பிரிவு :**

சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் பற்றி அறியத் துணை புரிவது சங்க இலக்கியங்கள். அக் காலத்தில் வாழ்ந்த மக்கள் பிரிவுகளை, அவர்கள் இருந்த இடத்துக்குத் தக்கவாறு வகுத்திருக்கிறார்கள். அவைகள் மலைகளும் அவற்றைச் சார்ந்த இடமும், காடுகளும் அவற்றைச் சார்ந்த இடமும், ஆற்றோரம் நீர் நிலைகளும் அவற்றையொட்டிய பள்ளத்தாக்கான சம வெளிப் பிரதேசமும், கடலைச் சார்ந்த இடமும் ஆக நான்கு விதமாக அமைந்தது. இந்த நிலப் பாகுபாடு பற்றித் தொல்காப்பியர் கூறுவதாவது:-

1. நாடார் மன்னரும், நாயக்க மன்னரும் – இராமலிங்க குருக்கள், V. A. குமரைய நாடார்.

''மாயோன் மேயகாடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே''

(தொல் பொ. 1 அத். 5)

ஆக குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் நிலப்பாகுபாட்டைத் தவிர, குறிஞ்சி, முல்லை நிலவாழ் மக்களில் உடம்பு வளையாமல் பிறர் தேட்டை ஆறலைத் துண்ணும் மக்கள் பற்றிப் பாலை என்னும் ஒரு திணை எழுந்தது. இத் திணை பற்றி இளங்கோ அடிகள் சிலப்பதிகாரத்தில்

''முல்லையுங் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து
நல்லியல்பு இழந்து நடுங்குதுயர் உறுத்துப்
பாலை என்பதோர் படிவங் கொள்ளும்''

(காடுகா 5-64-66)

என்று கூறியிருப்பது காண்க.

இந் நில மக்கள் கொடியவர் என்பதை உணர்த்த 'கொடுங்கோல் மன்னர்க் குடைக்கீழ் வாழ்கின்ற குடிகள் போலப் படுநிலம் பாலை' என்ற செய்யுள் எழுந்தது. இந்த ஐந்து நிலத்து மக்கள் பிரிவு, அவரது தொழில், உணவு, பழக்க வழக்கம் பற்றிக் கீழே காண்போம்.

**குறிஞ்சி நிலம்** : இது மலையும் மலையைச் சார்ந்த இடமும். இங்கு வாழ்ந்தவர் குறவர், கானவர், குன்றவர், புனவர், இறவுளர், கொடிச்சியர், குறத்தியர் ஆவர். தலைமக்கள் கானக நாடன், பொருப்பன், பொருநன், ஆனமலையன், வெற்பன், சிலம்பன், கொடிச்சி என்பவர் இவர்கள் தேன் எடுத்தும், கிழங்குகள் அகழ்ந்தும், மரங்களிலுள்ள காய்கனி, மூங்கிலரிசி, மலைகளிலுள்ள காட்டு விலங்குகள், பறவைகள் இவற்றை வேட்டையாடி, அவற்றின் ஊனையும் உணவாகக் கொண்டனர். இவர்களின் உடை மிருகங்களின் தோலாலும்

மரங்களின் பட்டை, மரஞ்செடிகளின் தழைகளாலும் தயார் செய்யப்பட்டது. நாளடைவில் இவர்கள் சற்று திருந்தி மலைச்சரிவுகளில் தன்னிச்சையாய் விளையும் தினையையும், ஐவன நெல்லையும் உணவாகக் கொண்டனர். பின்னர் இவர்கள் நிலத்தை வெட்டிக் கொத்தி ஐவன நெல்லையும், தினையையும் விதைத்துப் பயிர் செய்யக் கற்றனர். தினைப் புலன்களை மிருகங்கள், பறவைகள் சேதப்படுத்தாமல் இருக்க பரண்கள் அமைத்து, கற்களைக் கவண்களால் செலுத்தி அவற்றை விரட்டுவர். இவர்கள் வாழ்க்கை திருந்தாத வாழ்க்கையே. இவர்கள் குடியிருப்பு சிறுகுடி, குறிச்சி என்று வழங்கப்பட்டது. இவர்கள் வேட்டையாடிக் கிடைத்த மானிறைச்சியை மருத நிலத்து உழவர் குடியிருப்பில் கொண்டு நெல்லுக்கு பண்டமாற்றுவர். (புறம் 33-1-8) பால் எருமைகளையும், பசுக்களையும், கடாறிக் கன்றுகளையும், ஆயருக்கு விற்பர். (பெரும்பா 165-166) இவர்கள் முருகனைத் தெய்வமாகக் கொண்டனர்.

**முல்லை நிலம் :** குறிஞ்சி நிலத்துக்கும் மருத நிலத்துக்கும் இடைப்பட்ட காடு குன்றுகள் நிறைந்த பகுதி முல்லை எனப்பட்டது. இங்கு ஆநிரைகள் வளர்ப்பதற்கு ஏற்ற புல்வெளிகள் நிறைந்திருந்தது. இங்கு வாழ்ந்த மக்கள் அண்டர், இடையர், ஆயர், கோவலர், பொதுவர், ஆய்ச்சியர், தொதுவியர், பொதுவியர், குடத்தியர் என்றும் தலைமக்கள் அண்ணல், தோன்றல், குறும்பொறை நாடன், கானக நாடன் மனைவி, கிழத்தி என்றும் வழங்கப்பட்டனர். இவர்கள் ஆடு மாடுகளைப் பேணியும், காடுகளின் இடையிடையே உள்ள நிலத்தில் வரகு, சாமை, முதிரை இவைகளை விதைத்துப் பயிர் செய்தும் வந்தனர். இவர்கள் உணவு ஆநிரைகளின் ஊனும், பால், தயிர், வரகு, சாமை, முதிரையும், பால், தயிர், நெய் இவற்றிற்கு மருத நில உழவர் குடியில் பண்டமாற்றிய நெல்லும் ஆகும். (புறம் 33-2-8) (பெரும்பா. 155-166) இவர்கள் குடியிருப்பு பாடி, சேரி, பள்ளி எனப்பட்டது. இவர்கள் திருமாலைத் தெய்வமாக வழிபட்டனர். குறிஞ்சி நில மக்களைவிட இவர்களது வாழ்க்கை சற்று திருந்தியது எனலாம்.

**பாலை நிலம் :** குறிஞ்சி, முல்லை நிலங்களில், வேனிற் காலத்தில் மழை இன்மையால் ஏற்படும் நிலையை விளக்க பாலை என்ற ஒரு திணை எழுந்தது. இதை வறண்ட பகுதி என்பர். ஆறலைத்தல் தொழிலை மேற்கொண்ட எயினர், மறவர், எயிற்றியர், மறத்தியர், இந் நில மக்களாகக் கருதப்பட்டனர். தலைமக்கள் மீளி, விடலை, காளை, எயிற்றி, பேதை எனப்பட்டனர். இவர்கள் முல்லை நிலத்து ஆயரின் ஆநிரைகளைக் கவர்வதும், அதனால் ஆயர் அவருடன் பொருதி ஆநிரைகளை மீட்பதும், வழிப் போக்கர்களைப் பதுங்கியிருந்து, கொடிய வில்லைக் கொண்டு எய்து அவர்களைத் தாக்கி, அவர்களின் உடைமைகளைக் கவர்வதும், (பெரும் 39-41) உடைமைகள் ஒன்றும் இல்லாதவர்களின் கால் கைகளைத் துண்டிப்பதும், (கலித் 3-1-6) இவர்களின் அன்றாட நிகழ்ச்சி. இவர்கள் பயங்கரத் தோற்ற முடையவர். இவர்கள் உணவு ஆறலைத்தலால் கிடைக்கும் ஊனும், உணவுப் பண்டங்களும் ஆகும். இவர்கள் கூட்டம் கூட்டமாய் வாழ்வதால் கூட்டுணவே கொள்வர். இவர் குடியிருப்பு பறந்தலை, சொல் குறும்பு எனப்படும். இவர்கள் கொற்றவையைத் தெய்வமாகக் கொண்டனர். 'அறம் செயின் மறம் கெடும்' என்பது இவர்கள் கொள்கையாதலால், ஒருவரிடமும் பரிவு காட்டார். யாரிடமும் பரிவு காட்டினால், கொற்றவை ஆறலைத்தல் தொழிலுக்கு உதவ மாட்டாள் என்பது இவர்கள் எண்ணம்.

**மருத நிலம் :** இது ஆறுகள், நீர் நிலைகளுக்கு அருகிலுள்ள தாழ்வான சமவெளிப் பகுதியாகும். இங்கு தோப்புகள் கழனிகள் நிறைந்து வளம் நிரம்பியிருந்தது. இங்குள்ள மக்கள் களமர், தொழுவர், மள்ளர், கம்பளர், வினைஞர், உழவர், கடைஞர், இளைஞர், உழத்தியர், கடைசியர், ஆற்றுக் காலாட்டியர் எனவும், தலைமக்கள், ஊரன், கிழவன் மகிழ்நன் எனவும் வழங்கப்பட்டனர். இவர்கள் உணவு உற்பத்திக்கு நீரின் உபயோகத்தை அறிந்தவர்கள். தன்னிச்சையாய் ஓடிய ஆறுகளுக்குக் கரைகள் கண்டு, அவைகளின் ஓட்டத்தைக் கட்டுப்படுத்தி, அவற்றின் குறுக்கே அணைகள் அமைத்து, கால்வாய்கள் மூலம் நீரை இவர்கள் வெட்டிய

ஏரி, குளங்களில் நிரப்பியும், நிலத்தை வெட்டிக் கொத்தி, சமப் படுத்தி, வரப்புகள் அமைத்து வயல்களாக்கி, எருது களையும், எருமைகளையும் பூட்டிய ஏர்களினால் அவற்றை உழுது பண்படுத்தி, எருவிட்டு, நீர் பாய்ச்சி, ஏற்கனவே பாவி யிருந்த நெல் நாற்றுக்களைப் பறித்து, பெண்களைக்கொண்டு அவைகளை வயல்களில் நட்டும், களை முளைக்கும் போது அவைகளைக் கிள்ளி எடுத்தும், நோய் கண்டால் பயிர்களுக்குத் தடுப்பு மருந்து கண்டும், கதிர் முற்றிய பின் அவற்றைத் தாளோடு அறுத்து களங்களில் கொண்டு சேர்த்து, அடித்து நெல் மணிகளைப் பிரித்து எடுத்து, வைக்கோல் போரிடுவதும் தங்களுக்கு உதவிய தொழிலாளர்களுக்கும், இரவலருக்கும், புரவலருக்கும் நெல்லை முகந்து வழங்கியது போக மீதத்தைக் களஞ்சியங்களில் சேமித்து வைப்பதும் இவர்களது வேலை. மற்ற நிலங்களைப் போலன்றி, குறுகிய காலத்தில் ஆண்டு முழுவதற்கும் தேவையான உணவுப் பொருள்களை இவர்கள் உற்பத்தி செய்ததால் இவர்களுக்கு ஓய்வு கிடைத்தது. அக் காலத்தை இவர்கள் இன்பமாய் கழித்தார்கள். பற்பல கலைகளை வளர்த்தார்கள். நாகரிகமும், பண்பாடும், இவர் களிடம் பெருகின. இவர்கள் குடியிருப்பு ஊர் எனப்பட்டது. இவர்கள் வேந்தனைத் தெய்வமாகக் கொண்டனர். வேந்தன் என்பது பிற்காலத்தில் இந்திரன், புரந்தரன், தேவேந்திரன் என வழங்கப்பட்டான். குறிஞ்சி நில வேட்டுவரும், முல்லை நில ஆயரும், நெய்தல் நிலப்பரதவரும், உமணரும் மற்றும் பாணரும், மருத நில உழவரிடம் வந்து தங்கள் தங்கள் நிலங்களில் கிடைத்த மான் தசை, பால், தயிர், வெண்ணெய், மீன், உப்பு இவைகளை நெல்லுக்குப் பண்டமாற்றிச் செல்வ துண்டு. (புறம். 33-1-8) (புறம் 343-1-2) (ஐங்குறு மருதம் 47-48) (அகம் 140-5-8) (அகம் 390-8-9).

**நெய்தல் நிலம்:** கடற்கரைக்கு அருகிலுள்ள பெருமணல் நிறைந்த பகுதி நெய்தல் நிலம் என்று வழங்கப்பட்டது. இங்குள்ள மக்கள் பரதவர், நுளையர், அடலர், வலைஞர், அலவர், திமிலர், நுளத்தியர், பரத்தியர் எனவும் தலை மக்கள் கொண்கனன், துறைவன், கோப்பன், புலம்பன் எனவும்

வழங்கப்பட்டனர். இம் மக்கள் கடலில் படகுகளில் சென்று மீன் பிடித்தும், கரைகளில் பாத்திகள் அமைத்து அவற்றில் கடல் நீரைப் பாய்ச்சி, உப்பு விளைவித்தும் தொழில் செய்தனர். இவர் உணவு மீனும், மீன், உப்பு இவற்றிற்கு மற்ற நிலத்தில் பண்டமாற்றிய உணவுப் பொருள்களுமாகும். (நற்றிணை 239-3, அகம் 60-4, அகம் 320-2-5, அகம் 340-14-15, புறம் 343-1-2) இவர் குடியிருப்பு சிறுகுடி, பாக்கம் எனப் பட்டது. வருணனைத் தெய்வமாக வழிபட்டனர்.

இந்த ஐவகை நிலப் பிரிவுகளில் உள்ள குறவர், இடையர், மறவர், பரதவர் இவர்களை சங்க காலத்தில் தமிழகத்தை ஆண்ட மூவேந்த மரபினர் என்று சில ஆராய்ச்சியாளர், புலவர் மற்றும் வரலாற்றுசிரியரும் கூறி வருவதால், இந்த நிலங்களில் எந்தப் பகுதியில் நாகரிகம் தோன்றி, அரசு நிறுவப்பட்டது என்பது பற்றி அடுத்து ஆராய்வோம்.

### அரசு தோன்றிய இடம்

### ( உழிஞைதானே மருதத்துப் புறனே )

தமிழக நிலப் பாகுபாட்டை குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்று வகுத்திருப்பதை ஏற்கனவே கண்டோம். இவைகளில் குறிஞ்சியும், முல்லையும் வன்னிலம்; திருந்தாத நிலம். நெய்தலும், மருதமும் மென்னிலம்; திருந்திய நிலம். பாலை என்பது பாழ்பட்ட வறண்ட நிலம். மனிதனின் உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாதது உணவு, உடை. தமிழகத்தில் உணவில் சிறப்பானது நெல். தெய்வங்களுக்குப் படைப்பது நெல்லரிசிப் பொங்கலே. குறிஞ்சியும், முல்லையும் திருந்தாத நிலங்கள் என்றால், அங்குள்ள மக்களுடைய நிலையும் அப்படியே. அவர் காட்டு வாணர்கள்; நாடோடிகள். இவர்களுக்கு நிரந்தரமான குடியிருப்புகள் இல்லையெனலாம். மென்னிலத்தில் ஒன்றாகிய நெய்தல் நிலம் கடற்கரைப் பகுதி. இங்கு மீன், உப்பு இவைதான் கிடைக்கும். ஆனால் மருத நிலம் அவ்வாறன்று. அது செழிப்பான பகுதி. நீர்நிலை, தோப்பு, கழனிகள் நிறைந்து மக்கள் வாழ்க்கை நடத்துவதற்கு இன்றியமையாத உணவு,

உடை இவற்றிற்குத் தேவையான நெல், கரும்பு, வாழை, மஞ்சள், பருத்தி முதலிய விளை பொருட்கள் இங்கு உற்பத்தி செய்யப்பட்டன. இப் பகுதி வளமுள்ளது. இங்கு மருத மரங்கள் நிறைந்திருந்ததால் மருத நிலம் என்று வழங்கியதாக அறிஞர் கூறுவர். சிலர் மருதம் என்பது வளத்தைக் குறிக்கும் என்றும் கொள்வர். மருத நில மேம்பாட்டிற்கு முக்கிய காரணம் நெல் உற்பத்தி. நெல் ஆற்றோரங்களில்தான் உற்பத்தி செய்யப்பட்டது. ஏனெனில் நெல் சாகுபடிக்கு நீர் இன்றியமையாதது என்பதை யாவரும் அறிவர். இது பற்றியே "நெல்லும் உயிரன்றே; நீரும் உயிரன்றே; மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" என்று புறநானூறு (186) குறிப்பிடுகிறது. Dr. கில்பர்ட் சிலேட்டர் நெல் உற்பத்தி பற்றிக் குறிப்பிடுவதாவது:- 'நெல் விளைவே திராவிட நாகரிகத்தின் பொருளியல் அடிப்படை என்பது தெளிவு. நெல்லுடன் கூடிய பலவகைப்பட்ட கூளங்கள் விளைவிக்கப்படவே செய்கின்றன. ஆனால் இவை இரண்டாந்தர தேர்வுகளாகவே செய்யப்படுகின்றன.' [1] ஏற்கனவே குறிப்பிட்டது போல், ஆரம்ப காலத்தில் தமிழகத்தில் ஆற்றோரங்களில்தான் நெல் உற்பத்தி செய்யப்பட்டு வந்தது இன்னும் பெருமளவில் ஆற்றோரங்களில் நெல் பயிரிடப்பட்டு வருவதை அனைவரும் அறிவர். மக்கள் பெருக்கத்தின் காரணமாய் உணவு பற்றுக் குறை ஏற்பட, மருத நில மக்கள் அண்மையிலுள்ள காட்டை அழித்து நாடாக்கி, அங்கு ஊர் அமைத்து, அதில் குடியேறி, குளம் வெட்டி, மழை நீரை அதில் பெருக்கி நெல், கரும்பு, வாழை, மஞ்சள் முதலிய பயிர்களை அப் பகுதியில் பயிர் செய்தனர். இதனாலேயே ஆற்றுப் பகுதிகளுக்கு அப்பாலுள்ள உள்நாட்டிலும், நெல் உற்பத்தி பயிராகும் நிலை எழுந்தது. ஆக உலக நாகரிகத்தின் தொட்டில் ஆற்றோரமாகிய மருத நிலம். நாகரிகத்தின் தோற்றத்திற்கு மூலகாரணமாய் அமைந்தது நெல் உற்பத்தி. இந்தியாவில் முதன் முதலில் நெல் உற்பத்தி செய்தவர் திராவிடர். அதிலும் தென்னிந்தியாவிலேயே முதன் முதலில் நெல் உற்பத்தி

1. பக்கம் 108 இந்திய நாகரிகத் திராவிடப் பண்பு
– Dr. கில்பர்ட் சிலேட்டர்.

தோன்றியதென்று பல அறிஞரும் கூறுவர். தமிழகத்தில் பொருநை (தாம்பிரபரணி), வைகை, காவிரிப் பகுதிகளில் தான் முதன் முதலில் நெல் உற்பத்தி செய்யப்பட்டது என்று பல ஆராய்ச்சியாளரும் கருதுகின்றனர். சோழ நாடு என்பது ஆரம்ப காலத்தில் திருச்சி, தஞ்சை மாவட்டங்களையும் தென் ஆற்காடு மாவட்டத்தில் தெற்கே ஒரு சிறு பகுதியுமே கொண்டதென்பர். சோழ நாட்டிற்கு வடக்கே உள்ள பகுதி அருவாநாடு, அருவாவடதலை நாடு என்று வழங்கப்பட்டது. இங்கு குறும்பர், ஒளியர், அருவாளர், எயினர் முதலிய பல மக்கள் பிரிவினர் காடுகளில் வாழ்ந்தனர். இது தொண்டை மண்டலம் என வழங்கப்படுகிறது.

கரிகால் சோழன் காலத்தில் தொண்டை மண்டலப் பகுதியான பாலாற்றுப் பகுதியில் சோழ நாட்டு மருத நில மக்கள் குடியேறி, அங்கு காட்டை அழித்து நாடாக்கி, குளம் தொட்டு வளம் பெருக்கி, நெல் உற்பத்தி செய்து நாகரிகத்தைப் பரப்பினர். கரிகாலனுக்குப் பிறகு சோழ இளவரசன் இளந்திரையன் இப் பகுதியை ஆண்டான். இப் பகுதியில் சோழ நாட்டிலிருந்து குடியேற்றம் ஏற்பட்டபோது, இங்கு வாழ்ந்த மக்களாகிய ஒளியர், அருவாளர், எயினர் போன்றோர் பணிவுடன் ஒடுங்கி இம் மக்களிடம் அண்டி தொழில் கேட்டுத் திருந்தினர் என்று பட்டினப் பாலை, பெரும்பாணாற்றுப் படை முதலிய சங்க கால இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. மற்ற நிலப் பகுதிகளில் மக்கள் திருந்தாத நாடோடிக் காட்டு வாழ்க்கை நடத்தியபோது, மருத நிலத்தில் நிரந்தரமான குடியிருப்புகள் ஏற்பட்டன. உடைமைகள் இவர்களுக்கு ஏற்பட்டதால் குடும்ப முறையும், அதனால் மக்கள் தாய முறையும் ஏற்பட்டிருந்தது. ஆக மருத நிலத்திலேயே பெண்களுக்கு கற்புநெறி ஏற்பட்டது. பிற நிலங்களில் கற்புநெறி ஆரம்ப காலத்தில் ஏற்படவில்லை என்பதற்கு இங்குள்ள மக்கள் மருமக்கட் தாய முறையைப் பின்பற்றி வந்தனர் என்பதைக் குறிப்பிடலாம்.

கேரளாவில் சமீப காலம் வரையில் நாயர்கள் (மேனன், நம்பியார், பிள்ளை) மத்தியில் மருமக்கட் தாய முறை நிலவி

வந்தது இதற்கு எடுத்துக்காட்டு. இவர்கள் பல்கணவன் முறையை மேற்கொண்டிருந்ததால் மருமக்கட் தாய முறை வழக்கில் வந்தது. தமிழகத்தில் சில மரபினரிடம் பண்டைய வழக்கத்தின் எச்சக்கூறுகள் இன்னும் நீடித்து வருகின்றன. இதற்குக் காரணம் பண்டைக் காலத்தில் இவர்கள் குறிஞ்சி, முல்லை, நெய்தல் நிலங்களைச் சேர்ந்தவராக இருந்திருக்க வேண்டும். ஆக இவர்கள் திருந்தாத வாழ்க்கை மேற்கொண்டிருந்தனர். மாருக மருத நில மக்கள் திருந்திய வாழ்க்கை முறையை மேற்கொண்டிருந்தனர்.

திருமண வாழ்க்கையும், கற்பு நெறியும், குடும்ப முறையும் இவர்கள் மத்தியில் முதன் முதலில் ஏற்பட்டது. இப்பகுதியிலேயே நகரமும், அரசுகளும் ஏற்பட்டன. ஆனதால் தான் தெய்வத்தை வேந்தன் என்றும் தலைமக்களை ஊரன், மகிழ்நன், கிழவன் என்றும் வழங்கினர். ஊரன் என்ருல் ஊருக்குத்தலைவன்; மகிழ்நன் என்ருல் மகிழ்ச்சிகரமாய் இருப்பவன்; கிழவன் என்ருல் உரிமை உடையவன் என்று பொருள்படும். மற்ற குறிஞ்சி, முல்லை, நெய்தல், பாலை நிலத்துத் தலைமக்கள் இவ்வாறு வழங்கப்படவில்லை என்பது காண்க. ஏற்கனவே குறிப்பிட்டது போல் தமிழகத்தின் ஆற்ருேரங்களில் மருத நில நாகரிகம் தோன்று முன், ஆறுகள் தன்னிச்சையாய் ஓடிக்கொண்டிருந்தன. இங்கு மக்கள் வாழ்ந்தார்களா என்பதே கேள்விக்குரியது. ஆதலால் தண்ணீர் ஒருவராலும் பயிர் செய்யப்பயன்படுத்தப்படவில்லை என்பது தெளிவு. அக்கால மக்கள் குறிஞ்சி, முல்லை, பாலை நிலக் கூறுபாடுகளையுடையவர்களாகவே இருந்தனர். குறிஞ்சி, முல்லை நிலப்பகுதியிலுள்ளவர்களில் வலைகள் மூலம் ஆரம்ப காலத்தில் பறவை, விலங்குகளைப் பிடித்தவர்தான் பின்னுல் ஆறு, மற்றும் நீர் நிலைகளிலும் வலைகள் மூலம் மீன் பிடிக்கக் கற்று, அதன்பின் கடற்கரைப் பகுதிக்குச் சென்று அங்கு ஆரம்பத்தில் வலை மூலம் மீன் பிடித்தும், பின் கட்டுமரங்கள் மூலம் கடலுக்குள் சென்று மீன் பிடிக்கவும் கற்றிருக்க வேண்டும். கட்டுமரம் மூலம் மீன் பிடிக்கும் பழக்கம் மருத நில நாகரிகத்திற்குப் பின் ஏற்பட்டிருக்க

வேண்டும். தமிழகத்திலுள்ள குறிஞ்சி, முல்லை, நெய்தல் நில மக்கள் நாளடைவில் வளர்ச்சி பெற்று ஆற்றோரத்தில் மருத நில வாழ்க்கை மேற்கொண்டனர் என்று கூறுவது எவ்விதத்திலும் பொருந்தாது. நெய்தல் நில வாழ்க்கை மருத நில நாகரிகம் ஏற்பட்ட பின்னர் தான் தோன்றிய தென்பதற்கு, நெய்தல் நிலம் மற்ற எல்லா நிலங்கட்கும் இறுதி யில் கூறப்பட்டிருப்பதை தொல்காப்பிய சூத்திரத்தில் காண்க. ஆக அயல் நாட்டு வாணிகம் மருத நில நாகரிகத்திற்குப் பிறகு தான் ஏற்பட்டிருக்க வேண்டும். கடற்கரைப் பட்டினங்கள் அயல் நாட்டு வணிகத்தால் எழுந்தன. அன்று தமிழகத்தில் குறிஞ்சி, முல்லை நில வாழ்க்கை நடத்திய குறவரோ, வேடரோ, வலையரோ, ஆயரோ, இடையரோ வளர்ச்சி பெற்று மருத நில வாழ்க்கை மேற்கொண்டனர் என்பது ஏற்கனவே கூறியது போல், பொருந்தாக் கூற்று. ஆதலால் பிறபகுதியிலிருந்து நாகரிக மேம்பாடடைந்த ஒரு மக்கள் கூட்டம் நில அழிவின் காரணமாகவோ, படையெடுப்பின் காரணமாகவோ, மக்கள் கூட்டத்தின் நெரிசல் காரண மாகவோ இடம் பெயர்ந்து இன்றைய தமிழகத்தின் பொருநை, வையை, காவிரி முதலிய ஆற்றுப் பகுதிகளில் குடியேறி யிருக்க வேண்டும். அவர்கள் வரும் காலத்தில் நாகரிகமற்ற மக்கள் காடுகள், மலைகளில் வாழ்ந்திருக்கின்றனர். அதனால் அவர்களுக்கும் புதிதாய் குடியேறிய மக்களுக்கும் அடிக்கடி மோதல்கள் ஏற்பட்டன. இதற்குச் சங்க இலக்கியங்கள் என்று பகரும். அக் காலத்தில் ஆறுகள் கரையின்றி ஓடியது. காவிரிக்கு கரிகாலன் கரை கண்டதை 'பொன்னிக்குக் கரை கண்ட பூபதியே' என்று ஒட்டக் கூத்தர் விக்கிரம சோழன் உலாவில் பாடியிருப்பதும், ஈழத்திலிருந்து பன்னி ராயிரம் பேரைச் சிறைப் பிடித்து கரிகாலன் கரை கட்டினான் என்பதைப் பற்றி 'தொக்க கலியின் மூவாயிரத்துத் தொண் ணூற்றில், மிக்க கரிகால வேந்தனுந் தான்-பக்கம் அலைக்கும் புகழ்ப் பொன்னியாற்று கரை கண்டான், மலைக்கும் புயத் தானும் வந்து' என்ற பழைய வெண்பாவும் நாட்டில் வழங்கி வருதலும் காண்க. புராண மரபுச் சோழன் காந்தமன்

குடகு மலையைப் பிளந்து காவிரியை சோழ நாட்டில் ஓடச் செய்தான் என்று புராணங்கள் கூறுகின்றன. சூரவாதித்த சோழன் மலேயாவிலிருந்து வெற்றிலையை சோழ நாட்டிற்கு கொண்டு வந்து பயிரிட்ட செய்தியை செவ்வந்திப் புராணமும் உறையூர்ப் புராணமும் கூறுகின்றன.[1] மேலும் நாட்டில் பஞ்சம் ஏற்பட, சேர, சோழ, பாண்டியர் மூவரும் தேவேந்திரனிடம் சென்று மழை வேண்டியதாகவும், சேரனும், சோழனும் மழை வரம் வாங்கி வந்ததாகவும், பாண்டியன் தேவகன்னி புதல்வர் நால்வருடன் செந்நெல், கன்னல், கதலி, பனை முதலிய வித்துக்களை நாட்டிற்குக்கொண்டு வந்து ஒரே நாளில் பன்னீராயிரம் கிணறுகள் தோண்டி, வேளாண்மை கண்டு நாட்டைச் செழுப்பித்தான் என்றும், கரிவலம் வந்த நல்லூர், சீவிலிபுத்தூர் கல்வெட்டுக்கள் சான்று பகர்கின்றன. மேலும் செங்கோட்டுப் பள்ளின்படி மூவேந்தர் வேண்டுகோளின் மேல், தேவேந்திர குலத்தாரின் தலைவன் நெல்லைத் தேவலோகத்திலிருந்து கொண்டு வந்து பூமியில் பயிரிட்டதாக ஒரு பழஞ் செய்தி நாட்டில் வழக்கில் இருந்து வருகிறது.[2] அதியமான் மகன் பொருட்டெழினியை ஔவையார் பாடும்போது, அவன் முன்னோரிலொருவன், சீனத்திலிருந்தோ, சாவகத்திலிருந்தோ கரும்பைக் கொண்டு வந்து தமிழகத்தில் பயிரிட்டதாக :

'அரும் பெறல் அமிழ்த மன்ன
கரும்பு இவண் தந்தோன் பெரும் பிறங்கடையே'
(புறம் 392)

என்று பாடியிருக்கிறார். மேலும் தமிழ் மூவேந்தரையும் உயர்ந்த நெல்லுடையவன் என்றும், அவரது தலைநகர்களை உயர்நெல் விளையும் பூமியாகவும் போற்றிச் சங்ககாலப் புலவர் பலர் பாடியிருப்பதைக் கீழே கண்ட மேற்கோள்களால் அறியலாம்.

''சீர் சான்ற உயர் நெல்லின்
ஊர் கொண்ட உயர் கொற்றவ'' (மதுரைக் காஞ்சி 87-88)

---

1. பக்கம் 502 கலைக் களஞ்சியம்.
2. பக்கம் 221 செங்கோட்டுப் பள்ளு விளக்கக் குறிப்புகள்.

(ஊர் என்பது பாண்டியன் கடற்கரைப் பட்டினமாகிய கொற்கையைக் குறிக்கிறது.)

''நெல்லும், நீரும் எல்லார்க்கும் எளியவென
வரைய சாந்தமும், திரைய முத்தமும்'' (புறம் 58)

(நெல்லும், நீரும் எல்லார்க்கும், எளிதில் கிடைக்கும்படியாகப் பாண்டியன் செய்ததை இது உணர்த்துகிறது.)

'நெல்லுடையான் நீர் நாடற்கோ'
(யாப்பெருங்கலவிருத்தி)

'நெல்லும் உயிரன்றே; நீரும் உயிரன்றே;
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்;' (புறம் 186)

தமிழ் மூவேந்தர் நெல்லையும், நீரையும் போன்று நாட்டின் உயிராக மக்களால் போற்றி மதிக்கப்பட்டனர் என்பதைச் செய்யுள் உணர்த்துகிறது. நெல்லும், நீரும் மக்களுடைய உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாதது. அதே போன்று மன்னரும், நெல்லும், நீரும் போல மதிக்கப் பட்டனர். வயல், நீர், நெல், குடி, அரசு இவைகளின் ஒருமைப் பாட்டைப் பற்றி ஔவையார் ஒரு குறுநில மன்னன் அரண்மனையில் நடைபெற்ற ஒரு திருமண விழாவில், மணத்தம்பதிகளை வாழ்த்து முகத்தான் 'வரப்பு உயர' என்று கூறினார். அவ்விழாவிற்கு வந்திருந்த அனைவரும் திகைக்க, அவள் அவர்களுக்குப் புரியும்படியாக 'வரப்புயர நீர் உயரும், நீர் உயர நெல்லுயரும், நெல் உயரக் குடி உயரும், குடி உயரக் கோன் உயரும்' என்று விளக்கினார். ஆக மேலே எடுத் தாண்ட மேற்கோள்கள் மூலம், அரசுகள் தோன்றிய இடம் நீரும், நெல்லும் உள்ள இடம் என்று தெற்றென விளங்குகிறது. இந் நிலத்தில் வாழ்ந்த மக்கள், பிற நிலத்தின் மக்களைப் போன்று உயிர் வாழ்க்கைக்கு ஆண்டு முழுவதும் அலைந்து திரிந்து உணவு தேடுவதைவிட்டு, ஒரு குறுகிய காலப்பகுதிக் குள் ஆண்டு முழுவதற்கும் தங்கள் தங்கள் குடும்பத்திற்குத் தேவையான உணவுப் பொருள்களைப் பயிர் செய்து, களஞ்சி யங்களில் சேர்த்து வைத்தனர். அவர்கள் தாங்கள் அரும் பாடுபட்டுப் பயிர் செய்த உணவுப் பொருட்களை தங்களுக்கு

பயிர்த் தொழிலில் உதவி செய்த சகல தொழிலாளர்களுக்கும், தங்களை அண்டிய இரவலருக்கும், புரவலருக்கும், நாடோடிகளாய் ஆடிப்பாடி மகிழ்ந்து திரிந்த இன்றைய நரிக்குறவர் கூட்டத்தை ஒப்பிய பாணர், துடியர், விறலியர் முதலிய மக்களுக்கும் கொடுத்து உதவினர். மற்ற நிலத்து மக்களும் இவர்களிடம் தங்கள் நிலத்தில் விளைந்த பொருட்களைக் கொணர்ந்து, நெல்லுக்கும் மற்றும் உணவுப் பொருள்களுக்கும் பண்டமாற்று செய்து வந்தனர். மக்கள் குறுகிய காலத்திற்குள் தேவையான உணவை உற்பத்தி செய்து கொண்டதால் மீதிக்காலத்தை இன்பமாய்க் கழித்து வந்தனர். கலைகள் வளர்ந்தன. நாகரிகம் பெருகியது. இவர்களுக்குப் பல விதத்திலும் தொழில் செய்து உதவியவர் பதினெண்குடிகளாகக் கருதப்பட்டனர். காலப் போக்கில் தொழில்கள் பல்கிப் பெருகின. பல தரப்பட்ட காட்டுவாணர்களும் சீர்திருந்தி பற்பல தொழில்களை மேற்கொண்டனர் என்பதை

> 'பல் ஒளியர் பணிவு ஒடுங்க
> தொல்லருவாளர் தொழில் கேட்ப'

என்ற பட்டினப்பாலைச் (274-275) செய்யுளால் அறியலாம்.

அக் காலத்தில் காட்டுவாணர்களில் ஒரு சாரார் திருந்தினும், பெரும்பாலானவர் திருந்தாத நாடோடி வாழ்க்கையை மேற்கொண்டிருந்தனர். ஆதலால் நிரந்தரமாய் ஏற்பட்ட குடியிருப்பு இவர்கள் தாக்குதல்களுக்கு அடிக்கடி உள்ளாவது சர்வசாதாரணம். இவ்வித ஆபத்துகளிலிருந்து தற்காத்துக் கொள்ள மருத நில மக்கள் தங்கள் ஊரைச் சுற்றி தற்காப்புக்காகக் கோட்டைகள் எழுப்பினர். இது பற்றியே தொல்காப்பியர் :

> 'உழிஞை தானே மருதத்துப் புறனே
> முழுமுதல் அரணம் முற்றலுங் கோடலும்
> ஆனைநெறி மரபிற்றுகு மென்ப'
>
> (தொல் பொருள் புறத்திணை 2-66)

என்று வரும் சூத்திரம் செய்தார். கோட்டைகளுக்கு வெளியே பிற நிலத்து மக்களும், மற்றும் நாடோடிகளான

பாணர், துடியர், கடம்பர், விறலியர், ஒளியர், அருவாளர் என்ற பலதரப்பட்ட மக்களும் தாற்காலிகமாய் குடியிருப்புகள் அமைத்து வாழ்ந்தனர். இக் குடியிருப்புகளைத் தான் சேரி என்றனர். (ஏமப் பேரூர்ச்சேரியும் சுரத்தும். தொல் பொருள் 40) இவர்களிலிருந்துதான் பரத்தையர் கூட்டம் உருவானது. இவர்கள் மருத நில மக்கள் இல்லற வாழ்க்கைக்கு இடையூருக அமைந்தனர். இவ்விதமாய்க் கோட்டைகள் அமைத்த மக்கள் அதற்கு காவலனையும் ஏற்படுத்தினர். அவன் ஊர் காவலன், புரவலன் எனப் பட்டான். ஆரம்ப கட்டத்தில் இவர்களைத்தான் ஊர்த் தலைவர்களாக வைத்து, ஊர்க்காவல் நடைபெற்று வந்தது. இச் சபைகள் தான் ஊர் மன்றங்கள் என்றும் பிற்காலத்தில் குடும்புகள் என்றும் வழங்கப்பட்டு, இக்காலத்தில் ஊர்ப் பஞ்சாயத்துக்களாக உருவாகியிருக்கின்றன. இத் தலைவர்களை ஏற்கனவே குறிப்பிட்டது போல் ஊரன், மகிழ்நன், கிழவன் என்று விளித்து செய்யுள்கள் பாடப்பட்டன. அக் காலத்தில் அடிக்கடி காட்டுவாணர் தாக்கியதால் ஒவ்வொரு ஊரும் தனித்து அவர்களை எதிர்க்க முடியவில்லை. ஆதலால் பல ஊர்கள் சேர்ந்த கூட்டாட்சி முறை ஏற்பட்டது. ஊர்களில் உள்ள தலைவர்களில் வலிமையும் ஆற்றலுமுடையவன் கூட்டாட்சிக்குத் தலைவனானன். இவன் வேள், வேளிர் என்று அழைக்கப்பட்டான். பின்னல் பல வேளிர்களிலும் சிறந்தவன் முடியுடை மன்னனானன். அதாவது ஊர் வளர்ச்சியுற்றுப் பேரூரானது. பேரூர் நாகரிகம் பெற்று நகரமானது. ஊர்கள் தோன்றத் தோன்ற ஆட்சி முறை விரிவடைந்தது. ஊர்க் கிழவனிலிருந்து வேள், வேளிர் தோன்றி அதன் பின் வேந்தர், அதாவது முடியுடை மன்னர் தோன்றினர்.

அவ்வேந்தர்கள் சேர, சோழ, பாண்டியர் எனப்பட்டனர். அவர்கள் ஆற்றோரங்களில் வஞ்சி, உறந்தை, கூடல் என்ற மதுரை இவற்றைத் தலைநகரங்களாக ஏற்படுத்திக் கொண்டனர். கடற்கரைத் துறைப் பட்டினமாக தொண்டி, கொற்கை, புகார் இவைகளையும் ஏற்படுத்தினர். காட்டுப் பகுதிகளுக்குள்ளும், குன்றுகளிலும் சில குறுநில மன்னர் இருந்தனர்.

வேளிர்கள் பலர் தனியுரிமையுடைய குறுநில மன்னராய் இருந்தனர். காலப்போக்கில் இவர்களில் சிலர் ஒழிந்து முடியுடை மூவேந்தர் அரசருக்குத் திரை செலுத்தும் நிலைக்கு உள்ளானர். சில குறுநில மன்னர் மறைந்தே போய் விட்டனர். இவர்கள் மூவேந்தர் தலைநகரங்களாகிய மதுரை வையையாற்றங் கரையிலும், கரூர், உறந்தை காவேரியின் கரையிலும், வஞ்சி பொருநையின் கரையிலும், காஞ்சி பாலாற்றங் கரையிலும், கொற்கை பொருநை முகத்துவாரத்திலும், புகார் காவிரியின் முகத்துவாரத்திலும், மல்லையாகிய மாமல்லபுரம் பாலாற்றின் முகத்துவாரத்திலும் இருப்பதைக் காணவும். அக்கால கடற்கரைப் பட்டினங்களும் ஆற்றோரங்களில்தான் தோன்றின என்பதால், அரசுகள் மருத நிலத்திலேயே தோன்றியது என்றும், குறிஞ்சி, முல்லை, பாலை நிலங்களில் அரசுகள் தோன்றவில்லை என்றும் இதனால் அறிகிறோம். ஆதலால் குறிஞ்சி நிலவேடர், குறவரோ முல்லை நில ஆயரோ, பாலை நில மறவரோ, நெய்தல் நிலப் பரதவரோ அரசுகளைத் தோற்றுவித்திருக்க முடியாதென்பது வெள்ளிடை மலை. இக்கால கள்ளர், சாணர் (நாடார்), சங்க கால மக்கள் பிரிவில் இடம் பெற வில்லை. கள்ளர் வேங்கட மலைப் பகுதியிலிருந்து தெற்கே புதுக்கோட்டை பகுதிக்கு பல்லவரின் படையெடுப்பின் போது வந்ததாகத் தெரிகிறது. டாக்டர் இராசமாணிக்கம் போன்றோர் இவரை களப்பிரர் என்றும் கூறுவர்.[1] ஆதலால் இவர்கள் மூவேந்தர் மரபு என்பது பொருந்தாது. இக்கால மறவர் பண்டைக்காலப் படை மறவரோ, பாலை நில மறவரோ அல்ல. இவர் இடைக் காலத்தில், அநேகமாய் இலங்கையிலிருந்து வந்தவரென்றே கருத ஏதுவாகிறது. இவர் பழக்க வழக்கம் தமிழரிடமிருந்து வேறுபட்டதென்று கூறப்படுகிறது.[2] சாணரும், மறவரும் தமிழகத்தில் உள்ள இதர தமிழ் மரபினரைவிட உயரமாய் இருப்பது[3] இந்த இரு மரபினரும் இடைக் காலத்தில் ஈழத்திலிருந்து வந்தவர்

---

1. பல்லவர் வரலாறு டாக்டர். இராசமாணிக்கனார்.
2. Page 31 Ramnad Dt. Manual. Ramnad Dt. Gazetteer.
3. Page 13 Madurai Manual. Nelson.

என்பதற்குச் சான்ருகும். மறவர் தமிழகத்தில் கி. பி. 11 ஆம் நூற்ருண்டுக்கு முன்பு இருந்தனர் என்பதற்குப் போதிய ஆதாரங்கள் இல்லை எனலாம். [1] முக்குலம் என்பது ஒரு பொய்மையே. நாயக்கர் காலத்தில் இந்த அமைப்பு அரசியல் நோக்கோடு ஏற்பட்டதென்று தோன்றுகிறது. இராமநாதபுரம் சேதுபதி, சிவகங்கை உடைய தேவர், புதுக்கோட்டைத் தொண்டைமான் நாயக்க மன்னருக்கு சுவீகாரப் புத்திரராகக் கருதப்பட்டது, [2] இக் கருத்தை வலியுறுத்துகிறது. அடுத்து மருத நிலத்திலுள்ள மக்களில் எந்தப் பிரிவினர் அரசைத் தோற்றுவித்தனர் என்பது பற்றி ஆராய்வோம்.

**தமிழரசைத் தோற்றுவித்த மக்கள் யார் ?**

'இந்திரன் ஊரன் பைந்தார் மகிழ்நன்'

(நம்பியகப் பொருள். அகத்திணை)

மருத நிலத்தில் தான் அரசுகள் தோன்றிய தென்று ஏற்கனவே கண்டோம். 'வேந்தன் மேயத் தீம்புனல் உலகம்' என்று தொல்காப்பியர் கூறுவதிலிருந்து மருத நிலத்து மக்கள் தெய்வம் வேந்தன் என்று அறிகிருேம். வேந்தனை இந்திரன், தேவர்வேந்தன், தேவேந்திரன், புரந்தரன் என்று பலவாறு அழைப்பர் என்றும், இம் மக்கள் மன்னனையே தெய்வமாகக் கொண்டனர் என்றும், மருத நில மக்களும், தலை மக்களும் யார் யார் என்றும் ஏற்கனவே சங்க கால மக்கள் பிரிவில் கண்டிருக்கிருேம். அங்கே குறிப்பிட்டது போன்று, அந் நிலத்துத் தலை மக்கள் ஊரன், மகிழ்நன், கிழவன் எனப் பட்டனர். ஊரன் என்ருல் ஊரை உடையவன் அல்லது ஊருக்குத் தலைவன், ஊர்காவலன், புரவலன் என்று பொருள் படும். மகிழ்நன் என்ருல் மகிழ்ச்சிகரமாய் வாழ்க்கை நடத்துபவன். கிழவன் என்ருல் உடையவன், உரிமை உடையவன், எல்லாம் உடையவன் என்று பொருள்படும். இத் தலைமக்கள்

1. History of the Maravars (1700-1802) (Unpublion)
   Dr. S. Kadirvel. History of Tinnevelly Dr. R. Caldwell.
   Nadars of South India - Robert L. Hard-grave Jr.
2. William Mackenzie Collections William Taylor Vol III.

சங்க இலக்கியங்களில் எவ்வாறு குறிக்கப்பட்டிருக்கின்றனர் என்பதைக் கீழே காண்போம்.

**ஊரன் :**

'குண்டு நீராம்பற்றண் டுறையூரன்' (நற்றிணை 100)

'நெல்லுடை மறுகின் நன்னர் ஊர' (அகம் 306–8)

'போர் முற்றென்று அறியாதபுரிசை சூழ்புனல் ஊரன்' (கலித்தொகை - மருதம் 2–5)

'முன்னெயிற்றுப் பாண்மகள் இன்கெடிறு சொரிந்த
அகன் பெருவட்டி நிறைய மனையோள்
அரிகாற் பெரும்பயறு நிரைக்கும் ஊர' (ஐங் – 47)

(ஊர, ஊரன் என்பது ஊர்த் தலைவனைக் குறிக்கிறது)

**மகிழ்நன் :**

'மகிழ்நன் மார்பே வெய்யையால்நீ (குறு – 73)

'கழனிநல்லூர் மகிழ்நர்க்கென்' (நற் – 70)

'அம்மவாழி தோழி மகிழ்நன்' (ஐங் – 31)

'தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்
மகிழ்நன் மருகின் மதுரையும் வறிதே' (சிறுபாண 66)

'செல்லல் மகிழ்ந நிற்செய்கடன் உடையென்மன்' (அகம் 376)

**கிழவன் :**

'குருதித்து களாடிய களம் கிழவோயே' (புறம் 371-27)

(குருதியுலர்ந்து களபட்ட போர்க்களத்தை யுரிமை கொண்டவனே – இது தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைச் சுட்டுகிறது)

'சாரிநெல்லின் சிறை கொள் வேலியாயிரம் விளையூட்டாக
காவிரி புரக்கும் நாடு கிழவோனே' (பொருந 248)

(கிழவோன் – இது கரிகாலனைக் குறிக்கிறது)

'ரெழுமதிவாழி ஏழின் கிழவ (பொருநராபடை 60)

(கிழவ - உரிமையுடையோய் - இது கரிகாலனைக் குறிக்கிறது)

'கொழுமீன் விளைந்த கள்ளின்
விழுநீர் வேலி நாடு கிழவோனே' (புறம் 13-12-13)

(நாடு கிழவோனே - நாட்டை உடையோனே கிழவோன் - இது முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளியைக் குறிக்கிறது)

'கடற்பஃருரத்தநாடு கிழவோயே' (புறம் 30-15)

(கிழவோயே - இது சோழன் நலங்கிள்ளியைக் குறிக்கிறது)

'காவிரிக் கிழவன் மாயா நல்லிசைக்
கிள்ளி வளவன் உள்ளி அவற்படாதும்
செல்லேன் செல்லேன் பிறர் முகம் நோக்கேன்'
(புறம் 399-12-14)

(கிழவோய் - இது சோழன் கிள்ளிவளவனைக் குறிக்கிறது)

'ஒரு பிடிபடியுஞ் சீறிடம்
எழுகளிறி பிடிக்கும் நாடு கிழவோயே'
(புறம் 40-10-11)

(கிழவோயே—இது சோழன் கிள்ளிவளவனைக் குறிக்கிறது)

'விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்
பிறவும் அன்னகிழவோன் மாண்புகள் நிற்பா'
(தொல் பொருள் திணை—கற்பியல்—நாற்பா 11)

'மண்திணி கிடக்கைத் தண்தமிழ்க் கிழவர்
முரசு முழங்குதானை மூவருள்ளும்
அரசெனப்படுவது நினதே பெரும' (புறம் 35-3-5)

(தமிழ்க் கிழவர் - தமிழ் வேந்தர்)

'விண் பொருநெடுவரைக் குறிஞ்சிக் கிழவ'
(திருமுருக 267)

(கிழவ என்பது முருகனைக் குறிக்கிறது)

'பழமுதிர்ச் சோலை மலைகிழவோனே' (திருமுருக 317)

(மலைகிழவோனே - முருகனைக் குறிக்கிறது)

மேலே கண்ட சான்றுகளிலிருந்து மருத நிலத்தில்தான் சேர, சோழ, பாண்டிய அரசுகள் தோன்றியதென்றும், அந்த நிலத்து தலைமக்கள் தான் நாடாண்ட மூவேந்த மரபினர் என்றும் தெற்றென விளங்குகிறது. ஆனால் மேலே கண்ட மேற்கோள்களில், தலைமக்களை ஊரன், மகிழ்நன், கிழவன் என்று மட்டும் குறிப்பிட்டிருப்பதால் அவரின் மரபு நமக்கு விளங்கவில்லை. ஆதலால் மருத நிலத்து மக்களில் எப்பிரிவினர் அவர்கள் என்று அறிவது இன்றியமையாதது. மருத நிலத்தில் களமர், தொழுவர், மள்ளர் (மல்லர்) கம்பளர், வினைஞர், உழவர், உழத்தியர், கடைஞர், இளைஞர், கடைசியர், ஆற்றுக்காலாட்டியர் என்ற மக்கள் பிரிவுகள் இருந்ததாக ஏற்கனவே கண்டோம். இம் மக்களில் எப்பிரிவினர் ஊரன், மகிழ்நன், கிழவன் என்ற தலைமக்களாக வழங்கப்பட்டனர் என்பது பற்றி அடுத்து ஆராய்வோம்.

**மருத நிலத் தலைமக்கள் மரபு யாது ?**

ஏற்கனவே தமிழகத்தில் அரசு தோன்றியது மருத நிலம் என்றும், மன்னரைத் தோற்றுவித்தவர் ஊரன், மகிழ்நன், கிழவன் என்று சுட்டப்பட்டிருப்பதையும் கண்டோம். ஊரன், கிழவன், மகிழ்நன் என்பது பண்பு அல்லது காரணப் பெயர். இப்பெயர்கள் மரபைச் சுட்டவில்லை. ஆதலால் மூவேந்தர் மரபை அறிய மருத நில மக்களைப் பற்றி ஈண்டு ஆராய்வோம். சேந்தன் திவாகரம் எல்லா நிகண்டுகளுக்கும் முந்தியது. இந் நிகண்டின்படி மருத நிலத்தில், களமர், தொழுவர், வினைஞர், உழவர், மள்ளர், (மல்லர்), கம்பளர், இளைஞர், கடைஞர், உழத்தியர், ஆற்றுக் காலாட்டியர் என்ற மக்கள் பிரிவினர் இருந்தனர். இவர்கள் ஏற்கனவே குறிப்பிடப்பட்டிருக்கும் சங்க கால மக்கள் பிரிவில் இடம் பெற்றிருக்கின்றனர் என்பதை வாசகர் அறிவர். இவர்களில் மள்ளர் (மல்லர்) இன்று பள்ளர், தேவேந்திர குலத்தார், குடும்பன், காலாடி, பண்ணாடி என்று வழங்குகின்றனர் என்று முன்பு கண்டோம். கடைஞன் என்பதும் தேவேந்திர குலத்தாரில் ஒரு பிரிவினர் என்றும் ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறோம்.

மருத நிலத்திலுள்ள இப் பல்வேறு பிரிவினரும் சங்க காலத்தில் எந் நிலையில் இருந்தனர் என்பதை அறிய அக்கால இலக்கியங்களின் துணைக்கொண்டு ஆராய்வோம்.

**களமர் :** இப் பெயர் கொண்ட வகுப்பு இன்று தமிழகத்தில் இல்லை. கி. பி. 14-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த நச்சினார்க்கினியர், களமர் என்ற சொல்லுக்குக் களத்திற்குச் செல்வோர் என்றும், மருத நில உழவர் கீழ் குடிகள் என்றும், பொருள் கூறுகிறார் அவர் கருத்துப்படி, களமர் உழவர்க்கு உதவியாக களத்தில் தொழில் செய்பவர் எனப்படுபவர். களம் என்பது பலவகைப்படும். அவைக்களம், அறக்களம், மறக்களம், செருக்களம், நெற் போர்க்களம், ஏர்க்களம், போர்க்களம், அமர்க்களம் என்று பலவாறு வழங்கப்படும். பொதுவாகக் களம் என்ற சொல் நெற் கதிர் அடிக்கும் இடத்தையே குறிக்கும் அதாவது நெற் கதிரைக் குவித்து அடித்து நெல் மணிகளையும், வைக்கோலையும் தனியாய்ப் பிரிக்கும் இடம் என்று பொருள்படும். பின்னால் அடித்த கதிரில் நெல் மணிகள் ஒட்டிக்கொண்டிருக்குமாதலால், அந்த அடித்த கதிர்களைப் போர் போட்டுப் புழுங்க வைத்து பிறகு எருதுகளைக்கொண்டு புணையலடிக்கிறதைப் போர் அடிக்கிறதென்பர். இதை நெற் போர்க் களம் என்பர். இது பற்றி :

'காவல் உழவர் களத்தகத்துப் போரேறி' (முத்தொள் 43)

என்ற செய்யுளை நோக்குக.

களம் என்பது மருத நிலத்து விளை நிலத்தையும் குறிக்கும் என்பது :

'அணங் குடைமரபின் இருங் களந்தோறும்
வெள்வாய்க் கழுதைப்புல் இனம் பூட்டி
வெள்ளை வரகும் கொள்ளும் வித்தும்' (புறம் 392-8-10)

என்ற செய்யுளால் விளங்கும். ஏற்கனவே குறிப்பிட்டது போல், பண்டைய நாளில் ஏரும் போரும் இணை பிரியாது என்பர். ஆதலால் புலவர் ஏர்க்களமும், போர்க்களமும் பாடி பரிசு பெற்றிருக்கின்றனர். போர்க்களம் என்பது நெற்போர்க் களம் என்பது மட்டுமின்றிப் படைகள் ஒன்றோடொன்று

பொருதுமிடமும் ஆகும். முதலில் ஏர்க்களம் அதனோடு இணைந்த நெற்போர்க் களமும் தோன்றி, அதன் பின் பொருது போர்க்களம் தோன்றியதென்பர். மருத நில மக்கள் பண்டைக் காலந்தொட்டு உழவுத் தொழிலில் ஈடுபட்டு வந்தனர். உழவுத் தொழில் முடிந்த பின் போருக்குச் செல்வர். உழவின்றிப் போர் இல்லை. அரசு நிர்வாகத்தையும், மாற்றாேடு பொருதுவதால் ஏற்படும் செலவையும் ஈடுசெய்ய, அரசர்க்கு உழவர் இறை செலுத்த வேண்டியிருந்தது. அதனால் இறைக்கு உழவு அவசியமாகக் கருதப்பட்டது. அதனால்தான் :

'பொருபடை தரூஉங் கொற்றமும் உழுபடை
ஊன்று சால் மருங்கின் ஈன்றதன்பயனே' (புறம்35-25-26

என்ற புறநானூற்றுச் செய்யுள் எழுந்தது. ஆகப் பொருது களந்தான் போர்க்களம் என்பது :

'ஈரைம் பதின்மரும் பொருது களத்து ஒழியப்' (புறம் 2-16)
'களம் புகுமல்லன் கடந் தடுநிலையே' (புறம் 80-9)

என்ற செய்யுட்களால் புலனாகிறது.

களம் என்பது சபையையும் குறிக்கும் என்பதற்கு :

'உளரெனினும் இல்லாரோடு ஒப்பர் களனஞ்சிக்
கற்ற செலச் சொல்லாதார்' குறள் 730)

என்ற செய்யுள் எடுத்துக்காட்டு.

களம் என்பதிலிருந்து கள வேள்வி தோன்றியதென்பதற்கு:

'யூபம் நட்ட வியன்களம் பல கொல்' (புற 15-21)
'வலிபெறு வியன்களம் மலிய ஏற்றி' (பெரும்பாண. 233)

என்ற செய்யுட்கள் சான்றாகும். வேள்வியானது அறக்கள வேள்வி, மறக்கள வேள்வி என இரு வகைப்படும். இது பற்றிப் பின்னால் ஆராய்வோம். அதற்கு முன்னதாக களம் என்ற சொல்லிலிருந்து பிறந்த களமர் என்ற மக்கள் பிரிவைப் பற்றி ஆராய்வோம். ஏற்கனவே குறிப்பிட்டது போல் களமர்

என்பது ஒரு தனி மக்கள் பிரிவை உணர்த்தாது. அது பல விதக் களங்களிலும் ஈடுபட்டிருப்பவரைச் சுட்டும் என்றே கொள்ளற்பாலது. இதில் உழவரின் பதினெண் குடிகளும் அடங்கலாம்.

'கள்ளார் களமர் பெயர்க்கும் ஆர்ப்பே (மதுரைக் காஞ்சி 260) (கள்ளார் களமர் – கள்ளுண்ணும் களமர்)

'வேங்கைக் கண்ணியர் எருதெறி களமர்' (நற்றிணை 125-9)

'களமர்க்கு அரித்த விளையல் வெங்கள்' (புறம் 212-2)

'மனைக்கள மரொடு கள மென்கோ' (புற 387-25)

(மனைக்கண் இருந்து பணி புரியும் களமரும் – நெற்போர்க் களங்களுமாகிய)

'இனக் களமர் இசை பெருக' (பொருநராப. 194)

'களமருழவர் கடி மருகு பிரசார்' (பரிபாடல் 25)

(களமர்-உழவர் கீழ்ப் பணிபுரிபவர்)

'கருங்கை வினைஞருங் களமருங் கூடி'
(சிலம-நாடுகாண் 125)

(களமர் – உழவர் கீழப் பணி புரிபவர்)

'கரும்படு களமர் ஆலைக்கமழ் நறும் புகையோ மாதர்'
(பெரி. புரா. திருமலைச்சருக்கம் திருநாட் சிறப்பு 27)

'களமர் கண் பொன்னேர் பூட்டி தாயர் வாய்கனிந்த பாடற்
(திருவிளை. பாண்டி திருநாட் படலம் 18)

**தொழுவர் :** தொழுவர் என்பதற்கு தொழில் செய்பவர் என்றும், தொழுதலையுடையவர் என்றும், கம்மியர் என்றும், நிகண்டுகளில் பொருள் கண்டிருக்கிறது. சங்க இலக்கியங் களில் தொழுவர் எவ்வாறு குறிப்பிடப்பட்டிருக்கிறார்கள் என்று பார்ப்போம்

'நெல்லரியும் இருந்தொழுவர்' (புறம் 24-1)

'நெல்லரி தொழுவர் கூர்வாமுற் றெனப்
பல்லிதழ் தயங்கிய கூம்பா நெய்தல்' (நற்றிணை 195)

'நீர்த்தெவ்வு நிரைத் தொழுவர்' (மதுரை கா. 89)

'பொய்கை நாரை போர் வில்சேக்கும்
நெய்தலங் கழனி நெல்லரி தொழுவர்' (புறம் 209-1-2)

'சிறுகுடிப் பெருந் தொழுவர்
குடிகெழீ இய நானிலவரொடு
தொன்று மொழிந்து தொழில்கேட்பக்' (மதுரை கா. 122-125)

'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
தொழுதுண்டு பின் செல்பவர்' (குறள் 1033)

மேலே கண்ட மேற்கோள்களிலிருந்து தொழுவர் என்பவர் உழவர்களிடம் பணிசெய்பவர்களையும், துணை நின்றவர்களையும் உணர்த்தும் என அறிகிறோம். இன்று கம்மியர் இருக்கக் காண்கிறோம். தொழுவ நாயக்கர் என்ற ஒரு சிறுபான்மை வகுப்பினர் தென் தமிழகத்தில் ஆங்காங்கே காணப்படுகின்றனர். இவர்கள் நாயக்கர் என்ற பட்டம் மேற்கொண்டிருந்தாலும், இவர் தமிழ் மரபினரே. இவர்களுக்கு தெலுங்கு முதலிய வேற்று மொழி தெரியாது. இவர்கள் பார்ப்பனரைக் குருக்களாகக் கொண்டிருக்கின்றனர். இவர் பண்டைய மருத நிலத்தில் வதிந்த தொழுவரா? என்பது ஆய்வுக்குரியது. இன்று தொண்டை மண்டலப் பகுதியில் துளுவ வேளாளர், உயர் துளுவ வேளாளர் என்றும் ஒரு வகுப்பினர் இருக்கின்றனர். இவர்களுக்கு துளு மொழி தெரியாது. தமிழ் மொழியே பேசுகின்றனர். தொழுவர் என்பது துளுவர் என்று மாறி வந்ததா என்பதும் ஆராய்ச்சிக்குரியது. இவர்கள் இடைக் காலத்தில் உருவான அகம்படியர் என்ற பிரிவிலிருந்து குல உயர்வுக்காக துளுவ வேளாளர் என்று மாற்றி வழங்கி வருவதாகவும் கருதப்படுகிறது. இவர்கள் தங்களைக் கொடிக் கால் வேளாளர் என்றும் கூறுவர்.

**வினைஞர் :** வினைஞர் என்று ஒரு தனி வகுப்பு இருந்ததாகக் கருதுவதற்கில்லை. இது தொழிற்பெயர் என்று கொள்வதே முறை. இச் சொல் உழவரைச் சுட்டும் என்பது, 'கருங்கை வினைஞரும், களமரும் கூடி ஏரோடு நின்றோர் ஏர் மங்கலமே' (சிலம்பு நாடுகாண். 125) என்ற மேற்கோளால் விளங்கும்.

**கம்பளர் :** கம்பளர் என்றால் ஆரவாரமுடையவர் என்றும் மள்ளர்க்குரிய பெயர் என்றும் சூடாமணி நிகண்டில் பொருள் கண்டிருக்கிறது.

**இளைஞர் :** இளைஞர் என்பதும் மள்ளரையே குறிக்கும். சங்க இலக்கியங்களில் திருமால், முருகன் இவர்களை இளைஞர் என்று குறிக்க, மல்ல, மள்ள என்று விளிக்கப்பட்டிருப்பது காண்க. மன்னரில் பலரையும் 'இளைஞ' என்று சங்க இலக்கியங்களில் சுட்டப்பட்டிருக்கிறதென்று அறிக.

'பருதி வலவ பொரு திறல் மல்ல
திருவின் கணவ பெருவிறல் மள்ள' (பரிபாடல் திருமால் வாழ்த்து 3-90)

'செருவிலொருவ பொருவிறல் மள்ள'
(திருமுருகா. படை 262)

**கடைஞர் கடைச்சியர்.**

'கொண்டைக் கூழைத் தண்டழைக் கடைசியர்' (புறம் 61)

'கடைச்சியர் களைபெறி குவளை காண்வாய்ம பதிகளாம்'
(சூளாமணி 33)

'நாறிது பதமெனப் பிறித்து நாட்செய்
கூறிய கடைசியர் குழலிங் கொண்டேகுவார்'
(சீவக சிந்தா 45)

'செங்கயல் நெடுங்கண் சின்மொழிக் கடைசியர்'
(சிலம்பு நாடுகாண். 130)

'கடைஞர் மிடைவயற் குறைத்த கரும்பு
குறைபொழி கொழுஞ்சாறு' (பெரி புரா திருநாவு 21-5)

'குல்லைவனத்துக் குரியவனரன்
வில்லை முறித்திடும் பெரியவன்
குருசட கோபன் மருமகன் சிவ
கிரி முருகனுர் வயலிலே
மெல்லக் கடைசியர் நடுகச் சேயந்தச்'
(வையாபுரிப் பள்ளு 186)

'காக்கு மள்ளர் கடாககும் வயலிற்
கடைக் கடந்த கடைச்சிய ரெல்லாந்'
(தண்டிகை. கனக. ரா. பள்ளு 20)

மேலே காட்டிய மேற்கோள்களின்படி கடைஞர் என்ற சொல் சங்க இலக்கியங்களில் ஒரு இடத்திலும் வரக் காணேம். கடைசியர் என்ற சொல் மட்டும் வருகிறது. புறநானூற்றில் கடையோர் '(கடையோர் விடுவாய்ப் பிசிரொடு சுடு கிழங்கு நுகர்' புறம்-225) என்ற சொல் காணப்படுகிறது. இச் சொல் லுக்கு 'பின் செல்வோர்' என்று பொருள் கண்டிருக்கின்றனர். பெரிய புராணத்தில் கடைஞர் என்ற சொல் காணப்படுகிறது. பள்ளு நூல்களில் கடைசியர், கடைச்சியர் என்ற சொற்கள் காணப்படுகின்றன. கடைசியர், கடைச்சியர், கடைஞர் என்ற சொற்கள் உழவர் குடி மக்களையே உணர்த்துகின்றன. பள்ளு நூல்களில் இச் சொற்கள் பிரயோகப்படுவதிலிருந்து இவை தேவேந்திர குலத்தாராகிய மள்ளர் குல மக்களையே சுட்டுகின்றன என்று தெரிகிறது. கடைஞர் என்ற பிரிவினர் இன்றளவும் தேவேந்திர குலத்தாரின் ஒரு உட்பிரிவாகவே இருந்து வருகின்றனர் என்று ஏற்கனவே குறிப்பிட்டிருக கிரேம். திரு. எம். சீனிவாச அய்யங்கார் பள்ளர் என்ற ஒரு சாதி சங்ககாலத்தில் இல்லை என்றும், அதற்குப் பதில் மள்ளர், கடைஞர் என்ற வகுப்பினர் இருந்தனர் என்றும், கடைஞர் என்ற வகுப்பினர் இன்றும் பள்ளர் வகுப்பில் ஒரு உட்பிரிவாக இருந்து வருகின்றனர் என்றும் குறிப்பிடுகிருர். [1]

[There was no such caste as Pallar but in its stead we find in early Tamil Literature Mallar and Kadaignar, the latter appearing as a sub-division of the Pallar caste.]

டாக்டர் K. R. அனுமந்தனும் இதே கருத்தையே தெரி விக்கிருர். [2]

**ஆற்றுக் காலாட்டியர் :** ஆற்றுக் காலாட்டியர் என்ற ஒரு பிரிவினர் இன்று தமிழகத்தில் இல்லை. இவர்கள் யாரா யிருக்கலாம் என்பதை தமிழ் இலக்கியங்களின் துணைக் கொண்டு ஆராய்வோம் :

---

1. Page 71 Tamil Studies - M. Srinivasa Ayyangar.
2. Page 120 Untouchability in Tamilagam (Unpublished) Dr. K. R. Hanumanthan.

'தாற்றுக் கால் பூந்துளவத் தாரழகர் முக்கூடற்
சேற்றுக் கால் மள்ளருக்குத் தென்றற் காலென்ருேமோ
ஆற்றுக் காலாட்டியருள் ஆட்டெழுங்கால் பண்ணை நடும்
நாற்றுக் கால் விட்டு நடுகைக் கால் ஏருதே'
(முக்கூடற் பள்ளு 127)

'சேற்றுக் கால் நீலஞ் செரு வென்ற வேர்தன் வேல்
கூற்றுறழ் மொய்ம்பிற் பகழி பொரு கயல்
தோற்றந் தொழில் வடிவு தம் முட்டடுமாற்றம்
வேற்றுமை இன்றியே யொத்தன மாவடர்
ஆற்றுக் காலாட்டியர்கண் (யாப் பெருங் கலக்காரிகை)

ஆற்றுக் காலாட்டியர் மருத நிலத்துப் பெண் ஆனதாலும் அவர் பள்ளு நூல்களில் வருவதாலும் அவர் தேவேந்திர குலப் பெண் என்று கொள்வதே பொருத்தமாகும். இம் மரபினரில் காலாடி என்ற ஒரு உட்பிரிவு இருப்பதை ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிரேம். ஆக ஆண்பால் பெயர் காலாடி என்பதற்குப் பெண் பால் பெயர் காலாட்டி என்றும் மருத நிலப் பெண் என்பதைச் சுட்ட ஆற்ருேரங்களில் இருந்த வரை ஆற்றுக் காலாட்டியர் என்றும் வழங்கியிருத்தல் வேண்டும்.

**உழவர் :** உழவர் என்பதற்கு நச்சினுர்க்கினியர் உழுதுண்ணும் வேளாளர், உழுவித்துண்ணும் வேளாளர் என்றும், உழுதுண்பவர் தங்கள் நிலத்தையும், உழுவித்துண்போர் நிலத்தையும் உழுகிறவர் என்றும், உழுவித்துண்பவர் மண்டலத் தலைவரும், தண்டத் தலைவரும், முடிபுடை அரசர்க்கு மகட்கொடை கொடுக்கும் உரிமையுடையோரும் என்று கூறுகிருர். இன்று யார் உழுதுண்ணும் வேளாளர், யார் உழுவித்துண்ணும் வேளாளர் என்று அறிவதற்கில்லை. பலதரப்பட்ட பிரிவினரும் உழவுத் தொழிலில் ஈடுபட்டிருக்கின்றனர். ஆனல் அவரனைவரும் இன்று வேளாளர் என்று வழங்க வில்லை. மாருக சில குறிப்பிட்ட பிரிவினர் மட்டும் தங்களை, 'வேளாளர்' 'வெள்ளாளர்' என்று உரிமை பாராட்டி வருகின்றனர். இவர்கள் பண்டைக்கால உழவர்குடியைச் சேர்ந்தவரா? ஏற்கனவே இவர் இடைக் காலத்தில் தோன்றியவர் எனவும், தேவேந்திர குலத்தாரே நச்சினுர்க்கினியர்

குறிப்பிடும் வேளாளர், வெள்ளாளர் என்று கருத ஏதுவாகிற தாகவும் கண்டோம். தமிழகத்தில் உழவர்தான் உயர்குடி மக்களாக மதிக்கப்பட்டனர் என்பது 'சுழன்றும் ஏர்ப் பின்னது உலகம், அதனுல் உழன்றும் உழவே தலை' (குறள் 1031) 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம் தொழுதுண்டு பின் செல்பவர்' (குறள் 1033) 'உழுவான் உலகத்தார்க்கு ஆணி' (குறள் 1032) என்ற வள்ளுவன் வாக்கால் நன்கு விளங்கும். ஆனுல் வள்ளுவன் கூற்றுப்படி உழவன் இன்று பண்டைய நிலையில் இருக்கிருனு? பண்டைய நாளில் அவன் வெறும் வயலுழவனுக மட்டும் இருக்க வில்லை. அவன் வில்லேருழவனுகவும் (குறள் 872) வாளேருழவனுகவும் (புறம் 368) சொல்லேருழவனுகவும் (குறள் 872) கூறப்பட்டிருக்கிருன். அதனுலேயே வள்ளுவன் 'உழவனை உலகத்தார்க்கு ஆணி' என்ருன். இவ் உழவர் குடி மக்கள் சங்க இலக்கியங்களில் எவ்வாறு காட்சியளிக் கின்றனர் என்பதைக் கீழே காண்போம்.

'பழன மஞ்ஞை யுகுத்த பீலி
கழனி யுழவர் சூட்டொடு தொகுக்கும்' (புறம் 13-10-11)
'மென்புலத்து வயலுழவர்
வன்புலத்துப் பகடு விட்டுக்' (புறம் 395-1-2)
'வீழ்குடி உழவன் வித்துண்டா அங்கு' (புறம் 230-13)
'தண்டலை யுழவர் தனி மனைச் சேப்பின்'
(பெரும்பாணு 355)
'கொடு மேழி நசை யுழவர்' (பட்டினப்பாலை 205)
'வைகல் உழவ வாழிய பெரிது எனச்' (புறம் 392-11)

(உழவ - அதியமான் நெடுமானஞ்சி மகன் பொகுட் டெழினியைக் குறிக்கிறது)

'பழன உழவர் பாய் புனற் பரத்தந்து
(பரிபாடல் 7-39)
'வீழ்குடி உழவரொடு விளங்கிய கொள்கை'
(சிலம்பு - புகார் 5-44)
'ஒரேர் உழவன் போலப்' (குறுந் தொகை 131)

'இரப்போர் இரங்கும் இன்னுவியன் களத்து
ஆள் அழிப்படுத்த வாளேர் உழவ' (புறம் 368)

(வாளேர் உழவ - இது சேரமான் குடக்கோ நெடுஞ் சேரலாதனைக் குறிக்கிறது)

'முழவுறழ் திணி தோளானை
உழவனாக உரை மலிந்தன்று' (புற - வெ. மா. 159)

(முழவினைப் போலத் திரண்ட தோளினை உடையானுன மன்னன் உழு தொழிலையுடையவனாக மிகுத்துச் சொல்வது மறக்கள வழி ஆகும்)

உழவரில் மருத நிலத்து உழவர் சிறந்தவர். ஏனெனில் மருத நிலத்தில்தான் பண்டைக் காலத்தில் அரசுகள் தோன்றியது. அந்த அரசைத் தோற்றுவித்தவரும் மருத நிலத்து உழவர்களே. திரு. க. வித்தியானந்தம் கூறுவதாவது 'சிறந்த உழவர் மருத நிலத்துத் தலைவரே. அவர் தமிழ் நாட்டு அரசியலில் வலிமை சிறந்து விளங்கினர்'[1]

அக்காலத்தில் ஏரும் போரும் இணை பிரியாது என்று ஏற்கனவே குறிப்பிட்டோம். ஏர்த் தொழில் முடிந்த பின் உழவர் போருக்குச் செல்வர். ஆக அந்த இரு தொழிலும் செய்தவர் மருத நிலத் தலைமக்களாகிய உழவரே. ஏர்க் களம் தோன்றிய பின்னரே போர்க்களம் தோன்றியதென்று ஏற்கனவே குறிப்பிட்டோம். வேளாள மாந்தர் விளையுட் காலத்துக் களத்தில் செய்யும் செய்கைகளைத் தேரேறி வந்த கிணைப் பொருநர் முதலியோர் தோற்றுவித்த வென்றி யன்றிக் களவழிச் செய்கைகளை மாறுது தேரேறி வந்த புலவர் தோற்றுவித்த வெற்றியாயது என்பது :

'ஏரோர் களவழியன்றிக் களவழித்
தேரோர் தோற்றிய வென்றியும்' (தொல் புறத்திணை)

என்பதால் அறியலாம். மறக்கள வேள்வி ஏர்க்கள வேள்வியை நோக்கியே பிறந்தது. நாகரிக வளர்ச்சி முறையை நோக்கினுல் மருத நில மேம்பாட்டிற்குப் பின்னரே உடைமைகளின் தோற்றத்தை அடுத்து அரசுகள் தோன்றின என்று முன்னமே

1. பக்கம் 41 தமிழர் சால்பு, க. வித்தியானந்தம்.

கூறினேம். மருத நிலம் உழவுக்குரியதாதலால், முதலில் எல்லோராலும் போற்றப்பட்டது ஏர்க்களம். ஏர்க்கள வேள்வி முதலில் உழவர் செய்தனர். இதைப் பின் பற்றி, மன்னர் மறக்கள வேள்வி செய்யலாயினர்.

'பொரு படை தரூஉங் கொற்றமும் உழுபடை
ஊன்று சால் மருங்கின் ஈன்ற தன்பயனே'

என்ற புறநானூற்றுச் செய்யுள் கூறுவது போன்று, நெற்களத்திலிருந்து போர்க்களம் தோன்றிய தென்பது நன்கு விளங்குகிறது. நெற்களங்களுக்குப் பொருநர் சென்று உழவர்களைப் பாடுவதும், பொருநர்க்கு உழவர் நெல் வழங்குவதும் தமிழகத்தில் தொன்று தொட்டு நடைபெற்று வருகிறது. இது பற்றி இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் குறிப்பிடுவதாவது:-

'தெண் கிணைப் பொருநர் செருக்குடன் எடுத்த
மண் கனை முழவின் மகிழிசை ஓதையும்'

(10–138–139)

இச் செய்கையைக் களவழி வாழ்த்தென்று துறைப்படுத்தி புறப்பொருள் வெண்பாமாலை கூறுவதாவது :-

'தண்பணை வய லுழவனைத்
தெண் கிணைவன் திருந்து புகழ் கிளர்ந்தன்று'

(புறப் பொருள் வெ. மா. 186)

ஆக சங்க கால உழவர் பெருமக்கள் யார்? களமர் தொழுவர், வினைஞர், கம்பளர், இளைஞர் எல்லாம் தொழில் அல்லது பண்புப் பெயராய் அமைந்தது. அதே போன்று தான் உழவரும், உழவர் மருத நிலத் தலைமக்கள். இந்த உழவரின் மரபுப் பெயர் யாது? இவர் மள்ளரா? என்பதை அடுத்து ஆராய்வோம்.

**மள்ளர் :** 'மள்ளர்' என்பவர் இன்று பள்ளர் தேவேந்திர குல வேளாளர், குடும்பன், பண்ணாடி, காலாடி, கடைஞர் என்று வழங்கப்படுவதாக ஏற்கனவே கண்டோம். இம் மக்கள் இலக்கியங்களில் எவ்வாறு சுட்டப்பட்டிருக்கின்றனர் என்பதைக் கீழே காண்போம்.

'மள்ளர் குடாப் பிற' [சீவக. சிந்தா 35]

'மயல் விளைந்தும் மயங்கிடு மள்ளர் தாம்' [அரி. புரா. 43]

'அள்ளல் வயலின் மள்ளர் உழுஞ்சேறு'
[பெரி. புரா. முனையவர் நாயனார் 1.]

'ஆறுபாய் அரவர் மள்ளர் ஆலைபாய் அமலை ஆலைச்'
[கம்ப இரா. பால. காண். நாட்டுப் படலம் 34-1]

'இலகுறச் செய்வர் மள்ளரின் சிறுபுதல்வர் செய்யுள்'
[மருத வனப் புராணம் திருநாட்டுச் சிறப்பு 33]

'வயல் வளம் மள்ளர்' [திருவாரூர் கமலாலயப் புரா. பொழில் வளம் 48]

'விள்ளு மேருழு மள்ளர் மெய்யா வியைக்'
[சின்னமனூர் என்னும் அரிகேசரி நல்லூர் ஸ்தல புரா. நாட்டுப்பட 18]

'விறியிடாவகை வெஞ்சிறை கோலித்
தூறிடு மள்ளர் தொலைந்தழி வெய்தச்'
[காஞ்சிப் புரா. திருநகர்ப் பட 26]

'ஏர் வைத்த மள்ளரு நாணேற்றிடுலின் மள்ளர்களு
நேர்வைக்கோற் போர் புரியு நெல்லையே'
[நெல்லைச் சிலேடை வெண்பா 28]

'சோதிமுக மள்ளருக்கே' [முக்கூடற் பள்ளு 9]

'மள்ளர்களெல் லோரு மேர்பூட்டி' [வையாபுரிப் பள்ளு 172]

'மள்ளர்கள் பள்ளியருடனே கூடிவந்து'
[செங்கோட்டுப் பள்ளு 197]

'காக்கு மள்ளர் கடாக்கும் வயலிற்'
[தண்டிகைக் கனகராயன் பள்ளு 20]

**மேலே கண்ட மேற்கோள்களால் மள்ளர் உழவராகச் செயல்பட்டார்கள் என்று அறிகிறோம்.**

'தண்டு சேர் மள்ளரின் இயலியயலது' [நற்றிணை 260-3]

'கடிபுகு வளர்போல் மள்ளரு முடைத்தே'
[ஐங்குறு 432-3]

'களம்புகும் மள்ளர் வனப்பு ஒத்தன'
[கலித்தொகை முல்லைக்கலி 6-9-10]

'அட்ட மள்ளரரார்ப் பிசை வெரூஉம் [குறுந்தொகை 34]

'கலிகொள் மள்ளர் வில்விசை யினுடைய' [அகம் 185]

'மகளிர் மலைத்தல் அல்லது மள்ளர்' [புறம் 10-9]

'கொண்டி மள்ளர் கொல்களிறு பெறுக'
[பதிற்றுப் பத்து 5-43-24]

'வெம்போர் மள்ளர் தெண்கிணை கறங்கக்'
[பதி. பத்து 9-90-44]

'தேங்காத மள்ளர் திட்டோரிணை சிக் காயத்த
பூங்கச்சு நீக்கிப் பொறிமான கல கோத்தி'
[சீவக சிந்தா 19]

'கோள் கொண்ட போர் மள்ளர் கூட்டத்தொடுஞ் சென்று'
[பெரிய புரா. ஏந்தி நாத 9-2]

'ஆய்ந்து மள்ளர் அருகுநர் இன்மையால்'
[கம்ப இரா. அயோத் காண். 9 பள்ளிபடை. 817-2]

'பொறுத்த மால் யானை மள்ளர் வேலைபுக்கெழுந்து குன்ற'
[திருவிளை இந்திரன் பழி தீர்த்த பட. 37]

**மள்ளர் படை மறவர். இவர் சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவேந்தரிடமும் போர் வீரராகப் பணியாற்றியிருக்கின்றனர்** என்பது மேலே எடுத்தாண்ட மேற்கோள்களால் நன்கு புலனுகும்.

'மள்ளர் மள்ள மறவர் மறவ
செல்வர் செல்வ செருமேம் படுந' [பெரும்பாணு 455]

[மள்ளர் மள்ள—போர் மறவரில் சிறந்த போர் மறவன்
மறவர் மறவ — கொடியோர்க்கு கொடியவன்.

செல்வர் செல்வன் — செல்வரும் மேம்பட மதிக்கும்
செல்வமான்.

இச் செய்யுள் பகுதி தொண்டைமான் இளந்திரையனைச் சுட்டுகிறது.

'முழுஉவ ள்ளுரம் உனக்கும் மள்ள' [புறம் 219]

[மள்ள—இளையோன்—வீரன்-மன்னன் இங்கு 'மள்ள' என்பது வடக்கிருந்து உயிர் நீத்த கோப்பெருஞ் சோழனைக் குறிக்கிறது]

'இடைச் சுரத்து இறுத்த மள்ள விளர்த்த' [புறம் 254]

[மள்ள—இளையோய்—வீரனே.]

'அறவர் அறவன் மறவர் மறவன்
மள்ளர் மள்ளன் தொல்லோர் மருகன்' [புறம் 399]

[அறவர் அறவன்—அறவோர்க்கு அறவன், —
மறவர் மறவன்—கொடியோர்க்கு கொடியவன், —
மள்ளர் மள்ளன்—போர் வீரரில் சிறந்த போர் வீரன்.

இங்கு மள்ளன் என்பது—பழையோருடைய வழித் தோன்றலுமாகிய அவன் தாமான் தோன்றிக் கோனைக் குறிக்கிறது.]

'கவிகை மள்ளன் கைப்பட்டோரே' [புறம் 81]

[மள்ளன்—சோழன் கோப்பெருநற்கிள்ளியைச் சுட்டுகிறது]

**மேலே கண்ட மேற்கோள்களிலிருந்து மள்ளர் குல மக்களே மன்னர்களாக இருந்தனர் என்று தெரிகிறது**

'ஆயிரம் விரித்த கைம்மாய மள்ள' [பரிபாடல் 3-41]

[மள்ள—திருமாலைக் குறிக்கிறது]

'திருவின் கணவ பெருவிறல் மள்ள' [பரிபாடல் 3-90]

[மள்ள—திருமாலைக் குறிக்கிறது]

'செருவி லொருவ பொருவிறல் மள்ள' [திருமுருகா 262]

[மள்ள—முருகனைக் குறிக்கிறது]

ஈண்டு திருமால், முருகன் முதலிய தெய்வங்களும் 'மள்ள' என்று விளிக்கப்பட்டிருக்கின்றன. மருத நில மக்கள் தங்களின் வழிகாட்டியான மன்னனையே தெய்வமாகக் கொண்டனர் என்பது 'வேந்தன் மேயத்தீம்புனல் உலகமும்' என்ற தொல்காப்பியச் சூத்திரத்தால் விளங்கும். திருமால்

சூரிய குலத்தைச் சேர்ந்த சோழ மரபினனே. முருகன் மலையத்துவச பாண்டியன் மகளாகிய தடாதகைப் பிராட்டிக்கும், சிவபெருமானாக அமைந்த சுந்தரபாண்டியனுக்கும் பிறந்த உக்கிர பாண்டியன் என்பதால் அவனும் மள்ளர் குல மகனே. அதனாலேயே திருமாலும், முருகனும் 'மள்ள' என்று விளிக்கப் பட்டிருக்கின்றனர் போலும். மலையத்துவச பாண்டியனின் தேவியான காஞ்சன மாலை சூரிய குலத்தவனாகிய சூரசேன சோழனது மகள் என்பதும் அறியத்தக்கது.

நிகண்டுகளி. காலத்தால் முற்பட்டது சேந்தன் திவாகரம் என்பர். இதில் '**அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறலுழவர்க்கும் வருந்தகைத் தாகும் மள்ளரெனும் பெயர்**' என்று கண்டிருக்கிறது. ஆக இந்த நிகண்டின்படி **மள்ளர் உழவராகவும், போர் மறவராகவும்,** செயல்பட்டனர் **என்றும் அவர்கள் மருத நில மக்கள் என்றும் அறிகிறோம்.** இவர் இரு தொழில் செய்ததின் காரணமாகவே ஏரும், போரும் இணை பிரியாது என்ற வழக்கு தமிழகத்தில் நிலைத்தது. கி. பி. 16ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சூடாமணி நிகண்டில் மள்ளர் என்பதற்கு வயவன், திறளோன், வீரன் என்றும் குறிஞ்சி, மருதம் ஆகிய இருதிணை மக்களாகவும் கண்டிருக்கிறது. இந் நிகண்டு காலத்தால் பிற்பட்டது. இக் காலத்தில் தமிழராட்சி முடிவுற்று நாயக்கர் ஆட்சி தமிழகத்தில் பரவியிருந்ததென்பது நினைவு கூரத் தக்கது. முக்கூடற் பள்ளுக்கு சிறப்புப்பாயிரம் செய்த விருத்தாசலம் தியாகராசக் கவிராயர் 'இந்திரத் தெய்வம் போற்றி எக்காலும்' என்று பகர்வதால் மள்ளர் மருத நில மக்களே. இந்திரன் என்பதற்கு தேவர்வேந்தன், புரந்தரன் மருதக் கிழவன், வேந்தன், கரியவன் என்று பிங்கல நிகண்டில் பொருள் கண்டிருக்கிறது சான்றாகும். இந்திரன் திசை கிழக்கு; தேவேந்திரர் குடியிருப்பு நத்தத்தின் கீழ்ப் பகுதியில் எங்கும் இருப்பதைக் காணலாம். ஆக இவர் தான் பண்டைய மருத நில மக்களாகிய மள்ளர் என்பதும் மூவேந்தரும் இம் மரபினரே என்பதும் உள்ளங்கை நெல்லிக் கனி போல் விளங்கும். சூடாமணியார் மள்ளர் குறிஞ்சி நில மக்கள் என்று

கூறுவது சரியன்று. சங்க காலத்தில் மள்ளனார், அம்மள்ளனார், கடுவன் இளமள்ளனார், கடுவன் மள்ளனார், மதுரை அளக்கா ஞாழார் மகனார் மள்ளனார் என்ற பெயருடைய புலவர்களும் இருந்திருக்கின்றனர் என்பதும் அறிக. அடுத்து சங்க இலக்கி யங்களில் வரும் மல்லர் மரபு பற்றி ஆராய்வோம்.

மல்லர்: மல்லர் என்ற பெயர் திணைநில மக்களாகக் குறிக்கப்படக் காணோம். சங்க இலக்கியங்களில் மல்லை, மல்லல், மல்லர் என்ற சொற்கள் பரவலாகக் காணப்படு கின்றன. மல்லல் என்பதற்கு வளம் என்றே உரையாசிரி யர்கள் பொருள் கண்டிருக்கின்றனர். தொல்காப்பியத்தில் 'மல்லல் வளனே' என்று கண்டிருப்பது காண்க. மல்லல் வளத்தைக் குறிக்கும் போது மல்லன் என்பது வளமுடைய வனைக்குறிக்கும். ஆக மல்லன் என்றால் வளவன் என்று பொருள்படும். மருத நிலம் வளமுடையது. இங்குள்ள நாடுகள் வளநாடு என்று வழங்கப்பட்டன. ஆதலால் மருத நில மக்கள் வளவர் ஆவர். ஆக இப்பெயர் மருத நில மக்க ளுக்கும் மற்றும் அவரது வேந்தராகிய சேர, சோழ, பாண்டிய ருக்கும் உரித்தாகும். என்றாலும் மற்ற இரு நாடுகளை விட சோழ நாடு முழுவதும் மருத நிலத்தை உள்ளடக்கியதால் சோழ மன்னனுக்கே 'வளவன்' என்ற பெயர் சிறப்பாக வழங்கியது எனலாம். பிங்கல நிகண்டில் மல்லன் என்ற சொல்லுக்கு 'பெருமையிற் சிறந்தோன்' என்று பொருள் கண்டிருக்கிறது. திரு. ஞா தேவநேயப் பாவாணர் 'மல்' இல் இருந்து 'மர்' மருது [மருத நிலம்] என்ற சொல் தோன்றிய தாகவும் மல் 'மல்லல்' என்பதற்கு (1) வளம் (மல்லல் வளனே தொல் 788) (2) அழகு (மல்லற்றன்னிற மொன்றில் (திருக்கோவை 58) (3) பொலிவு (சூடா) என்று பொருள் படும் என்றும் கூறுகிறார்.[1] ஆக 'மல்லர்' என்பதும் 'மள்ளர்' என்பதும் மருத நில மக்களையே சுட்டுகிறது. ஆனால் ஏற்க னவே குறிப்பிட்டது போல், மள்ளர் மட்டும் மருத நில மக்க ளாக நிகண்டுகளில் கண்டிருக்கிறது. மல்லர் எக்காரணம் பற்றியோ விடுபட்டிருக்கிறது. சங்க இலக்கியங்களில் வரும்

1. பக்கம் 18 தமிழர் வரலாறு – ஞா. தேவநேயப் பாவாணர்.

மல்லை, மல்லல், மல்லன், மல்லர் என்ற சொற்கள் உணர்த்தும் பொருள் என்ன என்பதைக் கீழே காண்போம் :

'மல்லை ஞாலத்து வாழும் உயிர்க்கெல்லாம்
எல்லை யான பிரானுர் இருப்பிடம்'
[திருஞான சம்பந்தர் தேவாரம் திருக்கடம்பூர் 34]

'பல்யானை மன்னர் படுதிறை தந்து உய்ம்மின்
மல்லல் நெடு மதில் வாங்கு விற்பூட்டு மின்'
[முத்தொள் 17 சேரன்]

'மல்லல் நீர் மாந்தையார் [முத்தொள் 12 சேரன்]

'மழவின்று மல்லல் கேள் மன்னுக என் மாரும்'
[பரிபாடல் பதினேராம் பாடல் - வையை 11-121]

'மல்லல் மூதூர் மலர்ப்பலி உணீ இய' [நற்றிணை 73-3]

'மாடம் ஓங்கிய மறுகின மல்லல் மூதூர்கள்'
[பெரியபுரா – திருக்குறிப்பு தொண்ட நாயனுர் புரா 28]

இங்கு மல்லை மல்லல் என்ற சொற்கள் வளத்தைக் குறிக்கின்றன.

'மைந்துடை மல்லன் மதவலி முருக்கி' [புறம் 80]

'மல்லரை மறம் சாய்த்தமால் போற்றன் கிளை நாப்பண்'
[கலித் 52-5]

'மல்லமர்ந்த மார்பினுள் [சூளாமணி 1399]

'மல்லனீடிய வலி வலங்கோ'
[பெரியபுரா - திருஞானசம்பந்த - புரா 2413]

'ஏறு கொண்டெழும் மல்லர் இடிப்பிணை'
[கம்ப இராமா - அயோத்தி - காண் 9-813]

'மல்லின் மல்லர் கரிகையின் வல்லவர்'
கம்ப இராமா - அயோத்தி - காண் 809-2]

'ஆரடா ஜெட்டி மல்லர் ஆயிரம் பேரெழுந்திருங்கள்
சீமையில் ராஜருக்குச் சுருளோலை கொண்டு போங்கள்
மல்ல ரெழுந்திருந்து வாங்கினரோலை தன்னை'
[அல்லி அரசாணி - மாலை - பக் 11 - வரி 117-13]

**இங்கு மல்லன், மல்லர் இவைகள் மறபோர் வீரரையும் போர் மறவரையும் சுட்டுகிறது.**

'மல்லர் பேரூர் மடியின் மடியா' [பெரும்பாணு 253]

'மல்லன் மாநகர் மேற்சீறிவருகடல் போன்றதன்றே'
[திருவிளை – மெய்க்காட்டிப் படலம் 27]

'எல்லை சான்முரசிற் சாற்றியின்னன் வைறைதலோடு
மல்லன் மாநகரங் கேட்டே'
[சூளா – துறவுச் சுருக்க 1868]

'மாடமோங்கிய மல்லன் மூதூர்' [நெடு நல் 29]

'மல்லன் ஆவணம் மாலை யயர [நெடு நல் 45]

'மல்லன் மூதூர் மகிழ் விழாக் காண் போன்'
[சிலம்பு – புகார்காண்டம் – கடலாடுமகாதை 34]

'மல்லன் மன்றத்து மதவிடை கெண்டி'
[பெரும்பா 143]

'முல்லையங் குழலான் முலைச் செல்வமு
மல்லன் மாநகர்ச் செல்வமும் வார்கழற்'
[சீவகசிந் - நாழன் இலம்பகம் 137]

'மல்லன் மாநகர் துறந்து ஏகு நாள் மதிதொடும்'
[கம்ப இராமா - கிட்கிந்தை காண்டம்
13 ராடராட்டப் படலம் 16]

'மல்லன் மரபை இரகுவின் மரபென்று'
[இராசராச சோழனுலா 17]

இங்கு மல்லன் என்ற சொல் மன்னரைச் சுட்டுகிறது. ஆனால் உரையாசிரியர் மல்லன் என்பதை மல்லல் என்று பிரித்து வளமுடைய என்று பொருள் கண்டிருக்கின்றனர். பெரும் பாணாற்றுப் படைத்தலைவன் தொண்டைமான் இளந்திரைய னின் காஞ்சி நகரை 'மல்லர் பேரூர்' [பெரும்பா 253] என்று கண்டிருக்கிறது. இங்கு மல்லர் என்பது இளந்திரையனைக் குறிக்கும். அல்லது மல்லராகிய போர் வீரர் நிறைந்த ஊர் என்று பொருள்படும். அடுத்து அதே இளந்திரையனது மன்றத்தை 'மல்லன் மன்றத்து மதவிடை கெண்டி' [பெரும்பா 143] என்று கண்டிருப்பதை 'மல்லல் மன்றம்'

என்று பிரித்து வளமுடைய மன்றம் என்று பொருள் [1] கண்டி ருப்பது சரியன்று. இதை மறங்கெழு சோழருறைந்தைய வையத்து' [நற்றிணை 400] 'நலந்தருவிற் பாண்டியன வையத்து' [தொல்பாயிரம்] என்ற செய்யுள்களுடன் ஒப்பு நோக்குக.

'மாடமோங்கிய மல்லன் மூதூர்' [நெடு நல் 39]

'மல்லன் ஆவணம் மாலே யயர' [நெடு நல் 45]

இந்த இரண்டு இடங்களிலும் 'மல்லன் மூதூர்', 'மல்லன் ஆவணம்' என்ற சொற்கள் தலையாலங்கானத்து செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுடைய பழைமையான நகர் என்றும் 'பாண்டியனுகிய நெடுஞ்செழியனுடைய அங்காடி. என்றும் பொருள் கொள்வதே முறை. ஆனல் 'மல்லல்' என்று பிரித்து வளமுடைய என்று உரையாசிரியர் பொருள் கண்டிருக்கின்றனர். சிலப்பதிகாரத்தில் 'மல்லன் மூதூர் மகிழ் விழாக் காண்போர்' (புகார் காண். கடலாடும் காதை செய் 34) என்பதில் மல்லன் மூதூர் என்பது 'சோழ மன்னனின் தலைநகராகிய புகார் என்று' பொருள் கொள்வதே முறை. ஆனல் இங்கும் வழக்கம் போல் 'மல்லல்' என்று பிரித்து 'வளமுடைய பழைமையான ஊர்' என்று பொருள் கண்டிருக்கின்றனர். தொண்டைமான் இளந்திரையனை நச்சினுர்க்கினியர் திருமால் மரபு என்று பெரும்பாணுற்றுப் படைக்குத் தான் எழுதிய உரையில் குறிப்பிடுகிருர். இராச ராச சோழனுலாவில் 'மல்லன் மரபை ரகுவின் மரபென்று' எனப் பாடப் பட்டிருப்பது காண்க. ஆக மேலே எடுத்தாண்ட செய்யுள்களில் வரும் 'மல்லன்' என்ற சொல் மன்னரையே உணர்த்துகிறது என்பது வெள்ளிடைமலே. கம்ப இராமாயணம், சீவகசிந்தாமணி, திருவிளையாடல் புராணம் இங்கெல்லாம் வரும் 'மல்லன்' என்ற சொல்லும் மன்னரையே குறிக்கும். இதை மல்லல் என்று மாற்றிப் பொருள் கண்டி ருப்பது சரியன்று.

1. Page 76 Tamil studies M. Srinivasa Ayyangar.
,, 29 History of the Pallavas - R. Gopal.

'பருதிவலவ பொருதிறல் மல்ல' (பரிபாடல் 3-89)

'மல்லன் மாஞாலத்து வாழ்ப ருளெல்லாம்' (நாலடி 296)

'மல்லன் மாஞாலத்து வாழ்வீர் ஈங்கென்'
(சிலப்-வஞ்சி. வரந்தரு காதை 202)

'மல்லன் மாஞாலத்து வாழ்வோர் மருங்கிற்'
(சிலப். நடுகற் காதை 28 - வாஞ்சி காண். 151)

'மல்லன் மாஞாலத்து வாழ்வோரென்போர்'
(மணிமேகலை 130)

'மலலன் மும்மதின் மாய் தர வெய்த தோர்
வில்லினுனுறை வேற்காடு'
(திருஞானசம்ப. தேவா. திருவேற்காடு-7)

'மல்லற் பவனி சேவித்து'
(பெரி. புரா. கழநிற்றறிவார் புரா. 37-80)

'தல்லற்படு சாபந்திரவருள் சுரந்த
மல்லற் கருணை வளம் போற்றி · நல்வணிகன்'
(திருவிளை. புரா. போற்றிக் கலி வெண்பா)

ஈண்டு 'மல்லர்' 'மல்லன்' என்ற சொற்கள் இறைவனைக் குறிக்கும். ஆனால் 'மல்லல்' என்று சொல்லை மாற்றி 'வளமுடைய' என்று பொதுவாக உரையாசிரியர் பொருள் கண்டிருக்கின்றனர். 'மல்லன் மாஞாலம்' என்றால் இறைவனுடைய பெரிய உலகத்து' என்று பொருள்படும். பருதி வலவ பொருதிறல் மல்ல' என்று பரிபாடலில் வரும் வரியை ஒப்பு நோக்குக. 'மல்லன் மும்மதின்', 'மல்லற் பவனி', 'மல்லற் கருணை' இங்கெல்லாம் மல்லன் என்ற சொல் இறைவனையே சுட்டும். அதற்கு வளம் என்று பொருள் கொள்வது பொருத்தமன்று. ஆக 'மல்லன்' என்ற சொல் மற்போர் வீரர், போர் மறவர் மற்றும் மன்னரை மட்டுமின்றி இறைவனையும் சுட்ட எடுத்தாளப்பட்டிருக்கிறது. அடுத்து மல்லர் என்பது காரணம் அல்லது பண்புப் பெயரா? இல்லை அது ஒரு மரபுப் பெயரா? என்பது பற்றி ஆராய்வோம்.

'மல்லன்' என்பது மருத நில மக்கள் என்று ஏற்கனவே கண்டோம். ஆனால் மேலே குறிப்பிட்டது போல்

நிகண்டுகளில் மல்லரை மருதநில மக்களாகக் குறிப்பிடவில்லை. அவரைப் 'பெருமையுடையோன்' என்று குறிப்பிட்டிருக்கிறது. இன்று மல்லன் என்றால், அதற்கு 'மற்போரில் ஈடுபடுபவன்' என்று பொருள் கொள்வர். சங்க காலத்தில் ஆமூர் மல்லனும், களாய்ப் போர்வைக் கோப்பெருநற் கிள்ளியும் மற்போரில் ஈடுபட்டது புறம் 80 செய்யுளிலிருந்து அறியற்பாலது. பாண்டியன் நெடுஞ்செழியனும் மற்போரில் வல்லவன் என்று சங்க இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. ஏற்கனவே மல்லர் போர் மறவராகவும், மன்னராகவும், இறைவனாகவும் சங்க இலக்கியங்களிலும், இடைக்கால இலக்கியங்களிலும், சுட்டப்பட்டிருப்பதைக் கண்டோம். இராசராசசோழனுலாவில் 'மல்லன் மரபை இரகுவின் மரபென்று' எனப்பாடப்பட்டிருப் பதையும் கண்டோம். மள்ளரைப் போர் மறவராகவும், மன்ன ராகவும், இறைவனாகவும், உழவராகவும் பாடியிருக்கும் போது மல்லரை உழவராகச் சுட்டாமல் மற்போர் வீரர், போர் மறவர், மன்னர், இறைவனாகச் சுட்டி பாடியிருக்கின்றனர். மன்னரில் சிலர் மல்லன் என்ற பட்டம் தரித்திருக்கின்றனர். சோழ மன்னன் முதற் பராந்தகனுக்கு 'குஞ்சர மல்லன்' என்ற பட்டம் உண்டு.[1] சிவகாசி சாசனத்தில் 'பாண்டிய பரமேசவரரான் பரம்பரையில் வந்து தோன்றினர் மன்னர் கோன் இராச மல்லன் மணி முடி மானா பரணன்' என்ற வாசகத்திலிருந்து பாண்டிய மன்னனுக்கு மல்லன் என்ற பட்டம் இருந்ததாக அறிகிறோம். இராதாசி ராசா இராசகேசரி வர்மன் கி. பி. 1046 ஆம் ஆண்டு கல்வெட்டில் 'பாண்டியன் மல்லன் மீனவன்' என்று பொறிக்கப்பட்டிருக்கிறான். காஞ்சி மல்லர் பேரூர் என்றும், மதுரை மல்லன் மூதூர் என்றும், புகார் மல்லன் மாநகர் என்றும், மாமல்லபுரம் சோழன் கரிகாலன் காலத்தில் மல்லை என்றும் வழங்கப்பட்டி ருக்கின்றன என்பது பற்றி சங்க இலக்கியங்கள் சான்று பகர்வதை ஏற்கனவே கண்டோம். இடைக் காலத்தில் 'மல்லன்' 'மல்லி' என்ற பெயருடைய அரசியல் தலைவர்களும் பெருமாட்டிகளும் மல்லி நாடு என்ற இடங்களும் இருந்த

1. Page 417 The Cholas - K. A. N. Sastry.

தென்பது 'தேவர்க்கு இவ்வூர் மல்லன் தித்தன்குளம்' (பழவூர் சங்கரப்பாடி மல்லன்) [1] 'சாமரா கேரைத் தெரிஞ்ச கைக் கோள மல்லன் அரையன்' [2] மல்லி நாடு [3] 'அள நாட்டைச் சேர்ந்த இன வெள்ளாட்டி சாத்தன் மல்லி' [4] என்ற கல் வெட்டுகளால் விளங்கும். கி. பி. 9 ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த செந்தலைக் கல்வெட்டில் முத்தரைய மரபினன் சவரன் மாறன் சத்ரு மல்லன், கள்வர் கள்வன் [5] என்று குறிப்பிடப் பட்டிருக்கிருன். கள்வர் கள்வன் என்பது கள்வரை வெற்றி கண்டவன் என்று பொருள்படும். அதே போன்று சத்ரு மல்லன் என்ருல், மல்லருக்கு சத்ரு–விரோதி என்று பொருள் படும். கி. பி. 9 ஆம் நூற்ருண்டில் விசயாலயன் முத்தரைய ருடன் பொருதி வெற்றி கண்டு தஞ்சையில் சோழ அரசை நிறுவினது நினைவு கூரத்தக்கது. இக் காலத்தில் முத்தரைய ருக்கும், சோழ மரபினர்க்கும் இடையே பல போர்கள் நிகழ்ந் திருக்க வேண்டும். அதனுல் சோழ மரபினரை சத்ருவாக அவர் கருதி வந்தனர் எனலாம். தொண்டை மண்டலத்தில் இடைக் காலத்தில் மல்லர் இருந்தனர் என்பது, 'மல்லன் சரநணி சிராகுத்தம் மகனுர் வயிரவத் தேவர்' [6] 'அருளாளனுக்கு மல்லன் தாங்கலில் விட்ட நிலம் ஒரு வேலி' [7] என்ற கல்வெட்டுகளால் அறியலாம்.

மல்லபுரம், மல்லூர், மல்லல், மல்லன் கிணறு, மல்ல சமுத் திரம், திருமல்ல சமுத்திரம், மல்லிபட்டணம், மல்லன்பூர், (மைலாப்பூர்) மல்லிநாடு என்று பல ஊர்கள் இன்னும் தமிழகத் தில் இருந்து வருகின்றன. திருச்சி, மதுரை மாவட்டங்களில் மல்லன், மல்லப்பன், மல்லையா, செம்பிய மல்லன், வீரமல்லன் பெரியமல்லன், சின்ன மல்லன் என்ற பெயருடையவர் தேவேந் திர குலத்தார் மத்தியில் இருந்து வருவதாகத் தெரிகிறது.

1. A. R. E. 371 / 1924.
2. A. R. E. 528 / 1921.
3. A. R. E. 13 / 1921.
4. A. R. E. 486 / 1901.
5. முத்தரையர் – நடன காசிநாதன், M. A.,
6. காஞ்சி நடுகல் கொங்கு பத்திரிகை ஜூன் 1975.
7. பக்கம் 207 ஏனுத்தூரில் எடுத்த ஏடு – காட்டில் சேகரித்த கருவூலம் பிலோ இருதயநாத்.

மதுரை மீனுக்ஷி சுந்தரேஸ்வரர் கோயிலின் மேற்கு அம்மன் சந்நிதி கோபுரம் மல்லப்பன் என்ற தலைவனுல் கி. பி. 14 ஆம் நூற்ருண்டில் கட்டப்பட்டிருக்கிறது. டாக்டர் G. ஒப்பர்ட் தேவேந்திர குலத்தார் மத்தியில் 'மல்லன்', 'குழந்தை, மருகன்' என்ற பெயர்கள் பெரும்பாலும் வழக்கில் இருந்து வருவதாகக் கூறுகிருர். [1]

[Mallan, Kulantai and Marukan are Common names among Palla men while Valli, Deyvanai for Devayana Corruption of Devasena and Kulantai for Kulumai are applied to their Women.]

அவர் மேலும் சேர, சோழ, பாண்டிய மன்னர்களின் பழைய பெயர் பெருமாள் என்றும் பொலநாட்டில் மல்லூரைக் கட்டிய ஒரு பெருமாளின் பெயர் மல்லன் என்றும், மல்லன் என்பது வயல் வெளிகளின் எல்லையில் அல்லது கரையில் வைத்து வணங்கப்படும் நாட்டுப்புற தெய்வம் என்றும் கூறுகிருர். [2]

[The indigenous title of the South India Chera Chola Pandyan Kings was Perumal. Mallan was the name of a Perumal who built Mallur in Polanadu, Mallan is also called a rural deity which is set up on the border of the ridges of rice fields.] [2]

அவர் மேலும் கூறுவதாவது:- திருமால், பெருமாள் என்ற பெயர்கள் மாலா, மல்லா என்ற பெயர்களிலிருந்து தோன்றியவை. இந்த இரண்டு பெயர்களும் (திருமால்-பெருமாள்) மல்லர் அவருடைய மன்னர்களுக்கும், தலைவர் களுக்கும் வழங்கிய பட்டங்களாகும். நாட்டை ஒவ்வொரு பெருமாளும் 12 ஆண்டு வரை ஆள்வதற்காகத் தேர்ந் தெடுக்கப்பட்டனர். திருமால், பெருமாள் என்ற பெயர்கள் தெய்வத்துக்கு சூட்டப்பட்ட பின், அவைகள் ஆரம்பத்தில் உணர்த்திய பொருள் மறந்தும், மறைந்தும் போய்விட்டது. இந்த வார்த்தைகளுக்கு தமிழ் அகராதிகளில் விேேநாதமான

1. Page 75 The original inhabitants of India. Dr. G. Oppert.
2. Page 30 The original inhabitants of India. do.

பொருள்கள் காணப்படுவதும், அகராதி ஆசிரியர்கள் தீய நோக்கோடு விநோதமான முறையில் அவ்வார்த்தைகளின் பொருளை விளக்குவதும், இவ்வார்த்தைகளின் உண்மைப் பொருள் மறைந்தும், மறக்கப்பட்டும் வந்ததன் விளைவே. மலபாரில் பெருமாள் என்ற பெயர் மலபார் அரச மரபினரின் பட்டங்களில் ஒன்றுயிருக்கிறது.[1]

[The word Tirumal - Perumal are also derived from Mala - (Malla). Both terms were originally the titles given by the Mallas to their great chiefs and Kings. Each Perumal was elected to rule for twelve years. The term sacred Mala or the great Mala being once connected with the deity lost their original meaning while which was in course of time entirely forgotten. This circumstance explains their peculiar derivation so often found in Tamil dictionaries and the strange attempts of grammarians to explain their startling formation. The name Perumal, the great Mala is still a royal title in Malabar.][1]

இராசராச சோழன் பட்டங்களில் பெருமாள் என்பதும் ஒன்று 'இன்னும் சில சோழ மன்னர்களும், பாண்டிய மன்னர் களும் பெருமாள் என்ற பட்டம் மேற்கொண்டிருந்தனர் என்று சரித்திர வாயிலாக அறிகிறோம்' தேவேந்திர குலத்தாரில் பலர் மல்லன் என்ற பெயர் தரித்திருப்பதுடன் பெருமாள் என்ற பெயரையும் பெரும்பாலும் தரித்து வரு[illegible]னர் என்பதை அறிக. மேலும் இவ[illegible]டர் G. ஒப்பர்ட் குறிப்பிடுவது போன்று 'மல்லன் என்ற நாட்டுப்புற தெய் வத்தையும் வணங்கி வருகின்றனர். மல்லன் கோயில்கள் தேவேந்திரர் குடியிருப்பில் இருந்து வருவது அடியிற் கண்ட சான்றுகளால் விளங்கும்.

கோயம்புத்தூர் மாவட்டம் – கோயம்புத்தூர் தாலுகா –
– பேரூர்.

மதுரை மாவட்டம் - பெரியகுளம் தாலுகா – கங்குவார்பட்டி.

1. Page 30 The original inhabitants of India. Dr. G. Oppert.

திருச்சி மாவட்டம் – முசிரி தாலுகா – 1. பேரூர்,
2. ஓமாந்தூர்,
3. கோட்டாத்தூர்,
4. பாளையூர்,
5. திருத்தளையூர்,

,, – லால்குடி தாலுகா – 1. கரியமாணிக்கம்,
2. நகர் திருமங்கலம்.

,, – குளித்தலை தாலுகா – 1. கடம்பர்கோயில்,
2. மாழாரம்.

,, – கரூர் தாலுகா – 1. புலியூர்,
2. பள்ளப்பாளையம்,
3. சின்னதாராபுரம்.

,, – திருச்சி தாலுகா – புத்தூர் உறையூர்.
(காவேரிக்கு அருகில் மிஷன் ஆஸ்பத்திரிக்கு சமீபம்.)

திருநெல்வேலி மாவட்டம் – செங்கோட்டை தாலுகா –
– மல்லபுரம்.

சேலம் மாவட்டம் – ஆத்தூர் தாலுகா – வீரகனூர்.

[குறிப்பு :– பெரும்பாலும் திருச்சி மாவட்டத்தில் எல்லா தேவேந்திரர் குடியிருப்புகளிலும் மல்லன் கோயில் இருப்ப தாகக் கூறப்படுகிறது.]

ஆக தேவேந்திர குலத்தார் மல்லன் என்ற பெயர் தரித் திருப்பதாலும், மல்லனை நாட்டுப்புற தெய்வமாக வணங்கி வருவதாலும், மல்லர், மள்ளர் என்ற இரு பெயர் களும் ஒரே மரபையே குறிக்கிறது என்பதை அறிக. இவர் மத்தியில் மல்லன் கோயில் வழிபாடு வழக்கில் இருப்பது, பண்டைக் காலத்தில் போர் வீரர்க்கு அவர் மரபினர் நடுகற்கள் எடுப்பித்து வழிப்பட்டதை நினைவூட்டுகிறது.

ஆக சங்க கால மக்கள் பிரிவினர் பற்றி ஆராய்ந்ததில் மருத நில மக்களாகிய மள்ளர் (மல்லர்) என்பவரே தமிழகத் தில் ஆற்றோரங்களில் குடியேறி, ஆறுகளுக்குக் கரைகள் கண்டு நிலத்தைப் பண்படுத்தி வயல்களாக்கி நெல், கரும்பு,

வாழை, மஞ்சள், பருத்தி முதலிய மக்களுக்குத் தேவையான முக்கிய உணவு, உடை இவற்றை உற்பத்தி செய்தும் ஊர் கள், நகரங்கள் அமைத்து அரசுகளைத் தோற்றுவித்தும், அண்மையிலுள்ள காடுகளை அழித்து நாடாக்கி அங்கு வாழ்ந்த காட்டாண்டிகளைத் திருத்தி அவர் மத்தியில் தமிழை யும் பற்பல தொழில்களையும், நாகரிகத்தையும் பரப்பி மேம் பாடடையச் செய்தனர் எனவும், சேர, சோழ, பாண்டியர் இம் மரபைச் சேர்ந்தவரே எனவும், அவர் சங்க காலத்தில் மட்டுமின்றி களப்பிரர் இடையூட்டுக்குப் பின்னும் தமிழ கத்தை ஆண்டனர் எனவும் அறிகிறோம். இன்று பள்ளர், தேவேந்திர குலத்தார், குடும்பன், பண்ணாடி, காலாடி, கடைஞர் என வழங்கி வரும் மக்கள் தான் பண்டைய நாளில் மள்ளர், மல்லர் என வழங்கினர் என்பது பற்றியும், பெயர் மாற்றம் இடைக் காலத்தில் ஏற்பட்டது பற்றியும், பள்ளு நூல் கள் மற்றும் கல்வெட்டுச் சான்றுகள் மூலம் ஏற்கனவே விளக்கி யிருப்பதை வாசகர் அறிவர். தமிழகத்தை ஆட்சி செய்த தமிழ்மூவேந்த மரபினர் இன்று பள்ளன், தீண்டப்படாத வன், அரிசன் என வழங்குகின்றனர் என்பது வெள்ளிடை மலை. அகச்சான்றுகளை மட்டும் ஆதாரமாகக் கொண்டு இம் முடிவு உண்மை என ஏற்க அறிஞர் உலகம் தயங்கும்; ஏன் மறுக்கவும் கூடும். ஒரு கருத்து உண்மை எனக் கொள்ள அகச் சான்று மட்டும் போதாது; புறச் சான்றுகளும் இன்றி யமையாத தென்பர். ஆதலால் இக் காலப் பள்ளர் தான் மூவேந்த மரபினர் எனக் கொள்வதற்கு ஆதாரமாக புறச் சான்றுகள் நாட்டில் வழக்கில் உள்ளனவா? என்பது பற்றி அடுத்து மூவேந்தர் பள்ளரே என்ற தலைப்பில் ஆராய்வோம்.



# மூவேந்தர் பள்ளரே

ஏற்கனவே தமிழகத்தை ஆட்சி செய்த மூவேந்தராகிய சேர, சோழ, பாண்டியர் மள்ளர் மரபினரெனவும், அவர் வழி வந்தோர் இன்று பள்ளர் என வழங்கி வருவதாகவும் கண்டோம். பள்ளர் தமிழ் மூவேந்தர் மரபின் வழித் தோன்றல்கள் எனக்கொள்ளும் போது இவர் படை மறவராக வும், உழவராகவும் செயல்பட்டிருக்க வேண்டும். அக்காலத் தில் அரசு நிர்வாகத்தை நடத்திச் செல்ல மன்னர்க்கு உதவியாக ஐம்பெருங்குழு, எண்பேராயம் என்ற அமைப்புகள் ஏற்பட்டிருந்தது. மன்னர்க்கு அமைச்சர், படைத் தளபதி கள், மூலப்படை, நாட்டுப்படை மற்றும் மெய்க்காப்பாள ராகிய ஆபத்துதவிகள் போன்ருேர் இருந்தனர். இவர் எல்லாம் அவரின் மரபிலிருந்தே தேர்ந்தெடுக்கப்படுவது மரபாயிருந் தது. சங்க காலத்தின் ஆரம்பகட்டத்தில் மருத நிலத்தைத் தவிர மற்றத் திணை நில மக்கள் வளர்ச்சி பெற்றிருக்கவில்லை என்பது கவனத்திற்குரியது. இடைக்காலத்திலும் தமிழ்வேந்தர் தங்கள் மரபினரையே பொறுப்புவாய்ந்த அரசு பதவிகளுக்கு அமர்த்தியிருக்கின்றனர். இவர்கள் மணஉறவையும் தங்கள் மரபிற்குள்ளேயே பொதுவாக வைத்துக் கொண்டிருக்கின்ற னர். கி. பி. 14 ஆம் நூற்ருண்டைச் சேர்ந்த நச்சினுர்க் கினியர் உழுவித்துண்ணும் வேளாளர் என்பவர் தண்டத் தலைவரும், மண்டலத் தலைவரும், மன்னர்க்கு மகட் கொடை கொடுக்கும் உரிமையுடையவர் எனவும் கூறியிருப்பதையும், இவர் குறிப்பிடும் உழுவித் துண்ணும் வேளாளர் இக்காலத்தில் தேவேந்திரகுல வேளாளர் என வழங்கும் பள்ளர் சமூகமே எனவும் ஏற்கனவே கண்டோம். இடைக்காலச் சோழர் ஆட்சியின் போது இராச ராச சோழன், அவன் மைந்தன் இராசேந்திரன் இவர்கள் கீழைச் சாளுக்கிய மரபினருடன் கொடுப்புவினை கொண்டிருந்தனர். இது அரசியல் நோக்கோடு செய்யப்பட்டதாகக் கூறப்படுகிறது. பொதுவாக மன்னரின் கோப்பெருந்தேவி அவர் தம் மரபிற்குள்ளிருந்தே தேர்ந் தெடுக்கப்பட்டதாகத் தெரிகிறது இதுபல காரணங்களால்

மன்னரைத் தனிப்பட்ட நபர்களாகக் கருதுவதற்கில்லை. அவர் சுற்றச் சூழ்வு உடையவரானதால் அவருக்கு ஏற்பட்ட உரிமைகள் பலவற்றை அவர் தம் மரபினர்க்கும் வழங்க வேண்டிய நிலை ஏற்பட்டது. இம்மாதிரி மன்னர் தம் மரபினர்க்கும் உரிமைகள் வழங்கியது பற்றியே தொல்காப்பியர் 'மன்னர் பாங்கின் பின்னோர் ஆகுப (தொல்பொருள் - அகத்திணை - 32) என்ற சூத்திரம் செய்தார். இக்காலப் பள்ளர் தமிழ் வேந்தரின் பின்னோர் எனக் கொள்வதற்கு ஆதாரமாக இவருக்கு மன்னரால் வழங்கப்பட்ட உரிமைகள், மற்றும் தனித்தன்மை இவற்றின் எச்சக் கூறுகளில் ஒருசிலவாவது இன்று எஞ்சி வழக்கில் இருந்து வரவேண்டும். இவை முற்றிலும் மறைந்து விட்டதெனக் கருத முடியாது. அவ்வாறு இம்மக்கள் மத்தியில் வழக்கில் உள்ள உரியைகள் மற்றும் தனித்தன்மை யாது? இவை ஆய்வுக்குரியது.

பள்ளர் தாங்கள் தேவேந்திர குலத்தவர்; மற்ற மரபினரை விட உயர்ந்தவர் என உரிமை பாராட்டுவதாகவும், இவர் குடியிருப்பு ஊர் நத்தத்தில் கீழ்புறமும், சாதி இந்துக்களின் குடியிருப்பு மேல்புறமும் அமைந்திருப்பதாகவும், இவரது மண விழாவில் மன்னர் மரபினரென வாழ்த்துவதாகவும், கோயில் விழாக்களில் இம் மரபினரின் தலைவர்களுக்கு முதல் மரியாதை வழங்கி, அவர் தேர்வடம் தொட்டுக் கொடுப்பது, இறந்தவரை மற்ற மரபினர்போலன்றி தேர்கட்டி ஆடம்பரமாய் எடுத்து அடக்கம் செய்வது முதலிய வழக்கங்கள் இவர் மத்தியில் நடைமுறையில் உள்ளதாக ஏற்கனவே குறிப்பிட்டிருக்கின்றோம். இப்பழக்கங்களில் இம் மக்கள் மன்னர் மரபினர் எனக் கொள்வதற்குரிய கூறுபாடுகள் காணக் கிடக்கின்றனவா என்பது ஆய்வுக்குரியது. முதலில் இம் மரபினர் பெருமை பாராட்டும் தேவேந்திர குலம் பற்றி ஆராய்வோம்.

**தேவேந்திர குலம் :**

'மள்ளர் மருத நில மக்கள் அவர் தெய்வம் வேந்தன். தொல்காப்பியர் வேந்தன் மேயத் தீம்புனல் உலகமும் (தொல் பொருள் - அகத்திணை – செ. 32) என்று கூறுகிறார். வேந்தன்

என்பது பிற்காலத்தில் இந்திரன், தேவேந்திரன், புரந்தரன் என வழங்கியது. பிங்கல நிகண்டில் இந்திரன் என்பதற்கு தேவர்வேந்தன், புரந்தரன், மருதக்கிழவன், வேந்தன், கரியவன் எனப் பொருள் கண்டிருக்கிறது. இந்திரன் திசை கிழக்கு. (கௌதல்யர் அர்த்த சாத்திரம்) பள்ளர் ஊர் நத்தத்தின் கீழ் பகுதியில் குடியிருக்கின்றனர். இவர் தாங்கள் மற்ற மரபினரைவிட உயர்ந்தவர்; இந்திரனின் வழிவந்தவர் என்கின்றனர்.[1] கரிவலம்வந்தநல்லூர்[2] சீவிலி புத்தூர்[3] கல்வெட்டுகளில் இவர்கள் தேவேந்திரக் குடும்பன் என்றும், முதுகுடிக் கல்வெட்டில் பெரிய தேவ பள்ளன்[4] என்றும், பொறிக்கப்பட்டிருக்கின்றனர். இவர்களை இழிவு படுத்தத் தோன்றிய பள்ளு நூல்களில் தேவேந்திரப் பள்ளன்,[5] புரந்தரன் குலம்[6] என்று கண்டிருக்கின்றது. மக்கள் குடிக் கணக்கெடுப்பில் இவர்களில் ஒரு பகுதியினரைத் தேவேந்திர குலத்தார் எனப் பதிந்திருக்கின்றனர்.[7] தமிழக அரசு செடியூல் வகுப்புப் பட்டியல் இணைப்பு 11 (2) (4) இல் தேவேந்திர குலத்தார் என்ற வகுப்பு தனியாய் இடம் பெற்றிருக்கிறது. நிலக்கிரையம் ஒத்திப் பத்திரங்களில் இவர் தங்களைத் தேவேந்திர குலத்தார், தேவேந்திர குல வேளாளர் எனப்பதிந்து வருகின்றனர். இம்மரபுப் பெண்கள் நாற்று நடும் போது 'தேவேந்திரகுலப் பெண்டுகளா' என விளித்துப் பாடுகின்றனர். இவரது குருக்கள், நாவிதர், வண்ணார் முறையே தேவேந்திர குருக்கள், தேவேந்திர நாவிதர், தேவேந்திர வண்ணார் என வழங்கி வருகின்றனர்' இவ்வாறெல்லாம் இம் மரபினரைப் பற்றி ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறோம். மள்ளர் மருத நில மக்கள்; வேந்தன் குலம். இவர் பின்னால் இந்திரகுலம்; தேவேந்திரகுலம் என வழங்கினர். இவர் வயல்

1 Page 129 Trichirapally Dt Gazetteer F R. Hemingsway.
2 A. R. E. 432/1914.
3 A. R. E. 588/1926.
4. கொங்கு செப்டம்பர் 1974.
5. செ. 81 வையாபுரிப் பள்ளு.
6. செங்கோட்டுப் பள்ளு செ. 208.
7. Page 247 Vol XIII 1891 Censur Report. H. A. Stuart.

உழவராகவும், போர் மறவராகவும் செயல் பட்டனர். இம் மரபினரைச் சேர்ந்தவரே சேர, சோழ, பாண்டிய மன்ன ராவர். இதில் முறண்பாடு இருப்பதற்கில்லை. இக்காலப் பள்ளர் மள்ளர் போன்று மருத நிலத்தில்தான் பெரும்பாலும் வாழ் கின்றனர். பண்டு தொட்டு உழவுத் தொழிலில் ஈடுபட்டு வருகின்றனர். இதற்குப் பள்ளு நூல்கள் சான்ருகும் மருத நில உழவர் என்ற காரணத்தினுலேயே இவர் தங்களைத் தேவேந்திர குலம், இந்திர குலம், தேவேந்திர குல வேளாளர் என உரிமை பாராட்டி வருகின்றனர். இவரின் உடற்கட்டு ஏர் உழுதல், போர்ஆற்றல் ஆகிய இரு தொழிலும் செய்வதற்கு ஏற்றதாக அமைந்துள்ளது. 1958 செப்டம்பரில் இராமநாத புரம் மாவட்டம் முதுகளத்தூர், பரமக்குடி வட்டாரங்களில், வாழும் பெரும்பான்மையினரான கள்ளர், மறவர், அகம்படியர் ஆகிய மூன்று சமூகத்தாரும் இம் மரபினர் மீது நடத்திய தாக்குதலின் போது இவர்கள் அவர் மூவரையும் தீரத்துடன் எதிர்த்து நின்றது இவரது போர் ஆற்றல் திறனை தமிழகம் அறியும்படிச் செய்தது.[1] இடைக்கால சோழர் ஆட்சியின் போது கைக்கோளப் படையினர் இருந்ததாகக் கல் வெட்டுகள் மூலம் தெரிகிறது.[2] இப்படை பெரும்பாலும் இம் மரபினரையே உள்ளடக்கியதென்பது, இவர் இன்று சிலம்பப் பயிற்சியில் தேர்ச்சி பெற்றவர் என்பதிலிருந்து நன்கு விளங்கும்.

தேவேந்திரன் என்பது தேவர்க்கெல்லாம் தலைவன்; மன்னர்க்கெல்லாம் மன்னன்; மாவேந்தன் எனப் பொருள் படும் என்பதை ஒருவரும் மறுக்க இயலாது ஆனதால் தேவேந்திர குலத்தார் எனப் பள்ளர் வழங்கிவருவது, இவர் வேந்தர் குலம்; மன்னர் குலம் எனப் பொருள்படும் என்பதில் ஐயம் இரா. தமிழ் மன்னர் மூவரும் ஒரே மரபிலிருந்தே தோன்றியவராதலால், பள்ளர் மூவேந்த மரபினரே. மூவேந் தரும் குறுநில மன்னர் மீதும் அதிகாரம் செலுத்தி வந்த

1. முதுகளத்தூர் பயங்கரம். T. S சொக்கலிங்கம்.

2. A R E. 279/1911 278/1911.

தாலேயே வேந்தன் என வழங்கியதாகவும், வேந்தன் என்ற சொல் முடியுடையவன் என்று பொருள்படும் வேய்ந்தோன் என்ற சொல்லிலிருந்து பிறந்ததென்றும் கூறுவர். தமிழகத் திலும் ஏன் தென் இந்தியாவிலுள்ள மன்னரில் பலர் தேவேந்திரவர்மன், தேவேந்திரவல்லபன், தேவேந்திரச் சக்கரவர்த்தி என வழங்கியதாகக் கல்வெட்டுகளும், வரலாற்று நூல்களும் கூறுகின்றன. சோழ மன்னன் முதலாம் இராசராசனுக்கு தேவேந்திரவர்மன் என்ற பட்டம் உண்டு. முதற் பராந்தகனுக்கு தேவேந்திரச் சக்கரவர்த்தி என்ற பட்டம் ஏற்பட்டிருந்தது. கங்கை, கலிங்கநாட்டு மன்னரும் தேவேந்திரச் சக்கரவர்த்தி, தேவேந்திர வல்லபன் முதலிய பட்டம் பூண்டிருந்தனர் என்று தெரிகிறது. எல்லாத் தமிழ் வேந்தருக்கும் தேவேந்திரப் பட்டம் உரித்தானது என்பது அவர் மருத நிலத்தின் தலைமக்களாகிய மள்ளர் மரபினர் என்பதிலிருந்து தெளியப்படும்

தமிழ் வேந்தர் ஆட்சியின் போது இம்மரபினர் வாழ்ந்த நகர வீதிகள் மற்றும் குடியிருப்புகள் தேவேந்திர வீதி, தேவேந்திரர் தெரு, தேவேந்திரர் குடியிருப்பு என வழங்கி வந்திருப்பதாகத் தெரிகிறது. அன்னியர் படையெடுப்பால் முக்கிய நகரங்களிலிருந்து இம்மரபினர் விரட்டப்பட்டு அவர் வாழ்ந்த வீதிகளில் அன்னியரும், வேற்று மரபினரும் குடி அமர்த்தப்பட்டிருக்கின்றனர் என்று கருத ஏதுவாகிறது. தஞ்சை நகரில் தேர்வேந்தர் தெரு இருந்து அழிக்கப்பட்ட தென்பதை 'போர் வேந்தர் போர் மாளப் போர் வாளுறை கழித்த தேர்வேந்தர் தஞ்சைத் தெரு' என்ற தனிப்பாடற் றிரட்டுச் செய்யுளால் அறியலாம். இக் காலத்திலும்கூட தமிழகத்தில் குறிப்பாகப் பாண்டிய நாட்டில் இம் மரபினர் வாழும் பகுதியைத் தேவேந்திரர் தெரு, தேவேந்திரர் குடியிருப்பு என வழங்கி வருவது கண்கூடு. கோயம் புத்தூர் நகர மன்றத்திற்கு அருகாமையில் தேவேந்திரர் தெரு இருப்பதும், அதில் குடியிருப்பவர் இம் மரபினரே என்பதும் இதற்குச் சான்றாக அமையும். ஆக கல்வெட்டுகளும், பள்ளு நூல்களும் இக்காலப் பள்ளரைத் தேவேந்திரக் குடும்பன்,

தேவேந்திரப் பள்ளன், தேவப் பள்ளன், புரந்தரன் குலம் என்று கூறுவது தவிர்த்து, அன்ருட நடைமுறை வழக்கிலும் இவர் தேவேந்திர குலம் என வழங்கி வருவது கண்கூடு. இவர் அந்தந்த மாவட்டங்களில் தேவேந்திரகுல வேளாளர் சங்கம் அமைத்து நீண்ட காலமாய் நடத்தி வந்திருக்கின்றனர் என்று தெரிகிறது. சமீப காலத்தில் இவர் தமிழ்நாடு தேவேந்திர குல வேளாளர் சங்கம் (பதிவு எண் 58/67) என்ற மாநில அமைப்பை ஏற்படுத்தி நடத்தி வருவதாக அறிகிருேம்.

இவர் வேந்தர்குலம் என்பதன் காரணமாகவே, தமிழகத்தில் வேறு ஒரு மரபினர்க்கும் இல்லாமல், இவருக்கு மட்டும் தனியாய் குருக்கள், நாவிதர், வண்ணுர் இருந்து வருகின்றனர்.[1] தமிழகத்தில் வேறு ஒரு மரபினர்க்கும் இம்மாதிரி தனியாய் குருக்கள், நாவிதர், வண்ணுர் இல்லாததிலிருந்து இவரில் ஒருவர்க்கும் தனித் தன்மை இல்லை என்று தெரிகிறது. இவரில் ஒரு சாரார் தேவேந்திரரின் பதினெண் குடி மக்களில் அடங்குவர். பெரும் பகுதியினர் மற்றத் திணை நிலை மக்களைச் சார்ந்தவர்; மற்றும் வந்தேருங்குடிகளும் என்று அறிக. பள்ளர் தவிர்த்து வேறு எந்த மரபினர்க்கும் தேவேந்திரகுலம் என்ற பட்டம் உண்டு என்பதற்கு எவ்வித ஆதாரமும் இல்லை எனலாம் அடுத்து இம் மரபினர் ஊர் நத்தத்தின் கீழ் பகுதியில் குடி இருப்பது பற்றி ஆராய்வோம்.

**தேவேந்திரர் குடியிருப்பு பொதுவாய் ஊர் நத்தத்தின் கீழ் பகுதியில் அமைந்திருப்பதன் முக்கியத்துவம் யாது?**

தேவேந்திரர் குடியிருப்பு பொதுவாய் ஊர் நத்தத்தின் கீழ் பகுதியிலும் சாதி இந்துக்கள் என வழங்கும் இக்கால வேளாளர், செட்டியார், கள்ளர், மறவர், அகம்படியர், இடையர் மற்றும் பல்வேறு தொழில் மரபினரும் அதன் மேல் பகுதியிலும் அமைந்திருப்பதாக ஏற்கனவே குறிப்பிட்டிருக்கின்ருேம். இவர் பள்ளர், கீழ் சாதி என வழங்குவதால் பள்ளமாகிய கீழ் பகுதியில் குடியிருக்கின்றனர் என்று கொள்வது பொருத்தமற்றது; கிழக்கு என்ற சொல் பிற்கால வழக்கு; அதே போன்று பள்ளர் என்ற பெயரும் கி. பி. 12 ஆம் நூற்ருண்டிற்

1. Trichy Dt. Gazetteer - F. R. Hemingsway.

குப் பிறகு தோன்றியதென்றும் ஏற்கனவே கண்டோம். ஆதலால் தேவேந்திரர் ஊரின் கீழ் பகுதியில் குடியிருப்பதற்கு வேறு காரணம் இருக்கவேண்டும் அந்தக்காரணம் யாது என்பது பற்றி ஈண்டு ஆராய்வோம்.

பண்டைய நாளில் ஆரம்பத்தில் மருதநிலத்தில் மட்டும் ஊர்கள், நகரங்கள் தோன்றியது என்றும், காட்டுவாணர் மற்றும் வேற்று நாட்டார் தாக்குதல், படையெடுப்பு இவற்றிலிருந்து தற்காத்துக்கொள்ள ஊர், நகரங்களைச் சுற்றிக் கோட்டைச் சுவர்கள் எழுந்ததாகவும் இது பற்றி 'உழிஞை தானே மருதத்துப் புறனே' என்ற தொல்காப்பிய சூத்திரம் ஏற்பட்ட தாகவும் ஏற்கனவே கண்டோம். கோட்டைகளின் பிரதான நுழைவு வாயில்களைப் பொதுவாய் மதிலின் கீழ்புறமே அமைப்பது வழக்கம் எதிரிகள் கோட்டையைப் பிடிப்பதற்கு அதன் வாயில்புறமிருந்தே தாக்குவது மரபு. ஆதலால் கோட்டையின் வாயில்புறமாகிய கீழ் பகுதியில் கோட்டையைப் பாதுகாப்பதற்காக மருதநிலத் தலைமக்களாகிய மள்ளர் (மல்லர்) குடி அமர்ந்தனர். இவர் ஏருக்கு உழவர்; போருக்கு மறவர் எனவும், ஏரும், போரும் இணைபிரியாது எனவும் சங்க இலக்கியங்கள் மற்றும் நிகண்டுகள் கூறுவதை ஏறகனவே கண்டோம். கோட்டையின் மேல் பகுதியில் குடியிருப்பவரில் பதினெண் குடியினரும் அடங்குவர். அந்தணர், வணிகர் மற்றும் பல்வேறு தொழிலாளரும் போர் ஆற்றல் திறன் இல்லாத வலிமையற்றவர் என்பதனுல் பாதுகாப்பான மேற்குப் பகுதியில் குடி அமர்த்தப்படுவது வழக்கம். திசைகளில் சூரியன் உதிக்கும் கிழக்குத் திசை உயர்வாகக் கருதப் பட்டது. பண்டைக் காலத்தில் சூரிய வழிபாடு வழக்கில் இருந்திருக்கிறது. சூரியனுக்குக் கோயில்கள் எழுப்பி மக்கள் வழிபாடு நடத்தி வந்தது பற்றி சிலப்பதிகாரத்தில் மேற்கோள்கள் காணக்கிடக்கின்றன. கி பி. 17ஆம் நூற்ருண்டில் முகமதிய மன்னனுகிய ஔரங்கசீப் காலத்தில் பஞ்சாபிலுள்ள மல்தான் (Maltan) என்னும் நகரில் சூரியனுக்குப் பழைய கோயில் ஒன்று இருந்ததாகவும், மல்தான் என்னும் இடம் மல்லர் அல்லது மள்ளர் வாழ் இடமாய் இருந்ததாகவும், மள்ளர்

என்பது இன்று பள்ளர் என வழங்குவதாகவும் பண்டிதர் சவரிராயர் குறிப்பிட்டிருப்பதை ஏற்கனவே கண்டோம்.[1] இவற்றிலிருந்து இம் மரபினர் சூரிய வழிபாடு உடையவர் என அறிதற்பாலது. சூரிய வழிபாடு உடையவர் என்ற காரணத்தினுலும் இவர் தம் குடியிருப்பை ஊரின் கீழ் பகுதியில் அமைத்திருக்கலாம். இதனுல் சூரியன் உதிக்கும் திசையை உயர்வாக மதிக்கும் வழக்கம் இவர் மத்தியில் ஏற்பட்டிருக்கிறது. சூரியன் மறையும் திசை மேற்கு ஆனதினுல் அது சீன திசையாகக் கருதப்படுகிறது எனலாம். உலகத்தின் பல பாகங்களிலுமுள்ள ஆலயங்கள் பொதுவாக கிழக்கு நோக்கியே அமைந்துள்ளது, கிழக்கு மற்றத் திசைகளைவிட உயர்வானது என்பதை உணர்த்துகிறது. இத்திசையானது இந்திரனுக்கு ஏற்பட்டதென்று ஏற்கனவே குறிப்பிட்டிருப்பதை வாசகர் அறிவர். கிழக்கு திசைக்கு அடுத்த படியாக வடக்கு உயர்வானது; இது குபேந்திரனுக்கு ஏற்பட்டதென்பர். கோட்டைகள் அமைத்தல் பற்றிப் பண்டைய நாளில் விதி முறைகள் வகுக்கப்பட்டிருந்தது. இந்த விதி முறைகள் என்ன என்பது பற்றி கௌதல்யர் அர்த்த சாத்திரத்தை நோக்குவோம்.

கோட்டைகள் அமைத்தல் பற்றி கௌதல்யர் கூறுவதாவது: ‘சிறந்த வன்மை மிக்கதும் நால்வகை வருணத்து மக்களும் வாழ்தற்குரியதுமாகிய மனையிடத்தில் அரண்மனை அமைத்தல் வேண்டும். மனையிடத்தின் நடுக்கூற்றினின்றும் வடபால் ஒன்பதில் ஒரு கூற்றில் முன் கூறப்பட்ட முறைப்படி உள்ள அரண்மனையைக் கிழக்கு முகமாகவாதல், வடக்கு முகமாக வாதல் அமைத்தல் வேண்டும். அவ்வரண்மனைக்குக் கீழ்பால் வடபகுதியில் ஆசிரியா, புரோகிதர் என்னும் இவர்களுடைய வேள்விச் சாலைகளும், நீர் நிலைகளும் இருத்தல் வேண்டும். அமைச்சர்களும் ஆண்டிருத்தல் வேண்டும். கீழ்பால் தென் பகுதியில் அடுக்களையும், யானை மாடமும், கோட்டமும் அமைத்தல் வேண்டும். அவற்றின் புறத்தே கீழ் மணப் பொருளும், மலர் மாலையும், கூலமும், நெய் முதலியனவும்

1. பக்கம் 206 தமிழர் சரித்திரம் – ந. சி. கந்தையா பிள்ளை.

ஆகிய விலைப் பண்டங்களும், சிறந்த சிற்பிகளும், அரச குலத்தவரும் இருத்தல் வேண்டும். தென்பாற் கீழ் பகுதியில் கருவூலமும், வரவு செலவு கணக்கு எழுதும் இடமும், பணக் களரியும் இருத்தல் வேண்டும். தென்பால் மேற்குப் பகுதியில் குப்பியக் கோட்டமும், படைக்கலக் கோட்டமும் இருத்தல் வேண்டும். அவற்றின் புறத்தே தென்பால் நகராட்சியாளர், கூல வாணிகர், தொழிலாளர், படைத் தலைவர், உண்டி விற்போர், கள் விற்போர், இறைச்சி விற்போர், வரைவின் மகளிர், கூத்தர், வாணிகர் என்னும் இவர்கள் இருத்தல் வேண்டும். மேல்பால் தெற்குப் பகுதியில் கழுதைக் கொட்டில், ஒட்டகக் கொட்டில், சிறைக் கோட்டம், தொழிலிடம் என்னும் இவற்றை அமைத்தல் வேண்டும். மேல்பால் வடக்குப் பகுதியில் ஊர்திச் சாலையும், தேர்ச் சாலையும் அமைத்தல் வேண்டும். அவற்றின் புறத்தே மேல்பால் மயிர்க் கம்பளம், நூலாடை செய்வோரும், மூங்கில் முடைவோர், தோல் பதனிடுவோர், கவசம் படையுறை இயற்றுவோர் என்னும் இவர்களும் சூத்திரரும் இருத்தல் வேண்டும். வடபால் மேற்குப் பகுதியில் விலைப் பண்டம் வைக்குமிடம், மருத்துவச் சாலையும் அமைத்தல் வேண்டும். வடபால் கிழக்குப் பகுதியில் கூலம் முதலியன தொகுத்து வைக்குமிடம், பசுக் கொட்டில், குதிரைச் சாலை என்னும் இவற்றை அமைத்தல் வேண்டும். அவற்றின் புறத்தே வடபால் நகரத் தெய்வமும், அரசர்களுடைய குலதெய்வமும், கொல்லரும், மணிப் பரியாளரும், பார்ப்பனரும் இருத்தல் வேண்டும். அம் மனையிடத்து எஞ்சிய பகுதிகளில் வண்ணான் முதலியோரும் அயல்நாட்டு வாணிகக் குழுவினரும் இருத்தல் வேண்டும்.

நகரத்தின் நடுவண் கொற்றவை, திருமால், முருகன், இந்திரன் என்னும் இத்தெய்வங்களுக்குரிய கோட்டங்களும், சிவன், குபேரர், தேவமருத்துவர், திருமகள், மதிரை என்னும் இத் தெய்வங்களுக்குரிய கோயில்களும் அமைத்தல் வேண்டும். அக் கோட்டங்களிலும் அவ்வவ்விடங்களில் நிலைப்படுத்த வேண்டிய பரிவார முதல்வர்களை இருத்தல் வேண்டும். நகர வாயில்கள் பிரமன், இந்திரன், இயமன்,

முருகன் என்னும் இவர்களைத் தெய்வங்களாக உடையன. அகழிக்குப் புறத்தே நூறு கோல்களுக்கு அப்பால் கடவுண் மரம், நீர்த்துறை, பொழில் அணைக்கட்டு என்னும் இவற்றை அமைத்தல் வேண்டும். திசைக் கடவுளரை அவ்வவ் திசைகளில் அமைத்தல் வேண்டும். வடக்கிலாதல், கிழக்கிலாதல் சுடலை அமைத்தல் வேண்டும். உயர் குலத்தவர்க்கு தென் திசையில் சுடலை இருத்தல் வேண்டும். இம் முறையிற் பிறழ்வர்க்கு பூர்வசாகச தண்டம் விதித்தல் வேண்டும். பாசண்டரும், புலையரும் சுடலைக்கு அருகில் இருத்தல் வேண்டும்.

... ... ... ... ... ... ... ... ...

வடக்கு வாயிலுக்கு பிரமனும், கிழக்கு வாயிலுக்கு இந்திரனும், தெற்கு வாயிலுக்கு இயமனும், மேற்கு வாயிலுக்கு முருகனும் அதிட்டான தெய்வங்களாம். கிழக்கில் இந்திரனையும், தென்கிழக்கில் தீக்கடவுளையும், தெற்கில் மறலியையும், தென்மேற்கில் நிருதியையும், மேற்கில் வருணனையும், வடமேற்கில் வாயுவையும், வடக்கில் குபேரனையும், வடகிழக்கில் ஈசானனையும் அமைத்தல் வேண்டும் என்பது கருத்து.' [1]

ஆக தேவேந்திர குலத்தார் மூவேந்தர் மரபு என்பதன் காரணமாகவே ஊர் நத்தத்தின் கீழ்ப் பகுதியில் குடியிருக்கின்றனர் என்பது கௌதல்யர் அர்த்தசாத்திரத்திலிருந்து நன்கு புலனாகும். அடுத்து இம்மரபினர்க்கு ஏற்பட்ட உரிமைகள் பற்றி ஆராய்வோம்.

**தேவேந்திர குலத்தார் மூவேந்த மரபினர் எனக் கொள்வதற்கு அடையாளமாக அவருக்கு மன்னர் வழங்கிய உரிமைகள் யாவை ?**

மன்னர்க்கு ஏற்பட்ட உரிமைகள் அவரது மரபினர்க்கும் உரியது என்பது பற்றி 'மன்னர் பாங்கிற் பின்னோர் ஆகுப' (தொல் அகத் - 32) எனத் தொல்காப்பியர் கூறியிருப்பதாக ஏற்கனவே கண்டோம். மன்னர்க்கு படை, கொடி, முரசு, குடை, யானை, தேர் முதலிய சிறப்புகள் உண்டு என்பது

---

1. பக்கம் 150 கௌதல்யர் அர்த்தசாத்திரம் – அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு.

படையுங் கொடியுங் குடையும் முரசும்
நடை நவில் புரவியுங் களிறுந் தேரும்
தாரு முடியும் நேர்வன பிறவும்
தெரிவு கொள் செங்கோல் அரசர்க்குரிய
(தொல் - பொருள் 616)

எனத் தொல்காப்பியர் கூறுவதால் விளங்கும். இச் சிறப்புக் களில் பலவற்றைத் தேவேந்திர குலத்தார் பண்டு தொட்டு அனுபவித்து வந்திருக்கின்றனர் எனத் தெரிகிறது. கரிவலம் வந்த நல்லூர் கல்வெட்டின்படி [1] பாண்டியன் உக்கிரப் பெருவழுதி தேவேந்திர குலத்தாருக்கு வெள்ளை யானை, வெண்வட்டக் குடை, கெராடி, பகல் பந்தம், பாவாடை, இரட்டைச் சிலம்பு, இரட்டைக் கொடுக்கு, நன்மைக்குட பதினறு கால் பந்தல், துன்மைக்கு இரண்டு தேரும் (சீவிலி புத்தூர் கல்வெட்டின்படி மூன்று தேரும்) பஞ்சவன் (பாண்டியன்) விருதும், பதினெட்டு மேளமும் வழங்கி, அன்று தொட்டு இவர் அனுபவித்து வந்தனர். சீவிலிபுத்தூர் கல் வெட்டும் [2] இதே பிரகாரம் கூறுகிறது. கி. பி. 17–ஆம் நூற் ருண்டில் தமிழ் வேந்தர் ஆட்சி முடிவுற்று தெலுங்கு நாயக்கர் ஆட்சியில் தமிழகம் சிக்கித் தவித்தபோது பறையர் தேவேந்திர குலத்தாருக்கு விரோதமான செயல்களில் ஈடு பட்டு வந்திருக்கின்றனர். இவர்கள் தேவேந்திர குலத்தார் போரில் தோற்றதன் காரணமாய் தாழ்த்தப்பட்டு அடிமை நிலைக்குத் தள்ளப்பட்டதனுல், இவரது உரிமைகள் தங்களுக்கும் உரியது எனப் பாவித்து நடத்திவரத் துணிந் தனர். இப்போக்கைத் தேவேந்திர குலத்தார் ஆட்சேபிக்க, இருமரபினர்க்குள்ளும் பகைமையும், கை கலப்பும் ஏற்பட்ட தென்று தெரிகிறது. தேவேந்திர குலத்தார் இதுபற்றித் திருமலை நாயக்கனிடம் முறையிட, அவன் பழைய பட்டயம் பார்த்து தேவேந்திர குலத்தாரின் பழைய உரிமைகளை ஊர்சிதம் பண்ணி, பறையருக்கு மூன்றுகால் பந்தல், இரண்டு சிலம்பு (சீவிலிபுத்தூர் கல்வெட்டுப்படி ஒரு சிலம்பு) ஒரு கொடுக்கு, ஒத்தமாராப்பு, ஒரு பந்தமும், கீழ்ப்பாவாடையும்,

1. A. R. E. 432 / 1914.
2. A. R. E. 588 / 1926.

மஞ்சியில் தண்டியக் கொம்பில்லாத வீடும், துன்மைக்குக் கட்டணமும் கட்டஃாயிட்டிருக்கிறுன். சீவிலிபுத்தூர் கல் வெட்டும் இதே உரிமைகள்தான் பறையர்க்கு உண்டு எனக் கூறுகிறது.

தேவேந்திர குலத்தாருக்கு வழங்கப்பட்ட உரிமைகள் தமிழகத்தில் உள்ள ஆரியப் பார்ப்பனர், இன்றைய வேளாளர், வெள்ளாளர், முதலியார், செட்டியார், கள்ளர், மறவர், அகம்படியர், சாணுர், செங்குந்தர், கைக்கோளர், சேஃனத் தஃலவர், இடையர் முதலிய மரபினரில் ஒருவருக்காவது வழங் கப்பட்டது என்பதற்குச் சான்று இல்ஃல. நாயக்கர் காலத்தில் மக்கஃளப் பிரித்தாளும் நோக்கத்தோடு வலங்கை, இடங்கை சாதிகளாக வகுத்து சாணுர், பறையர் இருவரையும் வலங் கைப் பிரிவில் சேர்த்திருக்கின்றனர். இந்த வலங்கைப் பிரிவினர்க்கென்று நாயக்கர் சில உரிமைகள் வழங்கியிருந் தனர். அக்காலத்தில் இடங்கைப் பிரிவினர் வலங்கைப் பிரிவினருக்கு ஏற்பட்ட உரிமைகள் தங்களுக்கும் உரியது எனப் பாவித்து நடத்திவர முயன்றனர். வலங்கையார் இதைத் தடுக்க எத்தனித்ததால் ஆங்காங்கே இரண்டு பிரிவு களுக்குள்ளும் கை கலப்புகள் நிகழ்ந்தன. இம்மாதிரிக் கலகங் கள் அடிக்கடி நிகழ்வதுண்டு. தமிழ்வேந்தர் ஆளுகையின் போது தமிழகத்தில் இவ்விதக் கலகங்கள் இருந்ததென் பதற்குச் சான்றுகள் இல்ஃல. வலங்கை வேஃளக்காரப் படை யினர் இருந்ததாக கல்வெட்டுகள் கூறுகின்றன. இடங் கைப் படையினர் இருந்ததென்பதற்குச் சான்றுகள் இல்ஃல எனலாம். டாக்டர் K. K. பிள்ஃள இடங்கையினரைப் பற்றிய தனிக் குறிப்புகள் கல்வெட்டுகளில் காணப்படவில்ஃல எனக் கூறுகிறுர்.[1] வலங்கை இடக்கைப் பிரிவினர் உரிமைகள் பற்றி எழுந்த சர்ச்சைகள் பற்றி திரு எம். சீனிவாச அய்யங்கார் கூறுவதாவது :— 'பிற்காலத்தில் வலங்கை இடங்கைப் பிரிவினருக்குள் போராட்டம் ஏற்பட்ட காலத்தில் வலங்கைப் பிரிவினர் 12 கால் பந்தல், 5 முரசு, குரங்குக் கொடி, குதிரைமேல் சவாரி இந்த உரிமைகள் தங்களுக்கே

1. தமிழர் வரலாறு – மக்களும் பண்பாடும் – டாக்டர் K. K. பிள்ஃள.

உரியதெனப் பாராட்டியும், இடங்கைப் பிரிவினர் அவற்றை உபயோகிக்க முற்படும்போது அவரோடு பொருதுவதும் வழக்கமாய் இருந்தது. [1]

Thiru M. Srinivasa Iyengar says 'The members of the two divisions struggle for certain honorary distinctions such as the use of twelve pillars in the marriage pandal, the beating of five big drums on certain ceremonious occasions, the ride on horse back or the carrying of a monkey flag. These privileges are claimed by the right hand castes on all public and festive occasions and whenever any of these previleges are exercised by a member of the left hand faction fight usually occurs. [1]

சில பிரிவினர் இடைக் காலத்தில் மன்னரிடம் சில உரிமைகள் கோரிப் பெற்றதாகக் கல்வெட்டுகள் மூலம் தெரிகிறது. இடையர்க்கு வீட்டின் இருபுறமும் வாயில் அமைக்கவும், வீட்டுக்குச் சுண்ணும்பு பூசவும், நன்மைக்குச் சிவிகை ஏறவும், மேல் வளையிட்டுப் பாடை கட்டவும், அவற்றின் மேல் பச்சைப் பட்டு, புலியூர் பட்டுக் கட்டவும், பேரிகை கொட்டவும் உரிமை பெற்றதாக மதுரை மேலூர் கூற்றத்து சீசனூரில் கிடைத்துள்ள கல்வெட்டு கூறுவதாகத் தெரிகிறது. [2]

கம்மாளர்க்கு மூன்றும் குலோத்துங்கன் இரட்டைச் சங்கு ஊதவும் நன்மை துன்மைக்குப் பேரிகை கொட்டிக் கொள்ளவும், செருப்பு அணிந்து செல்லவும், தங்கள் வீடுகளுக்குச் சாந்து இட்டுக் கொள்ளவும் உரிமை வழங்கியதாகத் தெரிகிறது [3]

மன்னர்க்குரிய விருதுகளில் வெள்ளையானை, வெண் கொற்றக் குடை, தேர், பதினறுகால் பந்தல், பதினெட்டுவித

1. Page 96 Tamil Studies. M. Srinivasa Ayyangar.
2. பக்கம் 252 யாவரும் கேளிர் – R. நாகசாமி.
3. ARE. 562/1893 பக்கம் 66, 67 திருப்பேரூர்ப் புராண வசனச் சுருக்கம்

மேள வாத்தியம் குறிப்பிடத் தக்கவை. சங்ககாலத்தில் தலை மக்கள் தேர், யானை, குதிரை முதலிய ஊர்திகளில் சென்றனர் என்பது;

'தேரும், யானையும், குதிரையும், பிறவும்
ஊர்ந்தனர் இயங்கலும் உரியர் என்ப'
(தொல் பொருள் பொருளியல் செ. 209)

என்ற மேற்கோளால் புலனாகும். இந்த உரிமைகள் நடைமுறையில் எவ்வாறு வழங்கின என்பது பற்றிப் பார்ப்போம்.

**வெள்ளையானை :-** வெள்ளையானை தேவேந்திரனுடைய வாகனம். இதை ஐராவதம் என்றும் கூறுவர். நாட்டை ஆளும் மன்னரையும், அவரது அரண்மனைகளையும் அடிப்படையாக வைத்தே தெய்வமும் அவற்றிற்கு ஏற்பட்ட கோயிலும் அமைந்ததென்பர். மன்னனையும், தெய்வத்தையும் இறைவன் என வழங்குவதை ஒப்பு நோக்குக. கோயில் என்பது மன்னனது அரண்மனைக்குப் பெயராகிப் பின் தெய்வமாகிய இறைவனது உறைவிடத்திற்கும் பெயராக அமைந்ததென்பர். வேந்தன் இந்திரனாகவும், தேவேந்திரனாகவும், புரந்தரனாகவும் வழங்குவதாக ஏற்கனவே கண்டோம். தேவேந்திரனுக்கு உரிய வெள்ளையானை, தேவேந்திர குலத்தைச் சேர்ந்த மன்னர்க்கும், அவரது மரபினர்க்கும் உரித்தாயிற்று. இம் மரபினரைத் தேவலோகத்தில் தேவேந்திரனிடமிருந்த தேவகன்னியின் மக்கள் என கரிவலம் வந்த நல்லூர் கல்வெட்டு கூறுவது, இவர் வேந்தர் மரபினர் என்பதை உணர்த்தவே எனலாம். சைவ சமயப் பெரியார்களில் ஒருவராகிய திருநாவுக்கரசர் 'வெள்ளானை வேண்டும் வரங் கொடுப்பார் வெண்காடுமேவிய வேந்தனாரே' என இறைவனை வேண்டிப் பாடுவதைத் திருமறையில் காண்க. புதுக்கோட்டை வட்டாரத்தில் தெலுங்கர் ஆட்சியின் போது பறையர்க்கும் தேவேந்திர குலத்தார்க்கும் ஏற்பட்ட உரிமைப் போராட்டங்களில் பின்னவர்க்கு வெள்ளையானை உண்டு என தீர்ப்பளிக்கப்பட்டதென

கல்வெட்டுகள் கூறுகின்றன.[1] கரிவலம் வந்த நல்லூர்[2] சீவிலிபுத்தூர்[3] கல்வெட்டுகளும் தேவேந்திர குலத்தாருக்கு வெள்ளையானை உண்டு எனக் கூறுவதாக ஏற்கனவே கண்டோம். இம் மரபினர்க்கு யானை ஊர்தியாக ஏற்பட்டது என்ற மரபை ஒட்டியே தென் தமிழ் நாட்டில் கோயில் தேர்த் திருவிழாவிற்கு, தேவேந்திர குலத்தாரின் தலைவர்களை அழைக்க கோயில் யானை, மேளதாளம், வெண்வட்டக் குடை, மாலை மரியாதை மற்றும் சிறப்புக்களுடன் கோயிலிலிருந்து அனுப்பும் பழக்கம் நடைமுறையில் இருந்து வருவதாக அறிகிறோம். இப் பழக்கம் பெரும்பாலான இடங்களில் நிறுத்தப்பட்டு மறைந்துபோனாலும் கோவை மாவட்டம் பேரூர் போன்ற சில இடங்களில் இன்னும் வழக்கில் இருப்பதாகத் தெரிகிறது.

**வெண்வட்டக் குடை :-** வெண்வட்டக் குடை என்பதும் வெண் கொற்றக் குடை என்பதும் ஒன்றே. இது மன்னர்க்கும், தெய்வத்திற்கும், மன்னர் மரபினர்க்கும் உரிய சிறப்புக்களில் ஒன்று. சங்க இலக்கியங்களில் தமிழ் வேந்தரை வெண் கொற்றக் குடை உடையவன் என்று வழங்கினது :

1. 'கொற்ற நீள் குடைக் கொடித் தேர்ச்செழிய'
(புறம் 24, 23)

2. 'கொற்ற வெண்குடைக் கொடித் தேர் வேந்திர்'
(புறம் 367)

என்ற மேற்கோள்களால் விளங்கும்.

மன்னர்க்கு ஏற்பட்ட வெண்வட்டக் குடை கோயில் உற்சவத்தின் போது, தெய்வத்தின் உருவச்சிலையைத் தெரு வீதிகளில் ஊர்வலத்திற்கு எடுத்துச் செல்லும் போது, அதற்கு உபயோகிப்பதை அனைவரும் அறிவர். கோயில் விழா, தேரோட்டம் மற்றும் நெல் நாற்று நடவு, கதிர் அறுவடை உற்சவங்கள் நடைபெறுமுன் தேவேந்திர குலத்தாரை அழைக்க கோயிலிலிருந்து மேள தாளத்துடன்

1. I. P. S. 929.
2. A. R. E 432/1914.
3. A. R. E 588/1926.

வெண்வட்டக் குடையும் அனுப்பும் வழக்கம் நடைமுறையில் நீண்ட காலமாய் இருந்து வருவதாக அறிகிறோம். ஏற்கனவே குறிப்பிட்டது போல் பெரும்பாலான இடங்களில் இவ்வழக்கம் நாளடைவில் மறைந்து வருகிறது. எனினும் ஒரு சில இடங்களில் இவை இன்னும் அமுலில் இருந்து வருவதாகவே தெரிகிறது.

தேர் :- யானை, வெண்வட்டக் குடை போன்று, தேரும் தெய்வத்திற்கும், மன்னர்க்கும் அவர்தம் மரபினர்க்கும் உரித்தானது என்பதாக ஏற்கனவே கண்டோம். இக்காலத்தில் கோயில் உற்சவங்களின் போது தெய்வத்தின் உருவச் சிலையைப் பல்லக்கு, இரதம், தேர் இவற்றில் எடுத்து தெரு வீதிகளில் செல்வதை அறியாதவர் ஒருவரும் இல்லை எனலாம். சங்க காலத்தில் மன்னர் தேரில் சென்றது பற்றி சங்க இலக்கியங்கள் கூறுவதைக் கீழே காண்போம்.

1. 'நற்றேர் வழுதி கொற்கை முன் துறை' (அகம் 130)
2. 'பொன்னணி நெடுந்தேர்த் தென்னர் கோமான்
எழு உறழ் திணிதோள் இயல் தேர்ச் செழியன்'
(அகம் 209 - 3, 4)
3. 'கொற்ற வெண்குடைக் கொடித் தேர் வேந்திர்'
(புறம் 367)
4. 'மாண்வினை நெடுந்தேர் வானவன் தொலைய'
(புறம் 39–16)
5. 'திண்தேர் வளவற் கொண்ட கூற்றே'
(புறம் 226–5)

அக் காலத்தில் மன்னர் மட்டுமின்றி அவரது மரபினரும் தேரில் சென்றனர் என்பது பற்றிச் சங்க இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. மன்னரின் படைகளுள் தேர்ப்படையும் ஒன்று என ஏற்கனவே கண்டோம். அதனால் மன்னர் மட்டுமின்றி தேர்ப் படைக்கு உரியவராகிய அவரது மரபினரும் தேரில் செல்ல உரிமையுடையவர் என்பது சொல்லாமலே விளங்கும். தலைமக்கள் தேர், யானை, குதிரை முதலிய ஊர்திகளில் செல்ல உரிமையுடையவர் எனத் தொல்காப்பியர்

கூறியிருப்பதாக ஏற்கனவே கண்டோம். ஆதலால் இம் மரபினர்க்கு இது பிறப்புரிமையாக அமைந்தது எனலாம். இவர் சங்க காலத்தில் தேரில் சென்றனர் என்பதை

1. 'கண்டல் வேலிக் காமர் சிறுகுடி
எல்லி வந்தன்றே தேர்? எனச் சொல்லி
அவர் எழுந்தன்று இவ்வூரே பலருளும்
என் நோக்கினனே அன்னை நாளை
மணிப்பூமுண்டகம் கொய்யேன் ஆயின்
அணிக்கவின் உண்மையோ அரிதே மணிக்கழி
நறும்பூங் கானல் வந்து அவர்
வறுந்தேர் போதல் அதனினும் அரிதே'
(நற் 191-5-12)

1. 'இனமணி ஒலிப்பப் பொழுது படப்பூட்டி
மெய்ம்மலி காமத்து யாம் தொழுது ஒழியத்
தேரும் செல்புறம் பறையும் ஊரொடு'
(நற் 187-4-7)

2. 'தாரணி புரவித் தண்பயிர் துமிப்ப
வந்தன்று பெரு விறல் தேரே
உய்ந்தன்றாகும் இவள் ஆய் நுதற்கவினே'
(நற் 181-11-13)

எனவரும் சங்க இலக்கிய மேற்கோள்களால் அறியலாம்.

தேவேந்திர குலத்தார் சாதாரண நிகழ்ச்சிகளுக்கும், போருக்கும் பண்டைக் காலத்தில் தேரில் சென்ற மரபை ஒட்டியே, தெலுங்கருக்கு அடிமைப்பட்டு நான்கு நூற்றாண்டுகளுக்கு மேலாகியும், இறந்தவரை மற்ற மரபினர் போலன்றி தேர் கட்டி அதைக் கோயிற் தேர் போன்று நன்கு அலங்கரித்து மேளதாளம், வாணவேடிக்கை ஆடம்பரத்துடன் எடுத்து அடக்கம் செய்கின்றனர். மேலும் இறந்தவரை தேரில் படுக்கப் போடாமல் உட்காரும் பாவனையில் வைத்து எடுத்துச் செல்வது குறிப்பிடத் தக்கது. இது பண்டைய நாளில் இம் மரபினர் தேரில் ஊர்ந்து சென்றதை

நினைவூட்டுகிறது. கோயிற் தேர்களில் தேரோட்டியாக அமைந்திருப்பவர் தேவேந்திர குல மரபினர் என்றே செவி வழிச் செய்திகள் கூறுகின்றன. இவர் வசதிக்குத் தக்கபடி 3, 5 தேர்கள் கட்டும் பழக்கம் நடைமுறையில் இருந்து வருகிறது. ஒரு தேர் கட்டுபவர் அதில் 5, 7, 9, 11 முகப்புகள் வைப்பது உண்டு. இவ்வாறு தேர் கட்டி அடக்கம் செய்யும் பழக்கம் பண்டைக் காலத்திலிருந்தே வழக்கில் இருந்து வருகிற தென்பது கரிவலம் வந்தநல்லூர், சீவிலிபுத்தூர் கல்வெட்டுகள் மூலம் புலனுகிறது. இக் கல்வெட்டுகளில் 2, 3 தேர்கள் மட்டும் உரியதாகக் கண்டிருக்கிறது. ஆனால் மேலே குறிப் பிட்டது போல் நடைமுறையில் 5 தேர்கள் வரை கட்டிவருவ தாகத் தெரிகிறது. இதற்கு மேலும் கட்டி வருகிருர்களா? என்பது ஆய்வுக்குரியது. இறந்தவரைத் தேரில் எடுத்துச் சென்று அடக்கம் செய்யும் உரிமையை பாண்டியன் உக்கிரப் பெருவழுதி வழங்கியதாக கல்வெட்டுகள் கூறுகின்றன. இவன் புராண காலத்தைச் சேர்ந்தவன். இவன் சுந்தரபாண்டியனுக அமைந்த சிவபெருமானுக்கும், தடாதகைப் பிராட்டியாரான மீனுட்சி அம்மைக்கும் பிறந்த முருகப்பெருமான் என்பது நினைவுகூரத் தக்கது.

தேவேந்திர குலத்தார் மன்னர் மரபினர் என்ற காரணத் தினலேயே, கோயில் விழாக்களில் இவருக்கு முதல் மரியாதை கள் வழங்கப்பட்டு, இவர்கள் தேரின் வடத்தைத் தொட்டுக் கொடுத்த பின்னரே, தேரைத் தெரு வீதி வழியாய் இழுத்துச் செல்லும் பழக்கம் நீண்ட காலமாய் நடைமுறையில் இருந்து வந்திருப்பதாக அறிகிரும். இப் பழக்கம் பல இடங்களில் சமீப காலமாய் மாறியும், மறைந்தும் வழங்கி வருவதாகத் தெரிகிறது. இவர் பொருளாதாரச் சீரழிவின் காரணமாய், பெரும்பாலான உரிமைகளை சிறுகச் சிறுக இழக்க, பொருளா தாரம், அரசியல் இவற்றில் செல்வாக்குப் பெற்ற சமூகத்தினர் அவற்றைத் தங்களுக்கே உரித்தாக்கி வந்திருக்கின்றனர் என ஆங்காங்கே விசாரித்ததில் தெரியவருகிறது.

**பதினுறு கால் பந்தல் :-** பதினுறு கால் நட்டு மண்டபம், பந்தல் அமைப்பது, பண்டைய நாளில் மன்னர்க்கு ஏற்பட்ட

சிறப்புக்களில் ஒன்று. ஆலயங்களில் பதினாறு கால் மண்டபங்கள் எழுப்பப்பட்டிருப்பது இச் சிறப்பை உணர்த்துகிறது. சங்க காலத்தில் சோழன் கரிகாலன் முன்னிலையில் காவிரிபூம் பட்டினத்தில் புலவர் உருத்திரங்கண்ணனார் பாடிய பட்டினப் பாலை அரங்கேற்றத்திற்கு பதினாறு கால் மண்டபம் அமைக்கப் பட்டதென்பதை திருச்சி மாவட்டம் திருவெள்ளாறையில் உள்ள கல்வெட்டில் :

'வெறியார் தளவத் தொடைச் செய மாறன் வெகுண்ட
தொன்றும்
அறியாத செம்பியன் காவிரி நாட்டிலரமியத்துப்
பறியாத தூணில்லை கண்ணன் செய் பட்டினப்பாலைக் கன்று
நெறியால் விடுந்தூண் பதினாறுமேயங்கு நின்றனவே'

என்று பொறிக்கப்பட்டிருப்பதிலிருந்து அறியலாம்.

தேவேந்திர குலத்தாரும் பண்டு தொட்டு நன்மைக்குப் பதினாறு கால்கள் தாங்கிய பந்தல்கள் அமைத்து வந்தது பற்றி கரிவலம் வந்த நல்லூர், சீவிலிபுத்தூர் கல்வெட்டுகள் கூறுவதை வாசகர் அறிவர். இப் பழக்கத்தை ஒட்டியே தேவேந்திர குலத்தார் மணவிழாக்களில் மணமக்களை வாழ்த்தும்போது பதினாறு கால் பந்தலிட்டு மணவிழா நடைபெறுவதாகக் குறிப்பிடுவது இன்றும் வழக்கில் இருந்து வருகிறது. தேவேந்திரகுலத்தார் தவிர வேறு ஒரு மரபினர்க்கும் பதினாறு கால் பந்தல் அமைக்கும் உரிமை வழங்கப்படவில்லை என்பதை அறிக. நாயக்கர் காலத்தில் வலங்கை, இடங்கைப் பிரிவினர்க்கென்று சில உரிமைகள் வழங்கப்பட்டதென அறிகிறோம் இப்பிரிவுகளில் உயர்வாகக் கருதப்படும் வலங்கைப் பிரிவினரில மேல் மட்டத்தில் இருந்த வகுப்பாருக்கு நன்மைக்கு 12 கால்கள் கொண்ட பந்தல் அமைக்க உரிமை வழங்கப்பட்டதாக திரு. எம். சீனிவாச அய்யங்கார் கூறியிருப்பதை ஏற்கனவே கண்டோம். பறையர் தேவேந்திர குலத்தார் இழிநிலை எய்திய காலை அவரைப் போன்று

நன்மைக்குப் பதினறு கால்கள் நட்டுப் பந்தலிட முற்பட்டு அதனல் தகராறு ஏற்பட, பறையர் பழைய முறைப்படி மூன்று கால் பந்தல் மட்டும் அமைக்கவேண்டும் என்று நாயக்க மன்னன் ஆணையிட்டதாக ஏற்கனவே கல்வெட்டுக்களில் கண்டோம். இதனல் பதினறு கால் பந்தல் அமைப்பது தெய்வத்திற்கும், மன்னர்க்கும் அவர்தம் மரபினர்க்குமேயன்றி மற்ற ஒருவர்க்கும் வழங்கப்படவில்லை என அறிகிருேம்.

**பதினெட்டு மேளம் :-** வெண் கொற்றக் குடை, தேர், பதினறு கால் பந்தல் போன்று, பதினெட்டு வகை மேள வாத்தியம் தெய்வத்திற்கும், மன்னர்க்கும் அவரது மரபினர்க்கு மட்டுமே உரித்தானது. மன்னர் மத்தியில் பதினெட்டு வகை மேளவாத்தியம் முழங்கினதென்பதற்கு, திருமலைநாயக்கன் மதுரை மீனுக்ஷி சுந்தரேஸ்வரர் ஆலயத்துக்கு ஊர்வலத்துடன் சென்றதைப் பற்றி ஆலய சீதளக் குறிப்பேட்டில் கண்டிருப் பதைக் கீழே காண்போம்.

திருமலை அய்யன் சௌரி அய்யன் அவர்கள் (திருமலை நாயக்கர்) நாளையில் ஸ்தலம் பிரபலமாகி உற்சவங்களும் உண்டு பண்ணி விச்சதின் பேரில், ...... பட்டத்து யானையின் பேரில், அவுதா, அம்பாரி தங்கத்தினல் அலங்காரம் பண்ணியிருக்கிற ஆனையின் பேரில் ஏறிக்கொண்டு எழுபத்திரண்டு பாளையப் பட்டு துரைகளும் அவரவர் விருதுகளுடனே சனங்களுடனே ஆயுதபாணியளாய் பதினெட்டு வகை மேள வாத்தியங் களுடனே அனேக தீவட்டி வத்தியுடனே வாணவித்தையர் நாடகசாலைப் பெண் கேளிக்கையுடனே துரையவர்கள் (திருமலைநாயக்கர்) செங்கோல் வாங்க கோவிலுக்கு வருகிற வைபவம் எழுதி முடியாது '' [1]

[குறிப்பு : நாயக்க மன்னர் அய்யன் என்ற பட்டம் பூண்டிருந்ததைக் கவனிக்க. இக் காலத்தில் ஆரியப் பார்ப்பனருக்கு அய்யன் என்ற பட்டம் வழங்கப்படவில்லை என இதனல் தெரிகிறது.]

---

1 மதுரை மீனுட்சி சுந்தரேசுவரர் ஆலய மகாகும்பாபிஷேக மலர். (கி. பழனியப்பன்)

மேலும் நாயக்கன் தளபதி இராமப்பையன் மறவ நாட்டின் மீது படை எடுக்கப் புறப்படும் போது பதினெட்டு மேளம் முழங்குவது பற்றி இராமப்பையன் அம்மானையில் கண்டிருப்பதாவது :

'குதிரைமேல் டமாரம் குமு குமென்று தான் முழங்க
பதினெட்டு மேளவகை பண்புடனே தான் முழங்க
ஆயிரம் பல்லக்கு அதிவீரர் சூழ்ந்துவர' [1]

அடுத்து வில்லியம் டெய்லர் சேகரித்துத் தொகுத்த வரலாறு பற்றிய கைப்பிரதியிலும் பதினெட்டு மேளம பற்றிக் குறிப்பு காணப்படுகிறதென்பது : 'ஆசார முகப்பு சானனிய பாகத்தி இப்போது யிருக்கிற செச்சையுடனே கூடபத்துத் தூண் நட்டு யிருக்கிறதுக்கும் கிழக்கு பெரிய ஆசார முகப்பு ஆகியிருந்த யிடம் அந்த மாடத்தில் பதினெட்டு விதமான வாத்திய கோஷம்' என்ற பகுதியால் அறியலாம். [2] ஏற்கனவே கூறிய படி தேவேந்திர குலத்தார் மன்னர் மரபினராதலால் மணவிழா மற்றுமுள்ள மங்கலகரமான விழாக்களில் பண்டு தொட்டு பதினெட்டு விதமான மேள வாத்தியங்கள் முழங்கும் பழக்கம் வழக்கில் இருந்து வந்ததென்பது கி. பி. 17 ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த மேலே குறிப்பிட்ட கரிவலம்வந்த நல்லூர், சீவிலிபுத்தூர் கல்வெட்டுகள் மூலம் அறிகிறோம். புறையர் தேவேந்திர குலத்தாரைப் போன்று பதினெட்டு வகை மேள வாத்தியம் முழங்க முனைந்த போது புகாரின் மேல் நாயக்கன் அவருக்கு இந்த உரிமை பழைய பட்டயப் படி இல்லை எனத் தீர்ப்பிட்டதாகக் கல்வெட்டுகள் கூறுவதை ஏற்கனவே கண்டோம். இக் கல்வெட்டுகளின்படி இவருக்கு ஒரு முரசு கொட்டக்கூட உரிமை வழங்கப்படவில்லை என அறிக. சமூகத்தில் உயர்ந்தவர் என உரிமை பாராட்டிய வலங்கைப் பிரிவினரில் உயர் மட்டத்தில் இருந்தவர் நன்மைக்கு ஐந்து முரசுகள் மட்டும் ஒலிக்க உரிமை பெற்றிருந்தனர் என திரு. எம். சீனிவாச அய்யங்கார் கூறியிருப்பது நினைவு கூரத்தக்கது.

---

1. பக்கம் 15 இராமப்பையன் அம்மானை. Government Oriental Series
2. Page 156 Oriental manuscripts by William Taylor Part II.

தேவேந்திர குலத்தாரின் மண விழாக்களில் தம்பதிகள் மணவறையில் வீற்றிருக்கும் போதும், பட்டினப் பிரவேச ஊர்வலத்தின் போதும் பதினெட்டு சதை மேளம் முழங்க மணவிழா, ஊர்வலம் நடைபெறுவதாக வாழ்த்து மானத்தில் குறிப்பிடுவர். ஆக பதினெட்டு மேளம் தெய்வத்திற்கும், மன்னர்க்கும் அவரது மரபினராகிய தேவேந்திர குலத்தாருக்கு மட்டும் உரியது என்பதும் தமிழகத்திலுள்ள வேறு ஒரு மரபினர்க்கும் இவ்விதச் சிறப்பு வழங்கப்படவில்லை என்பதும் அறிதற்பாலது.

**மற்றச் சிறப்புகள் :–** கரிவலம் வந்த நல்லூர், சீவிலி புத்தூர் கல்வெட்டுகளின்படி இம் மரபினர்க்கு பகல்பந்தம், கொராடி, சிலம்பு, கொடுக்கு, பாவாடை, பஞ்சவன் விருது முதலியவை வழங்கப்பட்டு நடைமுறையில் இருந்து வந்திருக்கின்றன. இந்த உரிமைகள் தேவேந்திர குலத்தாருக்கு வழங்கியது போன்று வேறு ஒரு மரபினர்க்கும் வழங்கப்படவில்லை என்பது கவனத்திற்குரியது. பஞ்சவன் என்பது பாண்டியரின் விருதுப் பெயர்களில் ஒன்று. கோயில் விழாக்களில் நாற்று நடவு, கதிர் அறுவடை உற்சவங்களில் தேவேந்திர குலத்தார் பங்கேற்கின்றனர். கோயம்புத்தூர் மாவட்டம் பேரூரில் நாற்று நடவு உற்சவம் நடைபெறுவதில் இவர் கலந்து கொள்ளும் வழக்கம் இன்னும் நடைமுறையில் இருந்து வருகிறது.[1] மற்ற முக்கியமான கோயில்களிலும் இவ் உற்சவங்களில் தேவேந்திர குலத்தார் பங்கேற்கின்றனர் என்று தெரிகிறது. கோயில் தேர்த் திருவிழாவின்போது தேவேந்திர குலத்தாருக்கு தனி மண்டபப்படியும் ஏற்பட்டு அநேக இடங்களில் இது வழக்கற்றுப் போயிருக்கிறது. இவ் வழக்கம் நெல்லை மாவட்டம் கரிவலம் வந்த நல்லூரில் அமுலில் இருந்து வருவது கண்கூடு. தேரோட்டத்திற்கு இம் மரபினரின் தலைவர்களை யானையின்மேல் ஏற்றி, மேளதாளம், மாலை மரியாதை, வெண் வட்டக்குடை முதலிய விருதுகளுடன் கோயிலுக்கு அழைத்து வந்து, கோயிற் குருக்கள் அவருக்குப் பட்டுப் பரிவட்டம், மாலை அணிவித்து மரியாதை செலுத்திய

1. பக்கம் 59. திருப்பேரூர்ப் புராணவசன சுருக்கம்.

பின், அவர் (தேவேந்திர குலத் தலைவர்) வடம் தொட்டுக் கொடுக்க, பொதுமக்கள் தேர் இழுப்பது வழக்கம். ஆனால் சமீப காலங்களில் பல இடங்களில் இப்பழக்கம் மாறுதலடைந்துவரக் காண்கிறோம். கோயிலிலிருந்து இம் மரபினரை அழைக்க கோயில் யானை, மேளதாளம், மாலை மரியாதை மற்றும் விருதுகள் அனுப்புவதை விடுத்து, கோயிலார் சிறிது பணம் கொடுத்து இவரை மேளம் ஏற்பாடு செய்து, கோயிலுக்கு ஊர்வலமாக வரும்படி செய்து வருவதாகத் தெரிகிறது. திருநெல்வேலி நெல்லையப்பர், சங்கர நயினார் கோயில் முதலிய பல ஆலயங்களில் இவ்வித மாற்றங்கள் செய்யப்பட்டிருப்பதாக அறிகிறோம். இம்மாதிரிச் செய்வது வரலாற்றுச் சான்றுகளை அழிக்கும் தீய நோக்கத்தோடு என்பதைத் தவிர, வேறு காரணம் காண்பதற்கில்லை. அனேக இடங்களில் இம் மரபினர்க்கு முதல் மரியாதை வழங்கி பட்டுப் பரிவட்டம் அணியும் பழக்கம் நிறுத்தப்பட்டு வருவதாகத தெரிகிறது. மதுரை மாவட்டம் சின்னமனூர், சோழவந்தான், மதுரை தெப்பக்குளம் மாரியம்மன், கோவை மாவட்டம் பேரூர், அவிநாசி முதலிய இடங்களில் பழைய முறைப்படி ஒருசில மாறுதல்களுடன் இப் பழக்கம் வழக்கில் உள்ளதாகத் தெரிகிறது.

ஊர்ப் பொதுக்கோயில்களில் உற்சவத்தின் போது இம் மரபினர்க்கே முதல் மரியாதை கொடுப்பதுண்டு. காவல் தெய்வமாகிய அம்மன், சாத்தா, அய்யனார் முதலிய கோயில்களில் பூசாரியாய்ப் பணிபுரிபவர் இம்மரபைச் சேர்ந்தவராகவே இருப்பது கண்கூடு. அருள் ஏறி ஆடுபவரும் இம் மரபினரே. இவ்வாறு அருள் ஏறி ஆடுபவரின் காலில் சாதி வேறுபாடின்றி எல்லா மரபினரும் விழுந்து கும்பிட்டு வரம் கோருவதுண்டு. இந் நிகழ்ச்சிகளைப் பாண்டிய நாட்டில் பரவலாகக் காணலாம். நாள் ஏர், பொன்னேர் இம்மரபைச் சேர்ந்தவர் முதலில் கட்டிய பிறகு, இதர மரபினர் கட்டும் பழக்கம் பாண்டிய நாட்டில் இன்னும் நீடித்து வருவதாக அறிகிறோம்.

மணவிழாக்களில் பட்டினப் பிரவேச ஊர்வலத்திற்கு இரதம் உபயோகிக்கும் பழக்கம் இருந்து வருவது கண்கூடு. முகூர்த்தவோலை எழுதி, மணவிழாவை ஊரார்க்கு முரசொலி ஒலித்து அறிவிக்கும் போது 'இராசாதிராசன்'; இராசமார்த் தாண்டன்; வெள்ளானை மீது ஏறி விருது பெற்ற பாண்டியன்; கொத்துக்கு இரட்ணுதி முத்தளந்த குபேந்திரன்; கொழுந்தி யானை மாலையிடப் போகிருன்; இவன் சொல்லுக்கு அரிச்சந்திரன்; சோலைகிழிப் பாண்டியன்; இவன் காலால் உழப்பிய சேறெல்லாம் செந்நெல் விளையும்; தேவாதி தேவர்க் கெல்லாம் அமுதம் உண்டாகும்; செகந்தன்னை அரசுபுரியும் மன்னர் செங்கோல் தேவேந்திரன் உழவுகோலுக்கு ஈடாகாது; முப்பத்தி முக்கோடித் தேவர், நாற்பத்தெண்ணுயிரம் ரிசிகள் இவர்களுக்கெல்லாம் அதிபதியாய் இருந்தவன் தேவேந்திரன்; எனப் பலவாறு புகழ்வதுண்டு. மணவிழாவில் மணமக்களைப் பாண்டியரோடும், பஞ்சபாண்டவரோடும் தொடர்புபடுத்திப் பாடுவர். (குறிப்பு :- பஞ்சபாண்டவரில் ஒருவனுகிய அர்ச்சுனனுக்குப் பாண்டியன் மகளாகிய அல்லி அரசாணியை மணந்த செய்தி அல்லி அரசாணி மாலையி லிருந்து அறிக.) மணமகளுக்குப் பிறந்த இடத்திலிருந்தும், தாய்மாமன் வீட்டிலிருந்தும் வழங்கும் சீர்வகை மற்றும் முத்துக்கள் வகை. மணவிருந்துக்குப் புழுங்கவைத்த நெல்லு வகை பற்றியும் குறிப்பிட்டு வாழ்த்துவர்.

இம்மரபுத் தாய்மார்கள் தாலாட்டுக்களில், பாண்டிய நாட்டில் மதுரை சொக்கநாதரையும், மீனுட்சியையும் முறையே உழவனுகவும், உழத்தியாகவும் வருணித்துப் பாடுவதுண்டு. இவர் இருவரும் பாண்டியர் மரபு என்பதுபற்றியே இவ்வழக்கு நிலவுவதாகத் தெரிகிறது. தாய்மாமனைச் சுட்டி 'மாடுகட்டிப் போரடித்தால் மாளாதென்று யானை கட்டிப் போரடித்தான் உன் அம்மான்' என ஏற்றிப் பாடுவதை இம்மரபினர் மத்தியில் எங்கும் கேட்கலாம். இவ்வாறு பாடுவது இவர் பண்டை நாளில் பெரும் நிலக்கிழாராயிருந்து சிறப்போடு வாழ்ந்த வேளாண் மரபினர் என்பதை எடுத்துக் காட்டுகிறது. சோழ நாட்டில் இவர் 'பாண்டியனே உன் தாய் மாமன்'

எனவும், பாண்டிய நாட்டில் 'சோழனே உன் தாய் மாமன்' எனவும் விளித்துத் தாலாட்டின் போது பாடுகின்றனர். இது சோழ, பாண்டிய மன்னர் இடையே மண உறவு இருந்து வந்ததையும், இம் மக்கள் அவர் மரபு என்பதையும் செவிவழிச் செய்தியாக நமக்குத் தெரிவிக்கிறது. ஆக இம் மாதிரியான மண வாழ்த்துக்களும், தாலாட்டுப் பாட்டு களும் இவர் மத்தியில் வழக்கில் நிலவுவது தேவேந்திர குலத்தார் மூவேந்த மரபினர் என்பதை செவிவழிச் செய்தியாக அறிவிக்கின்றன. இப் பல்வேறு புறச்சான்று களால் மூவேந்தர் இக்காலப் பள்ளரின் முன்னோரே என்பது தெற்றென விளங்குகிறது. ஆதலால் முவேந்தர் பள்ளரே எனக் கொண்டு, அடுத்து இம் மரபினர் வேளாளர், வெள்ளாளர் என வழங்கினது பற்றி ஆராய்வோம்.



# வேளாளர், வெள்ளாளர்.

வேளாளர், வெள்ளாளர் என்ற மரபுப் பெயர்கள் இடைக் காலத்தில் தோன்றியதென்றும், இரு பெயர்களும் ஆரம்பத் தில் மருதநில உழவராகிய மள்ளர் குல மக்களின் கொடை வளம், வெள்ளத்தை அடக்கி ஆளும் தன்மை காரணமாய் அவரைச் சுட்ட ஏற்பட்டதென்றும், காலப்போக்கில் நாட்டில் சனுதனக் கொள்கை தோன்ற குல உயர்வுக்காகப் பல்வேறு தொழில் மற்றும் மருதநிலம் தவிர்த்த மற்றத் திணை நிலை மக்களும் தங்களின் பழைய தொழில் மற்றும் திணைநிலைப் பெயர்களை விடுத்து தங்களை வேளாளர், வெள்ளாளர் என வழங்கலாயினர் எனவும், பலதரப்பட்டவரும் இவ்வாறு வழங்க முற்பட்டதால் 1891–ஆம் ஆண்டு மக்கள் குடிக் கணக்கெடுப்பில் 930 உட்பிரிவுகள் வெள்ளாளரின் கீழ் பதிவானதென்றும், பாண்டிய, சோழிய, கொங்கு, நாஞ்சில் நாட்டு வெள்ளாளர் பிரிவுகள் எந்தெந்த மக்கட் பிரிவுகளி லிருந்து வந்தவர் என்றும் ஏற்கனவே குறிப்பிட்டிருப்பதை வாசகர் அறிவர். இப் பெயர்கள் முன்னுல் கூறியதுபோல் இடைக்காலத்தில் ஏற்பட்டன. இவை இரண்டும் ஒரே மரபையே குறிக்கின்றன. வேளாளர், வெள்ளாளர் என்று தனிப் பிரிவுகள் இல்லை என்பது அனைவரும் அறிந்ததே. இவை எப்போது, எவ்வாறு வழக்கில் வந்தன என்பதை ஈண்டு ஆராய்வோம்.

இலக்கியங்கள், நிகண்டுகள் இவற்றின் துணையை நாடு முன், பல அறிஞரும் வேளாளர், வெள்ளாளர் பற்றித் தெரிவித் திருக்கும் கருத்துக்கள் என்னவென்பதை முதலில் பார்ப்போம். டாக்டர் கால்டுவெல் வெள்ளாளர் என்ற சொல் வேர் அடிப் படையில் வெள்ளம் + ஆளர் = வெள்ளத்தை ஆள்பவர் என்ற பொருளில் வழங்கப்பட்டிருக்கிறது என்றும், தமிழகத் தில் வெள்ளாளர் குடியேறின பிறகுதான் நெல் பயிர் சாகுபடி தொடங்கப்பட்டிருக்க வேண்டுமென்றும் கூறுகிருர்.[1] திரு எம். சீனிவாச அய்யங்கார் வெள்ளாளர் கலப்பற்ற

1. Page 48 History of Tinnevely – Dr. R. Caldwell.

திராவிடர், செல்வாக்குள்ள படை மறவர் என்கிருர்.[1] டாக்டர் மு. ஆரோக்கியசாமி பெருமை வாய்ந்த வேளிர்குல மன்னரில் பலர் இக்காலத்தில் வேளாளர் என்று அழைக்கப்படுபவரின் முன்னோர் என்று கூறுகிருர்.[2] டாக்டர் K. K. பிள்ளை வேளிர் என்பதிலிருந்து வேளாளர் என்ற வகுப்பு தோன்றியதென்பது சரியல்ல என்று கருதுகிருர்.[3]

(On the whole it is incorrect to identify the Velir with the Vellalas)[3]

மறைமலையடிகள் வேள் எவ்வி, வேள் பாரி, இருங்கோ வேள், அழுந்தூர்வேள், நாங்கூர்வேள் இவர்கள் வேளாள மரபினர் என்றும், சோழ மன்னன் கரிகாலன் நாங்கூர்வேளிட மிருந்தும், அவனது தந்தையாகிய உருவப்பஃ தேர் இளஞ் சேட்சென்னி அழுந்தூர்வேளிடத்தும் மகட் கொண்டமை யானும் சோழ மன்னர் வேளாள மரபினர் என்று கூறுகிருர்.[4] திரு. ஞா. தேவநேயப் பாவாணர் கூறுவதைக் கீழே காண்போம் :

'வேளாளர் உழுதுண்பாரும், உழுவித்துண்பாரும் என இரு வகையர். உழுதுண்பாருக்குக் கருங்களமர், காராளர் என்னும் பெயர்களும் வெண்களமர், வெள்ளாளர் என்னும் பெயர்களும் உரியன. உழவர், கள்மர், கடையர், வேளாளர் என்பன இருசாராருக்கும் பொதுவாகும். ஆயினும் ஈற்றுப் பெயர் தவிர ஏனையவெல்லாம் உழுதுண்பார்க்கே சிறப்பாக வழங்கின. அவருக்கு மள்ளர் என்னும பெயருமுண்டு. அவர் தந்நிலத்தில் உழுவாரும், பிறர் நிலத்தில் உழுவாரும் என இரு நிலைமையர்.[5] கி. பி. 14 ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த நச்சினர்க்கினியர் வேளாளர் என்பதற்கு வேள் என்னும் பட்ட

---

1. Page 42 Tamil Studies – M. Srinivasa Ayyangar.
2. பக்கம் 446 நாமிருக்கும் நாடு அல்லது தென் இந்திய வரலாறு, டாக்டர் மு. ஆரோக்கியசாமி.
3. Page 231 A Social History of the Tamils Part I – Dr. K. K. Pillay.
4. பக்கம் 11 வேளாளர் நாகரிகம், மறைமலையடிகள்.
5. பக்கம் 129 பழந்தமிழாட்சி, ஞா. தேவநேயப்பாவாணர்.

உரிமையை யாள்பவர் என்றும் கூறுவர். இவர் இருவகை வேளாளர் உண்டு என்றும், அவரில் ஒருவர் உழுதுண்பவர் தம் நிலத்தையும், உழுவித்துண்பவர் நிலத்தையும் உழுபவர் என்றும், மற்றவர் உழுவித்துண்பவர் தண்டத் தலைவரும், மண்டலத் தலைவரும், மன்னர்க்கு மகட் கொடைக்கு உரியவர் என்றும் கூறியிருப்பதை ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறோம்.

ஆக வேளாளர் யார் என்பதற்கு டாக்டர் மு. ஆரோக்கிய சாமி, மறைமலையடிகள், நச்சினார்க்கினியர் இவர்கள் வேள், வேளிர் மரபைச் சேர்ந்தவர் என்கின்றனர். டாக்டர் K. K. பிள்ளை வேளாளர் வேளிர் மரபிலிருந்து தோன்றிய தென்பது ஏற்பதற்கில்லை என்கிறார். திரு. எம். சீனிவாச அய்யங்கார் வெள்ளாளர் கலப்பற்ற திராவிடர், படை மறவர் என்று கூறுகிறார். டாக்டர் கால்டுவெல் வெள்ளத்தை அடக்கி ஆள்வதை உணர்த்துவதாய் வெள்ளம் + ஆளன் = வெள்ளாளன் என்ற பெயர் வழக்கில் வந்ததென்றும், நெற் பயிர் செய்வதை இவர் தோற்றுவித்ததாலும் இப் பெயர் நிலைத்தது என்று கருதுகிறார். திரு. ஞா. தேவநேயப்பாவாணர் உழுதுண்பார் கருங்களமர், காராளர் எனவும், உழுவித்துண் பார் வெண்களமர், வெள்ளாளர் எனவும், உழவர், களமர், கடையர், வேளாளர் என்னும் பெயர்கள் இரு சாராருக்கும் ஏற்பட்டதென்றாலும் வேளாளர் என்னும் பெயர் சிறப்பாக உழுவித்துண்பாருக்கே பொருந்துமென்றும், வேளாளர் தவிர்த்து மற்றவர் மள்ளர் என வழங்கியதாகவும் கூறுகிறார். இவரது கூற்றுக்களில் எது ஏற்புடையது என அறியுமுகத்தான் வேளாளர், வெள்ளாளர் என்ற பெயர்கள் தோற்றம் பற்றி அறிய சங்க இலக்கியங்கள், பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் நிகண்டுகள் முதலியவற்றின் துணையை நாடுவோம்.

**வேளாளர் என்ற பெயரின் பொருளாக்கம் :—**

வேளாளர் என்ற பெயர் வேளாண்மை என்ற சொல்லி லிருந்து பிறந்ததென்றே தோன்றுகிறது. ஆதலால் வேளாண்மை என்ற சொல்லின் பொருள்பற்றிப் பார்ப்போம். நிகண்டுகளில் எல்லாவற்றிற்கும் முந்தியது கி. பி. 9 ஆம்

நூற்ருண்டைச் சேர்ந்த சேந்தன் திவாகரம் என்பர். இதில் வேளாண்மை என்பதற்கு 'உபகாரம் ஈகையும் விளம்பும்' என்று பொருள் கண்டிருக்கிறது. இச்சொல் கலித்தொகை (முல்லை 1.46), குறள் (81; 211; 613; 614), இனியவை நாற்பது (3, 13), இன்ன நாற்பது (36, 1), சிறுபஞ்சமூலம் (48), பழமொழி நானூறு (151), நாலடியார் (207) இங்கெல்லாம் உபகாரம், ஈகை என்ற பொருளில் வழங்குகிறது. கி.பி.10ஆம் நூற்ருண்டைச் சேர்ந்ததெனப்படும் பிங்கலந்தை நிகண்டில் வேளாண்மை என்ற சொல்லுக்கு மெய்ம்மையும், கொடையும் என்று பொருள் கண்டிருக்கிறது. ஆனல் இலக்கியங்களில் இச்சொல் ஒரு இடத்திலும் மெய்ம்மை என்ற பொருளை உணர்த்த வழங்கவில்லை என்று தெரிகிறது. வேளாண்மையுடையவர் வேளாண் மாந்தர் எனப் பெயர் பெறுவது இயல்பு. ஆதலால் வேளாண், வேளாண் மாந்தர் என்ற சொற்கள் வழங்கும் இலக்கியங்கள் எவை என்பது பற்றிப் பார்ப்போம். தொல் பொருள் களவியல் 105 (வேளாண் எதிரும்), தொல் பொருள் களவியல் 112 (வேளாண் பெருநெறி), தொல் பொருள் மரபியல் 635 (வேளாண் மாந்தர்), புறநானூறு 74 (வேளாண் சிறுபதம்), பொருநராற்றுப்படை 75 (வேளாண் வாயில்), திரிகடுகம் 42 (வேளாண் குடிக்கு) இங்கெல்லாம் ஈகை, உபகாரம், கொடையுள்ளம் படைத்தவர் என்ற பொருளில் வேளாண், வேளாண்மாந்தர் என்ற சொற்கள் வழங்குகின்றன. விருப்பமுடையவர் என்ற பொருளை உணர்த்த வேளார் என்ற சொல் புறம் 207இல் (தாளிலாளர் வேளாரல்லர்) வழங்குகிறது.

மேலே கண்ட இலக்கியங்களில் வேளாண்மை, வேளாண் என்ற சொற்கள் வழங்குகின்றனவே தவிர, வேளாளன் என்று தற்காலம் வழங்கும் பெயர் இடம் பெறக் காணேம். இச் சொல் சங்க இலக்கியங்களில் பரிபாடல் 20–63 (விடுங்கடன் வேளாளர்க் கின்று) இல் மட்டும் காணப்படுகிறது. மற்ற சங்க இலக்கியங்களிலோ, திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை இவற்றிலோ

வேளாளர் என்ற பெயர் இடம் பெருமல் பரிபாடலில் ஒரு இடத்தில் மட்டும் காணப்படுவதால், ஒரு வேளை விருப்பம் என்ற பொருளில் வேளார் என்று கண்டிருந்ததை திட்ட மிட்டோ, அல்லது தற்செயலாகத் தவருகவோ பிற்காலத்தில் 'வேளா' 'ர்' இவற்றிற்கு இடையே 'ள' வை இடைச் செருகலாக நுழைத்தனரோ என்ற ஐயப்பாடு எழுகிறது. இது நிற்க. அடுத்து இச் சொல் வழங்கும் பதினெண் கீழ்க் கணக்கு நூல்கள் எவை என்பதைக் காண்போம். நான்மணிக் கோவை 55 (எருதுடையான் வேளாளன்), திரிகடுகம் 11 (வேளாளன் என்பவன் விருந்திருக்க உண்ணுதான்) இவை இரண்டிலும் வேளாளன் என்ற பெயர் காணப்படுகிறது. திருஞான சம்பந்தர் தேவாரத்தில் வேளாளர் என்றவர் வள்ளன்மையால் மிக்கிருக்கும் தாளாளர் ஆக்கூரிற்ருன் தோன்றி மாடமே' என்று கண்டிருப்பது காண்க.

மேலே குறிப்பிட்டது போல் வேளாண்மையுடையவர் வேளாண் மாந்தர், வேளாளர் என்று வழங்கியிருக்க வேண் டும். வேளாண்மைக்குப் பொருள் வேண்டும். பொருள் இல்லா விடில் உபகாரம் செய்ய முடியாது என்பது, 'பொருளிலாளன் வேளாண்மை காமுறுலின்ஞ' (இன்ஞ நாற்பது 36–1) என்ற செய்யுளால் விளங்கும். ஆகப் பொருள் வேண்டுமென்றல் மெய்வருந்தி உழைக்க வேண்டும். உழைக்காவிடில் பொருள் ஈட்ட முடியாது. பொருள் ஈட்டாவிடில் உபகாரம் செய்ய முடியாது. இவற்றை 'தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை' (குறள் 614) என்ற வள்ளுவர் வாக்கால் அறிகிருேம். முயற்சியிலார் விரும்பத் தக்கவர் அல்ல என்று பண்டைய நாளில் மக்கள் கருதி யிருக்கின்றனர் என்பது 'தாளிலாளர் வேளாரல்லர்' (புறம் 207) என்ற மேற்கோளால் புலனுகும். இவ்வாறு முயன்று பொருள் ஈட்டுவது உபகாரம் செய்வதற்கே என்பது 'தாளாற்றித் தந்த பொருள் எல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்தற் பொருட்டு' (குறள் 211) என்ற செய்யுளால் அறியற் பாலது. உபகாரம் செய்யப் பொருள் வேண்டும். பொருள் ஈட்டத் தாளாற்றுதல் இன்றியமையாததென மேலே கண்ட

மேற்கோள்களால் தெளிவு. பண்டைக்காலத்தில் உபகாரம், ஈகை என்பது முக்கியமாய் உணவுப் பொருள்களை வழங்கிய திலேயே அமைந்தது. அதனாலேயே 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்' 'உண்டி முதற்றே உணவின் பிண்டம்' என்ற வாக்குகள் எழுந்தன. மனிதரின் உயிர் வாழ்க்கைக்கு உணவு தேவை. ஆக உணவுப் பண்டத்தை தாங்கள் மட்டு மின்றி இரப்போர்க்கும், புரப்போர்க்கும் வேளாண்மை செய் வதற்கு நிலத்தில் உழு தொழில் செய்ய வேண்டிய நிலை எழுந்தது. உழுதொழிலுக்கு ஒருவர் எருதும், ஏரும் உடைய வராய் இருத்தல் வேண்டும் என்பது 'எருது உடையான் வேளாளன்' (நான்மணி 55, 1), ஏருடையான் வேளாண்மை தானினிது ஆங்கினதே' (இனியவை நாற்பது 3, 13), எருது தொழில் செய்யா தோடவிடுங் கடன் வேளா(ள)ர்க்கின்று' (பரிபாடல் 20, 63) என்ற சான்றுகளால் விளங்கும். மாந்தரின் இல்வாழ்க்கை வேளாண்மை செய்வதற் காகவே ஏற்பட்டது என உணர்த்த, 'இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டு' (குறள் 81) என்ற செய்யுள் வள்ளுவப் பெருமானார் இயற்றியிருப்பது காண்க. மேலே எடுத்தாளப் பட்ட மேற்கோள்களிலிருந்து வேளாண்மை செய்தவர் வேளாண் மாந்தர் என வழங்கிப் பின்னால் வேளாளர் என நிலைத்தனர். வேளாளராகப் பணியாற்ற எருதும், ஏரும் இன்றியமையாதது. அத்துடன் இல்வாழ்க்கையும் வேளாண் மைக்கு வலியுறுத்தப்பட்டிருக்கிறது. இல்வாழ்க்கை இல்லா விடில் விருந்தோம்பல் இராது; அதனால் உபகாரம், ஈகை இவற்றை ஒருவர் வெளிப்படுத்த முடியாதநிலை எழும். உழவு, உணவு உற்பத்தி, இல்வாழ்க்கை இவை மருத நிலத்தில் உழவர் மத்தியில் முதன் முதலில் தோன்றியது. மருதநில உழவர் மள்ளர்; அவர் வேந்தர் குலம்; இன்று அவர் பள்ளர், குடும்பர், காலாடி, பண்ணாடி, தேவேந்திர குலத்தார் என வழங்கி வருகின்றனர். இம் மரபினரைச் சுட்டத்தான் வேளாளர் என்ற பெயர் தோன்றியது. இவரைத் தவிர வேறு ஒருவருக்கும் இப் பெயர் பொருந்தாது என அறிக.

வேள் மண் என்று பொருள்படும் என்றும், மண்ணை ஆள்வதால் வேள் + ஆளர் = வேளாளர் என வழங்கியதாகக் கொள்வாருமுளர்.[1] வேள், வேளிர் என்ற பெயர்களிலிருந்து வேளாளர், வெள்ளாளர் என்ற பெயர்கள் பிறந்ததென்பதற்கு சான்றுகள் இல்லை எனலாம். வேள், வேளிர் பெருநிலக்கிழார், குறுநில மன்னராயிருந்தனர் என்பது உண்மையே. இவை மரபுப் பெயர் அல்ல. மள்ளர்குல மக்களே வேள், வேளிராக இருந்திருக்கின்றனர். நாங்கூர் வேள், அழுந்தூர் வேள், இருங்கோ வேளி என வழங்குபவர் மள்ளர் மரபினரே. இவர் குறிஞ்சிநில வேடரோ, முல்லைநில ஆயரோ, பாலைநில எயினரோ அல்ல. இதுவரை வேளாளர் என்ற பெயரின் பொருள் பற்றிப் பார்த்தோம். அடுத்து வெள்ளாளர் என்ற பெயர் எவ்வாறு வழக்கில் வந்ததென்று காண்போம்.

**வெள்ளாளர் என்ற பெயரின் பொருளாக்கம் :—**

வெள்ளாளர் என்ற பெயர் இலக்கியங்களில் இடம் பெற வில்லை என ஏற்கனவே கண்டிருப்பதை வாசகர் அறிவர். வேளாளர் என்ற பெயர் தோன்றியதற்குப் பிறகே இது வழக்கில் வந்திருக்க வேண்டும். டாக்டர் கால்டுவெல் வெள்ளத்தை அடக்கிப் பயிர்த்தொழில் செய்ததால் வெள்ளாளர் என்ற பெயர் ஏற்பட்டதாகக் கருதுகிறார். திரு ஞா. தேவநேயப்பாவாணர் வேளாளர் வெண்களமர், வெள்ளாளர் எனப் பெயர் பெற்றதாகக் கருதுகிறார். இவர்கள் கூற்றில் எது ஏற்புடையது என்பது பற்றி ஆராய்வோம். பயிர்த் தொழில் விரிவடைந்தபோது நஞ்சை மட்டுமின்றி மானாவாரி புஞ்சை நிலமும் சாகுபடிக்குக் கொண்டுவரப் பட்டது. நஞ்சை என்பது நீர்நிலைகள் உள்ளடக்கியது; ஆறு, ஏரி, குளங்கள் நிறைந்தது. புஞ்சை என்பது நீர்நிலைகள் இல்லாத வறண்ட பகுதி. மழை பெய்தால் இவற்றில் பயிர் செய்யலாம். அதனால் இதை மானாவாரி நிலம் என்றும் வழங்குவர். இடைக் காலச் சோழர் காலத்தில் நில மான்ய முறை வெள்ளான் வகை, காராண் வகை என இரு வகையாகப் பிரிக்கப்பட்டிருந்தது. உழவுத் தொழிலையே வழி வழியாக மேற்கொண்டு நிலங்களை

1. பக்கம் 162 யாவரும் கேளிர். ஆர். நாகசாமி.

அனுபவித்து வந்த குடிகள் வெள்ளான் வகை என்று வழங்கினர். இது பொதுவாக நஞ்சைப் பகுதியில்தான் நிலவக் கூடியது. இப்பகுதியில்தான் தொன்று தொட்டு உழவுத் தொழில் நடந்து வந்தது. இது நீர் நிலைகளை உடையன வாதலால் வெள்ளான் வகை எனப்பட்டதாகத் தெரிகிறது.[1] இங்கு ஏற்பட்ட சுடுகாடுகள் வெள்ளான் சுடுகாடு என அக் காலத்தில் வழங்கின.[2] காராண் வகை என்பது மழையை நம்பி பயிர் செய்யப்படும் புஞ்சைப் பகுதி; காராகிய மேகத்தை நம்பி பயிர் செய்யப்படும் நிலம். இம் மாதிரி மேகத்தை நம்பி வாழ்ந்த உழவர் குடிகள் காராளர் எனப்பட்டனர். நிகண்டில் காராளர் என்பவர் மழையால் பயன்பெறுபவர் என்றும், மழையாலாகும் வெள்ளத்தை யாள்வோர் என்றும் அது பெருக்காளர் என்பதற்குச் சம்மதம். அப்பொருளுடையது எனக் கூறுவாரு முளர் என்றும் கண்டிருக்கிறது. பிங்கல நிகண்டில் பெருக்காளர் வேளாளர் என்று கண்டிருக்கிறது. மழை நீரைப் பெருக்கி நஞ்சைப் பயிர் சாகுபடி செய்யக் கூடியவர் மருத நில உழவர் சமூகமே. மற்ற சமூகங்கள் மிகவும் பிற்காலத்திலேயே நெல், கரும்பு, வாழை முதலிய நஞ்சைப் பயிர்களைச் சாகுபடி செய்யக் கற்றனர். இக் காலத்தில் கூட தமிழகத்திலுள்ள அனேக மரபினருக்கு நேரிடையாக நெற்பயிர் சாகுபடி செய்யத் தெரியாததைத் தமிழகம் நன்கு அறியும். நஞ்சைப் பயிர் செய்தவர் வெள்ளாளர் எனக் கொண்டால் புஞ்சைப் பயிர் செய்தவர் காராளர் எனப் பெயர் பெறுவதே முறை. திரு. ஞா. தேவநேயப் பாவாணர் வெண்களமர், வெள்ளாளர், கருங்களமர், காராளர் என்று கொள்வதற்கு இலக்கியங்களிலோ நிகண்டுகளிலோ சான்றுகள் இல்லை. வெள்ளாளர் என்ற பெயரைப் போன்று காராளர் என்ற பெயரும் இடைக் காலத்தில் தோன்றியதே. புஞ்சைப் பகுதியில் வாழ்ந்த உழவரைச் சுட்டவே இப் பெயர் ஏற்பட்டிருக்கிறது. இந்த

1. பக்கம் 142 தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகள் முதற்பகுதி. இரா. நாகசாமி, M. A.,
2. பக்கம் 149 தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகள் முதற்பகுதி இரா. நாகசாமி, M. A.,

உழவர் சமூகம் புதிதாய் தோன்றியது. இவர் மற்றத் திணை நில மக்களும், வந்தேருங் குடிகளும் ஆவர். களமர் என்ற பெயர் உழவர் கீழ் களத்தில் தொழில் புரிவோர் எனச் சங்க கால மக்கள் பிரிவில் கண்டோம். ஆதலால் களமர் என்ற பெயருக்கு உழவர் எனக் கொண்டு, வெண்களமர் என்பதற்கு வெண் உழவர் - வெள்ளாளர் எனக் கொள்வது பொருத்த மற்றது. ஆக மருத நில உழவராகிய மள்ளர்குல மக்கள்தான் வெள்ளாளர் என இடைக் காலத்தில் வழங்கலாயினர். இவரைத்தான் திரு. எம். சீனிவாச அய்யங்கார் கலப்பற்ற திராவிடர், செல்வாக்குள்ள படை மறவர் எனக் கூறுவதாக ஏற்கனவே கண்டோம்.[1] கல்வெட்டுகளில் வெள்ளாளர் பற்றிக் குறிப்புகள் காணப்படுகின்றன என்பது அடியிற் கண்ட சான்றுகளால் விளங்கும்.

மன்னார்குடி கைலாசநாதசாமி கோயில் கல்வெட்டில்,

'கல நாட்டில் வெள்ளாழரையா..............
பிடாகைகளுக்கு குடும்பு புரவுஞ் செய்தாரை யாதல்
ஊர்க் கணக்கரை யாதல் பிராமணரிலும் வெள்ளாழ
ரிலும் முதலிகளுக்குக் கொளச் சொன்னார்'[2] எனவும்

மன்னார்குடி இராசகோபால் பெருமாள் கோயில் கல்வெட்டில்,

'ஆண்டு தோறும் குடும்பு மாறி இடவும்,.........நாட்டில்
வெள்ளாழரையா......... குடும்பும் மாவும் செய்தா
ரையாதல் ஊர்க் கணக்கரையாதல் பிராமணரி
லும் வெள்ளாழரிலும் முதலிகளுக்குக் கொளச்
சொன்னார்'[3] எனவும் பொறிக்கப்பட்டிருப்பது காண்க.

ஆண்பாலரை வெள்ளாளர் என்று வழங்கியது போன்று பெண்பாலரை வெள்ளாட்டி என வழங்கும் நிலை வழக்கில் ஏற்பட்டிருக்கிறதென்பதற்கு அடியிற் கண்ட கல்வெட்டுகள் சான்றாகும்.

---

1 Page 42 Tamil Studies M. Srinivasa Ayyengar.
2. A. R. E. 98/1897 – 511 Vol VI.
3. A. R. E. 104/1897.

முதலாம் பராந்தகச் சோழன் காலத்தில் தஞ்சாவூர் மாவட்டம் வேதாரண்யத்திலுள்ள கி.பி. 938-39ஆம் ஆண்டுக்குரிய ஒரு கல்வெட்டில் :

'அழ நாட்டுக் கிழையில் இருந்து வாழும் வெள்ளாட்டி சாத்தன் மல்லி வச்சநந்தா விளக்கு' [1] எனவும், தென்னுற்க்காடு மாவட்டம் சிதம்பரம் தாலுகா உடையார் குடியில் உள்ள கல்வெட்டில் :

'விளத்தூர் நாட்டு சிறுகடம்பூரிலிருக்கும் வெள்ளாட்டி அரிக்காடி' [2] எனவும் பொறிக்கப்பட்டிருக்கிறது.

மருத நில உழவராகிய மள்ளர் கொடை வன்மையால் இடைக் காலத்தில் வேளாளர் எனப் பெயர் பெற்று சோழர் ஆட்சியில் வெள்ளாளர் என வழங்கினர். வெள்ளாளர் என்ருல் வெள்ளத்தை அடக்கி ஆள்பவர் எனப் பொருள்படும். சோழர் ஆட்சியில் ஊராட்சி முறை குடும்பு முறையில் அமைந்தது. அக் காலத்தில் வெள்ளாளர் தான் குடும்பு பார்த்தனர் எனக் கல்வெட்டுகள் கூறுகின்றன. அந்த மரபை யொட்டி தேவேந்திர குலத்தார் பண்டைய வெள்ளாளர் என்பதற்குச் சான்ருக குடும்பன் என்ற குலப்பட்டம் பூண்டு வருகின்றனர். முக்கூடல் பள்ளு இவரை 'குடும்பு செய்தூராருக்குழைத்தான்' (செ. 88) என்று கூறுவது காண்க. நெல்லை மாவட்டத்தில் வெள்ளாளபுரம், வெள்ளாளன் குளம் என்ற ஊர்கள் இருப்பதும், அவற்றில் தேவேந்திர குலத்தார் மட்டும் இந்நாளில் வாழ்ந்து வருவதும், தேவேந்திர குலத்தார் தான் பண்டைய வேளாண் மரபினர் என்பதற்குச் சான்ருக அமையும். இடைக் காலத்தில் காராளர் என்று புதிதாய் ஒரு மரபு தோன்றியது. காராளரிடமிருந்து பிரித்துக் காட்ட இவர் வெள்ளாளர் எனப் பெயர் பெற்றிருக்கலாம். மருத நில உழவராகிய மள்ளர் மரபைத் தான் எம். சீனிவாச அய்யங்கார் கலப்பற்ற வெள்ளாளர் என்கிருர். இவர் கூறுவதாவது: 'தமிழ் மன்னர் பற்றிய அடையாளக்கூறுகளை இன்று

---

1. ARE. 476/1904 - ARE. 486/1904.
2 ARE. 542/1920.

நாட்டில் காண்பதற்கில்லை. அனேகமாய் அவர் கலப்பற்ற வெள்ளாளருடன் கலந்திருக்க வேண்டும்; ஏன் கலப்பற்ற வெள்ளாளர் என்று கூறுகிறேன் என்ருல் மற்ற மரபினரிலிருந்து பலர் நாளடைவில் வெள்ளாளர் எனத் தங்களது மரபை மாற்றி வருகின்றனர். [1]

Thiru M. Srinivasa Ayyangar says: 'No traces of the Tamil Kings are to be found at present in this country and it is highly probable that they should have merged with the pure Vellala caste. We say pure because the Vellala caste was receiving additions from time to time from other tribes.' [1]

திரு. எம். சீனிவாச அய்யங்கார் கூறுவதிலிருந்து பல்வேறு பிரிவினரும் தங்கள் மரபை வெள்ளாளர் என மாற்றி யிருக்கின்றனர் என்று தெரிகிறது. இம் மரபு மாற்றம் பற்றி ஏற்கனவே பிறிதொரு இடத்தில் ஓரளவு விளக்கியிருப்பதை வாசகர் அறிவர். இது பற்றிப் பின்னுல் மேலும் ஆராய் வோம். இது நிற்க.

தமிழகத்தில் நான்குவித வருணப் பாகுபாடுகள் இல்லை என்றும், மக்கள் பிரிவுகள் திணை நிலை, தொழில் மக்களாகவும் பிரிந்திருந்தனர் என்றும் ஏற்கனவே விளக்கியிருக்கிறேம். ஆனுல் தமிழ் மரபுக்கு விரோதமாக அந்தணர், அரசர், வைசியர், வேளாளர் என நான்கு பிரிவுகள் நாட்டில் இருந்த தாகத் தொல்காப்பியத்தில் மரபியல் பகுதியில் கண்டிருக் கிறது. மக்கள் வருணப்பாகுபாடு பற்றி திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை கூறுவதாவது:- 'தென்னுட்டுத் தமிழர் வரலாற்றையும் பழக்கத்தையும் ஆராயுமிடத்து நான்கு வருணம் தமிழருக்குள் கிடையாது. தொல்காப்பிய உண்மைப் பகுதி, திருவள்ளுவர், தேவாரம் என்பவற்றில் நாற்குலத்தைப் பற்றிப் பேச்சில்லை. 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம் தொழுதுண்டு பின் செல்பவர்' என்ற திருக்குறளின்படி உழுதுண்பார் முதன்மையும் பிற பல்வேறு தொழில் செய்யும் மக்கள் துணை நிலையும் உடையவராய் இருந்தனர். கோவிற் பூசனை

1. Page 62 Tamil Studies – M. Srinivasa Ayyangar.

செய்யும் பார்ப்பனர், அரசர் முதலியோர் உழுதுண்ணும் பெருங்குலத்தினின்று பிரிந்தவரேயாவர்.' 1

டாக்டர் என். சுப்பிரமணியம் மன்னரும், வணிகரும் வேளாண்மாந்தரிலிருந்து வேறுபட்டவர் அல்ல; அவர் செய்து வந்த தொழில் தான் அவரைப் பிரித்துக் காட்டியது என்கிருர். 2

[ In Tamil Nadu the Kings and Merchants were not different from the peasants. Traditional occupation alone distinguished them. ] 2

மருதநிலத் தலைமக்களாகிய மள்ளர் என்ற தேவேந்திரர் மரபிலிருந்தே அரசர், அந்தணர் தோன்றினர். அந்தணர் பார்ப்பனர் எனவும் வழங்கினர். இவர் ஆரியப் பார்ப்பனர் அல்ல என்பதை அறிக. இன்று தேவேந்திரர் மத்தியில் வாழ்ந்து வரும் குருக்கள், ஞானியார் பண்டையத் தமிழ் அந்தணர், பார்ப்பனர் வழி வந்தோரே. இவர் தேவேந்திர குலக் குருக்கள், ஞானியார் என வழங்கி வருகின்றனர். தமிழ் வேந்தருக்கு சமயக் குருக்களாக இருந்தவர் இவர்களே. திரு. எம். சீனிவாச அய்யங்கார் இவர் பற்றிக் கூறுவதாவது : 'அந்தணர் தொழிலாகிய வேதநூல் கற்றல்' வேள்வித் தீயை வணங்குதல் முதலியவை மறைந்துபோன வேளாளரில் ஒரு பிரிவினராகிய வைத்யா என்பவரைத் தவிர பார்ப்பனரல்லாதார் ஒருவராலும் மேற்கொள்ளப் படவில்லை. 3 'இந்த வைத்யா என்ற பிரிவினர் தமிழ்வேந்தருக்கு அமைச்சராகவும் சமயக் குருக்களாகவும் செயல் பட்டனர்.' 4

[ Vedic study and worship of sacrificial fire do not appear to bave at any time been practised by the non brahmin Tamils except probably by an extinct section of the Vellalas known as Vaidyas. This name which occurs in

1. பக்கம் 150 தமிழர் சமயம் – கா. சுப்பிரமணிய பிள்ளை, M. A., M. L.,
2. Page 336 History of Tamil Nadu - Dr. N. Subramaniam.
3. Page 26 Tamil Studies M. Srinivasa Ayyangar.
4. Page 64 Tamil Studies M. Srinivasa Ayyangar.

Vatteluttu inscriptions dated 770 A D should not be confounded with the Boidya Caste of Bengal or with the class of native physicians called the Vaidyan as is some times done. Preeminently charming in manners a resident of karavendapura ......... and a learned and illustrious member of the Vaidya family Madurakavi made the stone temple of vishnu. The Vaidyas were the ministers under the Chola and Pandya kings and were good sanskrit scholars well - Versed in vedas. Their royal title as ministers was Per Arayan while that of Brahmin Minister was Brahma Arayan. It will be interesting to observe that the great Vaishnava Saint Nammalvar and probably the Saiva ascetic Tayumanasamy also belonged to this section of the Vellala caste. ] [1]

டாக்டர் K. K. பிள்ளை வைத்யா என்பதை வைத்தியர் எனக் கொண்டு அவரை அம்பட்டர் மரபினர் என்ற கருத்துப் படக் கூறுகிறுர். இவர் கூறுவதாவது 'கி. பி. 8-ஆம் நூற்ருண்டில் பாண்டியர் கல்வெட்டுகள் சிலவற்றில் வைத்தியகுல உறுப்பினர் குறிக்கப்பெற்றுள்ளனர். இவர் கலப்பு வகுப்பினரெனக் காண்கிறேம். [2] திரு. எம். சீனிவாச அய்யங்கார் கூறுவது போன்று இவரது கூற்று சரியன்று. முன்னவர் குறிப்பிடும் வெள்ளாளரில் மறைந்து போன வைத்யா என்பவர் இன்று தேவேந்திரர் மத்தியில் குருக்களாகப் பணிபுரிபவரைத் தவிர வேறு ஒருவராகவும் இருப்பதற்கில்லை என்பதை அறிக.

ஆக மேலே கூறிய சான்றுகளால், சங்க காலத்தில் அரசர், அந்தணர், வேளாளர் என வழங்கியவர் தேவேந்திர குலத்தாராகிய மள்ளர் மரபினரே. தமிழ் வேந்தர் ஆட்சி முடிந்து, தெலுங்கர் இந்த நாட்டைக் கைப்பற்றியதால், தமிழ் மன்னர் வழிவந்தோர் தங்கள் மரபினரோடு கலந்தனர். அவரிடம் சமயக் குருக்களாகவும், அமைச்சராகவும் பணியாற்றிய அந்தணர் இக் காலத்தில் தேவேந்திர குலத்தார் மத்தியில் வாழ்ந்து வருகின்றனர். முன்புபோல்

1. Page 64 Tamil Studies - M. Srinivasa Ayyangar.
2. பக்கம் 111 தென்னிந்திய வரலாறு - முதற் பாகம் - - டாக்டர் K. K. பிள்ளை.

அவர் இன்றும் தேவேந்திரருக்கு சமயக் குருக்களாகத் தொண்டாற்றி வருகின்றனர் என்பதை அறிக. இவரைக் குறிப்பாக சோழ நாட்டில் தேவேந்திரர் குடியிருப்புகளில் காணலாம். தேவேந்திர குலத்தார் தான் பண்டைய வேளாண் மரபினர் என்ருல், இன்று நாட்டில் வேளாளர், வெள்ளாளர் என்று வழங்கிவரும் மக்கள் யார்? என்ற கேள்வி எழும். இவரில் ஒரு சாரார் பற்றி ஏற்கனவே விளக்கி யிருக்கிறேம். முன்பு கூறியது போன்று இச் சமூகம் இடைக் காலத்தில் புதிதாய் தோன்றியது. புதிதாய் இச் சமூகம் தோன்றியதென்று கூறும்போது, அது எவ்வாறு, எப்போது தோன்றியதென்று அறிவது இன்றியமையாதது. இது பற்றி ஆராய்வோம்.

**தற்கால வேளாளர், வெள்ளாளர் யார்?**

திரு. எம். சீனிவாச அய்யங்கார் தமிழகத்திலுள்ள பல்வேறு பிரிவினரைப் பற்றிக் கூறுவதாவது: 'சிறுபான்மை யுள்ள வெள்ளாளர் தவிர மற்ற வகுப்பார் எல்லாம் பழைய நாக மரபினர் வழி வந்தவர்; வேளிர் அல்லது வெள்ளாளரே திராவிட இனத்தவர்.' [1]

[ The numerous Tamil castes with the exception of a handful of Vellalas must have grown out from territorial tribes of Nagas. The Velirs or Vellalas were alone Dravidians. ] [1]

இவர் கூற்றுப்படி, சிறு பான்மையினரான மள்ளர் குல மக்களே திராவிடர் என வழங்கப்பட்டனர் என்று தெரிகிறது. இவர் சிறுபான்மையான கலப்பற்ற வெள்ளாளருடன் தமிழ் வேந்தரின் வழி வந்தோர் கலந்தனர் என்று கூறுகையில், கலப் பற்ற என்று கூறுவதற்கு விளக்கம் கொடுக்கிருர். இவர் கூறுவ தாவது: 'ஏன் கலப்பற்ற வெள்ளாளர் என்று கூறுகிறேன் என்ருல், நாளடைவில் பல்வேறு பிரிவினரும் வேளாளர் என வழங்க முற்பட்டிருக்கின்றனர். இதற்கு வேட்டுவரில் வெள்ளா ளன் கரியஞன மருதங்க வேளான் சான்ருக அமையும். பெரும்பாலான கொங்கு வெள்ளாளர், ஏற்கனவே வேட்டுவ

1. Page 381 Tamil Studies - M. Srinivasa Ayyangar.

வகுப்பைச் சேர்ந்தவர். கோயம்புத்தூர் மாவட்டத்தில் நியதிக்கு மாறாக, பெரும்பான்மையோர் தங்களை வெள்ளாளர் என வழங்கி வருவதை, மேலே கண்ட கல்வெட்டைக் கவனத்தில் கொண்டு பார்த்தால், இவர் உண்மையில் கலப் பற்ற திராவிடர், அல்லது வெள்ளாள மரபினராக இருக்க முடியுமா, என்ற ஐயப்பாடு எழுகிறது. [1]

Thiru M. Srinivasa Ayyangar says :

'No traces of the Tamil Kings are to be found in this country and it is highly probable that they should have merged with the pure vellala caste. We say pure because the vellala caste as a whole has been receiving additions from time to time from other tribes as the following cxtracts will show 'வேட்டுவரில் வேளாளன் கரியனான மருதங்கவேளான்' (S 11 Vol 111 - P 45) most of the Kongu Vellalas were formerly Vettuvas. The preceding statement will show the Coimbatore District contains an unusually a large number of Vellalas a fact which casts a serious doubt about on their pure Dravidian or Vellala origin' [1]

புதிதாய் தோன்றிய வெள்ளாளர் பற்றி மேலே குறிப்பிட்ட கல்வெட்டைத் தவிர, வேறு சில கல்வெட்டுகளும் இருக்கக் காண்கிறோம். திரு. இரா. நாகசாமி வேளாளர் பற்றிக் கூறுவதாவது :- 'கல்வெட்டுகளில் வேளாளர்கள் பல பெயரில் குறிக்கப்படுகின்றனர். வேளிர், வேளார், செட்டி, நாயக்கர், முதலி, ரெட்டி, காராளர், பெருக்காளர், நாட்டார், கோனார், பிள்ளை என்ற பெயர்கள் காணப்படுகின்றன. 12 ஆம் நூற்றுண்டில் 'இவ்வூர் வெள்ளாளன் நெய்தவாயில் உடையான் வேளான் தேவர் கண்டன்' எனக் கல்வெட்டு கூறுவது வெள்ளாளர், வேளான் என்று அழைக்கப்பட்டதன் எடுத்துக் காட்டு. (23/8). விண்ணமாலை வெள்ளாளரில் சின்னம நாயக்கன் மகன் சூரப்ப நாயக்கன் என்று 13-ஆம் நூற்றுண்டில் கூறப்பட்டுள்ளது. (468/8). 'வெள்ளாளரில்

1. Page 62 Tamil Studies - M. Srinivasa Ayyangar.

வடுகமிரட்டி மகன் வடுகமிரட்டி என்று மற்றொரு கல்வெட்டு கூறுகிறது (468/8). ஆதித்த சோழர் காலத்தில் (கி.பி. 9ஆம் நூற்றாண்டு) ஈசான மங்கலத்து வெள்ளாளன் கங்கப் பெருமானடி அறிஞ்சகுடி வெள்ளாளன் புழலயன் என்பவன் குறிக்கப்பெறுகிறான். இவன் புழலயன் செட்டி என்று அழைக்கப்படுகிறான். இவன் தஞ்சாவூர் மடிகை மாணிக்க வாணியன் கருநாடக புழலய செட்டி என்று அழைக்கப் பெறுகிறான்.'[1] மதுரை மாவட்டம் கீரனூர் கல்வெட்டில் வீரராசேந்திரன் காலத்தில் ஒரு வெள்ளாளன் பல்லவரையன் என்று அழைக்கப்பெறுகிறான். 'இவ்வூர் வெள்ளாளன் பூசகளில் அரையன் சிறியனான வேந்த சூளாமணி பல்லவ ரையன்' என்று கல்வெட்டு குறிக்கிறது. இதே ஊரில் உள்ள கல்வெட்டுகளில் கீழ் மணியர், மேல் மணியர் என இரு பிரிவு கள் வெள்ளாளர்களில் குறிக்கப்படுகின்றன. வெள்ளாளன் கீழ் மணியரில் நீலன் புலியன் (277/5) என்றும், மேல் மணியரில் காவன் உடையான் (279/5) என்பவனும் குறிக்கப் பெறு கின்றனர். ஒரு கல்வெட்டில் வெள்ளாளன் கோன் என்று குறிக்கப்படுகிறான். வெள்ளாளன் கழஞ்சியன் தேவனான கொங்கு இளங்கோன் (280/5) என்று குறிக்கப்பெறுகிறான். மற்றொரு கல்வெட்டில் வெள்ளாளன் பறையன் என்று குறிக்கப்பெறுகிறான். விக்கிரம சோழன் காலத்தில் திருமுருகன் பூண்டி கல்வெட்டு 'வெள்ளாளன் மாப்புள்ளி களில் பறையன் ஆன தனபாலன் (253/5) என்பவனைக் குறிக்கிறது.[2] வீரராசேந்திர சோழன் காலத்திய கல்வெட்டு ஒன்றில் 'மலை நாட்டைச் சேர்ந்த விழுப்புரம் வெள்ளாளனான காமிண்டன்'[3] என்று கண்டிருக்கிறது. முதலாம் குலோத் துங்கச் சோழன் காலத்தில் (கி. பி. 12ஆம் நூற்றாண்டு) கல் வெட்டு ஒன்றில் 'பூவனூர் தலைவனும் வைஷ்ணவனுமான நல்ல சூத்திரரில் முதன்மையான சோழன் மந்திரி மாயிருஞ் சோலை' என்று கண்டிருக்கிறது.[4] இன்னொரு கல்வெட்டில்

---

1. பக்கம் 162 - 163 யாவரும் கேளிர், இரா. நாகசாமி.
2. பக்கம் 171 யாவரும் கேளிர், இரா. நாகசாமி.
3. A. R. E. 43/1913.
4. A. R. E. 271/1929. (The Cholas K. A. N.)

வேட்டைக்குப் போன ஒரு சூத்திரன், குறி தவறி ஒரு வெள்ளாளன் மீது அம்பை எய்ய, எழுபத்தொன்பது நாட்டு விவசாயிகளும் ஒன்று கூடி, சூத்திரனை குற்றவாளி என முடிவு கட்டினர்.' என்பதாகப் பொறிக்கப்பட்டிருக்கிறது.[1]

A. Sudra who went on hunting missed his aim and shot a Vellala. The agriculturits of seventy nine districts assembled together and declared the sudra guilty.[1]

வட ஆற்காடு திருவண்ணுமலை கி. பி. 1513–14ஆம் ஆண்டு கல்வெட்டு நாலாஞ்சாதி வெள்ளாளருக்கு என்று கூறுகிறது.[2] திருச்சி மாவட்டம் திருவள்ளாரை கல்வெட்டில், கைக்களூர் செம்பியன் மழநாட்டு வேளாளனுகிய கொற்றன் மாறன் என்று கண்டிருக்கிறது.[3] இராமநாதபுரம் மாவட்டம் திருப்பத்தூர் கல்வெட்டு, 'கடம்ப வேளான் என்ற மறவன் அனுக்கப்பெரையன்' என்று கூறுகிறது.[4] தஞ்சாவூர் தாலுகா திருப்பழனம் கல்வெட்டு, 'புரிசை கிழானுகிய செம்பியனுற்காட்டு வேளான்னுயின் மறவனக்கன்' என்று கூறுகிறது.[5] வடசென்னை ஜார்ஜ் டவுன் கி. பி. 1842ஆம் ஆண்டு கல்வெட்டு, 'தொண்டை மண்டலத்தாரில் வைசிய குலம் துளுவ வேளாளர் பல்லவராய கோத்திரம்' என்று குறிப்பிடுகிறது.[6] சென்னை நுங்கம்பாக்கத்திலுள்ள, கி. பி. 1808ஆம் ஆண்டு கல்வெட்டு, 'பூவசியநாதன்......... துளுவ வேளாள குலத்தவர்' என்று கூறுகிறது.[7] ஆக இதுவரை பலதரப்பட்ட பிரிவினரும் வெள்ளாளர் என வழங்கியதாகக் கல்வெட்டுகள் குறிப்பிடுவதைக் கண்டோம். வேட்டுவன், கோன், நாயக்கன், மிரட்டி, பறையன், மறவன், தேவன், காமிண்டன், நாலாஞ்சாதி, வைசிய குலம்,

1. A. R. E. 67/1906.
2. தென்னிந்திய கோயிற் சாசனங்கள், சாசன எண் 1101 R. 336.
3. A. R. E. 322/1905.
4. A. R. E. 137/1908.
5. A. R. E. 170/1928.
6. சென்னை நகர் கல்வெட்டுகள் 250/1967.
7. சென்னை நகர் கல்வெட்டு 197/1967.

வேளான், உடையான் என்பவர் வெள்ளாளர் என வழங்கினர் என்று அறிக.

பொன்னேரி வெள்ளாளர் பற்றி, கி. பி. 15-ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த காளமேகப் புலவர் பாடியிருப்பதைக் கீழே காண்போம் :

'கம்மா ளனங்கிக் கணக் கனவே துதித்தார்
செம்மான் சதுரரைத் திருவாசை — அம்மாகேள்
வாணியனும் பொன்னேரி வாழும் வெள்ளாளனுமே
சேணியனு மென்றே தெரிந்து'

சேணியர் என்பவர், துணி நெய்பவர். சோழர் காலத்தில், பறையரில் நெசவுத் தொழிலில் ஈடுபட்டவரிலிருந்து, கோயில் பணிவிடைகளுக்கு ஆண்களும், பெண்களும் நியமனம் பெற்றிருக்கின்றனர். இவர்களுக்கு கோயில்களின் அருகில், குடியிருப்புக்கு மனைக்கட்டுகள் வழங்கப்பட்டதாக, விசயநகர ஆட்சி காலக் கல்வெட்டுகள் சான்று பகர்கின்றன.[1] இவ்வாறு குடி அமர்ந்தவர், தங்களைக் கைக்கோளர் என ஒரு தனி வகுப்பாக வழங்கி வரலாயினர் என்று தெரிகிறது. கைக்கோளர் பற்றி திரு. எம். சீனிவாச அய்யங்கார் கூறுவதாவது: கைக்கோளர் என்றும், வீரபாகு கோத்திரம் என்றும், பூணூல் தரித்து உயர்ந்த சாதி என்று கூறிவரும் நெசவாளர், கி. பி. 10ஆம் நூற்றுண்டுக்கு முன்பு, நெசவுத் தொழில் செய்யும் பறையரில் ஒரு பிரிவாகிய, கோலியரைப் போன்றவரே. கைக்கோளர் என்ற ஒரு வகுப்பு, காஞ்சீபுரத்தில் கி. பி 14ஆம் நூற்றுண்டு கல்வெட்டிலேயே முதன் முதலில் பொறிக்கப் பட்டிருக்கிறது. இவர்கள் முக்கியமான வகுப்பாகக் கருதப்பட்டது, கி. பி. 11 முதல் 14ஆம் நூற்றுண்டிற்குள் எனலாம். கி. பி. 1150 வாக்கில், குலோத்துங்கச் சோழனிடம் இம்மரபைச் சேர்ந்த புலவன் ஒட்டக்கூத்தன் அவைப் புலவனுயிருந்து செல்வாக்குப் பெற்றிருந்ததால், இந்த வகுப்பின் செல்வாக்கும் உயர்ந்தது என்று தெரிகிறது.[2]

1. A. R. E. 319/1911.
2. Pages 82, 83 Tamil Studies M. Srinivasa Ayyangar.

Thiru M. Srinivasa Ayyangar says :—

'The Kaikolars who trace their descent from Virabahu one of the nine commanders of God Subramanya seem to have been originally before the 10th century A D Eyina Weavers like the Koliya Parayas though some of them have recently caught the infection of wearing the sacred thread to claim equal position with the High Castes.[1]

Since the earliest mention of Kaikolan as a caste, the name is found in Conjeevaram inscriptions of the fourteenth century it is highly probable that the class of weavers were recognised as a distinct caste of some standing between the eleventh and the fourteenth century when the greatest Kaikolar poet Ottakuther commanded a great influence in the court of Kulothunga Chola in 1150 A D and it happened probably a few years after the Kammalans were granted the privilege of wearing the sacred thread.'[2]

எட்கர் தாஸ்டன் கூறுவதாவது :

தேவரடியார் வழிவந்தோர், கைக்கோளர், வெள்ளாளர் இவர்கள் முதலி என்ற குலப்பட்டம் பூண்டு வருகின்றனர். கைக்கோளரும், தேவரடியாரிடம் பிறந்தவரும் வடக்கே முதலி எனவும், தெற்கே பிள்ளை எனவும் பட்டம் தரித்திருக்கின்றனர்.[3]

The title Mudali is used chiefly by the offspring of the Devadasis dancing girls Kaikolars and Vellalars. The Vellalars in the north take the title of Mudali and those in the south the title of Pillai.[3]

அவர் மேலும் கூறுகிறார் :

கைக்கோளர், வெள்ளாளர் வகுப்புகளிலிருந்துதான் கோயில்களுக்கு பெரும்பாலான தேவரடியார் நியமனம் பெற்றனர். கைக்கோளர், வெள்ளாளர் தரிக்கும் குலப்பட்ட

1. Page 82 Tamil Studies – M. Srinivasa Ayyangar.
2. Page 83 " "
3. Page 84 Castes and Tribes of Southern India Vol V - E. Thurstan.

மாகிய பிள்ளை, முதலி இவற்றைத் தேவரடியார் மூலம் பிறந்தவர் தங்களுக்கும் உரித்தாக்கிக் கொண்டனர்.[1]

(Some of these (Devadasis) affix to their names the terms of Pillai and Mudali which are the usual titles of the two castes Vellalars and Kaikolars from which most of the dasis are recruited.'[1] )

புதிதாய் வகுப்புகள் உருவானதற்கு இது ஒரு எடுத்துக் காட்டு. துணி நெய்பவர் தனிவகுப்பாகப் பிரிந்த பின், அவரிலிருந்து ஒரு சாரார், தங்களை வெள்ளாளர் என வழங்கி வரலாயினர் என அறிதற்பாலது.

ஏற்கனவே, மருதநில உழவராகிய மள்ளர்தான் வேளாளர், வெள்ளாளர் என்ற சிறப்பிடம் பெற்றனர் எனக் கண்டோம். ஆனல் இடைக்காலத்தில், பல்வேறு மரபினரும் வெள்ளாளர் என வழங்க முற்பட்டிருக்கின்றனர். இந்நிலை எவ்வாறு ஏற்பட்டது. புதிதாய் தோன்றிய வெள்ளாளர், சமூகத்தில் எவ்வாறு மதிக்கப்பட்டனர் என்ற கேள்வி எழுகிறது. இது பற்றிக் கீழே ஆராய்வோம்.

நிகண்டுகளில் எல்லாவற்றிற்கும் முந்தியதாகக் கருதப் படும் சேந்தன் திவாகரம், வேளாண்மை என்ற சொல்லுக்கு, உபகாரம், ஈகையும் விளம்பும் என்று கூறுவதாக ஏற்கனவே கண்டோம். இதில் வேளாண்மையுடைய வேளாளர், காராளரில் ஒருவராகக் கண்டிருக்கிறது. காராளரின் கீழ், வினைஞர், சூத்திரர், பின்னவர், சதுர்த்தர், வளமையர், வேளாளர், மண்மகள், புதல்வர், வார்த்தை தொழிலோர், வண்களமர், உழவர், சீர்த்த ஏரின் வாழ்நர் இவர்கள் அடங்கி இருப்பது காண்க.

வேளாளர்க்குத் தொழில் உழவு, பசு காவல், வாணிபம், குயிலுவம், காருக வினை (நெய்தல் தொழில்), இரு பிறப்பாளர்க்கு ஏவல் செய்தல் என அறுவகையாகக் கூறப்பட்டிருக்கிறது. சங்ககால மருதநில மக்கட் பிரிவிலுள்ள உழவர், வினைஞர், களமர் என்பவரைத் தவிர்த்து மற்றவர் சங்க

1. Page 127 Castes and Tribes of Southern India Vol II
E. Thurston.

காலத்திற்குப் பிறகு தோன்றியவர் என அறிக. கி. பி. 10 ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த பிங்கலத்தை நிகண்டில் வேளாளர் என்பவர் சூத்திரர், கொடையாளர் என்று கண்டிருக்கிறது. (4115) இவரது தொழில் ஆணைவழி நிற்றல், மானவினை தொடங்கல், கைக்கடனுற்றல், குற்றமனத்திண்மை, சுற்றம் போற்றல், நீங்காத முயற்சி, மன்னிறை தருதல், ஒற்றுமை கோடல், ஒழுக்கம், விருந்து புரந்தருதல் எனப் பத்து வகை யாகக் கண்டிருக்கிறது. (780) வேளாளர் என்பதற்கு, சூத்திரரும், கொடையாளரும் என்று பிங்கலத்தை கூறும் போது, சூத்திரர் வேறு, கொடையாளர் வேறு என அறிகிறோம். இடைக் காலத்தில் வேளாளர் வேறு, சூத்திரர் வேறு என்பது கல்வெட்டு மூலம் தெரிகிறது.[1] பெரியபுராணத்தில் நாயன் மார்களில் பதினொருவர் வேளாளர் எனவும், இருவர் சூத்திரர் எனவும் கண்டிருப்பது காண்க. கொடையாளர் என்றால், பண்டைய வேளாண் மரபினர் எனவும், சூத்திரர் என்றால், சங்ககாலத்திற்குப் பிறகு வேளாளர் என உரிமை பாராட்டியவர் எனவும் அறிக. ஆனால் சூத்திரரின் கீழ் பின்னவர், சதுர்த்தர், பெருக்காளர், வளமையர், முத்தொழிலர், மண்மகள் புதல்வர், உழவர், ஏரின் வாழ்நர், காராளர், விளைஞர் இவர்களையும் வேளாளரையும் சேர்த்திருக்கிறது. வீரசோழியத்தில், வேளாளர் தொழில்கள் உழவு, நிரையோம்பல், வணிகம், வழிபாடு (இசை சங்கீதம்) பார்ப்பனருக்கு ஊழியம் (செய்யுள் 85) என்று கண்டிருக்கிறது. தொகையகராதி, வேளாளர் மாந்தர் இயல்புகள்: ஆணை வழி நிற்றல், அழிந்தோரை நிறுத்தல், கைக்கடனுற்றல், கசிவகத்துண்மை ஆக்கல் போற்றல், ஓவா முயற்சி, மன்னிறை தருதல், ஒற்றுமை கோடல், விருந்து புரந்தருதல், திருந்திய ஒழுக்கம் என்பவை என்று கூறுகிறது. பல்வேறு தொழில் மக்களும் வேளாளர் என வழங்க முற்பட்டதால், வேளாளரது தொழில்களும், உட்பிரிவு களும் பெருகின. தொல்காப்பியத்தில், வேளாண் மாந்தருக்கு உழுதொழில் தவிர, வேறு ஒன்றும் கூறப்படவில்லை என்பதை அறிக.

1. A. R. E. 67/1906.

அமர நிகண்டு, சூத்திரர் என்ற சொல்லுக்கு மடமை யோர், பிறர்க்கு ஏவல் செய்வோர் என்று பொருள் கூறுகிறது. வடமொழி நூல்களில், சூத்திரர் என்பதற்கு குயவர், கொற்றர், கைக்கோளர், துன்னர், கொல்லர், தட்டார், தச்சர், ஓவியர், நாவிதர், வண்ணர், கூத்தர், பாணர், வேடர், கள்வினைஞர், ஊன்வினைஞர், இழிகுலத் தோர்; மடவோர் என்று பொருள் கண்டிருக்கிறது. இதில் வேளாளர் வராதது காண்க. ஆசிரிய நிகண்டில், சூத்திரர் என்பதற்குக் களமர், மேழியர், வேளாளர், காராளர், வினைஞர், பின்னவர் எனக் கண்டிருக்கிறது. மனு மிருதி எட்டாம் அத்தியாயத்தில் சூத்திரா பற்றி கண்டிருப்ப தாவது:- ஒரு சூத்திரன் விலைக்கு வாங்கப்பட்டாலும், விலைக்கு வாங்கப்படா விட்டாலும் அவனை அடிமை வேலை செய்யும்படி ஒரு பார்ப்பனன் கட்டாயப்படுத்தலாம். ஏனென்றால் அவன் பார்ப்பனனுக்கு அடிமையாயிருக்கும்படி கடவுளால் படைக்கப்பட்டான். தன் தலைவனால் விடுவிக்கப்படினும், ஒரு சூத்திரன் தன் அடிமைத் தன்மையினின்றும் விடுவிக்கப் பட்டவன் அல்லன்; அஃது அவனுக்கு இயற்கையாய் இருப்பதனால் அவனை அதனினின்றும் யார் தாம் விடுவிக்கக் கூடும். சண்டையில் வென்று சிறையாகப்பிடித்துக் கொணரப்பட்டவன், தன் அற்றைச் சோற்றுக்காக ஊழியஞ் செய்பவன், தன் வீட்டில் வேசிக்குப் பிறந்தவன், விலைக்கு வாங்கப்பட்டவன், பிறராற் கொடுக்கப்பட்டவன், தன் முன்னோர் காலந்தொட்டு அடிமைப்படுத்தப்பட்டவன் எனச்சூத்திரர் எழுவகைப்படுவர். [1]

இவ்வாறு புதிதாய் தோன்றிய வேளாளர், சூத்திரர் என வழங்கிப் பின்னால் சற்சூத்திரர், வைசியர் எனக் குல உயர்வு பெற்றனர். ஏற்கனவே கூறியபடி வைசியர், பூவைசியர், கோவைசியர், தனவைசியர் எனப் பிரிக்கப்பட்டனர். பூவை சியர் கோயிற்களில் தொண்டு செய்பவர். கோவைசியர் பால், தயிர், நெய் உற்பத்தியில் ஈடுபட்டிருக்கும் இடையர். தனவைசி

1. பக்கம் 33 – 34 சாதி வேற்றுமையும் போலிச்சைவரும் – மறைமலையடிகள்.

யர் பொருள் ஈட்டி வட்டிக்குக் கொடுப்பவர். தனவைசியரில் பணம் படைத்தவர் சகலரும் அடங்குவர். கோவைசியர் முல்லை நில ஆயர், பூவைசியர் கோயில் பணிக்கு அர்ப்பணித்துக் கொண்ட அனைவரும் அடங்குவர் எனக் கருதற்பாலது.

தெலுங்கர் ஆட்சியில், தமிழரின் நன்மை துன்மைச் சடங்குகளை நடத்தி வைக்க, தெலுங்குப் பார்ப்பனர் ஏற்படுத்தப்பட்டதாகத் தெரிகிறது.[1] இப் பார்ப்பனக் குருக்களை ஏற்காத தமிழர் அசற் சூத்திரராகவும், ஏற்றவர் சற்சூத்திரராகவும் வழங்கலாயினர் எனக் கருத ஏதுவாகிறது. ஆனால் நடைமுறையில் இன்றைய வெள்ளாளர் தவிர்த்து, தமிழகத்தில் வேறு ஒருவரும் சூத்திரராகக் கருதப்பட முடியாது. மேனாட்டவர் டாக்டர். கால்டுவெல் உட்பட இக்கால வெள்ளாளர்தான் சூத்திரர் என்று வழங்கப்பட்டதாகவும்[2] ஆனால் தமிழருக்கு இப்பெயர் பொருந்தாது எனவும் கூறுகின்றனர். இப்புதிய வர்க்கத்தினர், தாங்கள் மேழிக் கொடியை உடையவர், மண்மகள் புதல்வர், ஏரின் வாழ்நர், காராளர், பெருக்காளர், சித்ரமேழி பெரிய நாட்டார், பூவைசியர், துளுவக் கூட்டம், கங்கை குலம், ரிஷி கோத்திரம், அக்ஷிய கோத்திரம், பல்லவராய கோத்திரம் எனப் பலவாறு கூறிக் கொண்டனர். திருவண்ணாமலை தல புராணத்தில், வெள்ளாளர் இந்திர குலம், கங்கா குலம், மண் குலம் என மூன்று பிரிவினராகக் குறிக்கப்பட்டிருக்கின்றனர். இதில் இந்திர குலம், பண்டைய வேளாண் குடியாகிய தேவேந்திர குலத்தாருக்கு உரியது. இடைக் காலத்தில் தோன்றியவர், தாங்கள் கங்கா குலம், மண் குலம் என வழங்க முற்படுவர். இவர் தங்களுக்கு குல உயர்வு தேட, சடையப்ப வள்ளலையும், கஸ்தூரி ரெங்கன் செட்டியையும் குல முதல்வர்களாகக் கொண்டு, சோழன் பூர்வ பட்டயம் என்ற நூலை எழுத ஏற்பாடு செய்திருக்கின்றனர் என்று கருதற்பாலது. ஏரெழுபது, திருக்கை வளக்கம் என்ற நூற்களும் இவர்களுக்கு ஏற்றம் தேடப் புனையப்பட்டவையே. இவைகளைக் கம்பன்

---

1. பக்கம் 18 மூலிகை மணி நளவாடு கார்த்திகை மீ மலர் 13, இதழ் 1.
2. Page 112 A comparature grammar of the Dravidian languages - Dr. R. Caldwell.

இயற்றியதாகக் கூறுவர். ஆனால், இவற்றின் செய்யுள் அமைப்பு கம்பன் கவித்திறனை வெளிப்படுத்தவில்லை. மேலும் இராமாயணத்தில் கம்பன் உழவரை மள்ளர், உழவர், கடைஞர் எனக் குறிப்பிடுகிறான். ஆனால் ஏரெழுபதில் காராளர், பெருக்காளர் என்று உழவர் சுட்டப்பட்டிருக்கின் றனர். பண்டைய இலக்கியங்களில் காராளர், பெருக்காளர் என்ற பெயர்கள் இடம் பெறவில்லை என அறிக. இந்த இரண்டு நூல்களும், பிற்காலத்தில் அனேகமாய், தெலுங்கர் ஆட்சியின்போது இயற்றப்பட்டிருக்க வேண்டும். இவ்வாறு புதிதாய்த் தோன்றிய மரபினர், தாங்கள் வெளியேயிருந்து தமிழகத்தில் குடியேற்றப்பட்டதாகக் கூறி வந்திருக்கின்றனர். சேக்கிழார், தொண்டை மண்டலத்தில் சோழனால் குடியேற்றப் பட்ட நாற்பத்தெண்ணாயிரம் குடியைச் சேர்ந்தவர் என, உமாபதி சிவாச்சாரியார் கூறுகிறார்.[1] பாண்டிய மண்டலத் திலும், நாற்பத்தெண்ணாயிரம் வேளாண் குடிகள், பாண்டியன் உக்கிரப் பெருவழுதியால் குடியேற்றப்பட்டதாக, ஒரு பழம் பாடல் வழக்கில் உள்ளது. இப்பாடல்களை ஏற்கனவே எடுத் தாண்டிருப்பதை வாசகர் அறிவர். முன்பு கூறியது போன்று, இவைகள் பண்டைய வேளாண் மரபினரைக் குறிக்கின்றனவா? அல்லது புதிதாய்த் தோன்றிய வேளாண் மரபுக்கு உயர்வுதேட பிற்காலத்தில் புனையப்பட்டனவா? என்பது சிந்தனைக்குரியது. சேக்கிழார், நாயன்மார்களில் பதினொருவரை, வேளாண் குடி எனவும், இருவரை சூத்திர நற்குலம் என்றும் கூறுகிறார்.[2] ஆனால் உமாபதி சிவாச்சாரியார், சூத்திர நாயன்மார் இருவரை யும் சேர்த்து, பதின்மூவர் வேளாண்குடி என்று கூறுகிறார்.[3] இவர் காலம் கி. பி. 14ஆம் நூற்றாண்டு என்பர். சேக்கிழார் காலம் கி. பி. 12ஆம் நூற்றாண்டு ஆகும். இவர் காலத்தில் சூத்திரராகக் கருதப்பட்டவர் கி. பி. 14ஆம் நூற்றாண்டில் வேளாண் குடியாக குல உயர்வு பெற்றனர் போலும். இவர் நாலாஞ்சாதி எனப் பெருமை பாராட்டி வந்திருக்கின்றனர்.

---

1. சேக்கிழார் புராணம் செ. 39.
2. பெரியபுராணம் (இளையான்குடி மாறர், வாயிலார்).
3. சேக்கிழார் புராணம் செ. 39.

தமிழ் வேந்தர் ஆட்சிக்குப் பிறகு, தமிழ் மொழி புறக்கணிக்கப் பட்டு ஆரியமும், தெலுங்கு மொழியும் ஊக்குவிக்கப்பட்டிருக் கின்றன. தமிழ் இலக்கியங்கள், இலக்கணங்கள் இவற்றில் சனுதனக் கொள்கைகள், நாட்டில் பண்டுதொட்டு நிலேத்து வருவதாகக் காட்டுவதற்கு, நால்வகை வருணம் (சிலப் பதிகாரம் 14–180), இழிசினன் என வெல்லாம் இடைச் செருகலாகச் செய்யுள்கள் புனேந்து நுழைத்திருக்கின்றனர்.

செயிற்றியத்தில் சூத்திரர்பற்றி,

'அறம் பொருள் இன்பம் அரசர்சாதி
அறம் பொருள் வணிகர்சாதி யென்றனவும்
அறமேற சூத்திரர் அங்கமாகும்'

என்று ஒரு செய்யுள் காணப்படுகிறது. சிலப்பதிகார உரையில் அடியார்க்கு நல்லார் 'சூத்திரரணியின் தோகையர் கனக நெல் வாய்ப்ப மன்னி மகிழ்ந்து வாழ்குபரே' என்ற செய்யுளே மேற் கோளாகக் காட்டியிருக்கிருர். சூத்திரர், சங்க இலக் கியங்கள், பதினெண் கீழ்க் கணக்கு நூல்களில் இடம் பெற வில்லே. அதேபோன்று வைசிகன் என்ற பெயரும். தொல் காப்பியத்தில் காணும், 'வைசிகன் பெறுமே' வாணிக வாழ்க்கை என்பது, தமிழ் மரபுக்குப் பொருந்தாது. எல்லாத் திணே நிலே மக்களும் வணிகத்தில் ஈடுபட்டனர். வைசிகன் என்ற தனிமரபு தமிழரில் இல்லே.

தமிழகத்தில் ஏற்கனவே கூறியது போன்று, நான்குவித வருணங்கள் இல்லே. இடையில் இவை புகுத்தப்பட்டிருக் கின்றன. புதிதாய்த் தோன்றிய சாதிகளுக்குள் வேளாளர், வெள்ளாளர் என்ற பெயர் பெற்று, சமூகத்தில் ஆரியப்பார்ப் பனருக்கு அடுத்த இடத்தைப் பெற்று, கல்வியிலும் இவரைப் பொருளாதாரத்திலும் முன்னேறியவரைக் கருத்திற் கொண்டு பலரும் இவரைப் பண்டைய வேளாண்குடி, பண்டைய வேளாண்குடி, இவரது பண்ணே அடிமை என எழுதி வருகின் றனர். இப்புதிய வேளாண் மரபினரிடமிருந்து வேறுபடுத்திக் காட்ட, பண்டைய வேளாண் மரபினர், தங்களே வேந்தர் குலம் எனச் சுட்ட, தேவேந்திரகுல வேளாளர் என வழங்க லாயினர். அடுத்து குலப்பட்டங்கள் பற்றி ஆராய்வோம்.

# குலப் பட்டங்கள்.

இன்று தமிழகத்தில், ஒவ்வொரு பிரிவினருக்கும், ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட குலப் பட்டங்கள் வழக்கில் இருக்கின்றன. ஒரே குலப் பட்டம், பல பிரிவினருக்கும் பொதுவாகவும் வழங்குகிறது. உதாரணமாக அய்யர் என்ற குலப் பட்டம், ஆரியப் பார்ப்பனரில் சிவமதத்தைச் சார்ந்தவருக்கும், சௌராஷ்டிரப் பட்டு நூல் நெசவாளருக்கும், தேவேந்திர குலத்தாரின் குருக்களுக்கும், தென் இந்திய கிறித்துவ மறையின் குருக்களுக்கும், குலம் அல்லது தொழிலை உணர்த்தும் பட்டப் பெயராக அமைந்துள்ளது. அதே போன்று பிள்ளை, முதலி, கவுண்டர், தேவர் என்ற பட்டங்களை ஒன்றுக்கு மேற்பட்ட வகுப்பார் மேற்கொண்டிருக்கின்றனர். ஆதலால் அய்யர், முதலி, பிள்ளை, தேவர், கவுண்டர் என்ற குலப் பட்டங்களைக் கொண்டு, ஒருவரின் வகுப்பைத் தெரிந்துகொள்ள இயலாது. தமிழகத்தில் வாழும் முக்கியமான வகுப்புக்களையும், அவருக்கு வழங்கும் குலப் பட்டங்களையும் கீழே காண்போம்.

ஆரியப் பார்ப்பனர்: அய்யர், அய்யங்கார், ஆச்சாரி, சாஸ்திரி, கனபாடிகள், பட்டர், குருக்கள், தீட்சதர்.

அகம்படியர்: தேவர், சேர்வை, அகம்படியன், பிள்ளை, முதலியார்.

மறவர்: தேவர், சேர்வை, தலைவர், கரையாளர்.

கள்ளர்: தேவர், சேர்வை, அம்பலகாரர், முதலியார், கண்டர், தென்கொண்டார், வாண்டையார், மண்கொண்டார், சிங்கராயர், பல்லவராயர், மழவராயர், காளிங்கராயர் (முதலிய நூற்றுக்கு மேற்பட்ட குலப் பட்டங்கள் வழங்குகின்றன).

பரிவாரம்: சேர்வைகாரர், மணியக்காரர், ஊழியக்காரர்.

அம்பலகாரன்: அம்பலகாரர், சேர்வை, மழவரா யர், வன்னியர், மூப்பன், முத்துராசா.

வலையர்: அம்பலகாரர், மூப்பன், சேர்வை, வன்னியர், முத்துராசா.

செம்படவன்: நாட்டான், கவுண்டன், மணியக்காரன், பிள்ளை.

பட்டணவன்: செட்டியார், முதலியார்.

கைக்கோளர்: முதலியார், அடவியர், நயினார், மூப்பன்.

செங்குந்தர்: முதலியார்.

சாலியர்: அடவியர்.

சேனைத் தலைவர்: பிள்ளை, முதலியார், செட்டியார்.

இசைவேளாளர்:<br>தேவரடியார்: } பிள்ளை, முதலியார்.<br>மேளக்காரர்:

வேளாளர்:<br>வெள்ளாளர்: } பாண்டிய நாடு. } பிள்ளை.<br>சோழ நாடு.<br>தொண்டை மண்டலம்: முதலியார்.<br>கொங்குநாடு: கவுண்டர்.

மருத்துவர்: பிள்ளை, முதலியார்.

பள்ளி:<br>படையாட்சி: } படையாட்சி, கவுண்டர், நாயக்கர், இராயன், நயினார், சேர்வை, சம்புவ ராயன், கண்டர், மழவராயன்.<br>வன்னியர்:

பறையர்: சாம்பார், பிள்ளை.

இடையர்: கோனார், பிள்ளை, மன்றாடி, கரையாளன், சேர்வை, மணியக்காரன், முக்குந்தன்.

சாணார், நாடார்: சாணான், நாடாவி, நாடார், சேர்வை, முக்குந்தன், மூப்பன், கிராமணி.

கம்மாளர்: ஆசாரி, ஆச்சாரி, நயினார், பத்தர்.

சௌராஷ்டிரப் பட்டு நெசவாளர்: } அய்யர், அய்யங்கார், சாஸ்திரி.

தேவேந்திரகுல வேளாளர்: குடும்பன், காலாடி, பண்ணடி, பாண்டியன், வாய்க்காரன், பணிக்கன், பலகன், மூப்பன்.

குலப்பட்டங்கள், தமிழகத்தில் எப்போது பழக்கில் வந்தன என்பது பற்றி ஆராய்வோம். சங்க காலத்தில் ஒரு மரபினருக்கும், குலப்பட்டம் வழக்கில் இல்லை. மக்கள் இன வாரியாகவும், திணை நிலை மற்றும் தொழிற் பெயர் வாரியாகவும் வழங்கி வந்தனர் என்பது, கூலவாணிகசாத்தனுர், வெண்ணிற்குயத்தியார், இடையன்சேந்தன்கொற்றன், உறையூர் மருத்துவன்தாமோதரனுர், குறமகள் இளவெயினி, மதுரை அறுவைவாணிகன் இளவேட்டனுர், மருதம்பாடிய இளநாகனுர் என்ற சங்க காலப்புலவரின் பெயர்களால் விளங்கும். பண்டைக்காலத்தில், இக்காலத்தில் உள்ளதைப் போன்று, சிறப்புப் பட்டங்கள் வழக்கில் இருந்திருக்கின்றன. அப்பட்டங்கள் இன்று போலன்றி, பெயருக்கு முன் வழங்கியிருக்கின்றன. இது பற்றியே, தொல்காப்பியத்தில் :

'சிறப்பின்ஆகிய பெயர்நிலைக் கிளவிக்கும்
இயற்பெயர்க் கிளவி முற்படக்கிளவார்'

(தொல் சொல் 41)

என்ற விதி ஏற்பட்டது. இவ்விதிப்படியே, சங்க காலத்தில் முது குடுமிப்பெருவழுதி, சேரமான் சேரலாதன், சோழன் செருப்பாழி யெறிந்த இளஞ்சேட் சென்னி, கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி, சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், பாண்டியன் கூடக் காரத்துத் துஞ்சிய மாறன் வழுதி என்றவாறு, இயற் பெயருக்கு முன்னரேயே, சிறப்புப் பெயர்கள் வழங்கி வந்தன. இடைக்காலத்தில், தமிழ் வேந்தர் ஆட்சியின் போது, காவிதி, ஏனுதி, மூவேந்த வேளான், பல்லவராயன், காளிங்கராயன், மழவராயன் போன்ற சிறப்புப் பட்டங்கள், மன்னரால் அரசியல் மற்றும் படைத்தலைவர்களுக்கு வழங்கப்பட்டன. அப் பட்டங்கள் யாருக்கு வழங்கப் பட்டதோ, அவர் மட்டும், அவற்றைத் தங்கள் பெயருக்கு முன்னதாகக் கொண்டு வழங்கினர். அவற்றைப் பெயர்

களுக்குப் பின்னுல் வழங்குவதோ, அல்லது யாருக்கு வழங்கப் பட்டதோ அவர் தவிர்த்து, அவரது வழி வந்தோர், அல்லது அவரது பிரிவைச் சேர்ந்த அனைவருமே வழங்குவதோ, வழக்கில் இல்லை. இம்முறை, தமிழகம் தெலுங்கர் ஆட்சிக்கு உட்பட்டபோது, முற்றிலும் மாறியது எனலாம். தமிழகம், தமிழ் வேந்தர் ஆட்சியில் இருக்கும் வரை, ஒரு வகுப்பாருக்கும் குலப்பட்டம் வழங்கியதென்பதற்கு, எவ்விதச் சான்றுகளும் இருப்பதாகத் தெரியவில்லை. ஆரியப் பார்ப்பனருக்கு அய்யர், அய்யங்கார், இன்றைய வேளாளர், வெள்ளாளருக்கு முதலி, பிள்ளை என்றும் கள்ளர், மறவர், அகம்படியர் என்ற முக்குலத் தோருக்குத் தேவர் என்றும் குலப்பட்டம் வழங்கப்படவில்லை. அய்யன் என்ற பெயர் தந்தை, ஆசிரியன், வயதில் மூத்தவன், தெய்வம் இவற்றை உணர்த்தும். திருமலை நாயக்க மன்னன், அய்யன் என்று வழங்கப்பட்டது பற்றி, ஏற்கனவே குறிப்பிட்டிருப்பதை வாசகர் அறிவர். தேவர், பிள்ளை, பிள்ளையன், முதலி என்ற பட்டங்கள் முனிவர், மடாதி பதிகள், சமயத் துறவிகள் முதலியோருக்கு வழங்கின. சைவ சமயப் பெரியார் மூவர் முதலி எனவும், சமய ஆசானிடம் உபதேசம் பெற்றவர் பிள்ளை, பிள்ளையன் எனவும் பட்டம் தரித்து வந்தனர். நம் பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை, திருமாளிகைப் பிள்ளை, விளாஞ்சோலைப் பிள்ளை, வேம்பத்தூர் பிராமணப் பிள்ளையன், இவர்கள் இதற்கு எடுத்துக்காட்டு. இவரில் தாழ்த் தப்பட்ட வகுப்பினர், ஆரியப்பார்ப்பனர் மற்றும் இதர வகுப் பினர் இருந்தனர். பாண்டிய, சோழ மன்னர் இடைக்காலத்தில் தேவர், உடையார் என்ற பட்டத்தையும் தரித்திருந்தனர். இவர் ஆட்சிக்குப் பிறகு, பாளையப்பட்டு களாகக் கள்ளர், மறவர் நியமனம் பெற்றதால், இவர் தேவர் என்ற பட்டத்தைத் தங்களுக்கு உரித்தாக்கிக் கொண்டனர். அகம்படியரில் ஒரு சிலர், தேவர் என்ற குலப்பட்டத்தை, மிகவும் சமீப காலத்திலேயே மேற்கொண்டனர் என்று தெரிகிறது. பாண்டிய நாட்டில் இவர் சேர்வை என்றே வழங்கி வருகின்றனர்.

இம்மாதிரிக் குலப்பட்டங்களைக் காட்டி, ஒவ்வொரு மரபின ரும், தங்களுக்கு சமூகத்தில் ஏற்றம் தேடமுனைகின்றனர்.

ஆனல், இப்பட்டங்கள் உணர்த்தும் பொருளுக்கும், இந்த மரபினர்க்கும் எவ்வித உடன்பாடும் இல்லை என அறிகிறேம். இவை நாட்டில் குழப்பத்தை ஏற்படுத்தவே தோற்றுவிக்கப் பட்டதாகக் கருதற்பாலது. W. பிரான்சிஸ் இது பற்றிக் கூறுவதாவது: குலப்பட்டங்களும், மரபுப் பெயர்களும் சமீபகாலத் திலேயே தோன்றின. அவற்றிற்கு என்ன பொருள் கண்டாலும், அவற்றின் தோற்றத்தின் அடிப்படை என்ன என்பதை அறிவதற்கில்லை., [1]

(Caste titles and names are however of recent origin and little can be inferred from them whatever their meaning may be shown to be. ) [1]

இதர சமூகங்களின் குலப்பட்டாக்களை ஆராய்ந்தால் விரியும் என்பதால், ஈண்டு தேவேந்திர குலத்தாரின் குலப்பட்டங்களை மட்டும் ஆராய்வோமாக.

**தேவேந்திர குலத்தாரின் குலப்பட்டங்கள் :—** தேவேந்திர குலத்தாருக்குப் பாண்டிய நாட்டின் நெல்லை மாவட்டம் செங்கோட்டைப் பகுதி தவிர, பாண்டிய நாட்டின் எல்லாப் பகுதியிலும், கொங்கு நாட்டின் பெரும் பகுதியிலும், குடும்பன் என்றும், சோழ நாட்டில் மூப்பன், காலாடி, வாய்க்காரன், பணிக்கன் என்றும், கொங்கு நாட்டின் சில பகுதிகளில் பண்ணாடி, பலகன் என்றும் குலப்பட்டங்கள் வழக்கில் இருக்கின்றன. இப் பட்டங்கள் உணர்த்தும் பொருள் பற்றியும், அவை எவ்வாறு வழக்கில் வந்தன என்றும், ஈண்டு ஆராய்வோம்.

**குடும்பன் :—** இப்பட்டம், முக்கூடற் பள்ளு தோன்றிய பின், பெருவழக்கில் வந்திருக்கின்றது. அதற்கு முன்பு கரிவலம் வந்த நல்லூர், சீவிலிபுத்தூர் கல்வெட்டுகளில், தேவேந்திரக் குடும்பன் என்று பொறிக்கப்பட்டிருக்கிறது. குடும்பன் என்பதற்குத் தமிழ் அகராதிகளில், பள்ளரின் தலைவன் என்று பொருள் கண்டிருக்கிறது. சென்னைப்

1. Page 78 Census of India 1901. Vol XV Part I Report W. Francis.

பல்கலைக் கழக அகராதியின்படி (Madras Lexicon), குடும்பன் என்றால், நிலம் அளப்பவன் என்று பொருள். கி. பி. 9-10ஆம் நூற்றாண்டுகளில் தோன்றிய திவாகரம், பிங்கலந்தை நிகண்டு களில், குடும்பன் என்ற சொல் இடம்பெறவில்லை ஆனால், குடும்பனி என்ற சொல் காணப்படுகிறது. இந்நிகண்டுகளில், குடும்பினிக்குக் குடும்பத் தலைவி என்று பொருள் கண்டிருக் கிறது. கி. பி. 16ஆம் நூற்றாண்டில் தோன்றிய சூடாமணி நிகண்டின்படி, குடும்பினி என்பதற்குத் தேவி என்று பொருள். தேவி என்பது, மன்னரின் துணைவியையும், பெண் தெய்வத் தையும் குறிக்கும். மன்னரின் பட்டத்து ராணியைக் கோப்பெருந்தேவி என்று வழங்குதல் காண்க. ஆக கி. பி. 9-10-ஆம் நூற்றாண்டுகளில், குடும்பினி என்ற பெண்பால் பெயர் உலக வழக்கில் இருந்த போது, குடும்பன் என்ற ஆண்பால் பெயர் வழக்கில் இருந்திருக்க வேண்டும். குடும்பன் என்ற குலப்பட்டம் வழக்கில் இருக்கும் பகுதிகளில் ஒவ்வொரு ஊரிலும், இம்மக்களின் ஊர்த் தலைவனை, ஊர்க் குடும்பன் என்று வழங்கி வருகின்றனர். ஊர்க்குடும்பன் என்றால், ஊருக்குக் குடும்பு பார்க்கிறவன்; ஊர் சபை, ஊர் மன்றம் இவற்றிற்குத் தலைவனாக இருக்கிறவன் என்று பொருள். சங்க இலக்கியங்களில் ஊரன், மகிழ்நன், கிழவன் என்று வழங்கும் பெயர்கள், அன்றுள்ள ஊர்த்தலைவர்களையே சுட்டு கின்றன. இம்மக்களை இழிமக்களாகச் சித்தரித்துப் பாடியிருக் கும் முக்கூடற் பள்ளில் "குடும்பு செய்துராருக் குழைத்தான்"

(செ 88)

என்று கண்டிருப்பது காண்க. இச் செய்யுள் மூலம், அக்காலத்தில், இம் மக்கள் தங்கள் மரபினருக்கு மட்டுமின்றி, ஊரிலுள்ள எல்லாக் குடிகட்கும், குடும்பு பார்த் தனர் என்று அறிகிறோம். பண்டைக் காலத்தில், மருதநிலப் பகுதியில் ஊர் மன்றங்கள் இருந்தன. அவற்றின் தலைவர் தான், ஏற்கனவே குறிப்பிட்டது போல் ஊரன், மகிழ்நன், கிழவன் என்றும், ஊர்காவலன், புரவலன் என்றும்

வழங்கப்பட்டனர். இடைக்காலத்தில், சோழர் ஆட்சி தமிழகத்தில் பரவிய போது, ஊராட்சி பற்றிய பல்வேறு காரியங்களைக் கவனிப்பதற்கு ஏற்பட்ட ஊர்ச்சபையின் வாரியங்கள், குடும்பு என வழங்கப்பட்டதாக ஏற்கனவே கண்டோம். ஊரானது, பல தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு தொகுதியிலிருந்தும், குட ஓலை மூலம் அங்கத்தினர் தேர்ந்தெடுத்தனர். இவ்வாறு தேர்ந்தெடுத்த அங்கத்தினர் ஏரிவாரியம், தோட்ட வாரியம், பஞ்ச வாரியம், கழனி வாரியம், ஆட்டை வாரியம், பொன் வாரியம் எனப் பல்வேறு வாரியங்களாகப் பிரிக்கப்பட்டு, அந்தந்த வாரியத்திற்கும் அமர்த்தப்பட்டனர். இக்காலத்தில் தேர்தல்களுக்குச் சிலவிதிகள் ஏற்பட்டிருப்பது போன்று, அக்காலத்திலும் சில விதிகள் வழக்கில் இருந்தன. இக்காலத்தில், ஒருவர் எத்தனை முறை வேண்டுமானாலும் அங்கத்தினருக்கு அபேட்சகராக நிற்பதற்குத் தடை இல்லை. ஆனால் அக்காலத்தில், ஒருவர் பத்து ஆண்டுகளுக்கு ஒரு முறைதான், ஊர்ச்சபையின் தேர்தலுக்கு அங்கத்தினராக நிற்கலாம். அவருக்கு குறைந்தபட்ச வயது 30; அதிகபட்ச வயது 60; இதற்குள் இருக்கவேண்டும். வயது வரம்பு விதி இடையிடையே மாற்றப்பட்டிருக்கிறது. அவர் உறவினர் ஒருவரும், முன்னால் அங்கத்தினராக இருந்திருக்கக் கூடாது. கையூட்டு வாங்காதவராக இருக்கவேண்டும். நல்ல கல்வி அறிவு உள்ளவராகவும், அரசுக்குத் தீர்வை கட்டுபவராயும், குறைந்தது கால்வேலி நஞ்சை நிலம் உள்ளவராகவும், அவரது நடத்தையில் எவ்விதமான ஒழுங்கீனமும் இல்லாதவராகவும் இருக்கவேண்டும். இக் குடும்பு முறை விதிகள் உத்தரமேரூர், திருச்செய்நல்லூர் கல்வெட்டுகளில் பொறிக்கப்பட்டிருக்கின்றன. இம்மாதிரிப் பல வாரியங்களையும் மேற்பார்வையிடும் சபை, குடும்பு வாரியம் என்று வழங்கப்பட்டது. இது பற்றிக் கல்வெட்டுகளில் (குடும்புவாரியப் பெருமக்களும், தோட்டவாரியப் பெருமக்களும்)[1] 'கலத்து இப்பாட்டை குடும்பு வாரியப் பெரு மக்களும், ஏரி வாரியப் பெருமக்களும் இருநூற்றுவப்

---

1. A. R. E. 690/1904.

பெருமக்களும் [1] என்று குறிக்கப்பட்டிருப்பது காண்க.

சோழர் காலத்தில் வெள்ளாளர் குடும்பு பார்த்தனர் என்பது, தஞ்சை மாவட்ட மன்னார்குடி கைலாசநாதசாமி கோவிலிலுள்ள கல்வெட்டில்,

" வெள்ளாழரையா......
பிடாகைகளுக்கு குடும்பும் புரவுஞ்செய்தாரையாதல்
ஊர்க்கணக்கரையாதல் பிராமணரிலும்
வெள்ளாழரிலும் முதலிகளுக்கு கொளச் சொன்னார்" [2]

என்ற கல்வெட்டாலும், மன்னார்குடி இராஜகோபாலபெருமாள் கோவிலிலுள்ள.

" ஆண்டு தோறும் குடும்பு மாறி இடவும்......
நாட்டில் வெள்ளாழரையா......
குடும்பு மரவும் செய்தாரையாதல் ஊர்க்கணக்க
ரையாதல் பிராமணரிலும் வெள்ளாழரிலும்
முதலிகளுக்கு கொளச் சொன்னார் " [3]

என்ற கல்வெட்டாலும் நன்கு விளங்கும்.

ஏற்கனவே குறிப்பிட்டது போல், அக்காலத்தில் குடும்பு பார்த்த வெள்ளாளர், இன்றையத் தேவேந்திரகுல வேளாளரே. இக்காலத்திய வேளாளர், வெள்ளாளர் அன்று வெவ்வேறு தொழில் மக்களாக இருந்தனர். இவர் பூரணவளர்ச்சி பெற்றது, நாயக்கர் காலத்திலும், அதன் பின் ஆங்கிலேயர் காலத்திலுமே என்பது வெள்ளிடைமலை. சோழர்கால மரபையொட்டி தேவேந்திரகுல மக்களிடம், இன்றும் குடும்புமுறை நீடித்து வருவதை, மாவட்டக் குறிப்புகளாலும், 1961-ல் எடுத்த மக்கள் குடிக் கணக்குக் குறிப்புகளாலும் அறியலாம். இம்மக்கள் மத்தியில், பஞ்சாயத்து முறை அமுலில் இருந்து வருவதைப் போன்று, இன்றைய உயர்ந்த சாதியாரின் மத்தியில், அது இல்லாதது குறிப்பிடத்தக்கது.

அடுத்து குடும்பு என்ற சொல் எப்படிப் பிறந்தது என்று

1. A. R E. 688/1904.
2. S 11 Vol VI. A. R. E. 98 of 1897.
3. A. R. E. 104/1897.

பார்ப்போம். இச்சொல் குடி என்னும் அடிப்படையிலிருந்தே தோன்றியிருக்க வேண்டும். குடி என்பதிலிருந்து, குடிமை, குடித்தனம், குடிகை, குடில், குடிசை, குடும்பம், குடும்பு, குடும்பி, குடியானவன் என்ற சொற்கள் பிறந்திருக்கின்றன. குடி என்ற சொல், ஊர்ப்பெயர்களில் அமைந்து, குடியிருப்பை யும் உணர்த்தும்: உறவு முறையுடைய குடும்பத்தார் ஒரு குடி யினராகக் கருதப்படுவர். இத்தகையப் பல குடியினர் சேர்ந்து வாழுமிடம், குடியிருப்பு என்றும், குடி என்றும் சொல்லப்படும். திருக்குறளில், குடிமை என்னும் அதிகாரத்தில், 'வழங்குவதுள் வீழ்ந்தக்கண்ணும் பழங்குடி பண்பிற்றலை பிரிதலின்று' (செ 985) என்ற செய்யுளில், பழங்குடி என்பதற்குப் பரிமே லழகர் சேர, சோழ, பாண்டியர் என்றுப் போலத் தொன்று தொட்டு மேம்பட்டுவரும் குடி என்று பொருள் கண்டிருக்கிறார்.

குடுமி என்பதற்கு வெற்றி, உச்சி, ஆண்மயிர் என்று பிங்கலந்தை நிகண்டில் பொருள் கண்டிருக்கிறது. சங்க காலத்தியப் பாண்டிய மன்னரில் ஒருவன், முதுகுடுமிப் பெருவழுதி என அழைக்கப்பட்டான் என்பது, 'குடுமிக் கோமாற் கண்டு' (புறம் 64) என்ற செய்யுளால் அறியலாம். குடும்பி என்பதற்கு சமுசாரி என்று பொருள்படும் என்பது, குடும்பி யெனுங் குறிப்பை மாற்றி (ஞானவா — உற்ப 69) என்ற செய்யுள் மேற்கோளால் அறியலாம். குடும்பம் என்பது சமுசாரம் என்பதையே குறிக்கும் என்பது 'குடும்பத் தைக் குற்ற மறைப்பான்'' (குறள் 1029) "உறவினர் குடும்பந்தாங்குடிப் பிறந்தாரினே" (கம்ப ராமா - சேதுப 53) என்ற மேற்கோள்களால் புலனாகும். அடுத்து, குடும்பன் குடும்பத் தலைவன் எனப் பொருள்படும் என்பது ஏழைக் குடும்பனாகி (தாயு. தே. சோ.) என்ற தாயுமானவர் பாடலால் அறியலாம். குடும்பன் என்ற சொல், பொதுவாக எல்லா மரபினருடைய குடும்பத் தலைவரைக் குறிக்கலாமென்றாலும், அது ஏற்கனவே குறிப்பிட்டது போல் பண்டு தொட்டு வரும் வழக்கப்படி, தேவேந்திர குலத்தாரின் ஊர்மன்றத் தலைவரையும், அவரின் ஒவ்வொரு குடும்பத்தின் தலைவரையும் குறிக்கும் குலப்பட்டமாக வழங்குகிறது. குடும்ப

வாழ்க்கை முதன் முதல் இம்மக்களிடமே தோன்றியதாலும், இவர்களைப் பார்த்தே மற்ற மக்களும் திருந்திய குடும்ப வாழ்க்கை மேற்கொண்டதாலும், குடும்பன் என்ற சிறப்புப் பெயர் இவர்களுக்கே உரிக்காபெற்று எனலாம். அல்லி அரசாணி மாலையில் அர்ச்சுனனை, பெண் ரூபங்கொண்ட கிருஷ்ணன் 'வாடா குடும்பனீமதி பழிவரனென் றழைத்தார்', என்று பாடியிருப்பதிலிருந்து, தேவேந்திர குலத்தாருக்கான குடும்பன் என்ற பட்டம், அருச்சுனனுக்கும் சூட்டப்பட்டிருப்பதால், பாண்டவரும், மூவேந்தரும் ஒரே மரபினர் எனக் கருத ஏதுவாகிறது. [1] பாரதப் போரில், மூவேந்தர் கலந்து கொண்டதாகச் சங்க இலக்கியங்களில் மேற்கோள்கள் காணக் கிடைக்கின்றன என்பதை அறியவும் இன்று உயர்குலமென்று பெருமை பாராட்டும் அநேக மரபினரின் குடும்ப வாழ்க்கை சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன்பு வரை, எவ்வாறு அமைந்திருந்ததென்பது பற்றி மாவட்டக் குறிப்புகளும், தென்னிந்தியக் குலங்களும் குடிகளும் என்ற நூலும் விரிவாய் எடுத்து இயம்புகின்றன. இவரில் பெரும்பாலோர், திருந்திய குடும்ப வாழ்க்கை, சமீப காலத்திலேயே மேற்கொண்டனர் என்பதும், இவர்கள் திருந்தாத வாழ்க்கையுடையவர் என்று காட்டுவதற்குரிய அடையாளக் கூறுகள் இவர்களின் பழக்க வழக்கங்களில் இன்றும் எஞ்சி நிற்பதும் இதற்குச் சான்ருகும். தெலுங்கரில் பல பிரிவினர், தமிழகத்திற்கு வந்து பல நூற்ருண்டுகள் சென்ற பின்னுங்கூட, திருந்திய வாழ்க்கை மேற்கொள்ளவில்லை என்பது, மாவட்டக் குறிப்புகள், மற்றும் மேனுட்டார் எழுதிச் சென்ற நூல்களிலிருந்து அறியற்பாலது. இது பற்றி எட்கர் தர்ஸ்டன் குறிப்பிடுவதாவது :—

'தமிழகத்தில் கம்மவார்களிடத்தில்' மணமகன் சில சமயங்களில், மணமகளைவிட அதிக இளமையாய் இருக்கின்றனர். மக்கள் கணக்கெடுப்பில், இருபத்திரெண்டு வயதுப் பெண், இரண்டு வயதுள்ள தன் கணவனை, தாய் தன் மகனை இடுப்பில் தாங்கிச் செல்வதுபோல் தூக்கிச் செல்வதாகக் கண்டிருக்கிறது. [2]

1. பக்கம் 72 அல்லி அரசாணி மாலை.
2. Page 100 Vol I. Castes and Tribes of Southern India.

'In Tamil Country among the Kammas the bride is said to be some times much younger than the bridegroom and a case is on record of a wife of twenty two years of age, who used to carry her husband in her lap as a mother carries her child.' [1]

இதேபோன்று கொங்கு நாட்டில், கவுண்டர்களிடம் சிறு பையன்களுக்கு வயதுவந்த பெண்ணை மணக்கும் பழக்கம் வழக்கில் இருந்து வருகிறது. மணமான பெண்ணுக்கு, கணவன் கடமையை, மணமகனின் வீட்டிலுள்ள வயதுவந்த ஆண்கள் மேற்கொள்வர். [2] இந்தியப் பழங்குடிகளிடையே ஒருவன் பல பெண்களை மணக்கும் வழக்கம் இருந்து வருகிறது. ஒருத்தி பல ஆண்களைக் கணவர்களாக ஏற்கும் காசா (Khasa) போன்ற பழங்குடிகளிடையேயும் குடும்ப அமைப்பு நாம் முதலில் வகைப்படுத்திய அமைப்புகளுக்குச் சற்றுப் புறம்பானதாகவே காணப்படுகிறது இக்காச பழங்குடிகளில் உடன்பிறந்த அண்ணன் தம்பியர் அனைவரும் ஒரு பெண்ணை மணக்கின்ற பழக்கம் உள்ளது. அப்படி மணந்த ஒருத்தியிடம் எவற்கும் தனி உரிமையில்லாதது குறிப்பிடத் தக்கது. எனவே இவர்கள் அமைக்கும் குடும்பம் ஒருவகையதே. மேற்சொன்ன இருவகையும் கலந்த வழக்கம் நீலகிரியிலுள்ள தோடர்களிடம் இன்று நிலவுகிறது. சில ஆண்கள் சில பெண்களை மணப்பதே அவ்வகை. இவ்வாண்களும், பெண்களும் எக்கட்டுப்பாடும் இன்றி, ஒருவரையொருவர் சேரலாம். ஆனால் எந்த ஓர் ஆணுக்கும், எந்த ஒரு பெண்ணிடமும் தனி உரிமை இல்லை. இது கூட்டு மணம் (Group Marriage) எனப்படும். தெலுங்கரில் தொட்டிய நாயக்கர் ஒரு பெண்ணை குடும்பத்திலுள்ள ஆண்கள் மற்றும் உறவினர் அனைவரும் மனைவியாகக் கொண்டிருந்தனர் [3] என்று எட்கர் தர்ஸ்டன் கூறுகிறார். கொங்கு வேளாளர், கள்ளர், காரைக்காட்டு (கார்காத்த) வெள்ளாளர் இவர்கள் பின்பற்றி வந்த வாழ்க்கை முறை திருந்தாதென்றும், ஒரு பெண்ணுக்கு ஒரு கணவன் என்ற முறையின்றி கேரளாவிலுள்ள நாயர்

1. Page 100 Vol I. Castes and Tribes of Southern India.
2. Page 193 Vol II Castes and Tribes of Southern India. E Thurston.
3. Pages 184-185-193 Vol VII Castes and Tribes of Southern India E. Thurston.

வகுப்பைப் போன்று, ஒழுங்கீனமான முறையில் அமைந் திருந்ததென்று மாவட்டக் குறிப்புகளிலிருந்தும், குலங்களும் குடிகளும், என்ற நூலிலிருந்தும் தெரிகிறது. மறவர் மாப் பிள்ளைக்குப் பதிலாகத் தடிக்கம்பை நிறுத்தி, மணமகளுக்குத் தாலி கட்டுவர். [1] என்று அறிகிறோம். சோழப் பேரரசு காலத் தில் தமிழகம் முழுவதும், ஊராட்சி குடும்பு முறையில் நடை பெற்று வந்தது. சோழ அரசு வலிகுன்றிய போது, பாண்டிய நாடு தன்னுரிமை பெற்றதோடு, அது சோழ நாட்டையும் வென்று தன் ஆதிபத்தியத்திற்குள் கொண்டு வந்தது.

கி பி 18ஆம் நூற்றுண்டின் மத்தியில் கூடப்பாண்டியர் இருந்ததாகக் குற்றுலக் கல்வெட்டு கூறுகின்றது. ஆதலால் இவர் ஆட்சிக்குட்பட்ட பகுதியில், ஊராட்சி குடும்பு முறையில் தொடர்ந்து நடைபெற்றிருக்கிறது. இதனுலேயே, ஏற்கனவே குறிப்பிட்டது போல், முக்கூடற் பள்ளில் 'குடும்பு செய்தூராருக் குழைத்தான்' (செ 88) என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. விசயநகர ஆட்சிக்கு முன்பு, தமிழகம் முழுவதும் பாண்டியர் ஆட்சிக்கு உட்பட்டு, குடும்பு முறை நீடித்து வந்தாலும், பாண்டியநாடு, கொங்குநாடு இங்குள்ள தேவேந்திர குலத்தார் மட்டும் குடும்பன் என்ற பட்டம் கொண்டிருக்கின்றனர். சோழ நாட்டில், இம் மக்கள் மூப்பன், காலாடி, வாய்க்காரன், பணிக்கன் என்ற பட்டங்கள் தரித் திருக்கின்றனர். இம் மக்களின் குலப்பட்டங்கள் எவ்வாறிருந் தாலும், பண்டைய குடும்பு முறையைப் பின்பற்றி, ஊர்ப் பஞ்சாயத்து முறை இவர் மத்தியில் இன்றும் அமுலில் இருந்து வருகிறது. கரிவலம்வந்தநல்லூர் கல்வெட்டில் காணும் அக்கசாலே, வாரியன், இளந்தாரி என்ற பெயர்கள் தாங்கி இவாது ஊர்ச் சபைகளில் அங்கத்தினர் இருந்து வருவது கண்கூடு. பெரும்பாலான இதர வகுப்பாரிடம் இவ்விதமான அமைப்பு இல்லை என்று அந்தர் பெத்தெயிலி போன்ருேர் கூறிச் சென்றிருப்பதை ஏற்கனவே குறிப்பிட்டிருக்கின்ருேம். [2]

1. Page 39 Vol V. Castes and Tribes of Southern India. E. Thurston.
2. Page 80 Castes Old and New. Andhre Beteille.

சோழ நாட்டில் இம் மக்கள் மத்தியில் மூப்பன், பணிக்கன், காலாடி, வாய்க்காரன், என்ற பட்டங்கள் வழங்கி வருகின்றன. அவற்றைப் பற்றிக் கீழே ஆராய்வோம்

**மூப்பன் :—** பெரும்பாலும திருச்சி மாவட்டத்திலும், தஞ்சை மாவட்டத்தில் மேற்குப் பகுதியிலும், தேவேந்திர குலத்தாரில் ஒரு சாரார், மூப்பன் என்ற குலப் பட்டம் மேற்கொண்டிருக்கின்றனர். தேவேந்திர குலத்தாரைத் தவிர, கொங்கு நாட்டிலுள்ள சாணூரில் ஒரு பிரிவினரும், மதுரை மாவட்டத்தின் மேற்குப் பகுதியில் வலையரும், மூப்பன் என்றும் தஞ்சை மாவட்டத்தில், தஞ்சை, பாபநாசம் தாலுகாக்களிலும், திருச்சி மாவட்டத்தில் உடையார் பாளையம் தாலுகாவில் சுருதிமான் வகுப்பார், மூப்பனுர் என்றும் குலப்பட்டம் தரித்திருக்கின்றனர். மூப்பன் என்ருல் வயதில் மூத்தவன்; ஊர்த் தலைவன் என்றும் பொருள்படும். மூப்பனுர் என்பதற்குப் பொருள் இல்லை. இப் பெயர் சமீப காலத்தில் மாறுதல் அடைந்திருக்கிறது எனலாம். திருச்சி மாவட்டத்தில், தேவேந்திர குலத்தார் வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டு வருகிருர்கள். இவ்வேலைகளுக்கு ஆள் சேர்த்து வேலை வாங்குகிற நபரை, மூப்பன் என்று அழைக்கின்றனர். இதையொட்டி இப்பகுதி தேவேந்திர குலத்தார் அனைவரும், மூப்பன் என்ற பட்டம் மேற்கொண்டிருக்கின்றனர். திருச்சி மாவட்டம் முசிறி தாலுகா, அரசலூர் கிராமத்துக் கல்வெட்டு ஒன்றில் 'பள்ள மாணிக்க மூப்பன்'[1] என்று குறிப்பிட்டிருப்பது காண்க. கிராம சபைகளுக்குப் புள்ளி மூப்பன், நாட்டு மூப்பன்[2] என்று சமூகத் தலைவர்கள் இன்றும் இருந்து வருகின்றனர்.

**பணிக்கன்:—** சென்னைப் பல்கலைக்கழக தமிழ் அகராதியில், (Madras Lexicon) பணிக்கன் என்பதற்கு ஆசாரியன், படைக்கலம் பயிற்றுவோன், கூத்துப் பயில்விப்போன், தலைமைக் கொற்றன், தச்சன், யானைப்பாகன், நாவிதர் தலைவன், விஷ வைத்தியன், சாராயம் காய்ச்சுவோன், ஒரு சாதிப் பெயர்,

1. தென்னிந்திய கோயிற் சாசனங்கள் பாகம் II எண் 796.
2. Trichinappalli Dt. Gazetteer.

வெல்லங் காய்ச்சுவோர், பள்ளர் சாதியில் ஒரு வகுப்பு என்று பொருள் கண்டிருக்கிறது.

தஞ்சை மாவட்டம், தஞ்சாவூர், பாபநாசம் தாலுகாக்களில், தேவேந்திர குலத்தாரில் ஒரு சாரார், பணிக்கன் என்ற குலப்பட்டம் தரித்திருக்கின்றனர். பணிக்கன் என்பது படைக்கலம் பயிற்றுவோன் என்ற பொருளில் இம்மக்களுக்கு இப்பட்டம் அமைந்தது எனலாம். கேரளாவில், பணிக்கன் என்பது போர்ப் பயிற்சி செய்விப்பவன், தேகப்பயிற்சி கற்பிக்கும் ஆசிரியன், இவர்களைக் குறிக்கும். ஈழவரில் ஒரு சாராரும், இலைவாணியருள் ஒரு சாராரும், பணிக்கன் என்ற குலப் பட்டம் தரித்திருக்கின்றனர்.

காலாடி :— இது, தேவேந்திர குலத்தாரில் ஒரு தனிப் பிரிவாகவும், அதே சமயம் இப்பிரிவினருக்கு வழங்கும் ஒரு குலப்பட்டமாகவும் அமைந்துள்ளது. தமிழக அரசு செடியூல் வகுப்புப் பட்டியல், இணைப்பு II(2)ல், காலாடி வரிசை எண் 23 ஆக பதியப்பட்டிருக்கிறது காண்க. இப் பிரிவினர் தஞ்சை மாவட்டத்தின் மேற்குப் பகுதியிலும், புதுக்கோட்டை மாவட்டத்தின் தெற்குப் பகுதியிலும் காணப்படுகின்றனர். அகராதியில், காலாடி என்பதற்குச் சுருக்கன், தொழிலற்றுத் திரிபவன், பள்ளர் தலைவன், முயற்சியுடையோன் என்று பொருள் கண்டிருக்கிறது. இச் சொல்லுக்கு நீர் பாய்ச்சும் கிராம ஊழியக்காரன் என்றும் பொருள். சேந்தன் திவாகரம், பிங்கலம், சூடாமணிநிகண்டுகளில் ஆற்றுக்காலாட்டியர் என்ற சொல் காணப்படுகிறது. இதற்குப் பொருள்; மருதநிலப் பெண், உழத்தியர். யாப்பெருங்கலக் காரிகை மேற்கோட் பாட்டாக 'வேற்றுமை இன்றியேயொத்தன மாவடர் ஆற்றுக் காலாட்டியர்கள்' என்ற செய்யுள் எடுத்தாளப்பட்டிருக்கிறது. முக்கூடற் பள்ளில் 'ஆற்றுக்காலாட்டியருள் ஆட்டெழுங்கால் பண்ணை நடும் நாற்றுக்கால் விட்டு நடுகைக் கால் ஏருதே (செய். 127) என்று வருவது காண்க. ஆற்றுக் காலாட்டி என்பதற்கு, ஆற்றிலிருந்து பிரிந்து கால்வாய்களில் வரும்

தண்ணீரைக் காலால் தட்டி, மீன் பிடித்து விளையாடித் திரியும் பெண்கள் என்றும், ஆறுகளில் நீந்தி, விளையாடி மகிழும் மருத நிலப் பெண்கள் என்றும் பொருள் கொள்வர். ஆக பெண்பால் பெயர் ஆற்றுக் காலாட்டியிலிருந்து, ஆண் பால் பெயர், ஆற்றுக் காலாடி என வழங்கிப் பின், காலாடி என்று மட்டும் வழக்கில் நிலைத்திருக்கலாம். காலாடி என்பதற்கு, காலாட் படையைச் சேர்ந்தவன் என்றும், வேவுத் தொழில் பார்ப்பவன் என்றும் பொருள் கொள்ளலாம். புதுக்கோட்டைப் பகுதியில், காலாடிப் பிரிவினர் கள்ளர், வலையர் இவர்கள் ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில், மாடு திருடுவதில் ஈடுபட்டு வந்தவருக்குப் பாதுகாவலாக, அவர்களுடன் சென்று வந்ததால், இவர்களை யும் கள்ளர், மறவர் மற்றும் பல்வேறு பிரிவினர்களுடன் சேர்த்து குற்ற பரம்பரையினராகப் பதிந்து நடத்தி வந்தனர். நாடு விடுதலை பெற்றபின், குற்ற பரம்பரைச் சட்டம் ரத்து செய்யப்பட்டுவிட்டது. தேவேந்திர குலத்தாரின் ஊர்சமூகப் பஞ்சாயத்துக்களுக்கு ஊர்க்குடும்பன், மூப்பன் இவர்களுக்குத் துணையாக காலாடி என்ற ஒரு உதவியாளரும் இருக்கிறார் என்பது ஈண்டு குறிப்பிடத் தக்கது.

**வாய்க்காரன் :—** தஞ்சை மாவட்டத்தில் நன்னிலம், நாகப்பட்டினம், திருத்துறைப்பூண்டி, மன்னார்குடி தாலுகாக் களில், இது குலப் பட்டமாக வழங்குகிறது. வாய்க்காரன் என்பதற்குச் சென்னைப் பல்கலைக் கழக அகராதியில் (Madras Lexicon) பேச்சாளன், செருக்கால் மிதமிஞ்சிப் பேசுவோன், பிறரைத் திட்டும் சுபாவம் உள்ளவன், பள்ளரில் ஒரு பிரிவினர் என்று பொருள் கண்டிருக்கிறது. வாய்க்காரன் என்பது வயற் காரன், (வயலையுடையவன்) என்பதிலிருந்து மருவியிருக்க வேண்டும்; அல்லது வயவன் (வீரமுடையவன்) என்பதி லிருந்து வயற்காரனாகப் பிற்காலத்தில் திரிந்திருக்க வேண்டும். வாய்க்காரன் என்பதற்குச் சென்னைப் பல்கலைக் கழக அகராதி யில் கொடுத்திருக்கும் பேச்சாளன், பிறரைத் திட்டும் சுபாவ முள்ளவன் என்ற பொருள், இச் சமூகத்திற்கு முற்றும் பொருந் தாது. இவர் மருதநில மக்களானதால் வயல்கள் இவர் களுக்கே உரித்தாயிருந்தது. வயலை உடையவனை வயற்

காரன் என்று சொல்லுவது, உலக வழக்கு என்பது, யாவரும அறிந்ததே. பிற்காலத்தில் நாயக்கர் ஆட்சியின்போது, நில உடைமை இவர்களிடமிருந்து பிடுங்கப்பட்டு, இவர் அடிமை நிலைக்கு மாறினதால், வயற்காரன் என்பதை வாய்க்காரன் என்று மாற்றியிருக்கலாம்.

**பண்ணாடி :** தமிழக அரசு செடியூல் வகுப்புப் பட்டியல் இணைப்பு II (4)ல் கோயம்புத்தூர், சேலம் மாவட்டங்களில் பண்ணாடி இடம் பெற்றிருக்கிறது. இப் பகுதியில், தேவேந்திர குலத்தார், பண்ணாடி என்ற குலப் பட்டத்தையும் மேற் கொண்டிருக்கின்றனர். இவரது குடியிருப்பையும் பண்ணாடி தெரு என்று தான் பொதுமக்கள் வழங்குகின்றனர். பண்ணாடி என்றால், பண்ணை + ஆடி என்று பிரிக்கலாம். பண்ணை என்ப தற்குப் பொருள் : மருத நிலம், நீர்நிலை, வயல் (சூடாமணி நிகண்டு). பண்ணையார் = பெரு நிலக்கிழார்; பண்ணையாள் = வாரக்குடியாள்; பண்ணையாளி = பண்ணையாடி; பண்ணாடி = வாரக்குடி வைத்துப்பயிர் செய்யும் பெருநிழக்கிழார் என்றும் பொருள் கொள்வர். இப்பகுதியில், ஊரிலுள்ள பெரிய நிலச் சுவான்தாரைப் பண்ணாடி, (பண்ணை + ஆடி) பண்ணை வைத்து அடிப்பவர் என்றும், வாரக்குடி வைத்துப் பயிர் செய்யும் நிலக்கிழார் என்றும் வழங்குகின்றனர். இம் மக்கள், பண்டைய நாளில் பெரிய பண்ணைகள் வைத்து, விவசாயம் செய்தவர் என்பதால், தொன்று தொட்டு குடும்பன் என்று வழங்கி வருவது போன்று, பண்ணாடி என்றும், இவர் தெருக் களைப் பண்ணாடித் தெரு என்றும் வழங்கி வருகின்றனர் எனலாம்.

**பலகன் :** கொங்கு மாவட்டத்தின் வடபகுதியாகிய சேலம் மாவட்டத்தில், தேவேந்திர குலத்தார் பலகன் என்ற குலப்பட்டம் தரித்திருக்கின்றனர். பலகன் என்றால், பலவான் என்பதிலிருந்து திரிந்ததா என்று ஆராயத்தக்கது. பொதுவாக, இங்கு இம் மக்கள் மற்ற இனத்தார் போற்றும்படி வீரமுள்ளவர்களாக இருப்பது கண்கூடு. பாலகன் என்பது முதலமைச்சன் என்று பொருள்படும் என்பது 'பலர் முடிமேல் ஆர்க்குங்கழற்கால் அனகன்

தனதவையுள் பார்க்கு மதிமந்த்ர பாலகரில்' (விக்கிரம சோழ னுலா வரி 138-40) என்ற பாடலால் அறியலாம். ஆனுல், பாலகரிலிருந்து 'பலகன்' தோன்றியதென்று கொள்வதற் கில்லை. பலவான் என்பதிலிருந்தே இவ்வார்த்தை தோன்றி யிருக்க வேண்டும்.

**பாண்டியன் :** மொழிவாரி மாகாணங்கள் ஏற்பட்டதை யொட்டி, திருவிதாங்கூர் இராச்சியத்திலிருந்து தமிழகத்துடன் இணைந்த, செங்கோட்டைப் பகுதியிலுள்ள தேவேந்திர குலத் தார், பாண்டியன் என்ற குலப் பட்டம் கொண்டிருக் கின்றனர். கி. பி. 16 ஆம் நூற்றுண்டு மத்தியில் நடந்த கயத்தாற்றுப் போரில் ஈடுபட்டவரில் ஒரு சாரார், பொதிய மலைச் சாரலுக்குச் சென்றனர் என்று வரலாற்று ஆசிரியர் கூறுவர். அம் மக்கள்தான் இவர்கள் என்று தெரிகிறது. இவர்கள் பாண்டியன் என்ற குலப் பட்டம் தரித்து வருகின்றனர்.

இம் மக்கள், பாண்டியன் என்ற பட்டம் தரித்து வந்ததை, செங்கோட்டைப் பகுதிக்குச் சமீபமுள்ள, சமீன் தார்களாகிய மறவரில் சிலர் ஆட்சேபித்து, திருவிதாங்கூர் உயர்நீதி மன்றத்தில் வழக்கு தொடர்ந்தனர். அந் நீதி மன்றம், வழக்கினை ஆய்வு செய்து, பாண்டியன் என்ற பட்டம், தேவேந்திர குலத்தாருக்கே உரியதென்றும், மறவர் மரபைச் சேர்ந்த சமீன்தார்களுக்கு அது உரித்தாகாது என்றும் தீர்ப்பு வழங்கினர். இவ்வழக்கு சுமார் 50 ஆண்டு களுக்கு முன்பு நடந்ததாகச் செங்கோட்டைப் பகுதிவாழ் தேவேந்திர குலத்தாரை விசாரித்ததில் தெரிய வருகிறது. கிலக்கிரயம் ஒத்திப் பத்திரங்களில் இவர் தங்களைப் பாண்டியர் என்றே பதிந்து வருவது கண்கூடு.



# தேவேந்திரகுலத்தார் எவ்வாறு தாழ்த்தப்பட்டனர்.

தேவேந்திர குலத்தார், இன்று தாழ்த்தப்பட்டோர்பட்டியலில் இடம் பெற்றிருக்கின்றனர். இவர் மூவேந்த மரபினர் ஆனதால், தமிழ் வேந்தர் ஆட்சியின்போது, அரசியல், பொருளாதார, சமூக நிலையில் உயர்வாக மதிக்கப்பட்டிருப்பர் என்பதில், ஒருவருக்கும் ஐயம் இரா. அக்காலத்தில், இவர் பெரும் நிலக்கிழாராகவும், அமைச்சராகவும், படைத் தலைவராகவும், அரசு அலுவலராகவும், படை மறவராகவும் இயங்கி, மன்னர்க்கு வலக்கரம் போன்று விளங்கினர் என்பதை, தமிழக வரலாறறிந்தோர் ஒருவரும் மறுக்கார். இதில் கருத்து முரண்பாடு இருப்பதற்கில்லை எனலாம். ஆனால், அவ்வாறு உயர்நிலையில் இருந்தவர், ஏன் இன்று பிற சமூகத்தினரால் கீழ் குடியாகவும், தாழ்த்தப்பட்டோராகவும் கருதப்பட வேண்டும். டாக்டர் K. R. அனுமந்தன், இவ்வினாக்களுக்குப் பதில் இறுக்கு முகத்தான், இம் மரபினர் பெரும் நிலக்கிழார் எனவும், நஞ்சை சாகுபடியில் தேர்ச்சி பெற்றவர் எனவும், தென் இந்தியாவிலிருந்து படையெடுத்து வந்த வேறு மரபினரால் அடக்கி ஒடுக்கப்பட்டு, காலப்போக்கில் அடிமை நிலைக்கு உள்ளாக்கப்பட்டனர் எனவும் கருதுகிறார்.[1] இவர் குறிப்பிடும் தமிழகத்தின்மீது படையெடுத்து வந்த வேற்று மரபினர் யார்? இவர் விசயநகர மன்னர்; அவருக்குப் பின் ஆட்சி யேற்ற நாயக்கர் ஆவர் என்பதை அனைவரும் அறிவர். ஆக இந்த அந்நிய மரபினர் தேவேந்திரரை அடக்கி ஒடுக்கினர்; அதன் விளைவாக இவர் படிப்படியாகத் தாழ்ந்து இன்றுள்ள இழிநிலைக்கு ஆளாயினர்.

டாக்டர் K. R. அனுமந்தன் கூறுவதிலிருந்து, இம்மக்கள் தாழ்த்தப்பட்டதற்கு அரசியல் காரணம் தலையாயது என அறிகிறோம். அப்படியானால் தமிழ் வேந்தர் ஆட்சி வீழ்ச்சி

---

1. Page 122 Untouchability in Tamilagam (unpublished)
– Dr. K. R. Hanumanthan.

யுருவிடில், இவர் இன்றையப் பரிதாப நிலைக்கு ஆளாகியிருக்க மாட்டாரா? தமிழ் வேந்தர் வீழ்ச்சிதான் இவரின் வீழ்ச்சிக்கும் காரணமா? தமிழ் வேந்தர் ஆட்சி ஏன் வீழ்ச்சியுற்றது? இக் கேள்விகளுக்கு வரலாற்று வல்லுநர் விடை இறுக்கவேண்டும். ஆனால் இதுபற்றி அவர் யாரும் இதுவரை கவனம் செலுத்த வில்லை என்பது குறிப்பிடத்தக்கது. மூவேந்தர் மரபு பற்றியே இவர் குழப்ப நிலையில் இருக்கும்போது, அவரது வீழ்ச்சி மற்றும் காரணங்கள் பற்றி ஆராய எவ்வாறு முற்படுவர்?

மூவேந்தர் வீழ்ச்சியுற்றால், அவருடன் தேவேந்திரரும் ஏன் வீழ்ச்சியுற வேண்டும்? தமிழகத்தில் பல்வேறு மரபினர் இருக்கும்போது, இந்த மரபினர் மட்டும் அந்நியர் படையெடுப் பால் பாதிக்கப்படுவானேன்? இம்மாதிரிக் கேள்விகள் சிலர் எழுப்பலாம். இவர் மன்னரின் பின்னோர்; மன்னர் இவர் மரபைச் சேர்ந்தவர்; தமிழ்ப்படை மறவர், படைத் தலைவர், அமைச்சர், அலுவலர் இவரில் பெரும்பாலோர் இம்மரபைச் சேர்ந்தவர் என ஏற்கனவே குறிப்பிட்டிருப்பதை வாசகர் அறிவர். இவர் நாட்டுப் பற்று உள்ளவர். போரில் புறமுதுகு காட்டி ஓடுவது தங்களுக்கு மட்டுமின்றி, தங்களின் பரம்பரை யினர்க்கும் வழிவழியாய்ப் பழிவந்து சேரும் என அஞ்சுபவர். இம் மரபுத் தாய்மாரும் வீரத்திற்குப் பேர்போனவர் என்பதைச் சங்க இலக்கியங்களைப் படித்தவர் நன்கு அறிவர். மாற்றார் இந்த நாட்டின்மீது படையெடுத்த போது, இவரில் தங்களின் உயிரைத் துச்சமாக மதித்து, அவரை எதிர்த்துப் போர்க்களங் களில் உயிர் நீத்தவர் பலர். அந்நியரின் கைகளில் சிக்கி, அடிமை வாழ்வு நடத்துவதைவிட, உயிர் விடுவது மேல் எனக் கருதி, தங்களையும், தங்கள் குடும்பத்தையும் மாய்த்துக் கொண் டவர் அனேகம். அக்காலத்தில் சோழர் வலிகுன்றி விட்டனர். ஆனால் பாண்டியர் கடைசி வரை அந்நிய ஆக்கிரமிப்பாளரை எதிர்த்து வந்தனர். இருவருக்கும் இடையே, தென்பாண்டி நாட்டில் பல போர்கள் நிகழ்ந்தன. ஆனதால் இவர் புத்துயிர் எய்தி, மீண்டும் போர்கள் தொடுத்து, நாட்டை மீட்கும் பணியில் இறங்குவர் என்ற காரணத்தால், இவரை முற்றிலும்

உருத் தெரியாமல் அழிப்பது, மாற்ருரின் முக்கிய குறிக்கோளாய் அமைந்திருக்கும் என்பதில் ஐயம் இரா. மாற்ருருடன் தொடுத்த போர்களில், தமிழ்ப் படையினர் முற்றிலும் முறியடிக்கப்பட்டனர். அவரது படைகள் கலைந்தன. பாண்டியரும் அவரது மக்களோடு மக்களாகக் கலந்தனர். இது பற்றித் திரு. R. P. சேதுப் பிள்ளை கூறுவதாவது :— 'அன்று நாற்றிசையும் ஏற்றமுற்று வாழ்ந்த தமிழ்நாடு இன்று ஊக்கம் இழந்து உறங்குகின்றது. மன்னரும் மதிக்க வாழ்ந்த மறக்குலம், இடைக் காலத்தில் அடக்கி ஒடுக்கப்பட்டது. அக்குல வீரரது முறுக்கு மீசை உருக்குலைந்தது. பணைத்தோள் பதங்குலைந்தது. மாற்ருர் தலை பறித்த மறவரது நெடுங்கரம் இன்று கழனியிலே களை பறிக்கின்றது'.[1] திரு. ஞா. தேவநேயப்பாவாணர் 'இவ்வுலகில் தமிழனைப் போல் உயர்ந்தவனுமில்லை, பின்பு தாழ்ந்தவனுமில்லை' என்று கூறுகிருர்.[2] பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார் கூறுவதாவது :— 'வாழ்ந்த தமிழகம்; உலகாண்ட தமிழகம்; உலகின் செல்வம் திறை கொண்ட தமிழகம்; படிப்படியாகத் தாழ்வுற்று அவல நிலையை எட்டியுள்ளது. ஆனல் இது தமிழக வரலாறு மட்டு மல்ல. தமிழகத்துடன் ஊடாடிய பண்டையப் பெருநாகரிக இனங்கள் அனைத்தின் வரலாறுகளும் இதுவே. உண்மையில் இவ்வினங்களில் பல இன்று தடமற அழிந்துவிட்டன.[3]

ஆகப் பண்டையத் தலைத் தமிழர் தாழ்ந்தனர் எனப் பல அறிஞரும் கூறுவதைக் கண்டோம். அந்நியர் ஆக்கிரமிப்பிற்கு முன், தமிழகத்தில் நிலவிய நிலை பற்றி ஒரு சிறிது ஆராய்வோம்.

**விசயநகர ஆட்சி ஏற்படுவதற்கு முன் தமிழகத்தின் நிலை:** தமிழகத்தின் பண்டைய அரசியல் நிலைபற்றி ஏற்கனவே ஓரளவு தெரிந்திருக்கின்ருேம். கி. பி. 13ஆம் நூற்ருண்டின்

1. பக்கம் 123 தமிழர் வீரம், R. P. சேதுப்பிள்ளை, B. A., B. L.,
2. தமிழர் வரலாறு, ஞா தேவநேயன், M. A.,
3. பக்கம் 24 தென்னுட்டுப் போர்க்களங்கள், பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரை.

ஆரம்பத்தில் சோழநாடு வலிகுன்றி, பாண்டியர்க்குத் திரை செலுத்தும் நிலை எய்தியது. பாண்டியர் ஒரு நூற்றுண்டு வல்லரசாகத் திகழ்ந்தனர். முகமதியர் படையெடுப்பு, கொள்ளை இவற்ருலும், பதவிக் காரணமாய் உள்நாட்டுப் போர்களாலும், நாட்டில் குழப்பமும், அராசகமும் நிலவியிருந்தது. சோழ நாட்டைத் தாக்கிய சடாவர்மன் சுந்தரபாண்டியன், தஞ்சையையும், உறந்தையையும் தரைமட்டம் ஆக்கினுன். அவன் சோழ நாட்டைத் தனக்குப் போரில் உதவியவர், கோயில் மற்றும் வைதீகர், இவருக்குப் பகிர்ந்தளித்ததாக, அருப்புக்கோட்டை, மற்றுமுள்ள ஊர்களிலுள்ள கல்வெட்டுகள் கூறுகின்றன.[1]

பாண்டியரும், சோழரும் வலிகுன்றியிருந்தபோது, சேரன் இரு நாடுகளின்மீதும் படை எடுத்திருக்கிருன். சோழ நாட்டில், வேளாண் மக்களின் பொருளாதாரநிலை, சீர்கெட்டு வந்தது. இங்கு கோயில்களும், மடங்களும் பெரும் எண்ணிக்கையில் எழுப்பப்பட்டு, பக்தி மேலீட்டால் மன்னரும், அவரது மரபினரும் பொன், பொருள், நிலம் இவற்றைப் பெருமளவில் நிவந்தமாக அவற்றிற்கு வழங்கினர். கோயில்கள், மடங்கள் பெரும் நிலப்பிரபுத்துவம் அடைந்தன. இவற்றிற்கு ஊழியஞ் செய்யப் பல்வேறு பிரிவினரும் அமர்த்தப்பட்டனர். அடிக்கடி போர்கள் நிகழ்ந்ததாலும், அதனுல் வேளாண்மைத் தொழில் பாதிக்கப்பட்டதாலும், வேளாண் குடிகளின் நிலை படிப்படியாய்ச் சீர்கெட்டு வந்தது. கோயில்களில் சிலர் கடன் வாங்குவது, கடனைத் திரும்பக்கட்ட வழியின்றித் தங்கள் நிலங்களை விற்றுக்கடனை அடைப்பது, நிலங்களை அவர் கோயில்களுக்கே கடனுக்கு ஈடாக விட்டுவிடுவது, போதாதற்குத் தங்களையும், தங்கள் குடும்பங்களையும் கோயிலுக்கே அடிமையாக்கிக் கொள்வது போன்ற சம்பவங்கள் பல நிகழ்ந்திருக்கின்றன. இச் சம்பவங்கள் பற்றிச் சோழர் கால கல்வெட்டுகள் சான்று பகர்கின்றன. தஞ்சை மாவட்டம் மேலப்பெரும்பள்ளத்தில், ஒரு வெள்ளாளப் பெண்மணி, தனது மூன்று மகள்களுடனும்,

1. A. R. E. 406-407 and 408/1914.

தன் பேரனுடனும் தங்களையும், தங்கள் சந்ததியாரையும் கட்டுப்படுத்திக் கோயில்களுக்குச் சேரவேண்டிய 13 காசுகளுக்காக அடிமைப்படுத்திக் கொண்டதாகவும், இது போன்ற இன்னும் சில சம்பவங்கள் பற்றி கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.[1] வறுமையின் காரணமாயும் திருப்பாம்புரம் கோயிலுக்கு ஒரு வெள்ளாளனும், அவனது இரண்டு பெண்களும், தங்களை அடிமையாக்கிக் கொண்டதாக ஒரு கல்வெட்டு கூறுகிறது.[2] விக்கிரசோழன் காலத்தைச் சேர்ந்த திருவாடுதுறைக் கல்வெட்டு ஒன்று, வெள்ளாளர் வரி கொடுக்க முடியாமல் ஊரைவிட்டு வெளியேறினதாகக் குறிப்பிடுகிறது.[3] இதுபோன்ற சம்பவங்கள் நிகழ்ந்ததைக் குறிக்கும் கல்வெட்டுகள் பல இருப்பதாக அறிகிறோம். தமிழகத்தில் நடந்த ஓயாத போர்கள், படையெடுப்புகள் காரணமாய், வேளாண் மரபினர் பெருமளவில் மாண்டு போனதாலும், ஊர்விட்டு ஊர் போனதாலும், கி. பி. 13ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில், சோழநாட்டில் வெள்ளாளரின் எண்ணிக்கை மிகவும் குறைந்து, பயிர்த் தொழில் செய்யப் போதிய நபர்கள் இல்லாததால், பிற சமூகங்களிலிருந்து கூலிக்கு ஆள் தேடும் நிலை ஏற்பட்டிருக்கின்றது. இதுபற்றி K. A. நீலகண்ட சாஸ்திரி கூறுவதாவது:- ‘கி. பி. 13ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில், பல்வேறு காரணங்களினால், வெள்ளாளர் எண்ணிக்கை குறைந்துவிட்டதனால் விவசாயத் தொழிலில் ஈடுபடப் போதிய நபர்கள் அகப்படவில்லை. அதனால், வழக்கத்திற்கு மாறாகக் கூலிக்கு ஆள் தேடும் நிலை ஏற்பட்டு, அத் தொழிலாளருக்குத் தினசரி, விவசாயக் கூலியாக, நெல் அளக்க நேரிட்டது; அதோடு கூலியின் அளவும் உயர்ந்துவிட்டது. இது விபரங்கள் அய்யம்பேட்டைக் குறிப்புகளிலிருந்து அறியற்பாலது.[4]

---

1. A. R. E. 216, 217 and 219/1924.
2. A. R. E. 86/1911.
3. A. R. E. 158/1925.
4. Page 83. The Cholas, K. A. Nilakanta Sastri.

[**Foot note:** From Ayyampettai records it is seen that early in the thirteenth century, there was unusual need for employing hired labour as the Vellalas had dwindled in numbers owing to various causes and that the daily wages in paddy of hired labour were mounting up ] [1]

மதுரையில் கி. பி. 14ஆம் நூற்றுண்டின் இறுதியில், சுமார் 40 ஆண்டுகள் டில்லி சுல்தான்களின் பிரதிநிதிகள் ஆண்டது பற்றி ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம். இக்காலத்தில் முகமதியர், தமிழகத்தில், குறிப்பாக மதுரையில் நடத்திய கொலைகள், அட்டூழியங்கள் பற்றி, குமாரகம்பண்ணன் மனைவி இயற்றிய மதுரா விசயம் என்ற நூலில், வைகையில் இரத்த ஆறு ஓடினதாகவும், மதுரையிலுள்ள தென்னை மரங்கள் நடுவில் துண்டிக்கப்பட்டு, அவற்றில் தமிழரின் தலைகள் சொருகப்பட்டிருந்ததாகவும், காட்டு விலங்குகளாகிய புலி, சிறுத்தை, ஓநாய், கரடி முதலியவை மதுரை நகரில் தடையின்றித் தாராளமாய் நடமாடி வந்ததாகவும் கண்டிருக்கிறது. முகமதியர் திரண்ட செல்வத்தைக் கொள்ளை கொண்டு போயினர் என்றும், ஏற்கனவே கண்டோம். முகமதியர் ஆட்சியின் அட்டூழியம் இத்துடன் நிற்க; அடுத்து விசயநகரம், மற்றும் தெலுங்கர் ஆட்சியில், தமிழகம் எய்தியிருந்த நிலையைக் காண்போம்.

**விசயநகர ஆட்சியில் தமிழகம் :—** கி. பி. 14ஆம் நூற்றுண்டின் இறுதியில், குமாரகம்பண்ணன் முகமதியரை விரட்டிவிட்டு, பாண்டியரை விசயநகர ஆட்சிக்குத் திறை செலுத்தும் சிற்றரசாக்கிவிட்டுச் சென்றது பற்றி, ஏற்கனவே குறிப்பிட்டிருப்பதை வாசகர் அறிவர். சோழநாடு கி. பி. 13ஆம் நூற்றுண்டின் நடுப்பகுதியில், பாண்டியர் ஆதிக்கத்திற்குள் வந்துவிட்டது என்பதை அனைவரும் அறிவர். விசயநகர ஆதிக்கத்தைப் பாண்டியர் கடைசி வரை எதிர்த்தே வந்திருக்கின்றனர். இதனுல் தமிழகத்தில் பல போர்கள் நடந்திருக்கின்றன. கி. பி. 16ஆம் நூற்றுண்டில் சங்கரநயினுர் கோயில், முதலைக்குளம், வீரகேரளப்புதூர்

---

[1] Page 83. The Colas, K. A. Nilakanta Sastri.

இங்கெல்லாம் போர்கள் நடந்ததாக அறிகிறோம். சக வருடம் 1517 துர்முகியில் மோகூரில் விசயநகர அரசுக்கும், பாண்டிய ருக்கும் இடையே நடந்த போரில், இறந்தவரின் சடலங்கள் பேராற்றின் கரைகள் நிறைந்து வழிந்தன என, விசய நகர காலச் சிதம்பரம் கல்வெட்டு ஒன்று கூறுகிறது. [1]

[Vijayanagaram-Chidambaram culvert relating to Saka 1517 Durmuki contains three verses and refers to the fight between Sundara Pandya and the telugus at Mogur in which the dead bodies were strewn up to the banks of the peraru [1]]

பாண்டியருக்கும் விசய நகர ஆட்சிக்கும் இடையே, இறுதியாக நடந்த போர், கயத்தாற்றில் நடந்ததென்பர். இதன் முடிவு பற்றி ஏற்கனவே குறிப்பிட்டிருக்கின்றோம். இக் காலத்தில், தெலுங்கர் தமிழகத்திற்குள் புகுந்து கொலை, கொள்ளை முதலியவை நடத்தி வந்திருக்கின்றனர். இதுபற்றி டாக்டர் கால்டுவெல் குறிப்பிடுவதாவது:— கி. பி. 1532க்கும் 1542க்கும் உட்பட்ட காலப் பகுதியில், முகமதியரை அடக்கு வதில் போர்த்துக்கீசியர் ஈடுபட்டிருந்த காலை, முகமதியரை விடப் பலமான எதிரியுடன், அவர் மோதவேண்டிய நிலை ஏற்பட்டது. போர்த்துக்கீசியர் இவரைச் சமாளிப்பது மிகவும் கடினமாய் இருந்தது. கி. பி. 1542இல் சேவியர் முதன் முறையாகக் கிறித்துவ மறையைத் தமிழகத்தில் பரப்புவதற் காகக் கடற்கரை சமீபம் தன் இருப்பிடத்தை அமைத்திருந் தார். தெலுங்கர் இக்காலத்தில் விளைவித்த கொடுமைகள் பற்றி, இவர் தான் எழுதிய கடிதங்கள் பலவற்றில் குறிப்பிட்டிருப்பது, மனத்தை உருக்கக் கூடியதாய் இருக்கிறது. தெலுங்கரை இவர் கட்டுப்பாடற்ற முரட்டுக் கொள்ளைக் கூட்டம் எனக் குறிப்பிடுகிறார். இன்னொரு எழுத்தாளர், இவரை வரிவசூல் செய்பவர் எனக் குறிப்பிடுகிறார். ஆனால், தென்னகத்தில் கர்நாடக சர்க்காரிடமிருந்து கிழக்கிந்தியக் கம்பெனிக்கு ஆட்சிப் பொறுப்பு மாறும் வரை, வரி வசூல் செய்வது போன்ற வேலைகள், கொள்ளைக் கூட்டத்தாரின் கையிலேயே

1 A. R. E. 361/1913

இருந்து வந்தது. ஆக வரி வசூலும், கொள்ளையடித்தலும் ஒரே கும்பலே நடத்தி வந்ததென்பது அறியத்தக்கது. ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனி நாட்டின் பொறுப்பை ஏற்கும் வரை, இந்நிலையே நீடித்து வந்தது எனலாம். கன்னியாகுமரிக்கு அருகில் உள்ள ஒரு ஊரில், தெலுங்கர் விளைவித்த கொடூரச் செயலை, சேவியர் நேரில் காண நேரிட்டது. [1]

Dr. R. Caldwell says :

'Between 1532 the date of the expedition against the 'Moors' and 1542, the first year of Xavier's residence on the coast, a new enemy came upon the scene an enemy much more formidable than the Moors and one with which even the portuguese found it more difficult to cleal. 'These were the 'Badagas' whose ravages are so frequently described and so pathetically deplored in Xavier's letters. Xavier represents them as lawless Marauders; by another writer, as we shall see they are described as tax-gatherers; and doubtless both representations were correct, for this extrordinary combination of the characters of tax-gatherer and Marauder continued to be common in the South till the cession of the carnatic to the East India Company. In one Village near cape-comorin Xavier himself was a witness of the horrors of Badagas.' [1]

இன்று தமிழகத்தில் தெலுங்கர் பெருவாரியாக இருக்கக் காண்கிறோம். இவர் குடியேற்றம் எப்போது, எவ்வாறு நிகழ்ந்தது என்பது பற்றி அடுத்து ஆராய்வோம்.

**தமிழகத்தில் தெலுங்கர் குடியேற்றம் :**

விசய நகர ஆட்சி தமிழகத்தில் பரவியதிலிருந்து, இங்கு தெலுங்கர் குடியேற்றம் ஆரம்பமானாலும், விசய நகரம் முகமதியர் தாக்குதல்களுக்கு உள்ளான பிறகு தான், அது

1. Page 69. History of Tinnevelly – Dr. R. Caldwell.

பெருமளவில் நிகழ்ந்ததாக அறிகிறோம். இது பற்றி டாக்டர் கால்டுவெல் கூறுவதாவது :- கி. பி. 1565 இல், தளிக் கோட்டையில் நடந்த போரில் ஏற்பட்ட தோல்வி காரணமாய், விசய நகரம் வீழ்ச்சியுற்றது. கி. பி. 1565இல் ராமராயர் தோற்கடிக்கப்பட்டார். விசய நகரம் முற்றிலும் அழிக்கப் பட்டது. இதிலிருந்துதான் பெருவாரியாய்த் தெலுங்கர் தமிழகத்தின் தென் மாவட்டங்களுக்குக் குடியேறிய ஆரம்பக் கட்டம் எனலாம். இவரின் எண்ணிக்கை சுமார் பத்து இலட்சம் ஆகும். இவரில் பெரும்பாலோர் முகமதியருக்குப் பயந்து, தங்கள் வீடுகளை விட்டு விட்டு, தென்னகத்தில் ஆட்சி செய்த தங்களது மரபினரின் ஆதரவைத் தேடி ஓடி வந்தவராவர். [1]

Dr R. Coldwell says :- 'The great battle in which he (Ramarayar) fell was fought at Talikote on the 25th January 1565. Vijayanagara itself was at the same time ruthlessly destroyed. It is from this time I date the largest influx of telugu settlers into the Southern districts of the Tamil Country. There are probably at least a million of people in the Tamil districts of Telugu origin and I think it probable that the ancestors of a very large number of these fled for protection to the telugu rulers of Madurai and Tanjore to escape the oppression of the Mohammadans to which they had been exposed in their telugu homes ' [1]

தெலுங்கர் பெருமளவில் தமிழகத்தில் குடியேறியதால், அவரைக் குடி அமர்த்தி, வாழ வைக்கும் பொறுப்பு, நாயக்கர் அரசுக்கு ஏற்பட்டது. இவரைக் குடி அமர்த்தும் நோக்கத் தோடும், தமிழ் மரபினரைப் பயமுறுத்திப் பணிய வைக்கும் (overawe the original inhabitants) நோக்கத்தோடும், [2] பாளையப்பட்டு முறை தோற்றுவிக்கப்பட்டது என அறிகிறோம்.

**பாளையப்பட்டு முறை :**

தெலுங்கர் தமிழகத்தில் பெருவாரியாகக் குடியேறினர் எனக் கண்டோம். இவரில் ஒரு சாரார் படை மறவர்; பலர்

1 Page 49. History of Tinnevelly - Dr. R. Caldwell.
2. Page 58 ,, ,,

பஞ்சம், பசி, பட்டினி மற்றும் முகமதியர் தாக்குதல்களுக்குப் பயந்து தென்னகம் ஓடிவந்தவர். ஆறலைத்தல் தொழிலை யுடையவர் பலர் இவருடன் ஊடுருவியிருப்பர் என்பதில் ஐயம் இரா. இவர்க்கு நாயக்க அரசு வாழ்வளிக்க வேண்டும். தெலுங்கரைத் தவிர கள்ளர், மறவர், வன்னியர், நாயக்கருக்குப் பெரிதும் உதவியவர் தமிழகத்தின் உள் விவகாரம் இங்குள்ளவருக்குத் தான் நன்கு தெரியும். ஆனதால் கள்ளர், மறவர், வன்னியர் உதவி, இவருக்கு மிகவும் பயன்பட்டிருக்கும் என்பதில் ஐயம் இரா.

தமிழ் வேந்தர் மரபினர் வேளாண் குடிகள்; உழவர் சமுதாயம்; நில உடைமையாளர்; நஞ்சை நிலம் பெரும்பாலும் இவருள் அடக்கம். பொதுவாக அக்காலத்தில், இவரைத் தவிர, வேறு மரபினருக்கு நஞ்சைப் பயிர் செய்யத் தெரியாது எனலாம். இவர் ஏருக்கு உழவர்; போருக்கு மறவர். இவரை எவ்வாறு அடக்குவது? என்பது நாயக்க அரசுக்கு ஒரு பிரச்சனையாக இருந்தது இதற்கு முடிவு காண ஒரே வழி, இவரிடமிருந்து நிலங்களைப் பறிமுதல் செய்து, அரசுடைமை யாக்கி, பாளையப்பட்டுகளை நியமித்து, நிலங்களை அவருக்குப் பகிர்ந்தளித்து, தமிழரின் எதிர்பைச் சமாளிக்கும் பொறுப்பை யும் அவரிடம விட்டுவிடுவது. இம்முறை ஏற்பட்டது பற்றி டாக்டர் கால்டுவெல் கூறுவதாவது :-

'விசுவநாத நாயக்கன் தன்னை அண்டியவரும், உறவினரு மான பெருவாரியான தனது மரபினரை, மதுரைக்குத் தன்னுடன் அழைத்து வந்திருந்தான். அவர் பிரமாணிக்கமா யும், பணிவுடனும் நடந்து, அவருக்கு இட்ட பணியைத் திறம்படச் செய்து முடித்தனர். தாங்கள் ஆற்றிய பணிக்கு, விசுவநாதனிடம் தகுந்த பிரதி பலனை எதிர்பார்த்தனர். அவருக்குத் தக்க வெகுமதி வழங்காவிடில், எந்நேரத்திலும் அவர் விசுவநாதனுக்கு எதிரான செயல்களில் இறங்கும் மனோநிலையில் இருந்தனர் என்றால், அது மிகையாகாது. இவரைத் தவிர, வழிவழியாக வந்த பெரும் நிலம் படைத்த செல்வாக்குள்ள பழைய படைத்தலைவர் பலர் இங்கு

ஏற்கனவே இருந்தனர். விசுவநாதனின் ஆட்சிக்கு, இவரது நல்லெண்ணமும், ஒத்துழைப்பும் இன்றியமையாததாய் இருந்தது. ஆனால் அதைப் பெறுவது, அவ்வளவு எளிதாகத் தோன்றவில்லை. நீண்ட காலமாய் நாட்டில் குழப்பம் நிலவியிருந்ததால் அராசகமும், ஊழலும் பரவியிருந்தன. இந்த நிலையைத் தங்களுக்கு அனுகூலமாக்கிக் கொண்டு, பலன் அடையலாம் என்ற எண்ணத்தினால், நாயக்கர் தமிழகத்தில் ஒரு நிலையான, கட்டுப்பாடான அரசை அமைத்து, ஒழுங்கு, அமைதி இவற்றை நிலை நாட்டக் கூடாதென்றே இவர் பெரிதும் விரும்பலாயினர் மேலும் இவர், தெலுங்கர் அரசின் பிரதிநிதியைச் சூழ்ந்து கொண்டு பொறுப்பும், வருமானமும் வரக்கூடிய முக்கிய அரசு பதவிகள் அனைத்தையும், தங்களுக்கே உரித்தாக்கிக் கொள்ளத்துடித்துக் கொண்டிருந்ததால், அந்நியராகிய அவர் மீது கசப்பும், பகையும், பொறுமையும் கொண்டிருந்திருப்பர் என்பதும் நியாயமே இதைத் தவிர, அமைதியைக் கடைப்பிடித்தால், என்றும் காரிய சித்தியாகாது என்பதை நன்குணர்ந்த, முற்றிலும் அதிருப்தியும், வறுமை நிலைக்கும் ஆளான, பாண்டியரைச் சார்ந்தவர், புரட்சி செய்வதற்கேற்ற தக்க தருணத்தை எதிர் நோக்கியிருந்தனர். இவரைத் தவிர, தெலுங்கு, கன்னடப் படைத் தலைவரில் ஒரு சிலர், நாட்டின் வடக்கு, மேற்குப் பகுதிகளை ஆக்கிரமித்துக் கைவசப்படுத்தியும், அவற்றிற்குத் திறை செலுத்தாமலும், நாயக்கருக்கு அடங்காமல் இருந்தனர். இவரும் நாட்டில் அமைதியும், ஒழுங்கும் ஏற்படுத்தத்தக்க பலமான அரசு ஏற்படுவதை விரும்பவில்லை எனலாம். இவ்விதப் பல்வேறு மனோபாவமுள்ளவரை ஒருமுகப்படுத்தி, அவரைத் தக்க விதமாய்க் கவனித்து, அவரது ஒத்துழைப்பையும், ஆதரவையும் பெறுவதும், அவர் மத்தியில் ஏற்படும் பிணக்குகளை நீக்குவதும், மற்றும் பல்வேறு பிரச்சனைகளுக்குப் பரிகாரம் காண்பதும், விசுவநாதனின் பெரும் பிரச்சனையாக அமைந்தது. [1]

1. Page 56 History of Tinnevelly - Dr. R. Caldwell.

Dr. R. Caldwell says :- He (Viswanatha Nayak) had brought with him to Madurai crowds of dependants and adherents of his own caste, who had as a body proved themselves to be faithful and obedient and had done his work excellently well. These men, were all of them greedily looking for their rewards; and unless provided for with lavish liberality, would very soon show their teeth. Then there were the old tamil hereditary chieftains, whom he had found possessed of considerable territories and power. Their good will it was at once most necessary and most difficult to secure. Accustomed from generation to generation to perpetually recurring periods of anarchy, they knew only too well how to draw profit from misrule; and as they sulkily looked on at the doings of the telugu intruders it seemed ridiculous to expect that they would ever acquisce in the establishment of order and sovereign power. Moreover they could not but regard with feelings of the bitterest, Jealousy and hatred the foreigners who surrounded the governor's person, and who seemed about to appropriate to themselves all the highest offices and emoluments in his gift. Then again, there were the impoverished and disconted adherents of the Pandyas, men who could hope for everything from revolution; from peace and quiet nothing. And lastly there were the bold and the turbulent telugu and canarese adventurers, whose ancestors had seized with a strong grip the northern and western divisions of the country; who paid no man tribute; and whose lawless tempers could ill-brook the curb and spur of a strong government. It was Viswanatha's task to reconcile the conflicting interests of all these classes, to smooth away differences, and to conciliate affection; and to do this in a strange country and with an empty purse. At last he contrived a scheme by which it seemed possible to attain success. Its object was

to enrich and ennoble the most powerful of each class, and at the same time secure their and their descendants' allegiance to himself and his successors.' [1]

இப்பிரச்சினைகளுக்குப் பரிகாரம் காணும் முகத்தான், விசுவநாத நாயக்கன், தனது ஆளுகைக்குட்பட்ட தமிழகத்தை 72 பகுதிகளாகப் பிரித்து, ஒவ்வொன்றிற்கும் ஒரு பாளையப்பட்டுவை நியமித்தான். தமிழகத்தின் செழிப்பான பகுதிகள் தெலுங்கருக்கும், வறண்ட பகுதிகள் மறவர், கள்ளர், வன்னியர் முதலியவர்களுக்கும் வழங்கினான். இப் பாளையப்பட்டு முறையால், ஏற்கனவே கூறியபடி, நிலம் அவற்றின் உடைமையாளரிடமிருந்து பறிமுதல் செய்யப்பட்டு, அரசு உடைமையானது. அந்தந்தப் பகுதியிலுள்ள பாளையப் பட்டுகள், நிலங்களுக்கு உரியவராயினர். அவர் நிலங்களைத் தங்களின் பொறுப்பில் வைத்துக் கொண்டது போக, எஞ்சிய வற்றைத் தங்களின் உறவினர்க்கும், மற்றும் வேண்டியவர்க் கும் வழங்கினர். அக்காலத்தில் தெலுங்கர், மறவர், கள்ளர் முதலிய மரபினர்க்கு நஞ்சைப் பயிர் சாகுபடி செய்யத் தெரியாது. அவர்கள் வறண்ட பகுதிகளிலேயே அதற்கு முன்பு இருந்தவர். ஆதலால் நஞ்சை நிலங்களைப் பண்டைய வேளாண் மரபினராகிய தேவேந்திர குலத்தாரிடமே பயிர் செய்ய விடவேண்டிய நிலை எழுந்தது. இவர் விளைபொருளில் பத்தில் ஒரு பாகமே பெற்றனர். மீதம் ஒன்பது பாகம் பாளையப்பட்டுக்கு உரியது. சில சமயம் விளைந்த நெல் முழுவதையும் பாளையப்பட்டுவிடம் ஒப்புவித்துவிட்டு அதற்குப் பதிலாகச் சிறிது புஞ்சைத் தானியம் மட்டும் பெறுவர். அதனால் இவருக்கு வாய்க்கும் கைக்கும் எட்டாத நிலை ஏற்பட்டு, வாழ்க்கை நடத்த முடியாமல் கடன் பெற்று, அதற்கு ஈடாகத் தங்களையும், தங்கள் குடும்பங்களையும் பண்ணை களுக்குக் கொத்தடிமைகளாக உள்ளாக்கிக் கொள்ளும் நிலை ஏற்பட்டது இவ்வித அவல நிலையிலிருந்து, இவர் எவ்வாறு தங்களை மீட்டுக்கொண்டு, தனனுரிமையுடன் வாழ்க்கை நடத்த முற்பட்டனர் என்பது, கி பி. 1800 இல் நெல்லை

1. Page 56. History of Tinnevelly - Dr. R. Caldwell.

மாவட்டக் கலெக்டர் S. R. லுசிங்டன் சென்னை நில வருவாய்த் துறைக் கழகத்திற்கு அனுப்பிய அறிக்கை [1] மற்றும் டாக்டர் G. ஓப்பர்ட் இவரின் குறிப்பு [2] இவற்றிலிருந்து ஒருவாறு விளங்கும்.

தஞ்சையில் ஆட்சி புரிந்த நாயக்கர், அவருக்குப் பின்னால் வந்த மராட்டியர், இவரது ஆட்சியின் கீழ் வேளாண் குடியினர் அனுபவித்த வரிக் கொடுமையும், இன்னல்களும், கொடூரச் செயல்களும் சொல்லுந்தரமன்று. இடைக் காலத்தில், தமிழகத்திற்குள் முகமதியர் புகுந்து நடத்திய கொலைகளும், கொள்ளைகளும் மற்றும் அடாத கொடுஞ்செயல்களும் கூறுந்தரமன்று எனலாம். இது ஒரு புறமிருக்க, தொண்டை நாட்டிலிருந்து ஒரு சாரார் இறக்குமதி செய்யப்பட்டனர். இது பற்றிக் கீழே காண்போம்.

**தொண்டை மண்டலத்தார் தென்னகத்தில் குடியேற்றம் :**

நாயக்கர், கன்னடியர், மறவர், கள்ளர், வன்னியர் ஒரு புறமிருக்க, விசுவநாதனுக்குத் துணையாக அமைச்சனாகவும், தளவாயாகவும் விசய நகர மன்னனால் அனுப்பப்பட்ட அரியநாதன், தனது உறவினரையும், மரபினரையும் தொண்டை மண்டலப் பகுதியிலிருந்து வரவழைத்து, தென் தமிழகத்தின் பல பாகங்களில் ஊர்களும், கோட்டைகளும் அமைத்து, அவற்றில் குடி அமர்த்தினான். இவ்வாறு குடியேறினவர்க்கு வீடுகளும், நிலங்களும் பகிர்ந்தளிக்கப்பட்டது. இது பற்றி வில்லியம் டெய்லர் மெக்கன்சி தொகுத்த கைப் பிரதியில் கண்டிருப்பதாவது :- 'அப்பால் திரிசிறம் கோட்டை, மதுரைக் கோட்டை, தஞ்சாவூர் கோட்டை, சீரங்கப்பட்டணம் கோட்டை, ராயவேலூர் கோட்டை, பாளையங்கோட்டை முதலாகிய கெடிய ஸ்தலங்களில் கோட்டைகளும் கட்டி வைத்து, தங்கள் உறவின் முறையாருக்கு சோழ குலாத்தன நகரி, திருமங்கலம், புத்தனேரி

1. Report to the Board of Revenue made by Mr. S. R. Lusching- tion Collector of Tinnevelly on 29th December 1800
2. The original inhabitants of India Dr. G. Oppert.

முதலாகிய கிராமங்களில் இரண்டாயிரம் குடும்பத்துடன் வீடு வாசல் விவசாயத்துடன் இருக்கச் சொல்லிவிட்டுக் கொடுத்து.'[1] மதுரை மாவட்டம், சோழவந்தானில், இந் நாளில் முதலியார் கோட்டை என்று வழங்கப்படுவது, அரிய நாதனுல் ஏற்படுத்திய கோட்டையே. தமிழகத்தின் பல பாகங் களில், பெரும் நிலக்கிழாராய் இருப்பவரில் பெரும்பாலோர், அரியநாதனுல் குடி அமர்த்தப்பட்டவரின் வழிவந்தோர் என்று கருதற்பாலது. நெல்லையில் பேட்டைத் தளவாய் முதலியார் என வழங்குபவர், தெலுங்கருக்கு அரசியலில் உதவிய வரின் வழி வந்தோரே என்று தெரிகிறது.

திருநெல்வேலி நெல்லையப்பர் ஆலயத்தில், வடமலை யப்பன் உருவச்சிலை வைக்கப்பட்டிருப்பதை, அங்கு சென்ற வர் அறிவர். இந்த வடமலையப்பன், தென் பாண்டி நாட்டில் நாயக்க அரசின் பிரதிநிதியாயிருந்து, தேவேந்திர குலத்தாரை அடக்க உதவியவன். அழகப்ப முதலி, திருமலைக் கொழுந்துப் பிள்ளையன் இவர்களும், நாயக்க அரசுக்கு உதவியவரே. இவர்களுக்குப் பெருமை தேடவே முக்கூடற் பள்ளு இயற்றப்பட்டதாகத் தெரிகிறது தொண்டை மண்டலத் திலிருந்து குடியேற்றப்பட்ட ஒரு சாரார், காரைக் காட்டார் என வழங்கினர். இவர் தேவேந்திர குலத்தாரிடமிருந்து தங்களுக்கு வெற்றிச் சின்னமான கொடியாகப் பிடிப்பதற்கு, மேழியைக்கூட வழக்கிட்டு வாங்கியிருக்கின்றனர் எனப் பள்ளு நூல்[2] கூறுவது காண்க.

### நெங்கர் ஆட்சியில் உழவர் நிலை.

கி. பி. 16 ஆம் நூற்ருண்டியத் தென் இந்திய ஆட்சி முறையும், சமயமும் என்பது பற்றி திருவாளர் கள் R. சத்தியநாத அய்யர், D. பாலசுப்பிரமணியம் கூறுவதாவது :– சோழர் காலத்தில் ஊர்ப் பேரவைகள் நாம் குறிப்பிட்டுவரும் பகுதியில் மறைந்து விட்டன என்றே கூற வேண்டும். நிலங்கள் யாவும் அரசனுக்கு உரியவை.

1. Page 110. Vol II-William Taylor Machenzee Collections An attempt to elucidate the history anthology and antiquities of an interesting kingdom of South India-Manuscripts. Bio-graphical notice of Ariyanatha Mudaliar.
2. செய் – 73. முக்கூடற் பள்ளு.

அவரிடமிருந்து அமரநாயக்கன் எனப்பெற்ற தலைவர்கள் நிலங்களைப் பெற்று உழவருக்குக் கொடுக்கின்றனர். உழவர் நிலவருவாயில் ஒன்பது பங்கைத் தமது தலைவர்களுக்குச் செலுத்துவர்.' [1] சீவல் என்பவர், திருவாளர்கள் R. சத்திய நாத அய்யர், D. பாலசுப்பிரமணியம் வெளியிட்டிருக்கும் கருத்துக்களையே எடுத்துரைக்கின்றுர். [2]

Sewell says :- All the lands belong to the King and from his hands, the Captains hold it. They make it over to the husbandman, who pay ninetenths to their lord and they have no land of their own, for the Kingdom entirely belongs to the King. Only the Captains are put to charge on account of the troops for whom the King makes them responsible and whom they are obliged to provide in the way of service.

Note (2) Whether true or not, this statement coming as it is from a totally external source, strongly supports the view often held that the ryots of South India were grievously oppressed by the nobles, when subject to Hindu Government. Other passages in both these chronicles, each of which was written quite independantally of the Other, Confirm the assertion here made, as to the mass of the people being ground down and living in the greatest poverty and distress' [2]

திருவாளர்கள் R சத்தியநாத அய்யரும், D. பாலசுப்பிர மணியமும் நிலமான்ய முறை பற்றிக் கூறுவதாவது :- பொதுவாக அவர்கள் தலைநகரில் தான் தங்கியிருந்தனர். பெரும்பான்மையும், பொருளமைப்பு முறை, உழவர் மக்களைக் கொடுமைப்படுத்தியதாலும், பலர் வேறு இடங்கட்குச் செல்ல நேர்ந்தது. [3] அரசரும், அவருடைய

1. பக்கம் 357. இந்திய வரலாறு இரண்டாம் பாகம் R. சத்தியநாத அய்யர், D. பாலசுப்பிரமணியம்.
2. Page 379. A forgotten emphire Sewell.
3. பக்கம் 351. இந்திய வரலாறு பாகம் II R. சத்தியநாத அய்யர் D. பாலசுப்பிரமணியம்.

அலுவலாளரும், உயர் இன்பவாழ்க்கை வாழ்ந்து வந்ததால், விசய நகரம் பகட்டாகக் காட்சி அளித்தது. ஆனால் அந்த இந்துப் பேரரசின் மேன்மையை மதிப்பிடுகையில், அங்கே மிகச் சிறந்த காலப் பகுதியிற்கூட, உழவர் பல இடையூறுகளைப் பெற்றிருந்தனர் என்பது மறக்கற்பாலதன்று. [1] விசய நகர ஆட்சி கால 1442 சக வருடக் கல்வெட்டு ஒன்றில் கண்டிருப்பதாவது: 'பாலைக்குடி, களங்காடு, கிளிநல்லூர் ஊர்களிலுள்ள வெள்ளாளக் குத்தகைதார், அரசுக்குச் சேர வேண்டிய வரியைச் செலுத்துவதற்காக, தங்களின் நிலங்களை விற்க வேண்டிய நிர்ப்பந்தத்திற்கு உள்ளாயினர். [2] விசய நகர ஆட்சிக்கு எதிராகத் தொண்டை மண்டலப் பகுதியில், தேவேந்திர குலத்தார் சதியாலோசனையில் ஈடுபட்டதாக, ஒரு கல்வெட்டு காணப்படுகிறது. [3] தமிழகத்தில் நாயக்கர் ஆட்சி பற்றி நெல்சன், டாக்டர் கால்டுவெல் போன்றோர், அது வெறும் பகட்டானது என்றும், மக்கள் நலனில் நாட்டமில்லாமல் ஆடம்பரச் செலவிலும், காமக்களியாட்டங்களிலும், நாயக்கர் ஈடுபட்டிருந்தனர் என்றும், சாதாரண மன்னருக்கு இருக்கவேண்டிய பண்புகள், இவரிடம் சிறிதும் காண்பதற்கில்லை என்றும் கூறுகின்றனர். [4]

Dr. R. Caldwell says :- 'Judged therefore not merely by modern European standards of right and wrong, but even by the standards furnished by Hindu and Mohammadan books of authority, the Nayakas must be decided to have fallen far short of their duty as rulers. Their reigns record little more than disgraceful catalogue of debaucheries, treacheries plunderings oppressions murders and civil commotions relieved only by the factitious splendour of gifts to temples, idols and priests by means of which they

1. பக்கம் 354. இந்திய வரலாறு பாகம் II R. சத்தியநாத அய்யர் D. பாலசுப்பிரமணியம்.
2. ARE. 272 / 1914.
3. ARE. 300 / 1912.
4. Page 62. History of Tinnevelly - Dr. R. Caldwell.

apparently succeeded in getting his Brahmans and poets to speak well of them and thus in keeping the mass of the people patient under their misrule.' [1]

திருமலை நாயக்கன் காலத்திற்குப் பிறகு, மதுரையிலிருந்து தலைநகரை திருச்சிராப்பள்ளிக்கு மாற்றினர். இக்காலத்தில், மதுரை நகர் அளித்த தோற்றம் பற்றி J. S. சாண்ட்லர் கூறுவதாவது :- மதுரையில் திருமலை நாயக்கன் காலத்திற்குப் பிறகு, நகரம் காலியாகிப் பாழடைந்த தோற்றம் அளித்தது. கரடி, புலி, ஓநாய் முதலிய காட்டு விலங்குகள் நகரத்தின் தெருக்களில் மட்டுமின்றி, வீடுகளின் உள் முற்றங்களிலும் சர்வ சாதாரணமாய் நடமாடின. வெட்டுக் கிளிகளும், விசப் பூச்சிகளும் பயிர்களைச் சேதப்படுத்தின. சிலர் இறந்தவரின் சடலங்களைக்கூட எடுத்து அடக்கம் செய்யாமல், ஆற்றுக்கரைகளில் அவற்றை அப்படியே விட்டுச் சென்றனர். [2]

[Madurai city was so deserted after Tirumalai's time that wolves, bears and tigers roamed in the streets even entering into the private yards. Locusts destroyed the crops and stinging insects infested the whole country. In some families people left the dead on the banks of rivers without trying to bury them.] [2]

தஞ்சையில் ஆட்சி செய்த மராட்டிய மன்னன் எக்கோசியின் கொடுஞ் செயல்கள் பற்றி, கிறித்துவ மறையைத் தமிழகத்தில் பரப்ப வந்த ஜான் டி. பிரிட்டோ எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருப்பதாவது :- எக்கோசி விளைபொருளில் அரசுக்குச் சேரவேண்டிய ஐந்தில் நான்கு பாகத்தை வழக்கம்போல் பண்டமாக வசூலிக்காமல், அவற்றிற்கு விலையை அதிகப்பட்சமாய் நிர்ணயித்து, அந்த விலைப்படி, அரசுக்கு உரிய பாகத்திற்கு ஈடாகப் பணமாய்ச் செலுத்தும்படி குடிகளை நிர்ப்பந்தப்படுத்தினன். அரசின் கொடுஞ் செயல்களால்

1. Page 62. History of Tennevelly – Dr. R. Caldwell.
2. Page 4. History of the Jesuit Mission in Madurai – J. S. Chandler.

குடிகள் தீர்வையைச் செலுத்துவதற்கு விளைபொருட்கள் முழுவதையும் விற்க வேண்டிய நிலை எழுந்தது. வரிப் பாக்கிக்காக, மக்கள் காட்டுமிராண்டித்தனமான செயல் களுக்கு உள்ளாக்கப்பட்டனர். [1]

[The misgovernment and tyranny of the Maharatta. Ekoji or Venkoji at Tanjore is dwelt on in the letters from the missionary Jesuit resident there He is said to have taken four fifths of all the agricultural produce of the country demanding payment in money and not in kind. One of the Jesuit fathers wrote that as he 'Ekoji takes care to fix the prices himself much beyond that which the properties could realise, the result is that the sale of the entire produce doesn't suffice to pay the entire contribution.' In such cases the proprietors were sometimes subjected to barbarous torture. The writer adds that the tyranny was frightful and revolting but the things were even worse in the Kingdom of Ginji.] [1]

கி. பி. 17, 18 ஆம் நூற்றாண்டுகளில் தமிழகத்தில் முகமதியரும், மராத்தியரும் இழைத்த கொடுஞ் செயல்கள் பற்றி, ஜே. எஸ். சாண்ட்லர் கூறுவதாவது :- முகமதியப் படை எடுப்பாளர் எப்போதும் அறுவடைக்குத் தயாராய் இருக்கும் கதிர்களை அழித்தும், ஊர்களைக் கொளுத்தியும், மக்களை அடிமைப்படுத்தியும், அவர் மனத்தில் பீதியை விளைவித்தும் வந்தனர். செல்வந்தரில் பலர், தங்களின் மனைவி மக்களை உயிரோடு எரித்தும், பின்னர் தங்களின் ஈட்டியால் தங்களைத் தாங்களே பாய்த்து, மாய்த்துக் கொண்டனர். இவ்வாறு மக்கள் நெருப்பில் எரிந்து வெந்து பிணக்குவியலாய்க் கிடக்கும்போது நானூறு பிணங்களின் குவியலிலிருந்து ஒருவன் உயிரோடு எழுந்து வந்தான்.

1. Page 291. [Letter from Jean De Britto 1683] History of the Nayaks of Madurai - R. Satyanatha Ayyar, M. A., L. T.,

மராத்தியப் படையினர், முகமதியரின் மிருகச் செயல்களுக்கு சிறிதும் இளைத்தவரல்ல. தமிழர் விலையுயர்ந்த பொருட்களை வயிற்றில் விழுங்கியிருப்பர் என எண்ணி, அவரின் வயிற்றை ஈட்டியால் பிளந்து பார்க்க அவர் தயங்க வில்லை. [1]

[Mussalman invaders always struck terror to the hearts of the people, as they destroyed harvests, burned Villages, enslaved people. Nobles would immolate their wives and children, then pierce themselves in their houses with their own swords, while families would burn themselves in their houses. One man is said to have come out alive from under a pile of 400 dead bodies. The Maharatta troops were just as cruel. They opened the abdomens of people for treasure.] [1]

கி. பி. 17 ஆம் நூற்றுண்டில் தமிழகத்தில் நிலவியிருந்த சமூக பொருளாதார நிலை பற்றி திரு. ஞா. தேவநேயப் பாவாணர் கூறுவதாவது :– ‘பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டு உழவனையே தலைமைக் குடியானவனுகப் பண்டைத் தமிழ் நாடு போற்றி வந்தது. மக்களிடை ஒற்றுமையும், அரசனுக்கும், குடிகட்கும் இடையே இருதலையன்பும் இருந்து வந்தன. ‘அரசனுணை’ என்ற தொடர் மொழிக்குக்கூட அனைவரும் கட்டுப்பட்டிருந்தனர். பிறப்புப் பற்றிய குலப்பிரிவு தமிழ் நாட்டில் ஏற்பட்டதிலிருந்து, தமிழ் நாட்டு நிலை மாறி விட்டது. தமிழருக்குள் குலப்பற்று மிகுந்து இன உணர்ச்சி (National feeling) குன்றிப் போயிற்று. தீண்டாமையாலும், அதனிலும் கொடிய காணுமையாலும் தாக்குண்ட ஒரு சார்த் தமிழினம் தன் சீரிய நிலமையையும், மக்களுரிமையையும் இழந்தது. சுருங்கச் சொல்லின், தமிழினம் முழுவதும் பல்வேறு வகையில் சின்னுபின்னப் பட்டுத் தாழ்வடைந்து விட்டது. அடிக்கடி நிகழ்ந்த போராலும், இடையும் இறுதியும் ஏற்பட்ட அயலார் ஆட்சியாலும், படையேறு குழப்பத்தாலும், கொள்ளையாலும்,

1. Page 5. History of the Jesuit Mission – J. S. Chandler.

வெள்ளத்தாலும், பஞ்சத்தாலும், வரிக்கொடுமையாலும், பொதுமக்கள் நிலைமை வரவரச் சீர்கெட்டு வந்தது. வறுமையும், அடிமைத்தனமும் வளர்ந்தோங்கின. தனியடிமையும், கொத்தடிமையும், குலவடிமையுமாகப் பற்பலர் மீளா அடிமைப்பட்டு, அவர் வழியினரும் அந்நிலையாயினர். வெளியார் திரள் திரளாய் வந்து குவிந்ததினாலும், மக்கள் தொகை மிக்கதினாலும், பொருளாதார வீதங்குன்றிற்று. குடிகள் வலசை போனதினால் சில ஊர்கள் குடிப் பாழாயின. அன்பாட்சி நீங்கி, அதிகார வாட்சி ஓங்கியதால் குடிகள் பெரும்பாலும் அஞ்சி வாழ வேண்டியதாயிற்று. மக்களிடையே ஒற்றுமையும், நாட்டுப் பற்றும், அரசப் பற்றும் மறைந்தன. இங்ஙனம் தமிழாட்சி முடிவுற்ற 17 ஆம் நூற்றுண்டுத் தமிழகம் பல வகையிலும் அலைப்புண்டு அல்லற் பட்டிருந்தது.' [1]

### தேவேந்திரர் தொண்டை மண்டலத்திலிருந்து வெளியேற்றம் :

தமிழ்வேந்தர் ஆட்சி முடிந்து விசய நகர, தெலுங்கு, மராட்டியர் ஆட்சி தமிழகத்தில் பரவியிருந்த காலை, தமிழ் மக்களின், குறிப்பாக உழவரின் நிலை, எவ்வாறிருந்ததென்று பல அறிஞரும் கூறியிருப்பதை மேலே கண்டோம். தேவேந்திர குலத்தார் பண்டைய வேளாண் குடியினர்; உழவர் சமுதாயம்; பாளையப்பட்டு முறையால் நிலமிழந்தனர்; அதனால் இவர் கொத்தடிமையாயினர். ஊர்விட்டு ஊர்போக வேண்டிய நிலையும் ஏற்பட்டது. ஏன் ஊர்களை விட்டு விரட்டப் பட்டிருக்கின்றனர். தொண்டை மண்டலத்திலிருந்தும் இவர் விரட்டப்பட்டிருக்கின்றனர். திருச்சிராப்பள்ளி மாவட்ட 1891 ஆம் ஆண்டு மக்கள் குடிக்கணக் கெடுப்பில் ஒரு சாரார் தங்கள் பிரிவைத் தொண்டைமான் எனக் குறிப்பிட்டிருப்பது இதற்குச் சான்றாகும். [2]

**கள்ளர் மத்தியில் தேவேந்திர குலத்தார் :** தஞ்சை மாவட்டம், கீழ்பகுதி பள்ளி வகுப்பினராலும், மேல்பகுதி

1. பக்கம் 169 – 70 பழந்தமிழாட்சி ஞா. தேவநேயப் பாவாணர் M. A.,
2. Page 247. 1891 Census Report Vol XIII – H. A. Stuart.

கள்ளராலும் இடைக்காலத்தில் பெருவாரியாக ஆக்கிரமிக்கப் பட்டு அதனுல் தேவேந்திர குலத்தார் நிலமிழந்திருக்கின்ற னர் என்பது செவிவழிச் செய்தி மூலம் அறிகிறோம். மதுரை மாவட்டம், மேலூர் வட்டாரத்தில் கள்ளர், தேவேந்திர குலத் தாரின்கீழ் வேலைக்கு அமர்ந்து, பின் அவரை விரட்டிவிட்டு, அவரது நிலங்களை ஆக்கிரமித்திருக்கின்றனர்.[1] மதுரை மாவட்டக் குறிப்பு, மற்றும் குலங்களும் குடிகளும் என்ற நூலில் கள்ளர் வெள்ளாளரின் கீழ் வேலைக்கு அமர்ந்தனர் என்று குறிப்பிட்டிருப்பதில், வெள்ளாளர் என்பது, தேவேந்திர குலத்தாரையே குறிக்கும். புதுக்கோட்டைப் பகுதியிலும், இது போன்றே நடந்திருக்கின்றது. புதுக்கோட்டை சமத்தானக் குறிப்பு, கள்ளர் வேங்கடமலைப் பகுதியிலிருந்து இடைக்காலத்தில் புதுக்கோட்டைப் பகுதியில் குடியேறின தாகவே கூறுகின்றது. இவர் குடியேறிய காலத்தில், அங்குள்ள செழிப்பான கோனுடு, கானுடுப் பகுதிகளில் வாழ்ந்த தேவேந்திர குலத்தார், சிறுகச் சிறுக அடக்கப் பட்டும், விரட்டப்பட்டும் இருக்கின்றனர்.[2] இது நாயக்கர் காலத்திலேயே நிகழ்ந்திருக்க வேண்டும். கள்ளர் பெரும் பான்மையாய் வாழும் பகுதியில் உள்ள கி பி. 14 ஆம் நூற் ருண்டைச் சேர்ந்ததாகக் கூறப்படும் கல்வெட்டில், பள்ளர் கீழ் சாதி எனவும்,[3] இன்னும் சில கல்வெட்டுகளில் பறையரை தேவேந்திர குலத்தாருடன் மோதவிட்டு, பின்னவரின் உரிமைகள் தங்களுக்கும் உண்டு என, அவர் கிளர்ச்சி செய்தனர்.[4] என்றும் பொறிக்கப்பட்டிருப்பது, இக் கருத்துக்கு சான்ருக அமையும். தஞ்சை மாவட்டத்தில் குடியேறியிருக்கும் கள்ளர் தெற்கித்தியர் என வழங்கி வருகின்றனர்.[5] நாயக்கர் காலத்தில் கி. பி. 1605 இல் மறவ ருக்குச் சேது சமத்தானம் கிடைத்தது. அதே போன்று கள்ளர் மரபைச் சேர்ந்த தொண்டைமான், புதுக்கோட்டைப்

1. Page 56. Castes and Tribes of Southern India Vol III
2. Puducottai Census 1921.
3. IPS. 194.
4. IPS. 929.
5. Thanjavur Dt., Gazetteer.

பகுதிக்குத் தலைவனுனன். ஆனதால் இப்பகுதி வாழ் தேவேந்திர குலத்தாரைக் கள்ளர், அடக்கி ஒடுக்க வாய்ப்பு ஏற்பட்டது. தஞ்சை மாவட்டத்தில் மராட்டியர் காலத்தில் தான், கள்ளர் பெருவாரி புதுக்கோட்டைப் பகுதியிலிருந்து குடியேறினர் எனலாம். இங்கு இக்காலத்திலுள்ள, கள்ளர் மரபைச் சேர்ந்த பெருநிலக்கிழார்கள், நாயக்கர், மராட்டியர் காலத்தில் ஏற்றம் பெற்றவரே. தமிழ் வேந்தர் ஆட்சியின் போது, இவர் இங்கு இல்லை எனலாம்.

**தேவேந்திரரை அடக்குவதில் மறவரின் பங்கு :**

சோழ நாட்டில் தஞ்சை மாவட்டத்தின் கீழ்ப் பகுதியில் பள்ளி, மேல் பகுதியில் கள்ளர், இவர் இருவரும் பெரும் எண்ணிக்கையில் குடியேற்றப்பட்டதைப் போன்று, பாண்டிய நாட்டில், குறிப்பாக இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்களில் மறவர் குடியேற்றம் ஏற்பட்டதாகத் தெரிகிறது. கி. பி. 16ஆம் நூற்ருண்டின் இடைக் காலத்தில், விசுவநாத நாயக்கன் தமிழகப் போர்க்களங்களில் வெற்றி காணத் தனக்குத் துணைபுரிந்தவர்க்குச் சன்மானமாக நிலங்கள் பகிர்ந்தளிக்கும் வகையிலும், அதே சமயம் மேற்கொண்டு நாட்டில் தமிழ் மரபினர் மீண்டும் போர் தொடுக்காமல் செய்யுமுகத்தான், அவரை முற்றிலும் அடக்கி ஒடுக்கி வலிவற்றவராக்கும் நடவடிக்கையாகவும், பாளையப்பட்டுகளை அமர்த்திஞன் எனவும், அவ்விதம் அமர்த்தியவரில், பெரும்பாலோர் தெலுங்கரும், அவருக்கு அடுத்தபடியாக மறவரும் ஆவர் எனவும் ஏற்கனவே கண்டோம். மறவர்க்கு வழங்கப்பட்ட பாளையங்கள் இராமநாதபுரம், நெல்லை மாவட்டங்களிலேயே அடக்கம். அப்பாளையங்களில் முக்கியமானவை சிங்கம்பட்டி, ஊர்க்காடு, ஊற்றுமலை, வடகரை, சுரந்தை, நடுவக்குறிச்சி, குருக்கள்பட்டு, அழகாபுரி, நெற்காட்டான் செவல், தலைவன் கோட்டை, சிவகிரி, கொல்லங்கொண்டான், சேற்றூர், ஏழாயிரம் பண்ணை, கடம்பூர், மணியாச்சி முதலியவையாம். இப் பாளையங்களில் ஏழாயிரம் பண்ணை, அழகாபுரி, சிவகிரி பாளையங்கள் வன்னிய மறவரின் கீழும், சேற்றூர், கொல்லங்

கொண்டான் இவைகள், பண்டார மறவரின் கீழும், சிங்கம் பட்டி, ஊர்க்காடு இவைகள், சிறுதாலிகட்டி மறவரின் கீழும், ஊற்றுமலே, சுரந்தை, நெற்காட்டான் செவல், வடகரை, மணியாச்சி, தலேவன் கோட்டை, நடுவாக்குரிச்சி, குருக்கள் பட்டு, கடம்பூர் இவைகள், கொண்டையங் கோட்டை மறவரின் கீழும் இருந்தன. கி. பி. 1605இல் செம்பி மறவருக்கு இராமநாதபுரம் கீழ்ப்பகுதி, முத்து கிருஷ்ணப்ப நாயக்கனல் வழங்கப்பட்டது. பின்னல் இதிலிருந்து சிவகங்கை பிரிந்தது. சிவகங்கையும் செம்பி மறவரின் ஆதிக்கத்திற்குள்ளேயே இருந்து வந்தது.

அந்நாளில் பாளேயங்களில் வாழ்ந்த குடிகள் அனேவரும் மறவர், நாயக்கர், கள்ளர் ஆதிக்கத்திற்குள் அடக்கம். நஞ்சை நிலங்களில் தேவேந்திர குலத்தார் பயிர்த்தொழில் செய்தாலும், விளேபொருளில், பத்தில் ஒருபங்குதான் அவர் பெற்றனர் என்றும், மீதம் ஒன்பது பங்கு பாளேயக்காரனுக்கு உரியது என்றும், வரலாற்ருசிரியர் பலர் கூறியிருப்பதை ஏற்கனவே கண்டோம். இந்த ஒன்பது பங்கில், மூன்று பங்கு மத்திய அரசுக்கு (நாயக்கருக்கு) உரியது; மூன்று பங்கு படைச் செலவுக்கு; அதாவது படை வீரராகிய தெலுங்கர், கள்ளர், மறவருக்கு உரியது; மீதம் மூன்று பங்கு பாளேயக்காரனுக்கு உரியது. பாளேயத்திற்குச் சேரவேண்டிய மகசூல், மற்றும் வரி வகைகளே வசூலிப்பது, பாளேயக்காரனிடம் சேவை செய்த படைத் தொழில் புரிபவரின் வேலே. இவருக்கு காவல் வேலேயும் கொடுக்கப்பட்டது. அதைப் பாடி காவல், கொண்டிக் காவல் என்பர். அதற்காக ஒவ்வொரு குடும்பமும் தனியாய் வரி செலுத்த வேண்டும். இப்பகுதிக்குள் நடக்கும் குற்றங்களுக்கு நீதி வழங்கும் அதிகாரம் பாளேயப் பட்டுகளுக்கே உரித்தானது. இப் பாளேயப்பட்டு முறையைப் பின்பற்றியே, ஆங்கிலேயர் காலத்தில் சமீன்கள் நிறுவப் பட்டன. பழைய பாளேயப்பட்டுகளின் வழிவந்தோரே பெரும்பாலும் சமீன்தாராக நியமனம் பெற்றனர். ஆதலால் வரிவசூல், காவல் தொழில், நீதி வழங்குதல் முதலிய அதிகாரங்கள் படைத் தொழில் புரிந்தவரின் கைக்குள்ளேயே

நீண்டகாலமாய் இருந்து வந்தது. சமீப காலம் வரை கொண்டிக் காவல் மறவர், நாயக்கர், கள்ளர் இந்த வகுப்பாரின் பார்வையின் கீழே இருந்தது யாவரும் அறிந்ததே. இப் பழக்கத்தைப் பின்பற்றியே, தென் மாவட்டங்களின் நெற்போர்க்களங்களில், இம்மரபினர் சென்று காவற் கூலியாக நெல் வசூலித்து வருகின்றனர். இப்பழக்கம் ஒரு சில இடங்களில் நிறுத்தப்பட்டும், வேறு சில இடங்களில் வழக்கிலும் நாளது வரையில் இருந்து வருவதாகவும் தெரிகிறது.

விசயநகர ஆட்சியாளர் மதுரையைக் கைப்பற்றியதும், பாண்டியர் பின்வாங்கி தென்பாண்டி நாட்டில் தலைநகரங்களை அமைத்து இறுதிவரை மாற்றாரை எதிர்த்து வந்தனர். நெல்லை மாவட்டத்துடன், இராமநாதபுரம் மாவட்டம் பெரும் பகுதி பாண்டியர் ஆட்சியில் நீண்ட காலம் இருந்து வந்ததாகவே தெரிகிறது. இதன் காரணமாகவே போர்களிலும், அடக்கு முறைகளிலும் பெரும்பாலோர் மாண்டுங்கூட, இந்த இரு மாவட்டங்களிலும் தேவேந்திர குலத்தார் அதிக எண்ணிக்கையில் இன்னும் இருந்து வருகின்றனர் எனலாம். தேவேந்திர குலத்தாரை அடக்குவதற்கு, நாயக்கர் தெலுங்கருக்கு உதவியாக, வடக்கே பள்ளி, கள்ளர் உதவியை நாடியது போன்று, தெற்கே மறவரின் துணையை நாடினர் எனக் கருத ஏதுவாகிறது. இதன் காரணமாகவே, இந்த இரு மாவட்டங்களில் மட்டும் மறவர் இருக்கின்றனர். இவை தவிர்த்து, இதர மாவட்டங்களில் மறவர் இல்லாதது குறிப்பிடத் தக்கது. பாளையப்பட்டு முறை அமுலுக்கு வந்த பிறகுதான், மறவ நாடு என ஒரு தனிநாடு, மறவர்க்கு ஏற்பட்டது. இவர் நாயக்கருக்குச் செய்த தொண்டின் காரணமாகவே, மறவ நாடு என ஒரு தனிநாடு பெற்றனர் என்பதை, ஒருவரும் மறுப்பதற்கில்லை. பாளையப்பட்டு முறை ஏற்பட்டு சுமார் 50 ஆண்டுகளுக்குப் பிறகு, மறவநாடு ஏற்பட்டது கவனத்திற்குரியது.

தமிழகத்தை வீழ்த்த, தெலுங்கு மரபினர்க்கு கள்ளர், மறவர் ஆகிய இருவரும் ஒத்துழைப்பு வழங்கினர் என்றால், இவர் தமிழ் மரபினர் இல்லையா ? என்ற ஐயப்பாடு எழுகிறது.

ஒரு சாரார் கள்ளர் களப்பிரர் எனக் கூறுவதாகவும், இன்னும் சிலர் இவர் வேங்கடமலைப் பகுதியிலிருந்து இடைக்காலத்தில் புதுக்கோட்டைப் பகுதியில் குடியேறி, அங்கிருந்து மதுரை, தஞ்சை மாவட்டங்களில் பரவினர் எனவும் கூறுவர். இவர் வடக்கே தொண்டைமண்டலப் பகுதியிலிருந்து வந்ததற்கு அடையாளமாகவே, புதுக்கோட்டை மன்னர், தொண்டைமான் என்ற பட்டம் தரித்திருந்தனர் என்பர். மேலும் கள்ளரில் தேவர் என்ற குலப்பட்டம் தரித்திருக்கும் பிறமலைக் கள்ளர், ஒரு தனி மரபு எனத் தெரிகிறது. இவர் பழக்க வழக்கம், மற்றப் பகுதிவாழ் கள்ளரிடமிருந்து வேறுபடுவது இதற்குச் சான்றாகும். இவரின் சிறுவர்க்குச் சுன்னத்துக் கல்யாணம் செய்தல்.[1] பூப்பு எய்திய பெண்கள் கழுத்தில் குதிரை முடிக்கண்ணியை அணிதல்.[2] மேலும் ஒரு பெண் பல ஆடவரை ஒரே காலத்தில் கணவராகக் கொள்தல் குறிப்பிடத்தக்கது[3] சிறுகுடிக் கள்ளர் பெண்கள் அணியும் தாலியில் முகமதியர் தாலியில் இருப்பது போன்று பிறையும், நட்சத்திரமும் பொறிக்கப் பட்டிருப்பதைக் காணலாம்.[4] கள்ளர் யார்? என்பது பற்றிப் பார்த்தோம். மறவர் யார்? கள்ளர் போன்று இவரும் வேற்று மரபினரா? இக்கால மறவர் பண்டைக்காலப் போர் மறவரோ, அல்லது பாலைநில ஆறலைக் கள்வரான வேட்டுவ மறவரோ அல்ல எனவும், இவர் அநேகமாய் ஈழத்திலிருந்து இடைக் காலத்தில் தமிழகத்தில் குடியேறியவர் ஆகலாம் எனவும், ஏற்கனவே குறிப்பிட்டிருப்பதை வாசகர் அறிவர். இம்முடிவு சரிதானா என்பது மேற்கொண்டு ஆராயத் தக்கது. பண்டைக்காலப் பாலைநில வேட்டுவ மறவரில் பெரும்பாலோரைத் தமிழ் வேந்தர் திருத்தி, ஒழுங்கும் கட்டுப்பாடுமுடைய நாகரிகக் குடிமக்களாகவும் ஆக்கினர். காலப் போக்கில், அவர் தமிழகத்திலுள்ள பல்வேறு பிரிவுகளிலும் இணைந்துவிட்டனர் எனலாம். எஞ்சியவர் குறவர், வேட்டுவர் மற்றும் மலைவாழ்நர் என வழங்கி வருதல் காண்க. இக்காலக் குறவர் பண்டைக்காலப் பாலைநில மறவரின் பின்னோரே. இவர் திருட்டுத் தொழிலில் பெருமளவில் ஈடுபட்டு வருவது இதற்குச் சான்றாகும். இவரில் நாகரீகம் எய்தியவர், சமீப காலமாய் அகம்படிய வேளாளர்[5] என வழங்கி வருகின்றனர்.

1. Page 74 Castes and Tribes of Southern India Vol III – E. Thurston.
2. Page 78. do do do.
3. Page 77. do do do.
4. Page 75. do do do.
5. Page 377. Castes and Tribes of Southern India Vol VII – E. Thurston.

இவரில் பலர் சைவ வேளாளராக மாறியும் இருக்கலாம். அறுபத்து மூன்று சைவச் சமய நாயன்மார்களில் ஒருவரான கண்ணப்ப நாயனுர், ஆறலைத்தல் தொழிலையுடைய வேட்டுவ மறவர் என்பது, யாவரும் அறிந்ததே. இது நிற்க.

பண்டையத் தமிழகத்தில் மறவர் என ஒரு தனி மக்கட் பிரிவு இல்லை என அறிகிருேம். மறம் என்பது வீரத்தைக் குறிக்கும். அக்காலத்தில் போர்கள் அடிக்கடி நடைபெற்றன. போரில் ஈடுபட்டவர் அனைவரும் மறவர் என வழங்கினர். படைகளில் மூலப்படை, நாட்டுப்படை, குடிப்படை, காட்டுப்படை எனப் பல வகைப்படும். போர்கள் அறத்தோடு ஒட்டியதாகவே அமைந்த தென்பர் தமிழறிஞர். எயினர், வேட்டுவர் ஆறலைத்தல் தொழிலை மேற்கொண்ட காலை, இவரை அறத்திற்கு எதிரான மறவர்; அதாவது வேட்டுவ எயின மறவர் என வழங்கினர். குறிஞ்சி, முல்லை நில வாழ் மக்களில் ஒரு சாரார் காட்டுப் படையில் சேர்ந்து பணிபுரிந்திருப்பர். ஆகப் பொதுவாக மறவர் என்ருல், அது ஒரு தொழிற் பெயர் எனலாம். அது மரபுப் பெயர் ஆகாது. டாக்டர் N. சுப்பிர மணியம் போர்த் தொழில் புரிந்தவர் அனைவரும், பொதுவாய் மறவர் என வழங்கினர் என்கிருர்.[1] (Maravar was a common name for the martial community) வரலாற்ருசிரியர் டாக்டர் K. K. பிள்ளை பண்டைக் காலத்தில் மறவர் போர் வீரரில் சிறந்தவர் எனவும், பிற்காலத்தில் படைத் தொழில் புரிந்தவர் அனைவரும், பொதுவாய் மறவர் என வழங்கினர் எனவும் கூறுகிருர்.

Dr. K. K. Pillay says: 'By far the most distinctive class of warriors was the Maravars. In fact at latter times Maravars generally denoted warriors'[2]

டாக்டர் S. கதிர்வேல் இக்கால மறவர் பற்றி ஆய்வு செய்து டாக்டர் பட்டம் பெற்றவர். இவர் கூறுவதைக் காண்போம். 'சேர, சோழ, பாண்டியர், அவரில் குறிப்பாகப்

---

1. Page 336. History of Tamil Nadu - Dr. N. Subramanian.
2. Page 214. A Social History of the Tamil - Dr. K. K. Pillay.

பாண்டியர், மறவர் மரபைச் சேர்ந்தவர் என ஒரு சாரார் கூறுவர். இக் கூற்று, தங்கள் தங்கள் குலத்துக்கு உயர்வு தேடக் கூறுவது போன்றது எனலாம். சங்க இலக்கியங்களில் மறம், மறவன் என்ற குறிப்புகள் காணப்படுவது உண்மையே என்றாலும், அவை வீரத்தையும், வீரரையும் சுட்டு கின்றதேயொழிய, மறவர் என்ற ஒரு தனி மரபைச் சுட்ட வில்லை. படையில் சேர்ந்து வீரத்துடன் போர் புரிந்தவர் அனைவரும், வீரர் என்ற பொருளில் மறவர் என வழங்கினர்.' [1]

Dr. S. Kadirvel says :- 'This school of thought holds that the three ancient Kings - the Pandyas, Cholas and Cheras and those especially the Pandyas belonged to this group (Maravas.) This adulation of their own community is of a piece with the tendancy now common to exalt one's own community or caste. They depend upon the ancient Tamil literature to support this theory. No doubt there are innumerable references in the ancient Sangam literature to the words Maram and Maravan. But these words are used generally to mean heroism and heroes respectively and do not specifically refer to the marava community. All those who fought heroically were referred to as maravas meaning heroes.' [1]

டாக்டர் N. சுப்பிரமணியம், டாக்டர் S. கதிர்வேல் இருவரும் பண்டைய நாளில் மறவர் என்ற ஒரு மரபு இல்லை என்கின்றனர். டாக்டர் K. K. பிள்ளை பண்டைய நாளில் மறவர் என்ற ஒரு மரபினர் இருந்ததாகவும், அவர் போர் புரிவதில் சிறந்தவர் எனவும், ஆனால் பிற்காலத்தில் படைத் தொழில் புரிந்தவர் அனைவரும் மறவர் எனப்பெயர் பெற்ற தாகவும், அதனால் மறவர் என்ற தனி வகுப்பு இல்லை எனவும் கூறுகிறார். இவர் கூறுவது போன்று, பண்டைக் காலத்தில் மறவர் என ஒரு தனி மரபு இருந்ததெனக் கூறுவது சரியன்று. அக்காலப்போர் மறவரின் குணாதிசயங்கள் பற்றி

1. Page 16. History of Maravars (unpublished) - Dr. S. Kadirvel.

திரு. R. P. சேதுப்பிள்ளை கூறுவதாவது:— 'மனத்திண்மை வாய்ந்த வீரரை மறவர் என்று அழைத்தனர் பழந்தமிழர். அவர் கல்லெனத் திரண்ட தோளர். கட்டமைந்த மேனியர். முறுக்கு மீசையர். தருக்கு மொழியினர். வீறிய நடையினர் சீரிய வழியினர்.

> 'புகழ் எனின் உயிருங் கொடுக்குவர். பழியெனின்
> உலகுடன்பெறினும் கொள்ளலர்.' (புறம் 182)

போர்க்களத்தில் முன் வைத்த காலைப் பின் வைத்தலறியாத மறவரே சுத்த வீரர். தம்மை நோக்கி வரும் படைக்கலத்தைத் துச்சமாகக் கருதுவது அவர் இயற்கை. படைக்கலம் வரும் போது, விழித்த கண் இமைத்தல் அவ்வீரத்திற்கு இழுக்கு.

> 'விழித்தகண் வேல்கொண்டெறிய அழித் திமைப்பின்
> ஓட்டகன்றோ வன்கண் அவர்க்கு' (குறள் 775)

என்றார் வள்ளுவர். பகைவர் எறிந்த வேல் தன்னை நோக்கி வரும்போது, கண்ணிமைத்தல் தோல்வியாகும் என்பது இக் குறளின் கருத்து.'[1] இத்தகைய குணதிசியங்களையுடைய மறக்குல மக்கள் யார்? என்பதற்குத் திரு. R P. சேதுப்பிள்ளை பதிலிறுக்கும் முகத்தான், 'மாற்றார் தலை பறித்த மறவரது நெடுங்கரம் இன்று கழனியில் களை பறிக்கின்றது'[2] என்று கூறுகிறார். ஆக அவர் குறிப்பிடும் கழனியில் களை பறிக்கும் மறக்குலம், மருத நிலத் தலை மக்களாகிய மள்ளரே. அவர் இன்று தமிழகத்தில் பள்ளன், அரிசன் எனப்பலராலும் இழித்துரைக்கப்படும் தேவேந்திர குலப் பெருங்குடி மக்களே என அறிக. இவர் ஏருக்கு உழவர், போருக்கு மறவர். இதனாலேயே ஏரும், போரும் இணை பிரியாது என்ற வழக்கு தமிழகத்தில் எழுந்ததென்று ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம். ஆகப் பண்டைக்காலப் போர் மறவர் வேறு, இக்கால மறவர் வேறு, என இதனால் தெளிவு. கி. பி. 16 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில், இக்கால மறவர் பாளையக்காரராக நியமனம்

1. பக்கம் 16. தமிழர் வீரம் – R. P. சேதுப்பிள்ளை, B. A., B. L.
2. பக்கம் 123. தமிழர் வீரம் – R. P. சேதுப்பிள்ளை, B. A., B. L.

பெற்றவர். அதற்குமுன் இவர் தாயகம் எது? இது பற்றிக் கீழே ஆராய்வோம்.

**மறவரின் தாயகம் :** மறவர் தமிழகத்தில் முதன் முதலில் காணப்பட்டது இராமநாதபுரம் பகுதியிலேயே எனலாம். மறவர்க்கென தனி நாடு பண்டைய நாளில் இல்லை என்பது, இலக்கியங்களிலிருந்து தெளிவு. [1]

[There is no evidence in the literature to show that the Maravas had a separate Kingdom of their own in early days] [1]

இவர் தோற்றம் பற்றி இராமநாதபுரம் மாவட்டக் குறிப்பில் கண்டிருப்பதைக் காண்போம் :— 'தமிழகத்தில் மறவர் தோற்றம் பற்றி இரண்டுவிதக் கருத்துக்கள் நிலவுகின்றன. இராசராச சோழன் கி பி. 11ஆம் நூற்றுண்டில் இலங்கைமீது படை எடுத்தபோது, பாதையின் பாதுகாப்பிற்காக ஒரு படையை நிறுவினன் எனவும், அப்படையின் தலைவன் வழி வந்தோன் பின்னுளில் சேதுபதி என வழங்கியதாகவும் ஒரு சாரார் கூறுவர். சிங்கள மொழியில் காணப்படும் இன்னொரு கூற்றுப்படி, இலங்கை மன்னன் பராக்கிரமபாகுவினுல் அனுப்பப்பட்ட இலங்காபுரத்தைச் சேர்ந்த ஒரு படைத் தளபதியிலிருந்து சேதுபதி தோன்றினர் என்றும், நம்பத்தக்க மகாவம்ச சிங்கள குறிப்பின்படி அவன் பாண்டிய நாட்டின் மீது படை எடுத்து வெற்றிகண்டபின், இராமேசுவரத்தில் சில காலம் தங்கி, அங்கு ஒரு கோயிலை எழுப்பினுன் எனவும், சிங்கள நாட்டில் வழக்கில் உள்ளதைப் போன்று காசு முத்திரைகள் அடித்ததாகவும் குறிப்புகள் காணக்கிடக்கின்றன. எது எப்படி என்றுலும், இக்குறிப்புகளிலிருந்து கி. பி. 11 அல்லது 12ஆம் நூற்றுண்டில் சேது சமத்தானம் தோன்றியிருக்கலாம் எனக் கருத ஏதுவாகிறது. ராபர்ட் சீவல் எடுத்தாண்டிருக்கும் டாக்டர் பர்கஸ் கல்வெட்டுகள் கி. பி. 1414, 1489, 1500, 1540ஆம் ஆண்டுகளில் சேதுபதிகள் நிவந்தங்கள் வழங்கியதாகக் கூறுகின்றன.

1. Page 64. Gazetteer of India, Ramnad Dt.

கி. பி. 1604-இல் சடையக்கத் தேவரின் தலைமையில் சேது சமத்தானம் முத்துகிருஷ்ணப்ப நாயக்கரால் புதுப்பிக்கப் பட்டது. [1]

[There are two statements of the case differing according to the source from which they arise. According to the one which has its source in south India, the rise of the family took place in or about 1059 A. D., when Raja Raja the Chola king upon his invasion of Ceylon, appointed princes, whom he knew to be loyal to himself and who according to the same, had aided him in his conquest of all Pandya to act as guardian of the passage by which his armies must cross to and fro and supplies be rcceived from the main land. According to the other statement which has its source in the sinhalese records, the family took its rise from the appointment of Parakrama Bahu, a general of Lankapura who according to very trustworthy Sinhalese epitóme of the mahawamsa-after conquering Pandya remained some time at Rameswaram building a temple there and while on the island struck kahapanas coins similar to those of the sinhalese series. Whichever of these statements we may accept, the facts seem to point to the rise of the family in the eieventh or the twelth century A. D. and inscriptions quoted from Dr. Burgess by Robert swell, show that the grants were made by the Sethupathi prince in 1414 - in 1489- in 1500 and finally as late as 1540. This being the line drawn to whether two generations of line which Muthu-krishnappa Nayaka is said in 1604 A. D. to have found affairs sadly disordered in the Marava country and to have re-established the old family in the person of Sadayakka Thevar Udayan Sethupathi.] [1]

1. Page 140. Ramnad Dt. Gazetteer 1972.

நெல்லை மாவட்டக் குறிப்பில் கண்டிருப்பதாவது : 'மறவர் பாண்டியர் வருவதற்குமுன், தமிழகத்தின் தென் மாவட்டங்களில் ஆட்சிபுரிந்துவந்த நாகமரபினரின் வழித்தோன்றல்கள் என்று நிதானிக்கப்படுகிறது. ஆனால் இவர் தமிழகத்தில் பல நூற்றுண்டுகளுக்குப் பிறகே வந்தவர் என வரலாற்றுக் குறிப்புகள் கூறுகின்றன. மதுரை கர்னுடக ஆட்சிக்கு உட்பட்ட பிறகே, மறவர் முன்னேற்றம் அடைந்து பாளையக்காரர் நிலைக்கு ஏற்றம் பெற்றனர்.' [1]

[It has been conjectured that they (Maravas) are the descendants of the Naga race believed to have been the rulers of southern districts before the pandyas came but it is not many centuries latter that we obtain any historical view of this caste. It was during the Madurai Karnatakas that the maravas developed and consolidated their power as poligars.] [1]

டாக்டர் கால்டுவெல், மறவர் வேற்று இடத்திலிருந்தே நெல்லை மாவட்டத்தில் குடியேறினர் என்று கூறுகிறுர். [2] டாக்டர் S. கதிர்வேல் மறவர் இராமநாதபுரம் பகுதியிலிருந்து நெல்லை மாவட்டத்தில் குடியேறினர் என்றும், அவர் பூர்வீகம் எது என்பது பற்றித் திட்டமாய் அறிவதற்கு இது வரை கிடைத்திருக்கும் சான்றுகள் துணைபுரியவில்லை என்றும் கூறுகிறுர். [3]

Dr. S. Kadirvel says: 'There is little evidence to help. us determine the original home of the Maravas From the records available with the Marava families and Poligars it could be gathered that many maravas migrated from Ramnad into Tinnevelly.' [Palm leaf records of Marava Poligars and Marava families.]

---

1. Page 134. Gazetteer of Tinnevelly.
2. Page 4 History of Tinnevelly, Dr. R. Caldwell.
3. Page 13. History of Maravas (unpublished) Dr. S. Kadirvel.

மறவர் நெல்லை மாவட்டத்திற்கு இராமநாதபுரம் பகுதியிலிருந்து வந்தனர் என்பதாக வரலாற்றாசிரியர் கூறுவது மட்டுமின்றிச் செவிவழிச் செய்தியும் அவ்வாறே கூறுகின்றது. இதனால் மறவர் நெல்லை மாவட்டத்தின் பூர்வீகக் குடிகள் அல்ல; அவர் அங்கு வந்தேறிகள் எனக் கொள்வதே சரியான முடிவாகும். இவர் இராமநாதபுரத்திலிருந்து நெல்லை மாவட்டத்தில் குடியேறினர் என்றால், இவர் இராமநாதபுரம் பூர்வீகக் குடியினரா? இது வரை கிடைத்த சான்றுகளிலிருந்து இவர் அங்கும் வந்தேறிகள்தான் என்றும், அதன் பூர்வீகக் குடிகள் அல்ல என்றும் தெரிகிறது. அப்படியானால் இவர் இராமநாதபுரம் பகுதிக்கு எங்கிருந்து வந்தனர்? என்ற கேள்வி எழுகிறது. இவர் இராமநாதபுரம் பகுதிக்கு எங்கிருந்து வந்தனர் என்பது பற்றி முடிவு செய்ய, இராமநாதபுரம் மாவட்டக் குறிப்பு சிறிது துணை புரிகிறது. இதைத் தவிர, மெக்கன்சி தொகுத்த கைப்பிரதிகளில், மறவர் இலங்கையிலிருந்து குடியேறினர் எனக் குறிப்புகள் காணப்படுகின்றன. இக் குடியேற்றம் பற்றி இக் கைப்பிரதியில் வில்சன் குறிப்பிடுவதாவது :- 'இலங்கையிலிருந்து இராமேசுவரம் மற்றும் அதன் எதிர்கரையிலும், ராமேசுவரம் கோயிலின் பாதுகாப்புக்காக இராமரால் மீனவர் குடியேற்றப்பட்டனர். இவ்வாறு ஆரம்பத்தில் குடியேறினவர், பின்னால் இலங்கையிலிருந்து குடியேறிய பிறிதொரு சாரரால் அடக்கப்பட்டனர். நீண்ட காலம் இவர் பாண்டியருக்கு அடங்கியிருந்தனர். பின்னால் இவரின் எண்ணிக்கை பெருகியதும், பாண்டிய அரசுக்கு எதிராக, தங்களுள் ஒரு தலைவனை ஏற்படுத்திக் கொண்டனர்.' [1]

[In the Manuscript of Mackenzie Collections entitled Pandya Mandala Rajakkal - same mention of the marava country occurs of which Mr. Wilson gives the following abstract (Des Cata Vol I - Page 195). This work also contains some account of the people of marava who it is said - were originally a colony of fishermen from Ceylon settled at Rameswaram and in the opposite coast by Rama

1. William Taylor Mackenzie Collections.

to guard the temple. They were made slaves by the new colonists and for long continued to be subject to the Pandya princes and at length becoming numerous, they rose against their masters and established themselves under their own princes, the Sethupathis or lords of the strait.] [1]

இவர் வேற்று மரபினர் எனக்கொள்ள இவரது பழக்க வழக்கம் தமிழரிடமிருந்து வேறுபட வேண்டும். அவ்விதம் வேறுபட்டிருக்கின்றதா என்பது பற்றிப் பார்ப்போம். இராமநாதபுரம் மாவட்டக் குறிப்பில் இந்துக்களின் முக்கிய மான பழக்கங்களிலிருந்து மறவருடைய பழக்க வழக்கம் பலவிதத்திலும் வேறுபட்டிருப்பதாகக் கண்டிருக்கிறது. [2]

[Their (maravas) customs differ fundamentally from other Hindus in many important ways.] [2]

இவர் பழக்க வழக்கங்களில் குறிப்பிடத்தக்கது மணவிழா பற்றியது. மணமகனையும், மணமகளையும் மணவறையில் அமர்த்தி, மணமகன் மணமகளுக்குத் தாலியை அணிவிப்ப தற்குப் பதிலாக, மணமகனின் உடன் பிறந்தவள், மணமகள் வீட்டிற்குச் சென்று மணமகள் கழுத்தில் தாலியை அணிவித்து, அவளை மணமகன் வீட்டிற்கு அழைத்து வருவாள். மணமகன் உறவினருக்கு விருந்து வைத்து, அவர்கள் மரபுப்படி சடங்கு கள் நடத்தி, மணவிழாவை முடித்துக் கொள்வதும் உண்டு. மணமகனுக்குப் பணவசதி இல்லாவிடில், விருந்து மற்றும் சடங்குகள் இவற்றை நடத்தாமல், மணமகனும், மணமகளும் கணவன் மனைவியாக குடும்ப வாழ்க்கை நடத்துவர். பின்னல் பணவசதி ஏற்படும்போது, உறவினர்க்கு விருந்தும் மற்றும் சடங்குகளும் நடத்தி மணத்தை ஒழுங்குபடுத்திக் கொள்வர். அப்போது தம்பதியினர் 2, 3 குழந்தைகளுக்குப் பெற்றோரா யிருப்பதும் உண்டு. முதலில் நடந்ததைக் கட்டுத்தாலி எனவும், இரண்டாவது நடந்ததைச் சீக்குக் கழித்தல்

1. William Taylor Mackenzie Collections.
2. Page 31. Ramnad Dt. Manual.

கல்யாணம் எனவும் வழங்குவர். [1] இவரது மணவிழாவில், மணமகன் நேரில் பங்கு கொள்ளாமல், அவனுக்குப் பதிலாக ஒரு தடிக்கம்பை நிறுத்தி, அவனது சார்பில் யாராவது ஒருவர் மணமகளுக்குத் தாலி கட்டுவர் என்றும் தர்ஸ்டன் கூறுகிறார். [2]

Thurston says :— 'It is recorded in the census report of 1891, that a special custom obtaining among Marava Zamindars of Tinnevelly is mentioned by the Registrar of that district. It is the celebration of marriage by means of a proxy for the bridegroom in the shape of a stick which is sent by the bridegroom and is set up in the marriage booth in his place. The Tali is tied by some one representative of the bridegroom and the marriage ceremony then becomes complete.' [2]

இப்பகுதி வாழ் அகம்படியரும் மறவர் அனுசரிக்கும் முறையையே பின்பற்றுவதாகத் தெரிகிறது. [3] இம் மரபுப் பெண்டிர் அணியும் தாலியும் மற்றத்தமிழ் மரபினரிடமிருந்தும் வேறுபட்டது என அறிகிறோம். இவர் மத்தியில பதினொரு உட்பிரிவுகள் இருக்கின்றன. [1. செம்பிநாடு, 2. கொண்டையங்கோட்டை, 3. சிறுதாலிகட்டி, 4. வன்னியர், 5. பண்டாரம், 6. காரணன், 7. ஆப்பனூர், 8. அகத்தா, 9. உப்புக்கோட்டை, 10. குரிச்சிக்காடு, 11. சேர்வை காரன்.] இவரில் அகத்தாப்பிரிவினர் மஞ்சள் கயிறு மட்டும் தாலியாக அணிவர். உப்புக்கோட்டை, குரிச்சிக்காட்டு மறவர் பவளம் மட்டும் கயற்றில் கோர்த்துத் தாலியாக அணிவர். மற்றப் பிரிவினர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமான தாலி அணிவர். இவருள் செம்பி மறவர், குரிச்சிக்காட்டு மறவர் பெண்களையும், அகம்படியர் பெண்களையும் மணப்பர். ஆனால் அவர் இருவருக்கும் இவரது மரபுப் பெண்களைக்

1. மறவர் சாதி விளக்கம் – R. 370 Madras oriental Manuscripts Library

2. Page 39. Castes and tribes of Southern India Vol V. – E. Thurston.

3. மறவர் சாதி விளக்கம் – R. 370 Madras oriental Manuscripts Library.

கொடார். அகம்படியப் பெண் மூலம் பிறந்த பையனுக்கு, அவனது தாய் வழியில் அகம்படியப் பெண்ணேயே மணப்பர். அந்தப் பையனுக்கு மறவர் வகுப்பு தாய் மூலம் பிறந்த பெண்ணைக் கொடுப்பதில்லை. அகத்தா நாட்டு மறவர் தொட்டியப் பாளையத்தில் ஊழியம் பார்ப்பவர். இவர் பெண்களைத் தொட்டியப் பாளையக்காரர் வைப்பு வைத்துக் கொள்வர். இவரை மண்பாசிகட்டி மறவர் எனவும் வழங்குவர். [1] மறவர் மத்தியில் பல பிரிவுகள் காணப்படுவதாலும், ஒருவருக்கொருவர் பழக்க வழக்கமும் வேறுபடுவதாலும், இவர் ஒரு குலம் அல்லது குடியைச் சேர்ந்தவர் எனக் கருத இயலாது.

இவர் உடற்கட்டு உயரம், பருமன், இவற்றில் தமிழகத்தில் உள்ள மற்ற மரபினரைவிட வேறுபட்டிருக்கின்றனர். என்பது பிற்சேர்க்கையில் காணும் விபரங்களால் புலனுகும்.

*1891*–இன் மக்கள் குடிக் கணக்கெடுப்பின்படி நெல்லை மாவட்டத்தில் மறவர் எண்ணிக்கை பத்து சதவிகிதம் என்றுலும், *1891*ஆம் ஆண்டுக்கு முன்பு ஐந்தாண்டு காலத்தில் இம் மாவட்டத்தில் நடந்த கொள்ளைக் குற்றங்களில் எழுபது சதவிகிதம் மறவர் ஈடுபட்டதாகத் தெரிகிறது. [2]

'In some papers read in Go No. 535 Judl. dated 29th March 1899, it was shown that though according to 1891 census the maravas formed 10 percent of the population of the district of Tinnevelly, yet they had committed 70 percent of the dacoities which have occured in the district in the previous five years.' [2]

*1903*ஆம் ஆண்டு சென்னை மாகாணக் காவல் துறை இலாகாவின் அறிக்கையின்படி, திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள பல்வேறு பிரிவினரிலும், மறவர் குற்றங்கள் புரிவதையே

1. *மறவர் சாதி விளக்கம்* – R. 370 Madras oriental Manuscripts Library.
2. Page 28. Castes and tribes of Southern India Vol V. – E. Thurston.

குலத்தொழிலாகக் கொண்டு, அதைப் பயின்றும் வந்திருக்கின்றனர் என்று அறிகிறோம்.

[It is also noted in the Madras police report 1903 that of a large section of population in Tinnevelly the Maravas are criminal by predilection and training.] [1]

மறவர் மத்தியில் வாழும் இதர மரபினர் இக்காலத்தில் கூடப் பீதியுடனே வாழ்கின்றனர். இவர் மறவருக்கு அஞ்சியே வாழ்கின்றனர் என்பது தமிழகம் நன்கு அறிந்ததே. இது பற்றி திரு. சோமலெ கூறுவதாவது :- '(மறவர்) வீர மரபினராதலால் இவர்களுக்கு அஞ்சியே பிற இனத்தார் நெடுங்காலமாக வாழ்ந்து வந்துள்ளனர். பல ஊர்களில் தாழ்த்தப்பட்ட மக்கள் மறவர் முன்னிலையில் மேல் துண்டு, செருப்பு, ரவிக்கை முதலியன பயன்படுத்துவதில்லை.' [2] மறவருள் சிலர் வன் செயல்களில் ஈடுபட்டதுண்டு. எனவே ஆங்கில அரசாங்கமும், உரிமை பெற்ற சுதந்திர இந்திய அரசாங்கமும், இவர்கள் மீது கடுமையான நடவடிக்கைகள் எடுத்தனர். மறவர் அனைவரும் குற்ற பரம்பரைச் சட்டப்படி அறிவிக்கப்பட்ட இனத்தார் ஆயினர்' [3] மேலே கண்ட கூற்றுக்களிலிருந்து, இவர் இதர மரபினருடன் இணைந்து வாழாமல், அவருக்குச் சதா இன்னல்கள் இழைத்து வருகின்றனர் என்பது தெளிவு. அடுத்து இவர் குடியேற்றம் எப்போது நடைபெற்றது என்று பார்ப்போம்.

கி. பி. 11-ஆம் நூற்றுண்டுக்கு முன்புள்ள குறிப்புகளில் மறவர் பற்றி எவ்விதச் செய்தியும் காணப்படவில்லை என அறிகிறோம். ஆக கி. பி. 11-ஆம் நூற்றுண்டிற்குப் பிறகே இவரது குடியேற்றம் நடைபெற்றிருக்க வேண்டும். கி. பி. 12, 13ஆம் நூற்றுண்டுகளில் இலங்கைப் படைகள் தமிழகத்தின் போர்களில் கலந்து கொண்டதாகவும், இராமேசுவரம் பகுதியில்

1. Page 29. Castes and tribes of Southern India Vol V
– E. Thurston

2. பக்கம் 85. இராமநாதபுரம் மாவட்டம் சோமலெ.
3. பக்கம் 86. இராமநாதபுரம் மாவட்டம் சோமலெ.

சில ஊர்களைப் பிடித்து அங்கேயே தங்கி விட்டதாகவும் வரலாற்றுசிரியர் சிலர் கூறுவர். மகாவம்சக் குறிப்புகள், மெக்கன்சி தொகுத்த கைப்பிரதிகள் இக் கருத்துக்கு ஆதரவு தருகின்றன. முகமதியர், ஹாய்சாலர், தெலுங்கர், தமிழகத்தின் மீது படையெடுத்து வந்து கொலைகள், கொள்ளைகள் நடத்தினர். நாட்டில் குழப்பம் நிலவியிருந்ததால், இலங்கைப் படையினர் இராமேசுவரம் பகுதியில் நிலைத்திருக்க வேண்டும். பின்னுல் தெலுங்கரோடு ஒரு உடன்பாடு செய்துகொண்டு, தமிழ் மரபை அடக்க அவருக்கு உதவியிருக்க வேண்டும். ஆரம்பத்தில் இராமேசுவரம், அதன் எதிர்கரையில் தங்கியவர், நாட்டில் குழப்பம் ஏற்பட்ட காலை, உள் நாட்டிற்குள் குடியேறி விசய நகரப் படையினரோடு சேர்ந்துகொண்டு, தமிழ்ப்படைக்கு எதிராய் செயல்பட்டிருக்கவேண்டும். தமிழகம் கி. பி. 14ஆம் நூற்றுண்டில் முகமதியர் தாக்குதல்களுக்கும், கி. பி. 15ஆம் நூற்றுண்டில் விசயநகர மன்னன் நரச நாயக்கன் தாக்குதலுக்கும் உள்ளானதை அனைவரும் அறிவர். கி. பி. 16ஆம் நூற்றுண்டின் மத்தியில் தமிழகத்தின் பெரும்பாகம் விசயநகர ஆட்சிக்குள் வந்துவிட்டது. இக் காலத்தில்தான் பாளையப்பட்டு முறை ஏற்பட்டது. மறவரின் செல்வாக்கு இதிலிருந்து தான் ஆரம்பக்கட்டம் ஆகும். கி. பி 17ஆம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் மறவநாடு என ஒரு தனி நாடு செம்பி மறவருக்கு நாயக்க மன்னனுல் வழங்கப்பட்டது, நாயக்கருக்கு மறவர் அளித்த ஒத்துழைப்புக்குச் சன்மானம் எனலாம். ஏற்கனவே கூறியது போன்று, மறவர் கி. பி. 11, 12 ஆம் நூற்றுண்டுகளில் தமிழகத்தில் குடியேறினர் என்றே இதுவரை கிடைத்துள்ள சான்றுகள் கூறுகின்றன. ஆனுல் இக் குடியேற்றம் சிறிய அளவிலேயே நிகழ்ந்திருக்க வேண்டும். விசய நகரப் படையெடுப்பின்போது மறவர் அவரது படையில் பெருமளவில் சேர்ந்து பணிபுரிந்திருக்கின்றனர். இலங்கையிலிருந்து சிங்களவரில் பலதரப்பட்டவரும் இறக்குமதி செய்யப்பட்டுப் படையில் சேர்க்கப்பட்டிருக்கின்றனர். அதன் காரணமாகவே மறவரில் பதினெரு உட்பிரிவுகள் இருக்கக் காண்கிறோம். நாயக்கரிடம் படைத்தொழில் புரிந்ததால், இவர் மறவர் எனப்

பெயர் பெற்றிருக்க வேண்டும். அதற்கு முன் இவருக்கு வழங்கிய பெயர் என்ன என்பது ஆராய்ச்சிக்குரியது. தமிழகத்தில் அவர் குடியேறின காலே, அவர் ஆரம்பத்தில் தங்கிய இடத்துப் பெயரால் அல்லது அவர் எங்கிருந்து குடியேறினரோ அந்த இடத்தின் பெயரால் (உதாரணமாக செம்பிநாட்டான், அகத்தாநாட்டான், குருச்சிகாட்டான்) வழங்கிப் படையில் சேர்ந்த பின் மறவன் என்ற தொழிற் பெயரையும் இணைத்து வழங்கி வரலாயினர் எனத் தெரிகிறது. மேலே கண்ட பல்வேறு சான்றுகளால், மறவர் தமிழர் அல்ல; அவர் இடைக் காலத்தில் இலங்கையிலிருந்து குடியேறியவர் எனக் கொள் வதே சரியான முடிவாகும். மேலும் மறவர் என்பது மரபுப் பெயர் அல்ல நாயக்கரின் கீழ் போர்த் தொழில் புரிந்ததால் மறவர் என்ற தொழிற் பெயரால் வழங்கலாயினர். இவர் வேற்று மரபினர் என்ற காரணத்திஞலேயே, நாயக்கருடன் தமிழ் மரபை அடக்க ஒத்துழைத்தனர் எனலாம். தேவேந்திர குலத்தாருக்கும், மறவருக்கும் மத்தியில் நீண்ட காலமாய் பகை, விரோதம் இருந்து வருவது யாவரும் அறிந்ததே. இராமநாதபுரம், நெல்லே மாவட்டங்களில் இரு மரபினரும் சமமாய் இருக்கும் பகுதிகளில், இவர் இருவருக்கும் இடையே அடிக்கடி கலகங்கள் நிகழ்வதும், இக்காரணம் பற்றியே எனலாம். முன் 1930–31ல் இராமநாதபுரத்தில் கள்ளர், மறவர் தேவேந்திர குலத்தாருக்கு இழைத்த அநீதிகள், மற்றும் 1958ல் நடந்த வகுப்புக் கலவரம் இவைகள் நாயக்கர் காலத்தில் நடந்தவற்றின் எச்சக்கூறுகளே எனலாம்.

ஆக ஏற்கனவே கூறியது போன்று, தேவேந்திர குலத்தாரை அடக்க சோழ நாட்டைச் சேர்ந்த தஞ்சை மாவட்டம் கீழ்ப் பகுதியில் பள்ளி, மேல் பகுதியில் கள்ளர் இவர் இருவரும் குடியேற்றப்பட்டதைப் போன்று, பாண்டிய நாட்டின் தென் மாவட்டங்களில் இலங்கையிலிருந்து சிங்களப் படையினர் குடியேற்றப்பட்டிருக்கின்றனர். இவர் வேறு மாவட்டங்களில் இல்லாதது இக்கருத்தை வலியுறுத்துகிறது. நாயக்கர் அன்னிய மரபினர் ஆனதால், தமிழரை அடக்கு வதற்குத் தங்களேப் போன்று வேற்று மரபினரின் துணையை

நாடினர் எனலாம். நாயக்கர் ஆட்சியில் பெரிதும் பயன் அடைந்தவர் தெலுங்கர், மறவர், கள்ளர், பார்ப்பனர் அதிலும் குறிப்பாகத் தெலுங்குப் பார்ப்பனர் ஆவர். இவரன்றி அமைச்சன் அரியநாதனுடையவும், அவனுக்குப் பின் தொண்டை மண்டலப் பகுதியிலிருந்து வந்த அரசியல் தலைவர்களின் உறவினரும் பலன் அடைந்திருக்கின்றனர். மறவரும், கள்ளரும், நாயக்கருக்குப் பக்க பலமாய் இருந்து வந்த காரணத்தினாலேயே, இராமநாதபுரம் சேதுபதி, சிவகங்கை உடையத் தேவர், புதுக்கோட்டை தொண்டைமான் இவர் மூவரும் நாயக்கரின் தத்துப் பிள்ளைகளென வழங்கினர் என அறிக. இவரில் முன்னைய இருவர் மறவர், பின்னவர் கள்ளர் என்பதும் அனைவரும் அறிந்ததே நாயக்கர் தேவேந்திர குலத்தாரை ஒடுக்குவதற்குக் கள்ளர், மறவர் இருவரின் உதவியுடன், அகம்படியர் உதவியையும் நாடியிருக்கின்றனர்.

**அகம்படியர் (சேர்வைகாரர்) ஈடுபாடு :**

தேவேந்திரரை அடக்குவதில் அகம்படியர் ஈடுபாடு பற்றி ஈண்டு ஆராய்வோம். அகம்படியர் என்பவர் இடைக் காலத்தில் தோன்றிய தொழில் வகுப்பினர் ஆவர். இவர் ஒரு தனிக்குலம் (Caste or tribe) எனக் கருதுவதற்கில்லை. இவரில் ஐவேலி நாடு, கோட்டைப்பத்து, மலை நாடு, நாட்டு மங்கலம், ராசபோசா, ராசகுலம், ராசவாசல், கள்ளர், மறவர், துளுவர், சேர்வைகாரர் என்ற பல பிரிவுகள் இருக்கின்றன. கள்ள அகம்படியர், மறவ அகம்படியர் என்பவர் கள்ளர், மறவர் வகுப்புக்களிலிருந்து சமீப காலத்தில் அகம்படியராக மாறியவர் ஆவர். கள்ளச் சாணான், கள்ள இடையன், கள்ளப் பள்ளி, சாம்பான் இடையன், வலைய இடையன் பிரிவுகள் இதற்கு உதாரணம் ஆகும். துளுவர் என்ற பிரிவினர் தொண்டை நாட்டில் இருக்கின்றனர். இடைக்காலத்தில் கோயில், மடங்கள், பாளையப்பட்டுகளின் இல்லங்கள் இங்கு தொண்டு புரிந்தவரும், இடைக்கால அரசியல் தலைவரிடம் படைத் தொழில் புரிந்தவரும், தனிவகுப்பாக உருவாகியிருக்கின்றனர்.

இராசகுலம், கோட்டைப்பத்து என்ற பெயர்கள் அரண்மனை ஊழியம் பார்த்தவரைக் குறிக்கும். மலை நாடு, ஐவேலி நாடு, நாட்டு மங்கலம் இவை இடப்பகுதியை உணர்த்தும். சேர்வை என்பது சேவையின் திரிபு எனலாம். இவர் இராமநாதபுரம், மதுரை மாவட்டங்களில் காணப்படுகின்றனர். இவர் மறவர் பாளையப்பட்டுகளிடம் ஊழியம் பார்த்தவர். இவர் மறவரின் வேலைக்காரர் என்றே மாவட்டக் குறிப்புகளில் குறிப்பிடப் பட்டிருக்கின்றனர். இம்மரபுப் பெண்களை, செம்பி மறவர் மனைவியாகக் கொள்வர். ஆனால் மறவர் மரபுப் பெண்களை இவருக்குக் கொடார். மறவர் இறுதிச் சடங்கிற்கு, பிணத்தைக் குளுப்பாட்டுவதற்கு இவர் தண்ணீர் தூக்கி வரவேண்டும். மேலும் இடுகாட்டுக்குப் பிரேத ஊர்வலத்தின் போது இவர் நெருப்புச் சட்டியைத் தூக்கிச் செல்ல வேண்டும். [1]

'Sembu Nattu maravas consider the Agambadiyars as their servants. It is the Agambadiyars who bring water for washing the corpses. It is the Agambadiyars and not the sons of the deceased who carry the fire pot to the burial Grounds.' [1]

சிவகங்கைச் சீமை விதவை வேலு நாச்சியார் ஆளுகை யின் கீழ் இருந்தபோது, சேர்வைகாரர் பிரிவைச் சேர்ந்த, சின்ன மருது, பெரிய மருது சமத்தானத்தில் பணி புரிந்தனர். வேலு நாச்சியார் இளம் விதவை என்பதைச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டு, இவர் இருவரும் செல்வாக்குப் பெற்றனர். பிற்காலத்தில் இவர் இருவரையும் மருது பாண்டி யர் என வழங்கலாயினர். இராமநாதபுரம், மதுரை மாவட்டங்கள் வாழ் கள்ளர், மறவர், சேர்வை என வழங்கும் அகம்படியர் ஆக மூவரையும் ஒருங்கிணைத்து ஒரே சேயின் புதல்வர் எனவும், ஒரு குலம் மூன்றாகப் பிரிந்து கிளைத்தது எனவும், ஆதலால் மூன்று வகுப்பாரும் முக்குலம் என வழங்குவதாகவும் இவர் கூறுவர். பாண்டிய நாட்டில் கள்ளர்,

1. Page 141. Castes and Tribes of Southern India Vol V – E. Thurston.

மறவர், அகம்படியர் ஆக மூவரும் திருட்டுக் குற்றங்கள் புரிந்து வந்தது பற்றி எட்கர் தர்ஸ்டன் கூறுவதாவது :— 1901 ஆம் ஆண்டு மக்கள் குடிக்கணக்கெடுப்பில் தென் மாவட்டங்களில் நடைபெறும் குற்றங்களை, மக்கள் எண்ணிக்கையின் விகிதாச்சாரப்படிப் பார்த்ததால் கள்ளர், மறவர், அகம்படியர் புரியும் குற்றங்கள் அவரின் மக்கள் தொகை விகிதாச்சாரத்தைவிட மிகவும் அதிகமாய் இருக்கக் காண்கிறோம். 1897 ஆம் ஆண்டில் மதுரை, பாளையங்கோட்டைச் சிறைகளில் அடைபட்டிருந்த தண்டனைக் கைதிகளில் முறையே 42, 30 சதவிகிதம் இந்த மூவரில் ஒருவர் ஆவர். நெல்லை மாவட்டத்தில் 1894 இல் நடந்த கால்நடைத் திருட்டுகளில் கள்ளர், மறவர், அகம்படியர் 131 திருட்டுகளும், மற்ற எல்லா மரபினரும் 47 திருட்டுகளும் புரிந்தனர். இந்த மூன்று மரபினரும் புரிந்த திருட்டுகள் 1497 நபர்களுக்கு ஒரு திருட்டு விகிதமும், மற்ற மரபினர் புரிந்தது 37830 நபர்களுக்கு ஒரு திருட்டு விகிதமும் ஆகிறது. மதுரை, திருச்சி மாவட்டங்களின் புள்ளி விபரங்கள் இந்த மூன்று மரபினருக்குப் பாதகமாகவே இருக்கின்றன. [1]

Edgar Thuston says :- 'In the census report of 1901. Mr. Francis records that the Kallars, Maravars and Aham-badiyars are responsible for a share of the crimes of southern districts which is out of all proportion to their strength in men. In 1897 the I. G of prisons reported that nearly 42 percent of convicts Madurai Jail and 30 percent of those in Palayamkottai Jail in Tinnevelly district belonged to one or other of those castes. In Tinnevelly in 1894, 131 cattle thefts were committed by men of these three castes against 47 by members of others which is one theft to 1497 of the population of the three bodies against 1 to 37830 of the other castes. Their statistics in Trichy and Madurai are also bad.' [1]

---

1. Page 64. Castes and Tribes of Southern India Vol III.
- E. Thurston

முக்குலம் :

முக்குலம் தோற்றம் பற்றிய கதை என்ன என்பதைக் காண்போம். முனிவர் கௌதமரின் மனைவி அகல்யை மீது தேவேந்திரன் விருப்பங்கொண்டு ஒரு நாள் இரவில் கோழி ரூபம் எடுத்து கௌதமர் வீட்டின் கூரையில் ஏறிக்கூவினான். கௌதமன் பகல் புலர்ந்து விட்டதாகக் கருதி, காலைக் கடன்களை முடிக்க வெளியே விரைந்தான். தேவேந்திரன் உடனே வீட்டினுள் சென்று, அகல்யையோடு கூடி மூன்று பையன்களை உற்பத்தி செய்தான். கௌதமர் வீடு திரும்பும்போது, அந்த மூன்று பையன்களும் அங்குமிங்கும் ஓடி ஆடி விளையாடிக் கொண்டிருந்தனர். கௌதம முனிவரைக் கண்டதும், ஒரு பையன் ஓடி ஒளிந்தான். அவன் கள்ளன் எனப் பெயர் பெற்றான் இன்னொரு பையன் மரத்தில் ஏறினான். அவன் மறவன் என வழங்கலுற்றான். மூன்றாவது பையன் வீட்டிலேயே இருந்தான். அவன் அகம்படியன் (அகம்–வீடு–வீட்டின் படியில் இருந்தவன்) என வழங்கலானான்.[1] ஆக இந்த மூவரும் தேவேந்திரனுக்கே பிறந்தவர் என்பதால், தேவர் குலம், இந்திர குலம் எனவும் சமீப காலமாய் வழங்கி வருகின்றனர். இந்திர குலம் என்பது, மருத நிலத் தலை மக்களுக்கு ஏற்பட்டது. அவர் இந்திர குல வேளாளர், தேவேந்திர குல வேளாளர் என வழங்கி வருவது பற்றி ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம். முக்குலத்தோர் என ஒரு அமைப்பு ஏற்பட்டதும் அவர் தேவேந்திரனையே தந்தையாகக் கொண்டு தேவர் குலம், இந்திர குலம் என வழங்கி வருவதும், இவர் மூவரும் பொதுவாகத் தேவர் என்ற குலப் பட்டத்தையும் வழங்க முனைந்ததுவும் ஒரு சாதாரண நிகழ்ச்சி எனக் கருதுவதற்கில்லை. இக்காலத்தில் அரசியல் கட்சிகள் தேர்தலை முன்னிட்டு, ஐக்கிய முன்னணி ஏற்படுத்துவது போன்றே, இந்த முக்குலம் என்ற அமைப்பு ஏற்பட்டது எனத் துணிந்து கூறலாம். இந்த அமைப்பு உருவானதன் நோக்கம் என்ன ?

பண்டையத் தமிழ் வேந்தர் மரபினர் தேவேந்திர குலம் என வழங்கினர். இவருக்கு எதிராக, நாயக்கர் கள்ளர், மறவரை ஏவினர். அகம்படியாரில் ஒரு சாரார்

1. Page 62. Castes and Tribes of Southern India Vol III
– E. Thurston.

பாளையப்பட்டுகளிடம் ஊழியம் பார்த்தவர். இவரும் பாளையப்பட்டுகளிடம் ஊழியத்திற்குப் பிரதிபலனாக நிலங்கள் பகிர்ந்தளிக்கப்பட்டிருக்கின்றனர். இவரிடையே ஒருமைப் பாடு உணர்வு ஏற்படுத்தவும், மூவரின் கடமையும் தேவேந் திரரை அடக்குவதற்கென்ற ஒரே குறிக்கோள் என்பதை வலியுறுத்தவும், முக்குலம் என்ற அமைப்பு ஏற்பட்ட தெனலாம். இவர் மூவரும் தேவேந்திரனுக்குப் பிறந்தவர் எனக் கதை கட்டியிருப்பதும், அதன் அடிப்படையில் இவரில் கள்ளர், மறவர் இந்திர குலம் என உரிமை பாராட்டி வருவதும் கூர்ந்து கவனிக்கத் தக்கது. இந்த முக்குலம் பாண்டிய நாட்டிற்குள்தான் குறிப்பாக இராமநாதபுரம், மதுரை மாவட்டங்களிலேயே தோற்றுவிக்கப்பட்டது எனலாம். நெல்லை மாவட்டத்தில் கள்ளர், அகம்படியர் பெரும்பாலும் இல்லை. பாண்டிய நாட்டிற்கு வெளியே மறவர் இல்லை. மதுரை, இராமநாதபுரம், திருச்சி, தஞ்சை, புதுக்கோட்டை இவற்றிற்கு வெளியே கள்ளர் இல்லை. அகம்படியர் கொங்குநாடு, நெல்லை மாவட்டம் தவிர்த்து மற்ற மாவட்டங்களில் காணப்படுகின்றனர். தொண்டை நாட்டில் உள்ளவர் துளுவ வேளாளர் எனப் பெரும்பாலும் வழங்குவர். ஏற்கனவே தொழுவர்–தொழுதுபணி செய்தவர் என வழங்கிப் பின்னால் துளுவர் என வழங்கினரா? என்பது ஆராய்ச்சிக் குரியது சேதுராயர்களிடமும், விசய நகர ஆட்சியிலும் இவர் படைத்தொழில் புரிந்தனர் எனவும் தெரிகிறது. பாண்டிய நாட்டு அகம்படியர் மறவருடன் தொடர்புடையவர் மட்டுமின்றி அவரின் கீழ்ப் பணிபுரியும் வேலைக்காரராகவும் கருதப்பட்டவர். தென்னாற்காடு மாவட்டத்திலுள்ளவர் உடையார் என்பர். இவர் ஒரு தனிப்பிரிவு. சோழ நாட்டிலுள்ள அகம்படியருக்கும், இதர மாவட்டங்களிலுள்ள அகம்படியருக்கும் தொடர்பு இல்லை எனலாம். சோழ நாட்டிலுள்ள அகம்படியரிலும் பல பிரிவுகள் இருக்கக் காண்கிறோம். இப் பிரிவுகளுக்குள் கொள்வினை, கொடுப்பு வினை இல்லை. உயரம், உடற்கட்டு, தோற்றம் இவற்றால் கள்ளர், மறவர், அகம்படியர் மூவரும் வேறுபட்டவர் என்பது பிற் சேர்க்கையில் காணப்படும் புள்ளி விபரங்களால்

விளங்கும். ஆக முக்குலம் என்பது ஏற்கனவே கூறியது போன்று ஒரு பொய்மையே என்றும், தமிழ் மரபை அடக்கும் அரசியல் நோக்கோடு அது தோற்றுவிக்கப்பட்டதென்றும் அறிக.

**தென்னகத்தில் பார்ப்பனர் குடியேற்றமும், ஆதிக்கமும்.**

தமிழகத்திற்குத் தெலுங்கர் வரும்போது அந்த நாட்டுப் பார்ப்பனரும் உடன் வந்தனர். தெலுங்கர் வைதீகப் பற்று அதிகம் உள்ளவர். நன்மை துன்மைச் சடங்குகளுக்கும் மற்றும் அரசியல் பணிகளுக்கும் உதவவும் இவர் பார்ப்பனரை நாடினர். அக் காலத்தில் தமிழகத்தில் இருந்த ஆரியப் பார்ப்பனருக்குத் தெலுங்கு மொழி தெரியாது. நாயக்கர் தெலுங்கர் ஆனதால், அவர் தெலுங்குப் பார்ப்பனரையே விரும்பினர். பன்மொழிப் புலவர் அப்பாத்துரையார் கூறுவதாவது : 'தென்னிந்தியாவில் ஏராளமான பார்ப்பனர் குடியேறினர். மேலும் தென்பகுதியில் போரில் வெற்றியின் காரணமாய் கிடைத்த நாடுகளின் நிர்வாகத்தை நடத்துவதற்கு, விசயநகர மன்னர் ஏராளமான தெலுங்குப் பார்ப்பனரை அனுப்பி வைத்தனர்.' [1]

Dr. Appadorai says:- There was large scale migrations of Brahmins to South India. Moreover, the Vijayanagar Kings sent large number of Telugu Brahmins to control the Southern conquests.[1]

மறவர், கள்ளர், வன்னியர், தெலுங்கர் பாளையப்பட்டுகளாக நியமனம் பெற்றபோது, அவர் நிலங்களில் ஒரு பகுதியைத் தங்கள் உறவினர்க்கும், அரசியல் தலைவர்க்கும் பகிர்ந்தளித்தது போன்று, பார்ப்பனருக்கும் பகிர்ந்தளித்தனர். செழிப்பான பகுதியில் சகல வசதிகளுடன் ஊர்கள் தோற்றுவித்து, வீடுகள் அமைத்து, அவற்றில் பார்ப்பனரைக் குடிஅமர்த்தி, அவர்க்கு நஞ்சை நிலங்கள், பொன், பொருள் இவற்றை இனமாக வழங்கினர் தஞ்சையை மராட்டியர்

1. Page 274. Economic condition in Southern India 1000-1500 A. D. Vol I - Dr. Appadorai.

கைப்பற்றியபோது, நாயக்கர் செய்ததைப் போன்று, மராட்டியப் பார்ப்பனரை அழைத்து வந்து குடி அமர்த்தினர். மதுரை நாயக்கருக்கு அரியநாதன், அவனது மகன் காளக நாதன் ஆக இருவருக்குப் பிறகு அமைச்சராகவும், படைத் தளபதிகளாகவும் இருந்தவர் தெலுங்குப் பார்ப்பனர். அதே போன்று, தஞ்சை மராட்டிய மன்னருக்கு அமைச்சராயிருந் தவர் மராட்டியப் பார்ப்பனர் ஆவர். மேலே கூறியது போன்று; தெலுங்கர் நன்மை துன்மைச் சடங்குகள் நடத்தி வைக்க, பார்ப்பனரைக் குல குருவாகக் கொண்டிருந்தனர். அதேபோன்று இவர் தமிழகத்தில் குடியேறியபோது, இங்கு அவருக்குத் துணை நின்றவரையும், தங்களைப் போன்று பார்ப்பனரைக் குல குருவாகக் கொள்ளும் பழக்கத்தைப் பின் பற்றும்படி செய்தனர் என அறிகிறோம். நாயக்கர் வருவ தற்கு முன்பு தமிழகத்தில் உள்ளவர் ஆரியப் பார்ப்பனரைக் குல குருவாகக் கொள்ளவில்லை எனலாம். தேவேந்திர குலத்தாருக்கு அவரது மரபிற்குள்ளேயே இன்றுபோல் அன்றும் குருக்கள் இருந்து வந்தனர். மற்றத் தமிழ்ப் பிரிவினருக்குப் பண்டாரம் என வழங்குபவர் குருக்களாகச் செயல்பட்டனர் என்று தெரிகிறது. இன்று காரைக்காட்டார், காரைக்கட்டுப் பிள்ளைமார், கார்காத்த வேளாளர் என வழங்குபவர், ஏற்கனவே வள்ளுவப் பண்டாரத்தையே குல குருவாகக் கொண்டிருந்தனர் எனத் தண்டிகைக் கனகராயன் பள்ளு கூறுகின்றது.[1] கனகராயன் பூர்வீகம் தொண்டை மண்டலப் பகுதியில் உள்ள காரைக்காடு என்பர். நாயக்கர் ஆட்சியின் போது, இப்பகுதியிலிருந்து தென் மாவட்டங்களில் குடியேறியவர் காரைக்காட்டார் என்றே வழங்கினர் எனவும், இன்று இவர் காரைக்கட்டுப் பிள்ளைமார், கார்காத்த வேளாளர் என வழங்கி வருகின்றனர் எனவும் ஏற்கனவே கண்டோம். கனகராயன் யாழ்ப்பாணத்தில் நாயக்கர் ஆட்சியின் போது குடியேறியவன் என்பர். இவனுக்குக் குல குருவாக இருந்தவன் சண்பகராமப்பாணன் ஆவான். பாணர் வள்ளுவப் பண்டாரம் என வழங்கினர். பல்லவர் காலத்தில் வள்ளுவப் பண்டாரம்

---

1. Page 139. South India and Ceylon - Dr. K. K. Pillay.

குருக்களாக இருந்தனர் என்று கூறுவர். ஆதலால் தேவேந்திர குலத்தார் தவிர்த்து மற்றத் தமிழ் மரபினருக்கு வள்ளுவப் பண்டாரமே குருக்களாகச் செயல்பட்டிருக்க வேண்டும். ஆனால் நாயக்கர் காலத்தில் இந் நிலையில் மாறுதல் ஏற்பட்டது. தெலுங்குப் பார்ப்பனர் தென்னகத்தில் குருக்களாக அமர்ந்ததன் காரணமாய், வள்ளுவப் பண்டாரம் தங்கள் தொழிலை இழந்து காலப் போக்கில் தீண்டாதவர் ஆயினர் எனலாம். பறையருக்கு மட்டும் இவர் குருக்களாக இன்னும்நீடித்து வருகின்றனர். சாதி இந்துக்கள் மத்தியில் வாழும் பண்டாரம் என்ற வகுப்பினர், கோயிற்பணி விடைகளுக்குப் பூமாலைகள் தொடுத்து உதவி வருகின்றனர். இவர் வள்ளுவப் பண்டாரத்தைச் சேர்ந்தவரா? அல்லது வேறு மரபினரா? என்பது ஆராய்ச்சிக்குரியது. நாயக்கருக்கு முன்னால், இந்து ஆலயங்களில் தமிழ் அந்தணர் இருந்தனர். ஆனால் நாயக்கர் காலத்தில் அவரது இடத்தை ஆரியப் பார்ப்பனர் கவர்ந்து கொண்டனர். இக் காலத்தில் வைதீகச் சடங்குகள் பெருகின. தமிழ் மரபுக்கு மாறுபட்ட தீபாவளி, சரசுவதி பூசை, நவராத்திரி முதலிய விழாக்கள் இங்கு புகுத் தப்பட்டன. தமிழர் பழக்க வழக்கம் சிறுகச் சிறுக மறைந்து, ஆரியப் பழக்க வழக்கம் தமிழகத்தைக் கவ்வியது.

நாயக்கர், மராட்டியர் ஆட்சிக் காலம், ஆரியப் பார்ப்பன ரின் பொற்காலம் எனலாம். நாயக்கர், மராட்டியர், இவரைச் சார்ந்த படைத் தலைவர், பாளையப்பட்டுகள், வைதீகச் சடங்குகள் நடத்தி வைப்பதற்குப் பார்ப்பனருக்கு ஏராளமான பொன்னும், பொருளும் அள்ளி வீசியிருக்கின்றனர். வைதீகச் சடங்குகள் நடத்தவும், அச்சடங்குகளின்போது வழங்கும் பரிசுகளைப் பெறவும், தமிழகத்தில் ஆரியப் பார்ப்பனரில் போதிய நபர்கள் இல்லாமல், அண்டை நாடுகளாகிய கருநாடகம், ஆந்திரம் இங்கிருந்து பார்ப்பனர் திரள் திரளாய் குடியேற்றப்பட்டனர். இன்று தமிழகத்தில் ஏராளமான வேற்று மொழி வழங்கும் பார்ப்பனச் சேரிகள் இருப்பதைப் பலரும் கண்ணுற்றிருப்பர். இப் பார்ப்பனச் சேரிகள் நாயக்கர், மராட்டியர் ஆட்சி காலத்திலேயே ஏற்பட்டன.

**நாயக்கரின் மடமையும், பார்ப்பனரின் குணுதிசியங்களும்:-**

விசய நகர ஆட்சியில் ஆரியப் பார்ப்பனர் நிலை எவ்வாறு இருந்தது என்பது பற்றி R. சீவல் கூறுவதாவது:- 'பார்ப்பனக் குருக்கள் ஒரு வெறுக்கத்தக்க இழிவான சமூகம். அவரிடம் எக்காலத்திலும் கொழுத்த பணம் இருக்கின்றது. அவர் கர்வமும், அகந்தையுமுள்ளவராவர். வாயிற்காப்போர் அடித்து உதைத்து விரட்டினுலும், அரண்மனைக்குள் அவர் செல்வதைத் தடுக்க முடிவதில்லை. [1]

[The Brahmin priests were very despicable men. They have always much money and are insolent that even using blows the guards of the door cannot hold them in cheek.] [1]

நாயக்கர் மதுரையில் ஆட்சி புரிந்த காலத்தில், பார்ப்பனர் எவ்வாறு செல்வாக்குப் பெற்றிருந்தனர் என்பது பற்றித் திரு. சத்தியநாத அய்யர் கூறுவதைக் காண்போம்: 'பார்ப்பனர் சமூகத்தில் உயர்வாக மதிக்கப்பட்டனர். பிரத்யேக உரிமைகளும் சலுகைகளும் அவருக்கு வழங்கப் பட்டன. அவருக்கு ஏற்பட்ட மரியாதை ஒரு சிறிதும் குறைய வில்லை. நாட்டில் சனுதனக் கொள்கை, தெய்வ கட்டளையாக பாவிக்கப்பட்டு, கண்டிப்பாய் அமுல் நடத்தப்பட்டது. இக் கொள்கை மீறப்படும்போது, அரசு அவ்வப்போது, தலையிட்டு வந்தது.' [2]

Thiru R. Satyanatha Ayyar says :- 'The Brahmin enjoyed special previleges and was highly venerated and his time honoured prestige did not suffer in the least. The caste system was carried sacrosant and there were occasions of royal interference to check breaches of the rules.' [2]

---

1 Page 379. A forgotten emphire - R. Sewell.

2. Page 261. History of the Nayaks 1924
- R. Satyanatha Ayyar, M. A., L. T.

மதுரையில் ஒரே சமயத்தில் பத்தாயிரம் ஆரியப் பார்ப்பன மாணவர் இலவசமாய் விடுதி, உணவு, உடை வசதி பெற்றுப் படிப்பதற்கு நாயக்க மன்னர் ஏற்பாடு செய்தனர் எனவும், அதே சமயம் பார்ப்பனரல்லாதார் படிப்பதற்கு எவ்வித வசதியும் செய்யவில்லை எனவும், மேனாட்டு அறிஞர் பலர் கூறிச் சென்றிருக்கின்றனர்.

நாயக்கர் வைதீகப் பற்று உள்ளவர். இதைப் பார்ப்பனா தங்களுக்குச் சாதகமாகக் கொண்டு நாயக்க மன்னரை ஆட்டிப் படைத்திருக்கின்றனர். இது பற்றிச் சாண்ட்லர் கூறுவதாவது :- 'தஞ்சை நாயக்க மன்னன் ஒருவன், மதுரை மன்னனால் போரில் வெல்லப்பட்டான். இவன் தோல்வியுற்றதால் ஆட்சியுரிமையை இழந்து விட்டதாகவும், அதை மீண்டும் பெறுவதற்கு மறுபிறவி எடுத்து, அதன்பின் மன்னனாக முடி சூட்டிக்கொள்ள வேண்டுமெனவும் அவனது பார்ப்பன அமைச்சர் பணித்தனர். இவன் மறுபிறவி எடுப்பதற்காக, வெண்கலத்தில் ஒரு பெரிய பசு உருவம் செய்து மன்னனை அதனுள் அடைத்து வைத்தனர். பின்னர் பசு உருவத்தின் வயிற்றினுள் இருந்து, கன்று வெளியே வருவது போன்று, மன்னன் வெளியே வந்தான். குருவின் மனைவி உடனே அவனைத் தூக்கித் தன்மடியில் கிடத்தினாள். மன்னன் சிசுவைப்போன்று அழ எத்தனித்தான். பார்ப்பனத்தி அவனைத் தான் பெற்ற சிசுவைப் போன்று காலால் ஆட்டவும், கொஞ்சவும், குலவவும், தன் மார்பகங்களில் பால் ஊட்டவும் செய்தாள். இந்நிகழ்ச்சியில் பங்கேற்ற அனைவரும் சிரிப்பை அடக்க முடியாமல் மிகவும் சிரமப்பட்டனர். இந்த நிகழ்ச்சி மூலம் பார்ப்பனருக்குத் திரண்ட பொருள் கிடைத்தது.' [1]

[Another king of Tanjore had been dcfeated by the king of Madurai. So his Brahmin advisers declared that he should be reborn. A collosal cow in bronze was cut in a mould and the king was shut inside. The wife of the

---

1. Page 6. History of the Jesuit Mission in Madura
– J. S. Chandler.

king's Brahmin Guru acted as his nurse; received him in her arms, rocked him in her knees and caressed him on her breasts, while he tried to cry like a baby. The neighbours couldn't, restrain their laughter but the ceremony brought immense sum of money to the Brahmins.] [1]

சாண்டலர் மேலும் கூறுவதாவது:— 'தஞ்சை நாயக்க மன்னன் ஒருவன் மார்கழி மாதம் முழுவதையும் மன்னார் என்ற இடத்திலுள்ள கோயிலில் கழிப்பது வழக்கம். அவன் கோவிலுக்குப் போகும் போது அவனது பார்ப்பனக் குருவையும் அழைத்துச் செல்வான். அவ்வாறு அழைத்துச் செல்லும் போது, பார்ப்பனக் குருவையும் அவனது கால் அணிகளையும் தனித்தனிப் பல்லக்குகளில் வைத்துப் பல்லக்குகளை அரண்மனையின் பணிப்பெண்கள் சுமந்து செல்வர். மன்னன் அந்த இரு பல்லக்குகளின் நடுவில் கையில் தூபத்தட்டுடன் நடந்து செல்வான்.' [2]

[One of the rulers of Tanjore used to spend the month of December in the midst of idols at the temple in Mannar. In proceeding to the temple, he would have the guru or priest carried in a Palanquin by the ladies of his court and another Palanquin bore the guru's slippers, while between the two Palanquins, the King walked carrying a censor.] [2]

திரு. பரந்தாமனார், தஞ்சை மன்னன் விசயராகவ நாயக்கன் தினமும் உணவு உட்கொள்வதற்குமுன், திருவரங்கம் சென்று திரு அரங்கதாதனைத் தொழுது விட்டு வருவது வழக்கம் என்று கூறுகின்றார். [3] இம்மன்னர் தினமும் காலை 9 மணிக்குப் பன்னீராயிரம் பார்ப்பனருக்கு உணவளிப்பதுண்டு. அவர் உண்டபின்னே இவன் உணவு எடுப்பான். ஒரு சமயம் தொடர்ந்து அடைமழை பெய்ததின் காரணமாய், விறகெல்லாம் நனைந்து விட்டதால் சமையல் வேலை தடைப்பட, இம்மன்னன் அரண்மனையின் உத்தரம்,

1. Page 6. History of the Jesuit Mission in Madura J. S. Chandler.
2. " "
3. பக்கம் 265. மதுரை நாயக்கர் வரலாறு - பரந்தாமனார்.

கதவு, நிலை முதலிய மரச்சாமான்களை எடுத்து அடுப்பிலிட்டு உணவு சமைக்க ஏற்பாடு செய்தான். அவையும் பற்றுமற் போக, அரண்மனையிலுள்ள விலையுயர்ந்த பட்டு உடுப்புகளை அடுப்பிலிட உத்தரவிட்டிருக்கின்றான்.

பார்ப்பனர் நாயக்கரின் மடமையை நன்கு பயன் படுத்திக்கொண்டு, தங்களின் செல்வாக்கை வளர்த்துக் கொண்டனர். கடைசியாக நாயக்கர் அரசின் வீழ்ச்சிக்கும் இவரே காரணமாய் இருந்தனர் எனலாம். தமிழ்வேந்தர் ஆட்சியில் பெண்டிர் நாட்டை ஆளும் பணியை ஏற்கவில்லை. ஆனால் நாயக்கர் ஆட்சியில் மங்கம்மாளும், மீனாக்ஷியும் ஆட்சி செய்திருக்கின்றனர். இவரது காமக்களியாட்டங்கள் இன்னும் செவி வழிச் செய்தியாக மதுரை, திருச்சி நகர்களில் நிலவி வருவதை அங்குள்ளவர் அறிந்ததே. பார்ப்பனரது குணாதிச யங்கள் பற்றி ஜே. எஸ். சாண்டலர் கூறுவதாவது :- தென் இந்தியாவில் கிறித்துவ மறையைப் பரப்ப வந்த புனித சேவி யர் பார்ப்பனரை முழுக்க முழுக்கப் பொய்யரும் ஏமாற்றுக் கார ரும் ஆவர் என்றும் இவரிடம் இலக்கியப் பயிற்சி இம்மியளவு கூடக் காண்பதற்கில்லை எனவும், கல்வி அறிவு இல்லாததற்குச் சூழ்ச்சித் திறனாலும், கெட்ட செயல்களாலும் இவர் ஈடு செய்கின்றனர் எனவும், இங்குள்ளவரில் பெரும்பாலோர் கல்வி அறிவு இல்லாதவரும், காட்டுமிராண்டித் தனமானவருமே எனவும் குறிப்பிட்டுச் சென்றிருக்கிறார். [1]

[St. xavier declared that Brahmins were liars and cheats to the very backbone with hardly any tincture of literature but making up for the poverty in learning by cunning and malice and in most of the population he found barbarous and ignorant.] [1]

அடுத்து தேவேந்திர குலத்தாரை ஆலயங்களுக்குள் நுழையாமல் செய்ய நாயக்கர் எடுத்த நடவடிக்கை பற்றி ஆராய்வோம்:

---

1. Page 10. History of Jesuit Mission in Madura J. S. Chandler.

**ஆலய மேலச் சன்னதிவாசல்கள் மூடப்படுதல் :**

தமிழகத்தில் இந்து ஆலயங்களின் மேலச் சன்னதி வாசல்கள் மூடப்பட்டிருப்பதைக் காண்கின்றோம். இவ்வாசல்கள் ஏன் மூடப்பட்டிருக்கின்றன? தேவேந்திர குலத்தாருக்கும், இவ்வாசல்கள் மூடப்பட்டிருப்பதற்கும் தொடர்பு உண்டா? என்பது பற்றி ஈண்டு ஆராய்வோம். ஆலயம், அரண்மனை போன்ற கட்டிடங்கள், அர்த்தசாத்திரத்தில் கண்ட முறைப்படி நிர்மாணிக்கப்பட்டதாக அறிகிறோம். அர்த்தசாத்திரத்தின்படி ஆலயங்களின் மேற்கு வாசல்கள் மன்னர் மரபினர்க்கு ஏற்பட்டது. மருதவனப் புராணத்தில் திருவிடைமருதூரில் வீற்றிருக்கும் மகாலிங்கேசுவரர் வரகுண பாண்டியனை நோக்கி, 'சென்றிடு மேலவாயிற் சிறந்திடு நெறியாலென்றான்'[1] என்று கூறினதாகக் கண்டிருப்பதும், வரகுண பாண்டியன் கோயில் எழுப்பி மேற்குக் கோபுர வாசல் அமைத்தது பற்றி 'குடதிசை வாயிற் கோபுரமியற்றி வைத்தான்'[2] எனவும் கண்டிருப்பதும் இதற்குச் சான்றாகும். மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயத்தில் மூடப்பட்டிருக்கும் மேலச் சன்னதி வாசல் கோபுரம் கி. பி. 1374 இல் மல்லப்பன் என்ற அரசியல் தலைவனால் கட்டப்பட்டது என்பது, அதில் பதித்திருக்கும் கல்வெட்டால் அறியலாம். மல்லப்பன் என்ற பெயர் தமிழ் மன்னர் மரபினரே பெரும்பாலும் கொண்டிருந்தனர் என்பதாக ஏற்கனவே கண்டோம். ஆக ஆலய மேல வாசல்கள் மன்னர் மரபினர்க்கே ஏற்பட்டதென்பது வெள்ளிடைமலை. அப்படியானால் இவ்வாசல்கள் ஏன் மூடியிருக்கின்றன? என்ற கேள்வி எழுகின்றது. தமிழ் வேந்தர் இவற்றை மூடியிருப்பர் என யாராவது கூறுவாரானால் அது விதண்டாவாதக் கூற்று ஆகும். அவர் மூடவில்லை என்றால் அவர் வீழ்ச்சிக்குப்பின் நாயக்கர் இவற்றை மூடியிருக்க வேண்டும். ஆலய மேல வாசல்களை இவ்வாறு மூடுவதற்குத் தலையாயது அரசியல் காரணமே அன்றி வேறு காரணம் காண்பதற்கில்லை. நெல்லையப்பர் ஆலயத்தின் மேலவாசல்

---

1. செய் 53. மருதவனப் புராணம் – வரகுண தேவச் சுருக்கம்.
2. செய் 59. ,, ,,

நாடான் வாசல் எனவும், சீவைகுண்டம் கண்ணபிரான் ஆலயம் மேலவாசல் சிங்க நாடான் வாசல் எனவும் வழங்கு வதைக்கொண்டு, ஏற்கனவே ஈழவர், ஈழவச் சாணுர் எனவும், சமீப காலமாய் இவரில் ஒரு சாரார் நாடார் எனவும் வழங்கி வருபவர், இம் மேலவாசல்கள் தங்கள் மரபினர்க்கு ஏற்பட்ட தென்றும், இவைகள் மன்னர் மரபினருக்கு ஏற்பட்டதென் பதால், இவற்றின் வழியாய் ஆலயத்திற்குச் செல்ல உரிமை பெற்றிருந்த தங்கள் மரபினரே தமிழ் வேந்தர் எனவும், அவரில் குறிப்பாகப் பாண்டியர் தங்களின் முன்ஞேர் எனவும், நாயக்கரிடம் பாண்டியர் போரில் தோற்றதன் விளைவாக இவ்வாசல்களை நாயக்கர் மூடிவிட்டதாகவும் கூறிவரு கின்றனர். இவரது மணவாழ்த்துகளிலும் இக்கருத்துக்கள் காணப்படுகின்றன என்பது;

'சங்கை திங்கட் குலாதிபன்
சக்ரவர்த்தி ஈழவங்கிசத்தோன்
பஞ்ச திராவிட முதல்வன்
பரம்பரைப் பாண்டிய நாடன்
கல்விச் சங்கமுடையவன்
காசுமுத்திரை விடுத்தவன்
சப்தகன்னி புத்திரன்
தமிழைக் குறுமுனிக்குரைத்தவன்'

.......................................

வெப்பமாலை தரித்தவன்
மேலவாசல் விசேடத்தோன்
கொற்கை மதுரைப் பாண்டியன்'[1]

என்ற மேற்கோளால்விளங்கும். மேலும் இவரைக் கோயி லுக்குள் நுழையக்கூடாதென ஒருவரும் தடை செய்யவில்லை எனவும், மேலவாசல்கள் மூடப்பட்டதை அடுத்துத் தாங்களே அங்கு செல்வதை நிறுத்திக்கொண்டதாகவும் கூறி வருகின் றனர். ஆலயங்களின் மேல வாசல் மூலம் செல்லும்

1. நாடார் மன்னரும் நாயக்க மன்னரும்.
இராமலிங்க குருக்கள் - V. A. குமரையா நாடார்.

இவரது உரிமை பற்றி ஆய்வு செய்த அமெரிக்க அறிஞர் ராபர்ட் எல். ஹார்டு கிரேவ், தாம் மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயத்தின் மேலவாசல் மூடி இருத்தலின் காரணத்தை சென்னையிலுள்ள மத்தியத்தொல்பொருள் இலாக்காக் கண் காணிப்பாளரை வினவியதாகவும், அதற்கு அவர் இது விபரம் தமக்கு ஒன்றும் தெரியாது எனப் பதில் இறுத்த தாகவும் கூறுகிறார்.

Robert L. Hardgrave Jr says:- The Pandyas and their Nadar ancestors were denied entrance into temples and as a symbol of the final defeat according to traditions of the community, the western gates of the temple were permanently closed. The Nadars claim today that it was through the western gates that the Pandya Kings entered the temples to worship. With the victory of the Nayaks, the western gates were sealed and to this day the western gates of all the temples in the southern districts are closed. Some Nadars assert that their community was never denied entrance into the temple; but when the western gates were closed they refused to enter through another gate, as it was beneath their dignity. Many Nadars who are unfamiliar with the claims to Pandyan ancestry or Kshatriya status have some notion of the connection between the western gates and the prohibition of the Nadar's temple entry. The western gates in these regions are closed and temple authorities seem unable to give any consistent explanation. K. V. Soundarajan superintendant of the archaelogical survey Madras says that many temples have only two or three gates open and that only the largest will keep all the four open. He expresses no knowledge of the legend regarding the closing of the western gates.' [1]

டாக்டர் K. R. அனுமந்தன் ஆலயங்களின் மேலவாசல் மூடியிருப்பது பற்றியும், அதற்குச் சாணார் கூறும் காரணம் பற்றியும் கூறுவதாவது: மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர்

1. Page 87. Nadars of South India - Robert L. Hardgrave, Jr.

மற்றும் தமிழகத்திலுள்ள இந்து ஆலயங்களின் மேலவாசல்கள் மூடியிருப்பது உண்மையே. ஆனால் அவற்றை இக்கால நாடார் சமூகத்திற்கு விரோதமாக நாயக்க மன்னர் மூடினர் என மெய்ப்பிப்பது மிகவும் சிரமம். திருநெல்வேலி நெல்லையப்பர் ஆலயத்தின் மேல வாசல் நாடான் வாசல் எனவும், சீவைகுண்டம் கண்ணபிரான் ஆலயத்தின் மேல வாசல் சிங்கநாடான் வாசல் எனவும் வழங்குவதும் உண்மையே. ஆனால் இவற்றை ஆதாரமாகக் கொண்டு, நாடார் பாண்டியர் மரபு எனவும், ஆலயங்களின் மேல வாசல்கள் மூலம் இவரது முன்னோர் வழிபாட்டுக்குச் சென்றனர் எனவும் முடிவு கொள்வதற்கு இல்லை. மேலும் நாடான் என்பது பாண்டிய அல்லது நாயக்கர் மன்னரோடு தொடர்புடையவர் எனக்கொள்வதற்கு நம்பத்தக்க வரலாற்றுச் சான்றுகள் இல்லை எனலாம்.' [1]

Dr. K. R. Hanumanthan Says :- 'Nadars claim that as Kings they used to enter the Minakshi temple at Madurai through the western gate, which was closed to them by the victorious Nayaks, as a mark of their victory over them. They point out how the Nayaks in a fit of anger closed the western gate of not only the Madurai temple but also of many other temples of Tamil Nadu. It is true that the western gates of Minakshi and other temples of Tamil Nadu remain closed to all devotees even now. But it is difficult to prove that the gates were closed by the Nayak Kings in order to spite the Nadars. The Silpasastra (treatise on Sculpture and temple architecture) point out that Kings must enter a temple through the Western gate, Antanar or Brahmins through the eastern gate, Vaishyas or traders thrugh the northern gate and Sudras through the Southern gate. Therefore the Nadars claim that they were once Kings of Madurai entering the temple through the

---

1. Page 126. Untouchability in Tamilagam (Unpublished)
   - Dr. K. R. Hanumanthan.

western gate. But we do not have any definite historical evidence for such an assumption. The western gate of the temple of Tirunelveli is still known as Nadar gate and the western gate of Kannapiran temple at Srivai Kuntam is called Singa Nadar gate. However the relationship of the Nadars with either the Pandyas or the Nayaks of Madurai is not yet attested by reliable data which can be regarded as historical. [1]

நாடார் என ஒரு சமூகம் தமிழகத்தில் மிக சமீபகாலம் வரை இல்லை. ஏற்கனவே குறிப்பிட்டது போன்று ஈழவர் எனவும், பின்னால் சாணார் எனவும் வழங்கியவர், 1921 ஆம் ஆண்டு மக்கள் குடிக்கணக்கெடுப்பின் போது தங்களைச் சாணார் என்பதற்குப் பதிலாக நாடார் எனப்பதியும்படி அரசினருக்கு விண்ணப்பித்துக் கொண்டனர். அதிலிருந்து நாடார் எனவும், சாணார் எனவும் இவர் வழங்கி வருகின்றனர். [2] தேவேந்திர குலத்தார் அடக்கி ஒடுக்கப்பட்டு, தாழ்த்தப்பட்ட காலை, வந்தேறிகளில் அரசியல், பொருளாதாரத்தில் சிறிது உயர்ந்தவர், தங்கள் மரபுக்கு உயர்வு தேடும் நோக்கத்தோடு, தங்களை மன்னர் குலம் என வழங்க முற்பட்டதைப் போன்று, சாணாரும் அவ்விதம் கூறி வருவதுடன், அதற்குச் சான்றாக மேல வாசல் மூலம் ஆலயவழிபாட்டுக்குத் தங்களின் முன்னோர் சென்றனர் எனவும் கூறிவருகின்றனர். ஏற்கனவே குறிப்பிட்டது போன்று, மேல வாசல்கள் மன்னர் மரபினரான தேவேந்திர குலத்தாருக்கே உரியது என்பது வெள்ளிடைமலை. இவ்வாசல்கள் அடைபட்டதன் காரணமாய், தேவேந்திர குலத்தார் ஆலய வழிபாட்டிற்குச் செல்வதை நிறுத்தினர் எனக்கொள்வதற்கில்லை. ஏனெனில் தேர்த்திருவிழாவின் போது, இம்மரபினரின் தலைவரைக் கோயிலுக்கு மேளதாளம், மாலை மரியாதை இவற்றுடன் அழைத்துச் சென்று அவருக்குப் பரிவட்டம் கட்ட, அவர் தேரின் வடத்தைத் தொட்டுக்

1. Page 126. Untouchability in Tamilagam (Unpublished)
– Dr. K. R. Hanumanthan.
2. Page 42. Nadars of South India – Robert L. Hardgrave, Jr.

கொடுக்கும் பழக்கம் நீண்ட காலமாய் நடைமுறையில் இருந்து வருகின்றது. இப்பழக்கம் வழக்கில் இருந்து வரும் போது, இம்மரபினர் ஆலயங்களுக்குள் செல்லாமல் இருந்ததற்குக் காரணம் என்ன என்று திட்ட வட்டமாகக் கூற முடிய வில்லை. பெரும்பாலும் நாட்டிலுள்ள பண்பாடற்ற தீயசக்திகள் ஒன்று கூடி, இம்மரபினரை ஆலயங்களின் உள்ளே செல்ல விடாமல் தடுத்து நிறுத்தினர் என்று கொள்ளலாம். இந்த முயற்சிக்கு நாயக்க அரசும் உடந்தையாய் இருந்திருக்க வேண்டும். நாயக்கர், மராட்டியர் ஒரு நெறியான ஆட்சி நடத்தியதாகக் கருத இயலாது. 'தடி எடுத்தவன் தண்டல்காரன்' என்ற நிலையே இவர் காலத்தில் நிலவியது என்பதை ஒருவரும் மறுக்கார். கோவிலுக்குள் தேவேந்திரரை செல்லவிடாமல் தடுத்து, அதன் மூலம் இவரைத் தீண்டாதவர் என வழங்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டதாகக் கருத வேண்டியுள்ளது. அடுத்து இவரை இடங்கைப் பிரிவினர் என வழங்கியது பற்றிப் பார்ப்போம்.

**வலங்கை, இடங்கைப் பிரிவுகள் :**

வலங்கை, இடங்கைப் பிரிவுகள் பற்றி ஏற்கனவே குறிப்பிட்டிருப்பதை வாசகர் அறிவர். இப் பிரிவுகள் இடைக் காலத்தில் ஏற்பட்டது. இதன் தோற்றம் ஒரு புதிராகவே இருக்கின்றது. இடங்கைப் பிரிவில் முக்கியமாய்ப் பள்ளி, கைக்கோளர், கம்மாளர் மற்றும் வலங்கைப் பிரிவில் சாணுர், பறையர் இவர்களை சேர்த்திருப்பது விவசாயம் செய்வோர், அவருக்கு உதவி செய்வோர் (பதினெண் குடியினர்) இடங் கையினர் எனவும், விவசாயத் தொழிலில் ஈடுபடாதவர் வலங் கையினர் எனவும் கருதப்பட்டதாகத்தெரிகிறது. தேவேந்திர குலத்தார் வேளாண் மாந்தர் என்பதால், இவர் தலைக்குடி; ஆதலால் இவர் இரு பிரிவிலும் அடங்கார். இவர் அடிமைப் பட்டு, விவசாயத் தொழிலாளர் நிலையை எய்ய, இவரை இடங்கைப் பிரிவினர் என வழங்க முற்பட்டிருக் கின்றனர். இதன் காரணமாய்ப் பறையர் தாங்கள் வலங்கைப்

பிரிவினர், அதனுல் உயர்ந்தவர் எனவும், தேவேந்திர குலத்தார் இடங்கைப் பிரிவினர், அதனுல் தங்களைவிட அவர் தாழ்ந்தவர் எனவும் கூறி, தேவேந்திர குலத்தாரிடம் வீணுய் மோதி, கலகங்களும், குழப்பங்களும் விளைவித்து வந்திருக்கின்றனர். தேவேந்திர குலத்தாரின் உரிமைகள் தங்களுக்கும் உரியது என, இவர் கிளர்ச்சி செய்தது பற்றி கரிவலம் வந்த நல்லூர் [1], சீவிலிபுத்தூர் [2] மற்றும் புதுக்கோட்டைப்பகுதிக் கல்வெட்டுகள் [3] குறிப்பிடுவதை ஏற்கனவே கண்டோம். தஞ்சாவூர் மாவட்டக் குறிப்பு, இவர் இருவர் மத்தியில் நிகழ்ந்த வலங்கை, இடங்கை உரிமைப் போராட்டங்கள் பற்றி விபரமாய் எடுத்து இயம்புகின்றன. அபேடுபாய் [4] இப்போராட்டம் பற்றிக் கூறியிருப்பதை ஏற்கனவே குறிப்பிட்டிருப்பதையும், வாசகர் அறிவர். சாணுரும் தாங்கள் வலங்கைப் பிரிவினர், அதனுல் உயர்ந்த வகுப்பார் எனப் பெருமை பாராட்டியும், தேவேந்திர குலத்தாரைத் தாங்கள் அடிமையாக வைத்திருந்ததாகக் கூறியும், அவரைத் தங்களின் தெருக்களில் குடைபிடிக்கவோ, காலில் மிதியடி அணிந்து செல்லவோ கூடாது எனத்தடுத்தும், கிறித்துவ மறைக்கு மாறினவர் கூட இவரைக் கோயிலில் தங்கள் மத்தியில் உட்காரக்கூடாதெனவும், தனியாய் பின்னுல் இவர் உட்கார வேண்டுமெனவும் கிளர்ச்சி செய்து வந்திருக்கின்றனர். [5] கம்மாளர் இடங்கைப் பிரிவினர். எனினும் இவரும் தேவேந்திர குலத்தாரை மற்ற மரபினரைப் பின்பற்றி இழிவுபடுத்த முற்பட்டிருக்கின்றனர். இவர் தேவேந்திரரின் பதினெண்குடிகளுள் அடக்கம். வேளாண்மைத் தொழிலுக்குத் தேவையான ஏர், கலப்பை, கொழு முதலிய கருவிகளை இவர் செய்து தேவேந்திர குலத்தாருக்கு வழங்கக் கடமைப்பட்டவர். இத்தொழிலுக்குக்

1. ARE. 432/1914.
2. ARE. 588/1926.
3. IPS. 929, 956.
4. Page 61, Hindu Manners, Customs and Ceremonies Abbe J. A. Dubois.
5. Page 18. Nadars of South India Robert L. Hardgrave Jr.

கூலியை அறுவடை காலங்களில் தேவேந்திர குலத்தாரின் நெற்போர்க்களங்களுக்குச் சென்று, இவர் பெற்று வருவது அனைவரும் அறிந்ததே. மேலும் கம்மாளர் சாதிப் பஞ்சாயத்துக்கு ஒவ்வொரு ஊரிலிருந்தும் அங்கத்தினர் தேர்ந் தெடுத்து அனுப்பும் பொறுப்பு தேவேந்திர குலத்தாரிடமே நீண்ட காலமாய் இருந்து வந்திருக்கின்றது.[1] தேவேந்திர குலத்தார் அடிமைப்பட்ட காலை, ஊர்விட்டு ஊர் சென்றவர் கம் மாளரை அணுகித் தாங்கள் நிற்கதியாய் வந்திருப்பதாகவும், விவசாயக் கருவிகள் செய்து தர வேண்டுமெனவும், அவ்வாறு செய்துவழங்கினுல் தாங்கள் அவருக்குச் சாதிப்பிள்ளைகளாக இருப்போம் எனக் கூறியதாகவும், கம்மாளர் அவர் கோரியபடி விவசாயக்கருவிகள் செய்து வழங்கியதாகவும், தேவேந்திர குலத்தார் நன்றிக் கடனுக அறுவடையில் நன்ருய் மணிபிடித் திருந்த கதிர்களைக் கொய்து கம்மாளருக்கு வழங்கியதாகவும், அதிலிருந்து இவர் கம்மாளரின் சாதிப்பிள்ளைகளாக இருந்து வருவதாகவும் கூறுவர்.[2] இது காலத்தின் கோலம். பறையர், சாணுர் போன்று கம்மாளரும் தீண்டப் படாதவராகவே நாயக்கர் காலத்தில் கருதப்பட்டு வந்தவர். இவரது இல்லங்களில் செக்கார், மருத்துவர், வண்ணுர், நாவிதர் ஒருவரும் உணவு எடுப்பதில்லை என்பதும் அனைவரும் அறிந்ததே.

**'ஆடுவோம் பள்ளுப்பாடுவோம்; ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம்'**

'ஆடுவோம் பள்ளுப்பாடுவோம்; ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம்' எனப் பாரதியார் பாடியிருப்பதை அனைவரும் அறிவர். பாரதியார் ஏன் இவ்வாறு பாடினுர்? நாயக்கர் கால மாகிய கி. பி. 17 ஆம் நூற்ருண்டில் கணக்கற்ற பள்ளு நூல்கள் செய்யுள் வடிவிலும், கூத்து நாடகமாகவும் புனையப்பட்டுப் பட்டி, தொட்டி எல்லாம் நடிக்கப்பட்டும், பள்ளிச்சிருர்க்குக் கற்பிக்கப்பட்டும் வந்திருப்பதாக முன்பு குறிப்பிட்டிருப்பதை

1. Page 100 Castes and Tribes of South India Vol V E Thurston.

2 Page 110 ,, Vol III ,,

வாசகர் அறிவர். இவ்வாறு பள்ளு நூல்கள் தோன்றுவதற்கும் எங்கும் அவை கூத்து நாடகங்களாக நடிக்கப்படுவதற்கும் காரணமென்ன? பாரதியார் ஆங்கிலேயர் இந்த நாட்டை விட்டு வெளியேறிவிட்டனர்; நாட்டிற்கு விடுதலை கிடைத்து விட்டது; என முன் கூட்டியே முடிவு கட்டி, வெற்றிப் பாட்டாகப் பள்ளுப்பாடும்படி மக்களை அறைகூவி அழைத் தார். பாரதி இவ்வாறு மக்களை அறைகூவி அழைத்தது, ஒரு பெரிய அரசியல் உண்மையை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது. அக்காலத்தில் தமிழ் வேந்தர் மரபை ஒழித்துவிட்டோம் எனத் தமிழரின் மாற்றார் வெற்றிப் பாட்டாகப் பள்ளுப்பாடினர். அதேபோன்று ஆங்கிலேயர் ஒழிந்தனர் என்பதைக் கருத்திற்கொண்டு, பள்ளுப் பாடும்படி பாரதி மக்களை அழைத்திருக்கின்றார். பள்ளு நூல்கள் புனையப்பட்டுப் பரப்பப்பட்டது, தேவேந்திர குலத்தாரைப் பள்ளர், தீண்டப்படாதவர், கொத்தடிமைகள் என மக்கள் மத்தியில் பிரச்சாரம் செய்வதற்கேயொழிய, வேறு காரணம் இல்லை எனலாம். பள்ளு நூல்கள் புனைவதற்கு நாயக்கரும், அவருக்குத்துணை நின்ற பாளையப்பட்டுகளும், மற்றும் அரசியற் தலைவர்களும் ஆதரவு வழங்கி வந்தது இதற்குச் சான்றாகும். நாயக்கர் காலப்பழக்கத்தை ஒட்டியே, இக்காலத்திலும் கல்வி நிலையங்களில் பள்ளு நூல்கள் பல பாடப் புத்தகங்களில் இடம் பெற்று வருகின்றன என அறிகிறோம். பள்ளு நூல்களில் இம்மரபினரின் தலைவன் தலையில், செம்பொன்னாலாகிய உருமாலையும் [1], பெண்கள் கைகளில் இரும்புக்காப்புகளையும் [2] அணிந்திருப்பதாகவும், உலகம் தோன்றியது முதல் இவர் பண்ணை அடிமைகளாய் வாழ்க்கை நடத்தி வருவதாகவும் சித்திரிக்கப்பட்டிருக்கின்றனர். உருமால் மன்னரின் அணி கலன்களில் ஒன்று. அது பசும் பொன்னால் செய்யப்பட் டிருக்கும். உயர்குடிப் பெண்டிற் கைகளில் பசும் பொன்னா

---

1 செய் 10. முக்கூடற் பள்ளு.

2. செய் 6 முக்கூடற் பள்ளு.

லான வளையல்களை அணிவர். இவர் அடிமைப்பட்டதால் உருமால் செம்பிலும், கைவளையல்கள் இரும்பிலும் செய்யப் பட்டதெனப் புலவன் வருணிக்கின்றான். இம்மரபினர் போரில் தோற்றதனால் அடைந்த இழி நிலையை விளக்கப் புலவன் முக்கூடற்பள்ளில் சிலேடையாய்க் குறிப்பிடுவதைக் கீழே காண்போம்:

'மதயானை முதற் பிடிக்க வல்லாய்—இந்த
மாட்டுக்கு மாட்டாமல் போனதென்ன சொல்லாய்
கதையோ முன்மலைகளையும் முறித்தாய்—அந்தப்பலங்
கண்டிலேனா னென்றோடி மறித்தாய்
சதுர்வேதன் விதித்த தலைப்பொறியோ' (முப செ 117)

'வடுப்படா மேனிவடுப்படுமோ—நன்று நன்றென்
வல்லாளன் சமத்துப் போய் விடுமோ
தடுத்துநீ ஏன் மாட்டைத் தொடர்ந்தாய்-முக்கூடல்
சதுரிபார்த்துச் சிரிக்கவோ கிடந்தாய்
அடுத்திதுவும் உனக்கு வர முறையோ—மலையின் மேல்
ஐயா பூலாவுடையார் குறையோ' (முப செ 118)

ஆகப் பள்ளு என்பது தமிழரின் மாற்றுருக்கு ஒரு வெற்றிப் பாட்டு ஆகும். இவை பெருமளவில் நாட்டில் பரப்பப்பட்ட தன் விளைவாகவே, தேவேந்திர குலத்தாரைப் பள்ளன், தீண்டப்படாதவன், கீழ் சாதி எனப்பொது மக்கள் மத்தியில் கருத்து வேரூன்றியது எனலாம்.

**நாயக்கரின் பிரித்தாளும் முறை:-** தேவேந்திர குலத்தாரை ஒற்றுமைப்படவிடாமல், நாயக்கர் பிரித்து வைத்திருந்ததாகவும் கருத ஏதுவாகிறது. ஏனெனில் நாயக்கர் தமிழகத்தை ஆக்கிரமிப்பதற்கு முன்னால், இவருள் பிரிவுகள் இருந்ததாகக் கொள்வதற்கில்லை. இக்காலத்தில் இவருள் அம்மா, ஆத்தா, அஞ்ஞா என்பது போன்ற பிரிவு களைத் தவிர்த்து, நாட்டுப்பிரிவுகளும் இருந்து வருகின்றன. ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டில், ஒரு பிரிவிலிருந்து மற்றொரு பிரிவில் மண உறவு கொள்ளக் கூடாதென நாயக்கர் ஆட்சியின் போது ஆணை பிறப்பித்திருக்க வேண்டும்.

ஏனெனில் கம்மாளரில் ஐந்து உட்பிரிவுகள் இருந்தாலும், ஏற்கனவே அவர் ஒரே சமூகமாகவே வாழ்ந்திருக்கின்றனர். நாயக்கர் காலத்தில் இவர் ஐவரும் ஒன்ருகக் கலக்கக் கூடாதென நாயக்கர் ஆணையிட்டிருக்கின்றனர். [1] இது நாயக்கரின் பிரித்தாளும் தந்திரத்தைக் காட்டுகிறது. தேவேந்திர குலத்தார் ஒற்றுமையாக இருந்தால் ஆட்சிக்கு இடையூறு தேடுவர் என்ற காரணத்தால், இவரைப் பிரித்து வைத்தனர் எனலாம். இதைத் தவிர வேறு காரணம் காண்பதற்கில்லை. அடுத்து இம்மரபினர் சேரி வாழ்நர் என வழங்க நேரிட்டது பற்றி ஆராய்வோம்.

## சேரி :-

ஏற்கனவே மருதநிலத்து மக்கள் குடியிருப்பு ஊர் என வழங்கியதாகவும், அவர் தம் ஊரைச் சுற்றித் தற்காப்புக்காகக் கோட்டைகள் எழுப்பினர் எனவும், கோட்டைகளுக்கு வெளியே, பிறநிலத்து மக்களும், நாடோடிகளான பாணர், துடியர், கடம்பர், விறலியர், ஒளியர், அருவாளர் எனப்பலதரப்பட்ட மக்களும் குடியிருப்புகள் அமைத்து வாழ்ந்தனர் எனவும், இம்மாதிரி வெளியே அமைந்த குடியிருப்புகள் சேரி என வழங்கியதாகவும் முன்பு கூறியிருப்பதை வாசகர் அறிவர். [பக். 144-45] இக்கூற்று ஏற்புடைத்தக்கதா? ஏற்புடையதென்ருல், ஊர் வேறு, சேரி வேறு எனவும், ஊரில் வாழ்ந்தவர் தமிழர், சேரியில் வாழ்ந்தவர் தமிழர் அல்லாதவர் எனவும் பொருள் கொள்ளவேண்டும். ஆனல் இன்று நடைமுறையில் நாம் காண்பது வேறு. தமிழகத்தில் சேரி வாழ்நர் என்பதற்குத் தீண்டாதவர் எனவும், அவர் பறையர், சக்கிலியர், தேவேந்திர குலத்தார் எனவும் ஒரு கருத்து நன்கு வேரூன்றி இருக்கக் காண்கிருேம். இக்கருத்து அடிப்படையில் இம் மூன்று மரபினர் குடியிருப்புகளும் சேரி என வழங்கி வருகின்றன. ஆனல் தேவேந்திர குலத்தார் மன்னர் மரபினர்; இவர் தமிழ் வேந்தர் காலத்தில் ஊர், நகரங்களில்

---

1. ARE. 378/1916.

வாழ்ந்தவர் என்பது அனைவரும் அறிந்ததே. ஆக இவர் இடைக்காலம் வரைச் சேரிவாழ்நர் அல்ல. அடுத்து சக்கிலியர் தெலுங்கர்; இவர் விசயநகர, நாயக்கர் ஆட்சி காலத்தில் இங்கு வந்தவர். ஆக எஞ்சி நிற்பவர் பறையரே. இது நிற்க. அடுத்து, தீண்டாதவர் என்றுல் பழங் குடிகள் எனவும், ஊர் வாழ்நராகிய சாதி இந்துக்கள் தமிழர், திராவிடர் எனவும் ஒரு கருத்து நாட்டில் நிலவிவருகிறது. ஆனுல் இக்கருத்து ஏற்புடைத்தக்கதன்று. இது ஒரு புறம் இருக்க, சேரி என்பதற்கு மக்கள் சேர்ந்து வாழும் குடியிருப்பு எனத் தமிழறிஞர் பொருள்கொள்கின்றனர். அப்படியானுல் ஒரு சிறுபான்மையினரை மட்டும் சேரி வாழ்நர் என்று இன்று வழங்குவானேன் ? இது சிந்திக்கத்தக்கது. தற்காலம் தீண்டாதவர் வாழும் குடியிருப்புத்தவிர, ஆரியப்பார்ப்பனர், இடையர், வலையர் மற்றும் பல்வேறு மரபினரும் வாழும் குடியிருப்பு சேரி என வழங்குவது குறிப்பிடத்தக்கது. ஆக நாம் ஏற்கனவே கொண்ட கருத்துக்கும் நாட்டில் இன்று நிலவும் கருத்துக்களுக்கும் ஒருமைப்பாடு இல்லை எனத் தெரி கிறது. ஆக சேரி என்பதற்குச் சரியான விளக்கம் காண வேண்டும். சேரி என்பதற்குப் பொருள் காணுமுகத்தான் முதலில் தேவேந்திர குலத்தார் எப்போது, எவ்வாறு சேரி வாழ்நர் ஆயினர் என்பது பற்றிப் பார்ப்போம்.

தேவேந்திர குலத்தார் சேரிவாழ்நர் ஆனது :

ஏற்கனவே குறிப்பிட்டது போல் தேவேந்திர குலத்தார் தலைத் தமிழர்; மன்னர் மரபினர்; இடைக்காலம் வரை ஊர், நகர் வாழ்நராக இருந்தவர். இவரில் பெரும்பாலோர் இன்றும் ஊர் வாழ்நராகவே இருந்து வருகின்றனர். நாயக்கர் ஆட்சியில் இவர் நகரங்கள், ஊர்கள் இவற்றிலி ருந்து விரட்டப்பட்டும், பாளையப்பட்டு முறையால் நிலம் மற்றும் உடைமைகள் பறிமுதல் செய்யப்பட்டும் சொல் லொண்ணு இன்னல்களுக்கு ஆளாகிக் கொத்தடிமை நிலை எய்திய காலை, இவரில் ஒரு சாரார் பண்ணைகளில் பயிர்த் தொழில் செய்து வாழ்க்கை நடத்துவது நிமித்தம், வயல் இடைவெளித் திட்டுகளில் குடியேறினர். இவவாறு ஏற்பட்ட

குடியிருப்புகள்தான் பட்சேரி (பள்ளர் வாழும் குடியிருப்பு) என வழங்கியதாக அறிகிறோம். கி. பி. 17ஆம் நூற்றாண்டிலிருந்து தோன்றிய பள்ளு நூல்கள் தேவேந்திர குலத்தாரைச் சேரி வாழ்நர் என்று கூறுகின்றன. இதற்கு முற்பட்ட தமிழ் இலக்கியங்களில் இவர் சேரிவாழ்நராகச் சுட்டப்படவில்லை எனத்தெரிகிறது. பள்ளு நூல்களின் முன்னோடியான முக்கூடற்பள்ளில்.

'மாரிப் பொருட்டால் வரங்குறித்த மள்ளரெல்லாஞ்
சேரிக்குரவையெழத் தெய்வ நிலை போற்றினரே' (செ 31)
'ஊருக்குள் ஏற்றம் இவனிந்தச்
சேரிக்குள் நாற்றம்' (செ 88)

எனக் கண்டிருப்பதிலிருந்து இம்மரபினர் ஊர், சேரி ஆக இரண்டிலும் குடியிருந்தனர் என அறிகிறோம். மேலும் புதுக்கோட்டைப் பகுதிக் கல்வெட்டு ஒன்று இவர் பிடாகைகளிலும், புறஞ்சேரியிலும் குடியிருந்ததாகவும், [1] திருச்சி மாவட்டம் முசிரித் தாலுகா அரசலூர் கல்வெட்டு, இவர் பள்ளத் தெருவில் குடியிருந்ததாகவும் குறிப்பிடுகின்றன. [2] மேலே கண்ட மேற்கோள்களிலிருந்து, இம்மக்கள் குடியிருப்பு ஊர், பிடாகை, தெரு, சேரி எனப் பலவிதமாய் அமைத்திருந்ததாகப் புலனாகின்றது. ஆகத் தேவேந்திர குலத்தாரில் ஒரு சிறு பான்மையினரே சேரி வாழ்நராக வழங்குகின்றனர். ஏற்கனவே குறிப்பிட்டது போல் இவர் இடைக்காலத்தில் சேரி வாழ்நராயினர். பறைச்சேரி பொதுவாக ஊருக்கு வெளியே ஒதுக்குப் புறமாய் இருந்து வருவதாக ஏற்கனவே கூறியுள்ளோம். இக்கூற்றை ஒருவரும் மறுப்பதற்கில்லை. பறையர் ஆதிக்குடிகள் எனவும், அதை உணர்த்த இவர் தம்மை ஆதித்திராவிடர் எனவும் வழங்கி வருவது நாடறிந்தது. ஆக இவர் இடைக்கால வந்தேறிகளில் அடங்கார். இவர் தொல்குடியினர் என்று கொள்ளும் போது, இவர் தொன்றுதொட்டு ஊருக்கு வெளியே சேரிகளில் வாழ்கின்றனரா? அல்லது ஆரம்பத்தில் ஊர் வாழ்நராயிருந்து, பின்னர்

1. IPS. 311.
2. தென்னிந்தியக் கோயிற் சாசனங்கள் பாகம் II - எண் 796-D 2985.

இடையில் சேரிவாழ் நராயினரா? என்ற கேள்விகள் எழுகின்றன. இக்கேள்விகளுக்கு விடைகாண்பதற்கு, நாம் சேரிகள் நாட்டில் எப்போது தோன்றின? என்பது பற்றியும், இடைக்காலத்தில் சேரிகள் இயங்கினவா? என்பது பற்றியும், தற்காலம் பறைச்சேரி தவிர்த்து வேறு சேரி இயங்கவில்லையா? என்பது பற்றியும் தெரிந்து கொள்வது இன்றியமையாதது. ஆதலால் தற்காலம் இயங்கும் சேரிகள் பற்றிப் பார்ப்போம்.

**தற்காலம் இயங்கும் சேரிகள் :—** தமிழகத்தில் இன்று பட்சேரி, பறைச்சேரி தவிர்த்து வலைச்சேரி, இடைச்சேரி என்ற குடியிருப்புகள் இருந்து வருவதும், இவற்றில் முறையே வலையர், இடையர் குடியிருந்து வருவதும், அந்தணச் சேரி, பார்ப்பனியச் சேரி என்ற ஊர்கள் இருப்பதும், அவற்றில் ஆரியப் பார்ப்பனர் குடியிருந்து வருவதும் யாவரும் அறிந்ததே. இவை தவிர, சேரி என்ற சொல்லை ஈருகக் கொண்ட பல ஊர்கள் இன்று நாட்டில் இருந்து வருவதையும் நாம் காண்கிறேம். இறையான் சேரி, களன் சேரி, கூடுவான் சேரி, கொரடாச்சேரி, திட்டைச்சேரி, பாடகர் சேரி, பாண்டிச் சேரி, புதுச்சேரி, புரயர் சேரி, வண்டுவான் சேரி என்ற ஊர்கள் இதற்குச் சான்ருகும். ஆனல் இவற்றில் குடியிருப்பவர் ஒரு தனி மரபினர் அல்ல. இங்கு பல்வேறு பிரிவினரும் குடியிருக்கின்றனர். ஆக அந்தணச்சேரி, பார்ப்பனியச்சேரி, வலைச்சேரி, இடைச்சேரி என்பவை ஒரு தனி மரபினர் குடியிருப்பை உணர்த்தும்போது, சேரி என்ற சொல்லை ஈருகக் கொண்ட குடியிருப்புகள் அவ்வாறு உணர்த்தவில்லை. இடைச்சேரி, வலைச்சேரியில் உள்ளவர் முல்லை, குறிஞ்சி, நெய்தல் நில மக்கள் பிரிவைச் சேர்ந்தவர். இத்திணை நிலை மக்கள், மருத நிலத்தில் உள்ள ஊருக்கு வெளியே அமைத்த குடியிருப்பு சேரி என வழங்கிய தாக ஏற்கனவே கண்டிருப்பதும், அதே சமயம் பறையர், வலையர், இடையர் குடியிருப்பு சேரி என வழங்குவதும் சிந்திக்கத் தக்கது. நிகண்டில் முல்லை நில மக்களாகிய ஆயர், இடையர், பொதுவர் குடியிருப்பு பாடி, சேரி, பள்ளி எனக் கண்டிருப்பது காண்க. ஆரியப்பார்ப்பனர் தமிழர் அல்லர்; அவர் வேற்று

நாட்டினர். அவர் தமிழகத்தில் குடிபோந்தபோது, ஊருக்கு வெளியே தங்கள் குடியிருப்புகளை அமைத்து வாழ்ந்தனர். அதன் காரணமாகவே அவர் குடியிருப்பு சேரி என வழங்கியது எனலாம். பறைச்சேரி, வலைச்சேரி, இடைச்சேரி, அந்தணச் சேரி இவைகள் ஒரு குறிப்பிட்ட மரபினர் குடி இருப்பை உணர்த்தும் போது, மரபை உணர்த்தாமல் பொதுவாகச் சேரி என்ற ஈற்றுப் பெயருடன் கூடிய ஊர்கள் பல நாட்டில் இருப்பதையும், அவற்றில் பல்வேறு மரபினர் குடியிருந்து வருவதையும் காண்கிறோம். இது போன்ற ஊர்கள் எப்போது தோன்றின? மற்றும் பறைச்சேரி என்பது போன்ற சேரிகள் முன்னாளில் இருந்தனவா? என்பது பற்றி நாம் தெளிவு பெற வேண்டும்.

**இடைக்காலச் சோழர் ஆட்சியில் சேரிகள் :-** இடைக் காலச் சோழர் காலம் கி. பி. 9ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதி முதல், கி. பி. 13ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதி வரை எனலாம். இக்காலத்தில் பல்வேறு பிரிவினர் சில தனிப்பட்ட தொழில் செய்பவர், மற்றும் வேற்று நாட்டு மக்கள் வாழ்ந்த சேரிகள் இருந்ததாக அறிகிறோம். தஞ்சை மாவட்டம் திருத்தளித் திட்டையில், அருண்மொழித் தேவச்சேரி, சனநாதச் சேரி, நித்தவினோதச் சேரி, இராசராசச் சேரி, நிகரிலிச் சோழச் சேரி, அழகிய சோழச் சேரி, சிங்களாந்தகச் சேரி, குந்தவைச் சேரி, சோழகுல சுந்தரிச் சேரி, இராசமார்த் தாண்டச் சேரி எனப் பல சேரிகள் இருந்திருக்கின்றன.[1] முதலாம் இராசராச சோழன் காலத்தில், உய்யக் கொண்டான் வள நாட்டுக் குறும்பூர் நாட்டில் இறையான் சேரி, தளிச்சேரி என்ற குடியிருப்புகளும்[2] சத்ரியசிகாமணி வள நாட்டுத் திருக்கறையூர் நாட்டில் வண்டவாழஞ் சேரி என்ற ஊரும் இருந்ததாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன.[3] மேலும் இக்காலத்தில் தளிச்சேரி[4], பறைச்சேரி[5]

---

1. பக்கம் 15, பழந்தமிழாட்சி – ஞா. தேவநேயன்.
2. பக்கம் 123, தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டு – R. நாகசாமி.
3. ,, 119, ,, ,,
4. S - 1 - 1 - II - 5.
5. S - 1 - 1 - II - 5 - 25.

ஈழச்சேரி [1] கம்மாண்சேரி [2] தலைவாய்ச்சேரி [3] தீண்டாச்சேரி [4] வண்ணாரச்சேரி [5] எனப்பல சேரிகள் இருந்ததாக கல்வெட்டுகள் புலப்படுத்துகின்றன. ஆரியப் பார்ப்பனர் குடியிருப்பு சேரி என வழங்கியதாக உத்திரமேரூர் கல்வெட்டு கூறுகின்றது. இக்கல்வெட்டுகளையும் மற்றும் அக்காலத்தில் இருந்த ஊர்களையும் கவனத்திற்கொண்டு பார்த்தால் பறையர், வண்ணார், கம்மாளர், ஈழவர், தளிச்சேரிப் பெண்டிர், ஆரியப்பார்ப்பனர், தலைச்சேரி வாழ்நர் முதலியோர் சேரி வாழ்நராக வழங்கியதாகவும், மற்றும் தண்டவாழஞ் சேரி, இறையான் சேரி போன்று, சேரி என்ற ஈற்றுப் பெயருடன் வழங்கிய குடியிருப்புகளில் இக்காலத்தைப் போன்று பல்வேறு பிரிவினரும் குடியிருந்தனர் எனவும் புலனாகின்றது. சோழ மன்னர் இது போன்ற சேரிகள் பல தோற்றுவித்ததிலிருந்து, இது நன்கு விளங்கும். ஆகப் பொதுப்படையாகச் சேரி என வழங்கும் ஊர்களை விடுத்து, மரபு அல்லது தொழிற் பெயர் தாங்கிய சேரிகள் பற்றிப் பார்ப்போம்.

**தளிச்சேரி :–** இடைக்காலச் சோழ மன்னர் ஏராளமான கோயில்களைத் தமிழகத்தில் நிறுவினர் எனவும், அவற்றில் 72 பெருங்கோயில்கள் எனவும், இக்கோயில்களுக்கு மன்னரும், அவரது மரபினருமாகிய தேவேந்திர குலத்தாரும் திரண்ட பொன்னும், பொருளும், நிலங்களும் நிவந்தமாக வழங்கினர் எனவும், கோயிற்பணிவிடைக்கு ஏராளமான ஊழியர் நியமனம் பெற்றனர் எனவும் ஏற்கனவே கூறியுள்ளோம். தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் மட்டும் 609 ஊழியர் இடம் பெற்றிருந்தனர் எனவும், அவரில் 400 பேர் நடனமாதர் எனவும் தெரிகிறது. [6] எல்லா இந்து ஆலயங்களுக்கும் சமீபகாலம் வரை நடனமாதர் (தேவ

1. S - 1 - 1 - II - 4 - 4.
2. S - 1 - 1 - II - 4 - 5.
3. பக்கம் 150. த. பெ. கோ. கல்வெட்டு R. நாகசாமி.
4. S - 1 - 1 - II - 5 - 15.
5. S - 1 - 1 - II - 5 - 25.
6. Page 274. Economic condition in Southern India, 1000–1500 A. D. Appadorai Vol I.

கன்னியர், தேவரடியார்) ஏற்பட்டிருந்தது அனைவரும் அறிந்ததே. கோயில்களுக்கு அருகில் இவர் குடியிருக்க வீடுகள் அமைத்து வழங்கப்பட்டிருந்தன: இக்குடியிருப்புகள் தான் தளிச்சேரி என வழங்கியது. தஞ்சையில் தெற்குத் தளிச்சேரித் தென்சிறகில் 92 வீடுகள், அதன் வடசிறகில் 92 வீடுகள், வடக்கில் தளிச்சேரித் தென்சிறகில் 95 வீடுகள், அதன் வடசிறகில் 96 வீடுகள், மற்றும் தனியாய் 25 வீடுகள் ஆக நானூறு வீடுகள் நடனமகளிர்க்கு வழங்கப்பட்டதாகத் தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டு கூறுகின்றது. (பக். 55-89) இக்காலத்தில் தளிச்சேரிகள் மறைந்து விட்டன. இவற்றில் வாழ்ந்தவரின் வழி வந்தோர் காலப் போக்கில் பொருளாதாரம், கல்வி இவற்றில் மேம்பாடுற்று வெள்ளாளராக மாறி விட்டனர் எனக் கருதற்பாலது. இக்கால வெள்ளாளர் தோற்றம் பற்றி முன்பு விளக்கியிருப்பது வாசகர் அறிந்ததே. தேவரடியார் சிறு வயதில் கோயில்களில் பொட்டுக் கட்டுவதைப் போன்று, தற்கால வெள்ளாளரில் ஒரு சாரார் பெண்கள் 7-9 வயது நிரம்பும்போது, அல்லது திருமணத்திற்கு முன்னதாகத் தாய் மாமனைக் கொண்டு, கொடிச்சி மணியை பெண்ணின் கழுத்தில் அணிவர். இந்தச் சடங்கை விளக்கிடு கல்யாணம் என்பர். [1] மேலும் இவர் புதுத்தம்பதிகளுக்கு ஆரியப்பார்ப்பனக் குருக்களைக் கொண்டு சாந்தி முகூர்த்தம் (முதல் இரவு) என்ற சடங்கையும் நடத்தி வருகின்றனர். இவ்வழக்கம் தமிழரின் பழக்கத்திற்கு மாறுபட்டது என அறிக.

**தலைவாய்ச்சேரி :-** இது கோட்டை வாயிற்கு முன்பாக அமைந்திருந்தது. இதைப் புறவாச்சேரி எனவும் வழங்குவர். ஊர்த்தொடக்கத்தில் உள்ள குடியிருப்பு தலைவாய்ச்சேரி என வழங்கியது. [2] இச்சேரியில் வாழ்ந்தோர் ஊர், நகர மக்களை அண்டித் தொழில் செய்வோர், மற்றும் கோட்டை வாயிற் காப்போர் முதலியவர் ஆகலாம். இக்காலத்தில் தலைவாய்ச் சேரி மறைந்து விட்டது எனலாம்.

1. Page 101. Trichy Dt. Gazetteer F. R Hemingsway 1909
2. பக்கம் 11. தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகள் அருஞ்சொற் பொருட் குறிப்பு – சா. கணேசன்.

**ஈழச்சேரி:-** இது இலங்கையிலிருந்து வந்தவர் குடியிருப்பு ஆகும். சோழன் கரிகாலன் இலங்கையின் மீது படையெடுத்து அங்கிருந்து பன்னீராயிரம் ஈழவரைச் சிறை பிடித்துக் கொணர்ந்து, காவிரிக்குக் கரை கட்டினுன் என்பது வாசகர் அறிந்ததே. அன்று ஈழவர் என வழங்கியவர், பின்னுல் ஈழவச்சாணுர்[1] என வழங்கி, இன்று சாணுர் என்றும், நாடார் என்றும் பலவாறு வழங்குகின்றனர். தமிழகத்தில் ஈழவன், ஈழவச்சேரி என்ற பெயர்கள் முற்றிலும் மறைந்து விட்டன. ஆனுல் கேரளாவில் மரமேறிகள் ஈழவர் என்றே இன்னும் வழங்கிவருகின்றனர்.

**வண்ணுரச்சேரி, கம்மாளச்சேரி:-** இவை முறையே சலவைத் தொழிலாளரும், கம்மாளர் என வழங்கும் கொல்லர், கற்கொல்லர், பொற்கொல்லர், கன்னுர், தச்சர் இவர்கள் வாழும் குடியிருப்பும் ஆகும். இக்காலத்தில் வண்ணுரச்சேரி ஊர்நத்தத்தில் தனியாய் அமைந்துள்ளது. கம்மாளர் நத்தத்தில் மற்ற மரபினருடன் கலந்தே வாழ்கின்றனர். வண்ணுர், கம்மாளர் குடியிருப்பை இன்று சேரி என வழங்கும் பழக்கம் மறைந்து விட்டது எனலாம். பண்டைய நாளில் பிற நாட்டுத் தச்சர், கொல்லர் தமிழகத்தில் குடியேறித் தொழில் செய்து வந்தனர் என்றும் தெரிகிறது.

**ஆரியபார்ப்பனச்சேரி :-** ஏற்கனவே குறிப்பிட்டது போல், ஆரியப்பார்ப்பனர் வேற்று நாட்டினர். இவர் தமிழர் அல்ல. ஆதலால் இவர் குடியிருப்பு சேரி என வழங்கலாயிற்று. நிகண்டில் ஆரியர் என்பதற்கு மிலேச்சர் என்று பொருள் கண்டிருப்பது காண்க. மிலேச்சர் என்ருல் திருந்தாதவர் என்று பொருள்படும்.

**பறைச்சேரி :-** இது பறையர் வாழும் குடியிருப்பு ஆகும். இவை பொதுவாய் ஊருக்கு வெளியே ஒதுக்குப் புறமாய் இருந்து வருகின்றன என்பது யாவரும் அறிந்ததே. இடைக் காலத்தில் பறைச்சேரி மட்டுமின்றிப் பறைச்சுடுகாடும்[2]

1. செ. 116. வையாபுரிப் பள்ளு.
2. பக்கம் 143. த. பெ. கோ. கல்வெட்டு R. நாகசாமி.

தனியாய் இருந்திருக்கின்றது. இதிலிருந்து பறையர் அக் காலத்தில் தனித்தே வாழ்ந்திருக்கின்றனர் எனத் தெரிகிறது. பறையரில் நெசவுப் பறையர் என்ற ஒரு பிரிவு உண்டு. இவர் கோலியர் எனவும் வழங்குவர். இவரிலிருந்து ஒரு சாரார் கைக்கோளர் எனத் தனி வகுப்பாகப் பிரிந்த தாக ஏற்கனவே கண்டோம். செங்குந்தர் என்பவரும் கைக் கோளர் மரபைச் சேர்ந்தவரே. தமிழகத்தின் வடமாவட்டங் களில் உள்ளவர் செங்குந்தர் எனவும், தென்மாவட்டங்களில் உள்ளவர் கைக்கோளர் எனவும் வழங்கி வருகின்றனர். சேனைத் தலைவர் பறையரிலிருந்து கடைசியாகப் பிரிந்தவர் எனக்கருதப்படுகிறது. இவரது செத்த மாட்டைப் பறையர் தூக்குவதில்லை. நாவிதர் இவருக்குத் தொழில் செய்யார். மேலும் பறையர், வண்ணார், அம்பட்டர் இவர்கள் சேனைத் தலைவர் இல்லத்தில் உணவு உண்ணார்.[1] பறையருக்கு வண்ணார் மட்டும் உண்டு. நாவிதர் இல்லை என்பது குறிப்பிடத் தக்கது. முகமதியர், நாயக்கர், மராத்தியப் படை வீரரின் குதிரைப்பராமரிப்பில் இவர் ஈடுபட்டவர் எனக்கருதப்படுகிறது. குதிரைக்குப் புல்லுப்பறிக்கிற பறையர் என ஒரு பிரிவு படை வீரரை அண்டித் தொழில் செய்து வந்தனர்.[2] ஆனால் இப் பிரிவு இன்று மறைந்து விட்டது. இவர் காலப் போக்கில் மேம் பாடுற்று, குல உயர்வு பெற்றனர் எனலாம். குதிரைகளுக்குச் சேணம் போட்டதால் சேணத்தலைவர் என வழங்கிய பின் சேனைத்தலைவர் எனப் பெயர் மாற்றம் பெற்றனர் போலும். இவரில் பெரும் பாலோர் இக்காலத்தில் கொடிக்கால் வேலையும், ஒரு சாரார் நெசவுத் தொழிலும் செய்து வருகின்ற னர். இவர் இலைவாணியன், மூப்பன், இல்லத்துப் பிள்ளைமார், கொடிக்கால் வெள்ளாளர் என்ற குலப் பெயர்களுடன் வழங்கியும் மூப்பன், முதலியார், செட்டியார், பிள்ளை என்ற குலப்பட்டங்கள் பூண்டும் வருகின்றனர்.[3] நெல்லை, மதுரை

1. Page 360. Castes and Tribes of Southern India Vol VI
 - E Thurston.
2. Page 189. Untouchability in Tamilagam (Unpublished)
 - Dr. K. R. Hanumanthan.
3. Page 360. Castes and Tribes of Southern India Vol VI
 - E. Thurston.

மாவட்டங்களில் சுண்ணும்புப்பறையர் தொண்டைமான் என்ற குலப் பட்டம்பூண்டு, சமீப காலமாய்க்கள்ளராக மாறி வருகின்றனர். பறையருள் செம்மான் என்று ஒரு பிரிவு ஏற்கனவே இருந்தது. இவர் தோல் சம்பந்தமான தொழில் செய்து வந்தனர். தெலுங்குச் சக்கிலியர் (அருந்ததியர்) தமிழகத்தில் குடியேறி, இத்தொழிலை மேற்கொள்ளவும், இவர் அத்தொழிலை விட்டு விட்டு, வேறு தொழில் மேற்கொண்டு, குலத்தையும் மாற்றியிருக்கின்றனர் என அறிகிறோம். இன்று தமிழகத்தில் செம்மான் என்ற வகுப்பு இல்லை என்பது யாவரும் அறிந்ததே. பறையரில் ஒரு பிரிவாகக் கருதப்படும் பாணரில் ஒரு சாரார், மதுரையில் குடியேறி, தங்களைப் பாண்டிய வேளாளர் என வழங்கி வருவது கண்கூடு. பறையரிலிருந்து ஒருசிலர் வெள்ளாளர் ஆயினர் என்பது பற்றி விக்கிரம சோழன் காலத்திய திருமுருகன் பூண்டிக் கல்வெட்டு 'வெள்ளாளன் மாப்புள்ளிகளில் பறையன் ஆன தனபாலன்'[1] எனக் குறிப்பிடுவதை வாசகர் அறிவர். சமீப காலமாய்ப் பறையரில் ஒரு சிலர், பிள்ளை என்ற குலப்பட்டம் பூண்டு, தங்களை வெள்ளாளர் எனக் குலமாற்றம் செய்து வருவதும் கண்கூடு.[2] இன்றையச் சாதி இந்துக்களில் பலர், பறையரிலிருந்து பிரிந்தவர் எனபதற்கு முக்கிய சான்றுக் குல தெய்வ வழிபாட்டையும், அவரது குருக்களையும குறிப்பிடலாம். சாதி இந்துக்கள் வழிபடும் பெரும்பாலான ஊர்களில் உள்ள அய்யனர், காளி கோயில்களில் பறையர் பூசாரிகளாக இருந்து வருகின்றனர். மாரியம்மன் கோயில்களின் உற்சவ ஆரம்பத்தில் பறையருக்குக் காப்புக்கட்டுகின்றனர். கார்காத்தார் எனப் பெருமை பாராட்டி வரும் வெள்ளாளருக்கு ஏற்கனவே பாணர் குலகுருவாய் இருந்தனர் எனத் தண்டிகைக்கனகராயன் பள்ளு கூறுவது பற்றியும், பாணரை வள்ளுவப் பண்டாரம் என வழங்குகின்றனர் என்பது பற்றியும் ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம் பறையருக்கு வள்ளுவப் பண்டாரம் குருக்களாக இருந்து வருவது ஈண்டு குறிப்பிடத் தக்கது.

---

1 பக்கம் 171, யாவரும் கேளிர்—R நாகசாமி, M A.
2. Page 376–77, Castes and Tribes Southern India Vol VII – E. Thurston

**தீண்டாச்சேரி :-** ஏற்கனவே கூறியதுபோல் பறைச்சேரி, சக்கிலியச்சேரி, பட்சேரி ஆக மூன்றிலும் குடியிருப்பவரை இன்று தீண்டாதவர் என்பர். ஆனால் முன்னாளில் பட்சேரி தோன்றவில்லை; சக்கிலியச்சேரியும் இல்லை; பறையரும் தீண்டாதவராகக் கருதப்படவில்லை. அப்படியானால் தீண்டாச் சேரியில் வதிந்தவர் யார்? என்ற வினா எழுகிறது. ஆசாரக் கோவை, மற்றும் சைவத்திருமறைகள் புலையர் என்ற ஒரு வகுப்பு இருந்ததாகக் கூறுகின்றன. இவர் இடுகாட்டில் பிணம் சுடும் தொழிலில் ஈடுபட்டு வந்தனர். ஆசாரக்கோவையில் புலையன் தொட்ட தண்ணீரை ஒருவரும் அருந்தத்தக்கதல்ல வென்றும், ஒருவரும் அவரை ஏறெடுத்துக்கூடப் பார்க்க லாகாது என்றும் கண்டிருக்கின்றது. உயர் சாதிக்காரர் உண வின் எஞ்சியதைக் கூடப் புலையருக்கு இடக்கூடாதென்று தடை விதிக்கப்பட்டிருக்கின்றது. இன்று புலையர் தொழிலைப் பறையரில் ஒரு பிரிவினரான வெட்டியான் செய்து வருகின் றனர். இதன் காரணமாய்ப் பறையர் இவரைக் கீழாக மதித்து வருகின்றனர். ஆக இவர் புலையரின் வழிவந்தவர் எனக்கருத ஏதுவாகிறது. நாயக்கர் காலத்தில் பறையரைத் தீண்டாதவ ராக நடத்த முற்பட்டபோது, பறைச்சேரியும், தீண்டாச் சேரியும் ஒன்றாய் ஒருங்கிணைந்து பறைச்சேரி என வழங்க லானது எனக் கருத ஏதுவாகிறது. ஆகவே தீண்டாச்சேரி என்பது; புலையர் என்ற ஒரு சிறுபான்மையினர் குடியிருப்பு ஆகும். தமிழகத்தில் புலையர் என்ற பெயர், வெட்டியான் என மாறி வழங்கி வருகின்றது எனலாம். கி.பி. 14 ஆம் நூற்றாண்டு கல்வெட்டில், புலையர் இடம் பெற்றிருக்கின்றனர்[1] கேரளாவில் புலையர் இன்று இருந்து வருகின்றனர். தமிழகத்தில் நாயக்கர் காலத்தில், ஆரியப்பார்ப்பனரின் சனாதனக் கொள்கை நன்கு ஊக்குவிக்கப்பட்டு, அது மீறப்படும்போது அரசினர் தலை யிட்டு, அதை நிலை நாட்டினர் என்பது வாசகர் அறிந்ததே.

**பண்டைக்காலச்சேரி வாழ்நர் :-** இடைக்காலத்தில் சேரிகளில் வாழ்ந்த பல்வேறு மரபினர் பற்றிப் பார்த்தோம். இச்சேரி வாழ்நரில் புலையர் தவிர்த்து, வேறு ஒருவரும் தீண்டாத

---

1 IPS. 194

வராகக் கருதப்படவில்லை எனக்கண்டோம். ஆதலால் சேரி வாழ்நர் என்றால், தீண்டாதவர் எனப்பொருள் கொள்வது பொருந்தாது. சேரி வாழ்நர் தீண்டாதவர் அல்ல என்கும் போது, அது உணர்த்தும் சரியான பொருள் என்ன? ஏற்கனவே வலைச்சேரி, இடைச்சேரி, பறைச்சேரி, ஈழச்சேரி, அந்தணச் சேரி, பார்ப்பனியச்சேரி என வழங்கியவை வேற்று நாட்டு மற்றும் பிற திணைநிலை மக்களின் குடியிருப்பை உணர்த்துவதாக வும், இதில் வாழ்ந்தவர் தமிழர் அல்லாதவர் எனவும் குறிப்பிட் டிருப்பது கவனத்திற்குரியது. இது நிற்க இடைக்காலச் சோழர் ஆட்சிக்கு முன், தமிழகத்தில் இருந்த சேரி மற்றும் அவற்றில் குடியிருந்த மக்கள் யார்? என்பது பற்றிப் பார்ப்போம் பல்லவர் காலத்தில் பரத்தையர்சேரி, அந்தணச் சேரி, முட்டிகைச்சேரி, புறம்பணைச்சேரி எனப்பல சேரிகள் இருந்ததாக அக்காலத்தில் தோன்றிய பெருங்காதை கூறு கின்றது. தமிழ் மூவேந்தர் காலமாகிய சங்ககாலத்தில் ஆடுவார்சேரி, பாண்சேரி, வலைவாழ்நர்சேரி, பரதவர்சேரி, புறஞ்சேரி, மாலைச்சேரி, முத்துக் குளிப்பவர்சேரி, சங்கு எடுப்பவர்சேரி எனப்பல சேரிகள் தமிழகத்தில் இருந்ததாக :

'கலிமகிழ் ஊரன் ஒலிமணி நெடுந்தேர்
ஒல்லிழை மகளிர் சேரிப்பன்னுள்' (அகம் 146-5·6)
'பாடுவார் பாக்கங் கொண்டென
ஆடுவார் சேரியடைந்த தெனக்' (பரிபாடல் 7·32)
'மீன்சீவும் பாண்சேரி' (புறம் 348·4)
'சேரிப்பரதவர் வலைமுன்றில்' (சிலம்பு கானல் 4·60)
'வலைவாழ்நர்சேரி வலைஉணங்கும் முன்றில்'
(சிலம்பு கானல் 38)
'மாலைச்சேரி மருங்குசென்று எய்தி' (சிலம்பு 6·133)
'உறை கிணற்றுப் புறஞ்சேரி' (பட்டினப்பாலை 75)
'மன்று தோறும் நின்றகுரவைசேரி தோறும்'
(மது. கா 615)
'சேரி விழவின் ஆர்ப்பெழுந்தாங்கு' (மது. கா 619)

'விளைந்து முதர்ந்த விழுமுத்தின்
இலங்கு வளையிருஞ் சேரிக்
கட்கொண்டிக் குடிப்பாக் கத்து' (மது. கா.135-37)

என்ற மேற்கோள்கள் இயம்புகின்றன.

கொற்கை மாநகரில் முத்துக் குளிப்பவர் சேரியும், சங்கு எடுப்பார் சேரியும், காவிரிபூம்பட்டினத்தில் வலைவாழ்நர் சேரி, பரதவர்சேரி, புறஞ்சேரி, மாலைச்சேரி எனப்பல சேரிகளும் இருந்ததாக, மேலே கண்ட சங்க இலக்கியச் சான்றுகளால் அறிய வருகிறோம். மதுரை மாநகரிலும் சேரிகள் பல இருந்திருக்கின்றன. உறந்தையில் ஏணிச்சேரி என ஒரு குடியிருப்பு இருந்திருக்கின்றது.[1] இச்சேரிகள் ஊர், நகர்ப்புறங்களில் அமைந்திருந்தன. இவற்றில் வலைஞர், பரதவர், சங்கு எடுப்பவர், முத்துக் குளிப்பவர், பாணர், துடியர், பரத்தையர், விறலியர், யவனர், வேற்று நாட்டு வணிகர் முதலிய தமிழர் அல்லாதவர் வாழ்ந்திருக்கின்றனர். இக்காலத்தில் நகர்ப்புறங்களில் பிழைப்பு நிமித்தம் பலரும் குடியேறி வருவது யாவரும அறிந்ததே இக்குடியிருப்புகள் தற்காலிகமானவை என்பதை உணர்த்தச் சேரி என்றே வழங்குகின்றன. முல்லை நில மக்களாகிய இடையர், ஒரு இடத்தில் நிரந்தரமாய்க் குடியிராமல், புல்வெளி எங்கு தென்படுகின்றதோ, அங்கு கால் நடைகளை ஓட்டிச் செல்வர். இம்மாதிரி ஏற்படும் குடியிருப்பு தற்காலிகமானது என்பதை, அனைவரும் ஒப்புக்கொள்வர். இதன் காரணமாகவே, இடையர்குடியிருப்பு சேரி என வழங்கியதாக நிகண்டு கூறுகின்றது. பாணர், பரத்தையர், விறலியர், சங்கெடுப்பார், வலைவாழ்நர் மற்றும் வணிகர் அடிக்கடி இடம் பெயர்ந்து வாழ்ந்து வந்தனர் என்றே சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. இடைச்சேரி போன்று, இவர் குடியிருப்பும் தற்காலிகமானது என்பதால், அவை சேரி என வழங்கியது எனலாம். சேரி என்பது தற்காலிகக் குடியிருப்பு எனக் கொள்ளும்போது, ஊர் நிலையானது என்று கொள்ளவேண்டியிருக்கின்றது. சேரிஎன்பதற்கு மக்கள் சேர்ந்து வாழும் இடம்

---

1 பக்கம் 14, பழந்தமிழாட்சி - ஞா. தேவநேயன், எம். ஏ

எனத் தமிழறிஞர் பொருள் கொள்வர் என ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம். இப் பொருள் ஏற்புடைத்தக்கதன்று. இதற்கு ஊரைச் சேர்ந்து, அல்லது ஊரை அடுத்து ஏற்பட்ட குடியிருப்பு எனப் பொருள் கொள்வதே பொருத்தமாகும் இதைக் கருத்திற்கொண்டு பார்த்தால், ஊர் வேறு, சேரி வேறு எனவும், இரண்டும் தனித்தனியாய் இருந்தனவென்றும் கருத வேண்டும். இக்கருத்துக்குச் சங்க இலக்கியங்கள் ஆதரவு தருகின்றனவா என்பது பற்றிப் பார்ப்போம்.

'ஏமப் பேரூர் சேரியும் சுரத்தும்' [தொ பொ. 40]

'ஊரும் அயலும் சேரியோரும்' [தொ. பொ. 492]

'ஊரும் சேரியும் உடனியைந்து அலறஎழக்'

[அகம் 383·2]

'ஊரீர் முறையோ சேரீயீர் முறையோ' [சிலம் 23·161]

'கல்லகத்து வெம்முரே
அம்பற்சேரி யலரங்கட்டே' [ஐங் 279·5]

இம்மேற்கோள்களிலிருந்து ஊர் வேறு; சேரி வேறு எனத் தெற்றென விளங்குகிறது. ஆக ஊர் வேறு; சேரி வேறு எனக் கொள்ளும்போது, ஊர் வாழ்நர் யார்? சேரிவாழ்நர் யார்? என்பது பற்றி நாம் தெரிந்து கொள்ள வேண்டியது இன்றி யமையாததாகின்றது. ஏற்கனவே ஊர்வாழ்நர் தமிழர்; சேரி வாழ்நர் தமிழர் அல்லாதவர் எனக்குறிப்பிட்டுள்ளது நினைவு கூரத்தக்கது. இக்கூற்று ஏற்புடைத்தக்கதா? இது ஏற்புடைய தென்றால், இதற்குச் சான்றுகள் வேண்டும். அகச் சான்று மட்டும் போதாது; புறச்சான்றும் தேவையாகும். தொல் காப்பியத்தில்;

சேரி மொழியால் செவ்விதிற்கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றில்
புலன்என மொழிப புலனுணர்ந்தோரே' [சொல் 553]

என வரும் செய்யுளில், சேரி மொழி எனக் கண்டிருப்பது காண்க. இதன்படி சேரி மொழி என்பதற்குத் திருந்தாத மொழி, கொச்சை மொழி எனப் பொருள் படும். சேரியில்

வாழ்ந்தவர் பேசிய மொழி, ஊர், நகரம் இங்கு வாழ்ந்தவர் பேசிய மொழியிலிருந்து வேறுபட்டது; திருந்தாதது என்பதை உணர்த்தவே, அதைச் சேரி மொழி என வழங்கினர் எனலாம். சேரிகளில் குடியிருந்தவர் வலைவாழ்நர், பரதவர், இடையர், வலையர், ஆடுவார், பாணர், பறையர், துடியர், கடம்பர், விறலியர், பரத்தையர், ஒளியர், அருவாளர், ஈழவர், யவனர், ஆரியப்பார்ப்பனர் என ஏற்கனவே கண்டோம். மேலும் தமிழகத்தின் மீது படைஎடுத்து வந்தவரில் மோரியர், கோசர், மழவர் பெரும்பாலோர் தமிழகத்திலேயே நிலைத்து விட்டனர். இவர் தமிழ் வேந்தர் படைகளில் சேர்ந்து பணியாற்றினர் எனச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. கிரேக்கர், உரோமர் வணிக நோக்கோடு இங்கு வந்து தங்கினர் என்றும், அரண்மனை வாயிற் காப்பாளராக யவன வீரரும், அரண்மனை களில் பணிப்பெண்களாக யவனப் பெண்களும் இடம் பெற்றி ருந்ததாகவும் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. ஆகவே சேரியில் குடியிருந்தவர் வேற்றுத்திணை நிலை மக்களும், வேற்று நாட்டினரும் ஆவர். இவர் தமிழர் அல்ல. இதன் காரண மாகவே இவர் தமிழை அரை குறையாகப் பேசினர். இப் பேச்சைத் திருந்தாத மொழி என உணர்த்தச்சேரி மொழி என வழங்கினர் எனலாம். இன்று ஆரியப்பார்ப்பனர் பேசும் தமிழ், மற்றவர் பேசும் தமிழிலிருந்து வேறுபட்டு வழங்குவ தாகவே காண்கிறோம். இவர் குடியிருப்புச் சேரி வழங்கியது நினைவு கூரத்தக்கது. பழக்க வழக்கங்களில் மட்டுமின்றி, இவர் பேசும் மொழியாலும் தமிழரிடமிருந்து வேறுபடுகின்றனர். பண்டைய நாளில் இடைச்சேரி, பறைச் சேரிக்கு அருகாமையிலேயே இருந்ததென்றும், இடையர் பறையரை விட உயர்ந்தவராக மதிக்கப்படவில்லை[1] என்றும் எட்கர் தர்ஸ்டன் கூறுவது காண்க.

Edger Thurston says :- ‘In ancient times, men of Idayar caste ranked only a little above Parayans and the Idaicheri or Idayan suburb was always situated close to the Paracheri in every constituted Village. [1]

1. Page 355. Castes and Tribes of Southern India Vol II - E. Thurston.

ஊர் நகர்ப்புறங்களில் அமைந்த சேரிகளில், வேற்று நாட்டினர் மட்டுமின்றி, இங்குள்ள காட்டுவாணரும் இருந்திருக்கின்றனர். இவரில் திருந்தி மேம்பாடடைந்தவர் தவிர, சேரிகளில் நிலைத்து நின்றவர் பறையர் என வழங்கலாயினர். இங்கு பல்வேறு பிரிவினர் குடியிருந்தனர்; ஆடல், பாடல், பறை, கூத்து, சண்டை சச்சரவு காரணமாய், இங்கு சதா இரைச்சல் நிலவியிருந்தது அதனால் இவர் சேரி பறைச்சேரி என வழங்கலானது எனலாம். பறைதல் என்பதற்குப் பறை மூலம் அறிவித்தல்; இரைந்து சத்தம் போடுதல் எனவும் பொருள் ஆகும். இறைந்து பேசுவதை ஏன் பறைகிறாய்? என்றும், என்ன பறைச் சத்தம்? என்றும் பாண்டியநாட்டில் மக்கள் மத்தியில் வழக்கில் உள்ளது. சங்க இலக்கியங்களில் பாணர், பறையர், துடியர், கடம்பர் (புறம் 335) என்று கண்டிருப்பதைக் கொண்டு, சங்க காலத்தில் காணப்படும் பறையர் மட்டும், இக்காலப் பறைச்சேரிகளில் குடியிருக்கின்றனர் எனக் கொள்வது பொருந்தாது. பாணர், துடியர், கடம்பர், பறையர், ஒளியர், அருவாளர், எயினர், வேடர், மற்றும் படையெடுத்து வந்த வேற்று நாட்டாரில் சேரிகளில் தங்கியவர், இவரில் திருந்தாமல் சேரிகளில் நிலைத்து நின்றவர் பறையர் என வழங்கினர் எனக் கொள்வதே சரியான முடிவாகும். இவர் பல்வேறு மரபினர் என்பதற்கு 1891 ஆம் ஆண்டு குடிக் கணக்கெடுப்பில் சுமார் 348 உட்பிரிவுகள் இவருள் இருப்பதாகக் கண்டிருப்பது சான்றாகும்.[1] பறைச்சேரியில் உள்ளவர் திருந்தாதவர் என்பதற்கு, இங்கு நடைபெறும் திருமணங்கள் அடிதடியின்றி முடிவுறாது என்பதைக் குறிப்பிடலாம். மேலும் 'பறையன் பேச்சு அரைப் பேச்சு'[2] என்ற பழமொழியும் நாட்டில் வழக்கில் உள்ளது கண்கூடு. ('A Parayan's talk is half talk'[2]) நெல்சன் பறையர் வரம்பு மீறி விபசாரத்தில், ஈடுபடுபவர்[3] என்று கூறுகிறார். (The Parayans are licentious [3]) மேலும் இவர்

1. 1891 Census Report Vol XIII – H. A. Stuart.
2. Page 117, Castes and Tribes of Southern India Vol VI – E. Thurston.
3. Page 16, Madurai Manual - Nelson,

பற்றி 'பனை மரத்திற்கு நிழல் இல்லை பறையனுக்கு இலட்சை இல்லை'. 'The Palmyrah has no shadow.'[1] 'The Parayan has no decency[2] (The Parayan has no seemliness ) என்ற பழமொழி நாட்டில் வழக்கில் உள்ளது யாவரும் அறிந்ததே. மேனாட்டு மத போதகர் அபேடுபாய் இவர் பற்றிக் குறிப்பிடுவதாவது :- 'சமூக நிலையில் பறையர் தங்களின் நிலை பாதிக்கப்படும் என்பதைப் பற்றி சிறிதும் கவலை கொள்ளாது மானம், வெட்கம், கட்டுப்பாடு இவற்றை முழுவதும் புறக்கணித்துவிட்டு, சகல விதமான துன்மார்க்கச் செயல்களை யும் துணிச்சலுடன் செய்கின்றனர். இவர் மத்தியில் பெரிதும் ஒழுங்கீனம் நிலவுகிறது. அவற்றிற்காக இவர் சிறிதும் வெட்கப் படுவதில்லை. ஒருவரிடம் துன்மார்க்கச் செயல்களில் ஈடுபடு பவரில் குறிப்பிடத்தக்க மரபினர் யார்? என வினவினால், அவர் மிருகத்தனமான செயல்களில் பறையரும், தீய எண்ணம், குரோதம், வன்மை முதலிய செயல்களில் ஆரியப்பார்ப்பனரும் மற்ற எல்லா மரபினரையும் மிஞ்சிவிடுவர் என்று கூறுவர்'.[3]

Abbe J. A. Dubois says :- 'Parayans being thus convinced that they have nothing to lose or gain in public estimation, abandon themselves without shame or restraint tovice of all kinds and the greatest lawlessness prevails amongst them, for which they do not feel the least shame. One might almost say that in the matter of vice, they outstrip all others in brutality as the brahmins do in malice.'[3]

ஊர்களுக்கு அருகாமையில் அமைந்த சேரிகளில் தங்கியவர் பரத்தையர் தொழில்நடத்தி வந்தனர் என மேலே கூறியுள்ளது நினைவு கூரத்தக்கது. இன்று தமிழகத்தில் நிலைத்திருக்கும் பறைச்சேரி, சங்க காலத்தில் தோன்றிய சேரிகளின் எச்சமே

---

1. Page 103. Castes and Tribes of Southern India Vol VI – E. Thurston.
2, Page 117 ,, ,,
3. Page 56, Hindu Manners Customs and Ceremonies - Abbe J. A, Dubois,

எனலாம். அக்காலத்தில் இச்சேரிகளிலிருந்து பரத்தையர் உருவானது போன்று, இடைக்காலத்தில் தேவரடியார் இச்சேரிகளிலிருந்தே உருவாயினர் எனலாம். கைக்கோளர், செங்குந்தர் இச்சேரியிலுள்ள நெசவுப்பறையரிலிருந்து பிரிந்து சென்றவர் என ஏற்கனவே கண்டோம். இம்மரபினர் ஒவ்வொரு குடும்பத்திலிருந்தும் ஒரு பெண்ணை ஆலயங்களுக்குப் பொட்டுக்கட்டி தேவரடியாராக விட்டுவந்தது நாடறியும். மேளக்காரர் என்பவர் இம்மரபினரைச் சேர்ந்தவரே. பறையர் கூத்தாடுவதில் திறமைசாலிகள் என்பர். இவரது கூத்தைப் பறைக்கூத்து என்பர்.[1] கைக்கோளர், செங்குந்தர், இவர் மத்தியில் நெசவுத்தொழிலும், கலை சம்பந்தமான இசை, மேளம், நாட்டியம், நடனம், கூத்து முதலியவை இருந்து வருவது போன்று, பறையரிடமும் இந்தத் தொழில்கள் வழக்கில் உள்ளன. ஆனால் முன்னவரிடம் உள்ளது திருந்தியது; பின்னவரிடப் உள்ளது திருந்தாதது ஆகும். இரு சாராரும் தாங்கள் வீரபாகு கோத்திரத்தைச் சார்ந்தவர் என்பர். ஆகத்தொழிலில் மட்டுமின்றிக் கோத்திரத்திலும் இவரிடம் ஒருமைப்பாடு காணப்படுகிறது. ஐரோப்பியர் வணிக நோக்கோடு இங்கு வந்த காலை, மாட்டிறைச்சி உண்பதில் அவருக்கும், பறையருக்கும் ஒத்த பழக்கம் இருந்ததால், பறையர் வெள்ளையரின் வீட்டுவேலையாட்களாக அமர்ந்தனர்.[2] சுமார் 200-300 ஆண்டுகருக்குள், நாட்டில் வெள்ளையர், பறையர் பெண்டிர் உறவு மூலம் ஆங்கிலோ இந்தியர் என ஒரு இனம் உருவெடுத்தது கவனத்திற்குரியது. பறையர் மத்தியில் மருமக்கத்தாய முறை ஏற்கனவே வழக்கில் இருந்ததன் காரணமாய், கற்பு நெறிக்கு மாறுபட்ட பரத்தையர் தொழில் நடைபெற்று வந்தது எனக் கருதற்பாலது. கேரளாவில் நாயர், மேனன், பிள்ளை, நம்பியார் இவர் மத்தியில் கற்பு நெறி வழக்கில் இல்லை. இவர் மருமக்கத்தாய முறையை மேற்கொண்டிருந்தது இதற்குக் காரணம் எனலாம். நாயரும், நம்பூதிரிகளும்

1. பறையர் சரித்திரம் வெ. அ. வேந்தன், குகன் அச்சகம், கோவை.
2. Page 114. Castes and Tribes of Southern India Vol VI E. Thurston.

தாங்கள் விரும்பும் எந்தப் பெண்ணுடனும் உடல் உறவு கொள்ள உரிமை பெற்றிருந்தனர் என்பது இங்கு குறிப்பிடத் தக்கது. மேலே கூறிய காரணங்களால், பறையர் தமிழர் அல்ல என்ற கருத்து உறுதிப்படுகிறது.

ஏற்கனவே கூறியது போல் பாணர், பறையர், துடியர், கடம்பர், அருவாளர், ஒளியர் முதலியோர் திணை நிலை மக்களாகச் சுட்டப்படவில்லை; எயினர், வலையர், வேடர், குறவர், இடையர் போன்றோர் திணைநிலை மக்களாக இடம் பெற்றிருக்கின்றனர். பறையர் தவிர்த்து வேறு மரபினர் மாட்டிறைச்சி உண்ணாத காரணம் அறிவதற்கில்லை. இவர் ஊரை அடுத்துக் குடிபோந்து, ஊரிலுள்ள செத்த கால்நடைகளை அப்புறப்படுத்தப் பணிக்கப் பட்டதன் காரணமாய் அல்லது வறுமையின் காரணமாய் செத்த மாட்டின் இறைச்சியை உண்டு வரலாயினரா? என்பது ஆய்வுக்குரியது. மேலே கூறிய பல்வேறு காரணங்களினால், இன்று பறையர் என வழங்குபவர் தமிழர் அல்லாத பல்வேறு வேற்று மரபினரிலிருந்து மேம்பாடடையாமல், பண்டைய நிலையிலேயே நீடித்து வருபவர் எனவும், சேரி என்பது தமிழர் அல்லாதவர் குடியிருப்பு எனவும் பொருள் கொள்ளலாம். ஆனால் துர்ப்பாக்கிய வசமாய்த் தேவேந்திர குலத்தாரையும் தமிழர் அல்லாதவர் என்ற பொருள்பட சேரி வாழ்நர் என இன்றையத் தமிழகம் வழங்கி வருகின்றது. தலைத் தமிழரைத் தமிழர் அல்ல என்றும் பள்ளர், தீண்டப்படாதவர், கீழ்சாதி, என்றும் பலரும் பல்வாறு கூறி வருவது விந்தையாயிருக்கின்றது. இவரது கூற்று பற்றி என்னவோ :

'பொய்யுடை யொருவன் சொல் வன்மையினால்
மெய்போலும்மே மெய் போலும்மே
மெய்யுடை யொருவன் சொலமாட்டாமையால்
பொய் போலும்மே பொய் போலும்மே'

என மதுரையில் நாயக்கர்ஆட்சி செய்த போது, தென் பாண்டி நாட்டில் இருந்த அதிவீரராம பாண்டியன் கூறிச் சென்றான். இப்பெருமகன் தன் காலத்திலேயே தன் மரபினரை

மாற்றூர் இழிவுபடுத்தும் முயற்சியில் ஈடுபட்டு வந்ததன் காரணமாய், இவ்விதம் கூறினரோ என்று கருத ஏதுவாகிறது. தேவேந்திர குலத்தாரைத் தமிழகம் இவ்விதம் இழிவு படுத்தி வருவதற்குக் காலந்தான் பதிலிறுக்க வேண்டும்.

**திராவிடர்; ஆதித்திராவிடர் :-** பறையர் தங்களை ஆதித் திராவிடர் என வழங்குவர். ஆனால் இப்பெயர் இவருக்குப் பொருந்தாது எனலாம். இவரை ஆதித்திராவிடர் எனக் கொண்டால், தமிழகத்தில் உள்ள ஆரியப்பார்ப்பனர் மற்றும் இடைக்கால வந்தேறிகள் தவிர்த்து, மற்ற எல்லா மரபினரும் திராவிடர் எனவும், திராவிடர் குடியேற்றம் இருமுறை நடைபெற்றதெனவும், ஆரம்பத்தில் குடியேறியவர் ஆதித் திராவிடர் எனவும், இறுதியில் குடியேறியவர் திராவிடர் எனவும் கொள்ள வேண்டும். ஆனால் வரலாறு இக்கூற்றுக்கு ஆதரவு தரவில்லை. இந்தியாவில் பூர்வீகக் குடியினர் காட்டு வாணராக இருந்தனர் என்றும், திராவிடர் குடியேறி நெற்பயிர் சாகுபடியை நாட்டில் தோற்றுவித்ததாகவும், காட்டு வாணரை நாகரிகப்படுத்தியதாகவும், திராவிடர் தமிழர் என்றும் வரலாறு கூறுகின்றது. இவர் தான் மருத நிலத்தலை மக்களாகிய மள்ளர், மல்லர் எனப்படும் தேவேந்திரகுல வேளாளர் ஆவர். தமிழகத்தில் குடியேறிய திராவிடர் சிறுபான்மையினர் எனவும், அவர் கலப்பற்ற வெள்ளாளர் எனவும் திரு எம். சீனிவாச அய்யங்கார் கூறுவது, தேவேந்திரகுலத்தாரையே உணர்த்துவதாக ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம்.[1] ஆதலால் பறையர் ஆதித்திராவிடர் என வழங்குவது சரியன்று. ஏற்கனவே கூறியது போன்று இவர் தமிழர் அல்ல; தாங்கள் வேறு மரபினர் எனவும், தமிழரிலிருந்து முற்றும் வேறு பட்டவர் எனவும் உணர்த்தவே தம்மை ஆதித்திராவிடர் என வழங்கி வருகின்றனர். அத்துடன் தமிழர் என வழங்குவதையும் இவர் விரும்புவதில்லை. இது பற்றி திரு. எம். சீனிவாச அய்யங்கார் கூறுவதாவது :- 'தமிழகத்தின் மக்கள் எண்ணிக்கையில் ஏழில் ஒரு பகுதியினராகிய பறையர், பண்டைய எயினர் மரபின்

1. Page 381. Tamil Studies. M. Srinivasa Ayyangar.

வழி வந்தவர். இவர் வேற்று மரபினர் என்ற கருத்துப்படத் தங்களைத் தமிழர் என்று வழங்குவதை விரும்புகிறதில்லை. [1]

Thiru M. Srinivasa Ayyangar says :- 'The Parayars who constitute nearly one seventh of the Tamil population and who will be shown bereafter to be descendants of ancient Eyina tribes dislike to call themselves as Tamils thus suggesting that they belong to a different race altogether.' [1]

அடுத்து தேவேந்திர குலத்தார் செடியூல் வகுப்பார் என எவ்வாறு வழங்கலாயினர் என்பது பற்றி ஆராய்வோம்.

**செடியூல் வகுப்பார் :-** செடியூல் வகுப்பில் இடம் பெற்றிருப்பவர், தீண்டாதவர் எனக் கருதப்படுபவர் என்பது, அனைவரும் அறிந்ததே. ஆனால் இப்பட்டியலில் பல்வேறு பிரிவினர் இடம் பெற்றிருந்தாலும், குறிப்பாகப் பறையரும், தேவேந்திர குலத்தாருமே நடைமுறையில் தீண்டாதவர் என இக்காலச் சமூகம் கருதி வருகின்றது. பறையர் ஆரம்பத்தி லிருந்தும், தேவேந்திர குலத்தாரில் ஒரு சாரார் நாயக்கர் ஆட்சி ஏற்பட்டதிலிருந்தும், சேரி வாழ்நர் ஆயினர் என ஏற்கனவே கண்டோம். பள்ளு நூல்கள் தவிர்த்து, வேறு ஒரு இலக்கியமும் தேவேந்திர குலத்தாரைத் தீண்டாதவர் எனக் குறிப்பிடவில்லை. கி. பி 14ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த கல்வெட்டில் [2], பள்ளா கீழ்சாதி என்று கண்டிருப்பது வாசகர் அறிந்ததே. கி. பி 17ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த முக்கூடற் பள்ளில், தேவேந்திர குலத்தாரைத் தீண்டாதவர் என உணர்த்த, 'பக்க மேலூரப் போயும் தக்க சோறென்வெள் ளாண்மை பள்ளா பள்ளாஎன்பர் மெய்கொள்ளாதவர்', (செ 15) எனக் கண்டிருப்பதும், ஆனால் இதே காலத்தைச் சேர்ந்த கரிவலம் வந்தநல்லூர், ச்விலிபுத்தூர் கல்வெட்டுகளில், இவரைத் தேவேந்திரக் குடும்பன் என்றும், மன்னர்க்கு ஏற்பட்ட விருதுகளுக்கு உரியவர் என்றும் பொறிக்கப் பட்டிருப்பதும் அனைவரும் அறிந்ததே. கள்ளர், மறவர்,

1. Page 10. Tamil Studies. M. Srinivasa Ayyangar.
2. IPS 149.

அகம்படியர் பெரும்பான்மையினராய் இருக்கும் சோழ, பாண்டிய நாடுகளிலேயே இம்மக்கள் அடக்குமுறை, மற்றும் சமூக அநீதிகளுக்குப் பெரிதும் உள்ளாயினர் எனலாம். கொங்கு நாட்டில் இவர் சிறுபான்மையினராய் இருந்தும், முக்குலத்தோர் என்பவர் இங்கு இல்லாததால், சோழ, பாண்டிய நாடுகளில் உள்ளது போல், சமூக அநீதிகளுக்கு அதிகம் உள்ளாகவில்லை என அறிக.

பாளையப்பட்டு நியமன முறையால், இவர் நில உடைமை இழந்து, கொத்தடிமையாய் உழன்று கொண்டிருந்த காலை, இங்கு கொலை, கொள்ளை, திருட்டு, ஏமாற்றம், வஞ்சகம் பித்தலாட்டம் இவற்றையே பெரிதும் துணைகொண்டு வாழ்ந்து வந்த புதிய பண்பாடற்ற குலங்களை எல்லாம் ஓரளவுக்குத் திருத்தி, நாட்டில் ஒரு நிலையான ஆட்சியை ஏற்படுத்தி, எல்லாப் பிரிவினருக்கும் சமநீதி கிட்ட வித்திட்ட ஆங்கிலேயர் கி. பி. 1847 இல் அடிமை ஒழிப்புச் சட்டம் இயற்றினர். இதன் பலனாக தேவேந்திர குலத்தார் அடிமைத் தளையிலிருந்து விடுதலை பெறலாயினர்.

சாண்டலர் இம்மரபினர் கி. பி. 1843இல் பெரும்பாலும் விவசாய அடிமைகளாய் இருந்ததாகவும், 1847 இல் ஆங்கிலேய ஆட்சியாளர் அடிமை ஒழிப்புச் சட்டம் இயற்றியதன் மூலம் நல்ல முன்னேற்றம் அடைந்துள்ளதாகவும் குறிப்பிட்டிருப்பது வாசகர் அறிந்ததே.[1] ஆங்கிலேயர் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற பின், 1850இல் மக்கள் எண்ணிக்கைப் பற்றி உத்தேசமாய் கணக்கு எடுத்தனர். பின்னர் 1871இல் முறையாகக் குடிக்கணக்கு எடுக்கலாயினர். இக்கணக்கெடுப்பில், வன்னியர் பயிர்த்தொழில் செய்பவர் என்ற தலைப்பின் கீழ், தேவேந்திர குலத்தார், பள்ளி, படையாட்சி கள்ளர், மறவர், நத்தம்பாடி, உடையார், நாயக்கன், கவுண்டன் முதலிய பல்வேறு பிரிவினரும் இடம் பெற்றனர். இதில் தொழில் வாரி அன்றி, வகுப்பு வாரியாகக் கணக்கு எடுக்கவில்லை.[2] 1881ஆம் ஆண்டுக்குடிக்கணக்கெடுப்பில் தேவேந்திர குலத்தார், பள்ளி (படையாச்சி,

1. Seventy five years in the Madurai Mission, John S. Chandler.
2. Census of Madras presidency 1871 W. R. Cornish. F.R.C.S.

வன்னியர்) ஆகிய இருவரும், விவசாயத் தொழிலாளர் எனப் பதியப்பட்டனர். பின்னர் கி. பி. 1891ஆம் ஆண்டுக் குடிக் கணக்கெடுப்பில் தான், முதன் முறையாக வகுப்பு வாரியாகப் புள்ளி விவரம் எடுத்தனர். இக்கணக்கெடுப்பில் கள்ளர், மறவர் படைத்தொழில் புரிபவர் எனப் பதியப்பட்டனர். இவர் பயிர்த்தொழில் செய்பவராகக் கருதப்படாதது குறிப்பிடத்தக்கது. [1] 1901ஆம் ஆண்டுக் குடிக்கணக்கில் சமூகங்கள் பிரிக்கப்பட்ட விபரம் பின் வருமாறு :- (1) ஆரியப்பார்ப்பனர், (2) சத்திரியர், (3) வைசியர் (4) சற்சூத்திரர், (5) ஆரியப்பார்ப்பனரை வழக்கமாய் குலகுருவாய்க் கொண்டவர், (ஆரியப்பார்ப்பனர் இவரைத் தொடுவதால் இலேசாய்த் தீட்டு ஏற்படுவது (Pollutes to a single degree), (6) ஆரியப்பார்ப்பனரைச் சில சந்தர்ப்பங் களில் மட்டும் குலகுருவாய்க் கொண்டவர் (ஆரியப் பார்ப்பனரைத் தொட்டால் தீட்டு ஏற்படுதல்), (7) ஆரியப் பார்ப்பனரை குலகுருவாக ஏற்காதவர் (ஆரியப்பார்ப்பனரைத் தொட்டால் தீட்டு உண்டாக்குபவர்), (8) மாட்டிறைச்சி உண்ணுவிட்டாலும் ஆரியப்பார்ப்பனரைத் தொட்டால் தீட்டு உண்டாக்குபவர் (9) மாட்டிறைச்சி எடுப்பவரில் ஆரியப் பார்ப்பனரைத் தொட்டால் தீட்டு உண்டாக்குபவர், (10) மாட்டிறைச்சி உண்ணுவிடினும் ஆரியப்பார்ப்பனரைத் தொட்டால் தீட்டு உண்டாக்குகிறவர் ஆவர். இக்கணக் கெடுப்பில் கோலியர், பழியர், பில்லவர், செருமார், ஈழவர், கம்மாளர், தேவேந்திரகுலத்தார், சாணர், தீயர் முதலிய வகுப்பார் மாட்டிறைச்சி உண்ணுவிடினும், ஆரியப் பார்ப்பனரைத் தொடாமலே தீட்டு உண்டாக்குகிறவராகப் பதியப்பட்டனர். இவர் அனைவரும் சுத்தமான தீண்டாதவர் ஆவர். (Pure Untouchables - Those who do not touch beef.) [2] இதற்குப் பிறகு எடுத்த குடிக்கணக்கெடுப்பில், சில மாறுதல்கள் மேற்கொள்ளப்பட்டன. கி. பி. 1909இல் முகமதியர் சட்டசபை நிருவாக அரசு பணி சம்பந்தப்பட்ட பதவிகளில், தங்கள் எண்ணிக்கைக்குத் தக்க விகிதாச்

1. 1891 Census. H. A. Stuart.
2. Census of India 1901 - Madras Presidency.

சாரம் பிரதிநிதித்துவம் கோரி, ஆகாகான் தலைமையில் அன்றைய இந்திய வைசிராய் மின்ரோ பிரபுவிடம் ஒரு வேண்டுகோள் விடுத்தனர். இந்த வேண்டுகோளில், தாழ்த்தப்பட்டவரை இந்துக்களாகப் பாவிக்காமல், தனிப் பிரிவாகப் பாவித்து, மற்ற சமூகத்தினரை இந்துக்களாகக் கணக்கிட வேண்டுமெனவும் கோரியிருந்தனர். இந்திய அரசு இக்கோரிக்கையை ஏற்றுக் கொண்டு 1911இல் எடுத்த மக்கள் குடிக்கணக்கெடுப்பில், யார் யார் இந்துக்கள்? யார் யார் இந்துக்கள் அல்லாதவர்? என நிர்ணயிக்க, அடியிற்கண்ட கூறுபாடுகளைக் கவனத்தில் கொள்ளும்படி குடிக்கணக்கெடுப்பு அலுவலர் கேட்டுக் கொள்ளப்பட்டனர். ஆரியப்பார்ப்பனர் ஆதிக்கத்தை ஏற்காதவர் (1), ஆரியப்பார்ப்பனரிடம் அல்லது அங்கீகாரம் பெற்ற இந்துமதக் குருவிடமிருந்து திட்சை பெருதவர் (2), இந்து வேத சாத்திரங்களை மறுப்பவர் (3), இந்து தெய்வங்களை வணங்காதவர் (4), ஆரியப்பார்ப்பனரைக் குருவாக ஏற்காதவர் (5), ஆரியப் பார்ப்பனரை எந்தச் சந்தர்ப்பத்திலும் குருவாகக் கொள்ளாதவர் (6), இந்து ஆலயங்களுக்குள் அனுமதிக்கப் படாதவர் (7), ஆரியப்பார்ப்பனருக்கு ஒரு குறிப்பிட்ட தூரத்திலிருந்தோ, அல்லது அவரைத் தொட்டாலோ தீட்டு உண்டாக்குகிறவர் (8), இறந்தவரை அடக்கம் செய்பவர் (9), பசுவைப் பூசிக்காதவரும், மாட்டிறைச்சியை உண்பவரும்[1] (10) ஆவர். ஆரியப்பார்ப்பனர் அல்லாதவரில் பல் வேறு பிரிவினர் நாயக்கர் ஆட்சியில் ஏற்பட்ட ஆரியப்பார்ப் பனரின் ஆதிக்கத்தை ஏற்காமல் இருந்து வந்திருக்கின்றனர் என அறிகிறோம். தஞ்சை மாவட்டம் தவிர்த்து, இதரப்பகுதியி லுள்ள கள்ளர், மறவர், அகம்படியர், கொங்கு வேளாளர் என வழங்கும் கவுண்டர் பார்ப்பனரைக் குலகுருவாக ஏற்காதவர் என அறிக. கவுண்டரின் நன்மை துன்மைச் சடங்குகளை, அவரது நாவிதரும், அவரது மரபிற்குள் 60 வயது முடிந்த தம்பதிகளில் அருமைக்காரன், அருமைக்காரி என நியமனம் பெற்றவரும் நடத்திவைக்கின்றனர். சாணருக்கு அவரது

1. Page 78. The Untouchables. Dr. B. R. Ambedkar.

நாவிதர் நன்மை துன்மைச் சடங்குகளை நடத்தி வைக்கின்றனர். கள்ளர் வழிபடும் கோயில்களில் பறையர், குயவர், வலையர் பூசாரிகளாக இருந்து வருவது கண்கூடு. தேவேந்திர குலத்தாருக்கு குருக்கள் தனியாய் இருக்கின்றனர். இக் குருக்கள் ஆரியப்பார்ப்பனர் அல்ல. சாணர், தீயர், ஈழவர், பில்லவர் போன்றோர் கள் இறக்கும் தொழிலில் ஈடுபட்டு வந்ததால், இவரைத் தீண்டாதவர் எனக் கருதினர் எனலாம். ஆனால் ஏற்கனவே கூறியது போன்று, தேவேந்திர குலத்தாரைத் தீண்டாதவர் எனக் கொள்ள எவ்விதக் காரணமும் இல்லை. 1935ஆம் ஆண்டில் பிறப்பிக்கப்பட்ட இந்திய அரசுச் சட்டப்படி இந்து சமுதாயத்தினரால் தீண்டாதவர் எனக் கருதப்படும் மக்கள் அடங்கிய சாபிதா ஒன்று தயார் செய்தனர். அச்சாபிதாவில் தேவேந்திர குலத்தாரும் இடம் பெற்றனர். அதிலிருந்து இவர் செடியூல் வகுப்பார் என வழங்கி வரலாயினர்.

**அரிசன் :** ஆங்கிலேயரிடமிருந்து நாடு விடுதலை பெற்ற பின், செடியூல் வகுப்பார் அனைவரும் அரிசன் என வழங்கி வருகின்றனர் என்பது அனைவரும் அறிந்ததே. காந்திசி நவசீவன் பத்திரிக்கையில் இம்மக்களைத் தீண்டாதவர் என்ற பொருளில் அஸ்பிசிரியா (Asprishya) என்று எழுதி வந்தார். தாழ்த்தப்பட்ட மரபினர் இதை வெறுத்தனர். ஆதலால் கடவுளின் குழந்தை என்ற பொருளில் அரிசன் என 1930இல் இருந்து காந்திசி எழுதி வரலானார்.[1] பின்னர் அவர் நடத்தி வந்த நவசீவன் பத்திரிகையின் பெயரையும் அரிசன் என மாற்றினார். நாடு விடுதலை பெற்றபின் அரிசன் நல அமைச்சர், அரிசன நல இலாகா, மாவட்ட அரிசன நல அலுவலகம், அரிசன சேவா சங்கம் முதலியவை ஏற்பட்டதன் விளைவாக, அரிசன் என்ற பெயர் நிலைத்தது எனலாம். நடைமுறையில் இது ஒரு இழி சொல்லாகவே கருதப்படுகிறது. தேவேந்திர குலத்தாரும் இன்று அரிசன் என்றே வழங்கி வருகின்றனர்.

முற்றிற்று

1. Census of India 1961. Madras. Vol IX. Madras. Part V. A. I.

## இணைப்பு I

கள்ளர், மறவர், அகம்படியர் மற்றும் பல மரபினரின் சராசரி உயரம், மார்பு அளவு, எடை முதலிய விபரங்கள் வருமாறு : [1]

| | சராசரி உயரம் | மார்பு அளவு | எடை |
|---|---|---|---|
| கள்ளர் | $5{\cdot}3\frac{31}{48}$ | $2{\cdot}6\frac{19}{24}$ | $97{\cdot}\frac{11}{16}$ |
| மறவர் | $5{\cdot}5\frac{19}{44}$ | $2{\cdot}8\frac{9}{44}$ | $114{\cdot}\frac{7}{44}$ |
| அகம்படியர் | $5{\cdot}4\frac{43}{48}$ | $2{\cdot}8\frac{9}{16}$ | $110{\cdot}\frac{19}{48}$ |
| சாணூர் | $5{\cdot}5\frac{7}{32}$ | $2{\cdot}7\frac{5}{8}$ | $106{\cdot}\frac{26}{32}$ |
| இடையர் | $5{\cdot}3\frac{5}{8}$ | $2{\cdot}6\frac{19}{24}$ | 98· |
| கைக்கோளர் | $5{\cdot}3\frac{35}{48}$ | $2{\cdot}7\frac{11}{48}$ | $103{\cdot}\frac{23}{44}$ |
| கம்மாளர் | $5{\cdot}3\frac{17}{36}$ | $2.6\frac{17}{18}$ | 99· |
| பறையர் | $5{\cdot}3\frac{7}{16}$ | $2{\cdot}6\frac{13}{16}$ | $102{\cdot}\frac{29}{48}$ |
| தேவேந்திர குலத்தார் | $5{\cdot}3\frac{13}{16}$ | $2{\cdot}6\frac{23}{24}$ | $106{\cdot}\frac{2}{3}$ |

Page 13. Madurai Manual – Nelson.

# இணைப்பு II பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 27 | கொடுப்பிணை | கொடுப்பு வினை |
| 13 | 16 | drummes | drummers |
| 18 | Foot note 2 | Dr. R. Coldwell | Dr. R. Caldwell |
| 27 | 29 | இவர்கள் தங்கள் வாழ்க்கையை | வாழ்க்கையை |
| 29 | 9 | இம்மக்கள் | பள்ளர் |
| 31 | Foot note | 1. Census of India | 1. 1961. Census of India |
| 34 | ,, | 1. Fr. Hemingsway | F. R. Hemingsway |
| 43 | 1 | அரிதற்குரியது | அறிதற்குரியது |
| 51 | Foot note | Mythe society | Mythic society |
| 57 | 21 | Seveve | Severe |
| 58 | 1 | திரு. M. சீனிவாச அய்யங்கார் | 8. திரு. M. சீனிவாச அய்யங்கார் |
| 63 | 20 | சித்தரிக்கிருர்கள் | சித்திரிக்கிருர்கள் |
| 65 | 28 | எனக் கருதற்பாலது | என்ற கேள்வி எழுகிறது |
| 75 | 24 | என | என்பதாகவும் |
| 78 | அடிக்குறிப்பு | செ. 208 | செங்கோட்டுப் பள்ளு செ. 208 |
| 80 | 21 | இவர்கள் அடக்கி | அடக்கி |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 83 | 18 | are | and |
| 83 | Foot note 1 | Census of Madras presidency 187 | Census of Madras presidency 1871 |
| 83 | Foot note 2 | Castes tribe | Castes and tribes |
| 87 | 13-14 | பிறப்போக்கும் | பிறப்பொக்கும் |
| 88 | 5 | கூறிவருவது பற்றி | கூறிவருவதாக |
| 88 | 16-17 | வழங்கப்படுவதிலிருந்து | வழங்குவதிலிருந்து |
| 91 | 8 | எவ்வாறு | ஏன் ? |
| 92 | 14 | பள்ளளா | பள்ளா ! |
| 97 | 31 | ஆனதால் | ஆனதாலும் |
| 97 | 33 | வந்தனர் இங்கு | வந்தனர் ஆனதாலும் |
| 112 | 16 | திரை | திறை |
| 121 | 18 | சோழரின் வம்சா வளி கலிங்கத்துப் பரணியில் | கலிங்கத்துப் பரணியில் |
| 127 | 2 | குறிப்புகளிலிருந்து | குறிப்புகளில் |
| 129 | Foot note 2 | Faleography | Paleography |
| 132 | 19 | பிரிவுகளைப் பற்றி | பிரிவுகள் பற்றி |
| 133 | 7 | தொ. பொ. 1. அத். 5 | தெ. பொ. 1. அகத். 5 |
| 136 | 22 | வழங்கப்பட்டான் | வழங்கியது |
| 146 | 5 | இவர்கள் மூவேந்தர் | மூவேந்தர் |
| 147 | Foot note 1 | (Unpublion) | (Unpublished) |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 147 | Foot note 2 | Vol III | Part III |
| 170 | 23 | இராதாசி | இராசாதி |
| 174 | 17 | வழிப்பட்டதை | வழிபட்டதை |
| 181 | 17 | வந்தேருங்குடி | வந்தேறுங்குடி |
| 201 | Foot note 1 | Page 48 | Page 4 |
| 205 | 26-27 | கருதியிருக்கின்றனர் | கருதினர் |
| 207 | 9 | இருங்கோவேளி | இருங்கோவேள் |
| 207 | 29 | வெள்ளான் பகை | வெள்ளான் வகை |
| 209 | 2 | வந்தேருங்குடிகளும் | வந்தேறுங்குடிகளும் |
| 221 | 23 | வேளாளர் | வேளாண் |
| 223 | 20 | திருவண்ணமலை | திருக்கழுக்குன்றம் |
| 225 | 26-27 | கல்வியிலும் இவரைப் பொருளாதாரத்திலும் | கல்வியிலும் பொருளாதாரத்திலும் |
| 230 | 12 | குலப்பட்டாக்களை | குலப்பட்டங்களை |
| 231 | 5 | குடும்பனி | குடும்பினி |
| 233 | 4 | கோவிலிலுள்ள கல்வெட்டில் | கோவிலிலுள்ள |
| 239 | 7 | அதைந்தது | அமைந்தது |
| 242 | 26 | கிலக்கிரயம் | நிலக்கிரயம் |
| 245 | 7 | நாற்றிசையும் ஏற்றமுற்று | நாற்றிசையும் போற்ற ஏற்ற முற்று |
| 245 | 10 | பணைத்தோள் | பணைத்ததோள் |
| 246 | 1 | திரை | திறை |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 248 | Foot note | Page 83 | Page 383 |
| 248 | 24 | திரை | திறை |
| 251 | 13 | Dr. R. Coldwell | Dr. R. Caldwell |
| 257 | 24 | தெங்கர் ஆட்சியில் | தெலுங்கர் ஆட்சியில் |
| 257 | 27 | R. சத்தியநாத அய்யர் | R. சத்தியநாத அய்யரும் |
| | | D. பாலசுப்பிரமணிம் | D. பாலசுப்பிரமணியமும் |
| 260 | 1 | Brahmans | Brahmins |
| 271 | 5 | சீரியவழியினர் | சீறியவிழியினர் |
| | 11 | அவ்வீரத்தற்கு | அவர் வீரத்திற்கு |
| 275 | 16 | இங்கையிலிருந்து | இலங்கையிலிருந்து |
| 275 | 28 | Same | Some |
| 290 | 23 | Previlages | Privileges |
| 292 | 26 | இம்மன்னர் | இம்மன்னன் |
| 310 | 26 | புறவாச்சேரி | புறவாய்ச்சேரி |
| 318 | 22-23 | சேரி வழங்கியது | சேரி என வழங்கியது |
| 320 | 2 | The Palmyra has no Shadow' The Parayan has no decency | 'The Palmyra has no Shadow The Parayas has no decency' 1 |
| | 3 | (The Parayan has no seemli ness) | 'The Palmyra has no Shadow The Parayan has no seemliness' 2 |
| 328 | 20 | அஸ்பிசிரியா | அஸ்பிரிசியா |